


## மூலமும் விளக்கமும்

உரையாசிரியர் : சக்திதாசன் சுப்ரமணியன்
பதிப்பாசிரியர் : செம்பியன்
தயாரிப்பு : முல்லை முத்தையா



அன்பு வெளியீடு
புதுச்சேரி

# முன்னுரை

இலக்கியம் என்று சொல்கிறார்களே! அது என்ன?

'அது ஏதோ பழங்காலத்து விஷயம்' என்று கூறலாமா? அப்படியானால் பழங்காலத்து விஷயங்கள் எல்லாமே இலக்கியமா?

பழங்காலத்துக்கு மரியாதை காட்டுகிறார்கள் மக்கள்; மதிப்புக் கொடுக்கிறார்கள்; வணக்கம் செலுத்துகிறார்கள்.

எனவே, என்ன தோன்றுகிறது சிலருக்கு? பழங்காலத்து விஷயம் என்று எதையாவது சொல்லத் தோன்றுகிறது.

ஏடு தேடினால் புகழ் கிடைக்கும் என்று அறிந்துகொண்டு விட்டார்கள். எனவே 'ஏடு எங்கே இருக்கிறது?' என்று தேடிப் புறப்படுகின்றனர் சிலர். 'இதோ! பழைய ஏடு' என்கின்றனர்.

ஏடுகள் பழையனவாக இருக்கலாம். புதிய ஏடுகள் சில, பழையனபோல் உரு எடுத்தாலும் எடுக்கும்! ஆனால் இவை எல்லாமே இலக்கியம் என்று சொல்லிவிட முடியுமா? முடியாது.

இப்போது அச்சு யுகம். அச்சுக் கூடங்கள் பெருகுகின்றன; இயந்திரங்கள் வளர்கின்றன. எழுதிக் குவிப்போரும் பெருகி யுள்ளனர். கண்ணைக் கவரும் வகையில் புத்தகங்களை வெளி யிடுகிறார்கள்.

இப்படி வெளிவரும் நூல்கள் எல்லாம் இலக்கியம் அல்ல என்று சொல்ல முடியுமா? எல்லாமே இலக்கியம்தான் என்று சாதிக்க முடியுமா? முடியாது.

பழங்காலத்து நூல்களிலேயும் இலக்கியங்கள் உள. இக் காலத்து நூல்களிலேயும் இலக்கியங்கள் உள.

இலக்கியத்தின் தன்மைதான் என்ன? காலத்தை வென்று நிற்பது இலக்கியம். அழியும் சமுதாயத்திலே அழியாதிருப்பது இலக்கியம். சூழ்நிலைகள் மாறும்போது நிலைத்து நிற்பது இலக்கியம்.

மனிதன் இன்று இருப்பான்; நாளை இறப்பான். இலக்கி யமோ என்றும் இருக்கும்.

மாடமாளிகைகள், அழியும்; இடியும்; குட்டிச் சுவராகும். கூடகோபுரங்கள் தகர்ந்து தரைமட்டமாகும்; இருந்த இடம் தெரியாது கூடப் போகும். ஆனால், இலக்கியமோ என்றும் அழியாது; மக்கள் நாவிலே நடமாடும்; உள்ளத்திலே கோயில் கொள்ளும்.

காரணம் என்ன? அதிலே சுவை இருக்கிறது. என்ன சுவை? உள்ளத்தை அள்ளும் சுவை. உள்ளத்தை அள்ளுவது எது? உணர்ச்சி.

உணர்ச்சியை வடிக்கிறான். எதிலே? எழுத்திலே. எவன்? இலக்கியம் செய்வோன். எவரது உணர்ச்சியை? மனிதர் தம் உணர்ச்சியை. உணர்ச்சிக்கு இடம் எது? உள்ளம்.

எனவே, மனிதனின் உள்ளத்திலே தோன்றுகிறது உணர்ச்சி. அந்த உணர்ச்சிக்கு எழுத்து வடிவம் கொடுக்கிறான் எழுத்தாளன்.

எழுத்து என்பது என்ன? எழுதப்படுவது எழுத்து. எழுச்சிக்கு வடிவம் கொடுப்பது எழுத்து. எழுச்சி எது? அக எழுச்சி; உள்ளத்து எழுச்சி.

எழுச்சி எப்போது நிகழும்? இன்பம் நேர்ந்தால் எழுச்சியுண்டாகும். துன்பம் நேர்ந்தாலும் எழுச்சியுண்டாகும். இன்பமும் துன்பமும் நேருங்காலையில் மனித உள்ளம் என்ன செய்யும்? எதிரொலி செய்யும். அந்த எதிரொலியை எழுத்திலே வடிக்கிறான் எழுத்தாளன்; பாட்டிலே வடிக்கிறான் கவிஞன்.

ஓவியம் எழுதுகிறான் ஒருவன். எதிலே தீட்டுகிறான்? துணியிலே. எது கொண்டு? வர்ணமும், தூரிகையும் கொண்டு. அந்த ஓவியத்தைப் பார்க்கிறோம்.

"பேஷ்! ரொம்ப நன்றாயிருக்கிறதே!" என்கிறோம். "நிஜம் மாதிரி இருக்கிறது" என்கிறோம்.

அஃது ஓவியம்தான் என்பது நமக்குத் தெரியும். இருந்த போதிலும் என்ன சொல்கிறோம்? 'நிஜம்போல் இருக்கிறது' என்கிறோம்.

'நிஜம்'போல் தோன்றச் செய்வது எது? பின்னணி. பின்னணி இன்றேல் அங்கே உண்மையுணர்ச்சி தோன்றாது.

உண்மை யுணர்ச்சி தோன்ற எழுதுகிறான் ஓவியன். அதைப் பலகாலும் பார்க்கிறோம். பார்த்துப் பார்த்து ரசிக்கிறோம். ஏன்?

அந்த உண்மையுணர்ச்சி நமது உள்ளத்தைத் தொடுகிறது; அள்ளுகிறது; கட்டிப் பிடிக்கிறது; கருத்தை இழுக்கிறது.

இலக்கியமும் இத்தகையதே! வெறும் உணர்ச்சியை மாத்திரம் வடித்து விட்டால் போதாது. அதற்கு உயிரூட்டவும் வேண்டும். உண்மையுணர்ச்சி தோன்றச் செய்தல் வேண்டும்.

உயிரூட்டுவது எப்படி? உண்மையுணர்ச்சி தோன்றச் செய்வது எப்படி? பின்னணி; பின்னணி.

பின்னணிதான் உயிர்; உண்மை உணர்ச்சி தோன்றச் செய்வது. இலக்கியத்திற்குப் பின்னணி எது? வாழ்க்கை; வாழ்க்கை.

வாழ்க்கையுடன் ஒட்டிய உண்மை உணர்ச்சியைத் திறமையுடன் எழுத்திலே வடித்தால் அதுவே இலக்கியமாகும். அந்த இலக்கியங்களைப் படிக்கும்போது உள்ளமும் எதிரொலி செய்யும்.

இத்தகைய இலக்கியங்கள் என்றும் அழியா; நிலைத்து நிற்கும்.

நமது பழந்தமிழ் இலக்கியங்களிலே என்ன காண்கிறோம்? உணர்ச்சி காண்கிறோம். இன்ப உணர்ச்சியைக் காண்கிறோம்; துன்ப உணர்ச்சியைக் காண்கிறோம்; வீர உணர்ச்சியைக் காண்கிறோம்.

உணர்ச்சி மட்டுமா காண்கிறோம்? இல்லை. உள்ளத்தையும் காண்கிறோம், சங்க இலக்கியங்களிலே. உள்ளமும் உணர்ச்சியும் போதுமா? உயிர் வேண்டுமே! உயிர் எது? வாழ்க்கை. சங்க இலக்கியங்கள் என்ன காட்டுகின்றன? வாழ்வைக் காட்டுகின்றன. எவரது வாழ்வை? அக் காலத் தமிழர்தம் வாழ்வை.

அக் காலத் தமிழர் தம் வாழ்வு, உள்ளம், உணர்ச்சி இம் மூன்றையும் சங்க இலக்கியங்களிலே காண்கிறோம். எனவே, சங்க இலக்கியங்கள் காலத்தை வென்றன. கடலும் காலமும் அவற்றை விழுங்கவில்லை.

இத்தகைய இலக்கியங்கள் பல. அவற்றுள் ஒன்று கலித்தொகை. தொகை என்றால் தொகுப்பு என்று பொருள். கலித்

தொகை என்றால் கலிப் பாடல்களின் தொகுப்பு என்று பொருள்.

தொகுப்பு எப்போது நிகழும்? பாடினோர் காலத்தே நிகழுமா? நிகழாது. பிற்காலத்தேதான் நிகழும். ஏன்?. பாடினவர் காலத்தே அப் பாடல்கள் பலவாறாகச் சிதறிக்கிடக்கும். அவற்றுள் சில அழியும்; சில நிற்கும்.

பின்னே வந்தவர் அப் பாடல்களைக் காண்பர்; அவற்றின் பெருமையை அறிவர்; தொகுப்பர். இதுவே இயற்கை.

கலித்தொகை 150 பாடல்கள் கொண்டது. இவ்வளவு பாடல்களையும் பாடியவர் எவர்? ஒருவரா? அல்லர். ஐவர் என்போர் சிலர். இன்னும் பலர் என்பர் சிலர். கலித்தொகைப் பாடல்களை ஊன்றிப் பார்த்தால் உண்மை புலப்படும்.

கலித்தொகைப் பாடல்கள் என்ன செய்கின்றன? உணர்ச்சியை அள்ளிச் சொரிகின்றன; உள்ளத்தைத் தொடுகின்றன; கவர்கின்றன; கட்டிப் பிடிக்கின்றன; சிந்தையை இழுக்கின்றன.

குறிஞ்சிக் கலியைப் படிக்கும்போது என்னுகிறோம்; காதலன் ஆகின்றோம்; காதலி ஆகின்றோம். தினைப்புனம் செல்கின்றோம். இன்பம்! இன்பம்! மலையும், மரமும் நம் கண்முன்னே நிற்கின்றன. சுனையும், அருவியும் தோன்றுகின்றன. வேழமும், வேங்கையும் காட்சி தருகின்றன. ஏதோ ஒரு மலை நாட்டிலே இருக்கும் நினைவு எழுகிறது. 'தேன் பிறை' கொண்டாடும் காதலர்க்கு இக் குறிஞ்சிக் கலி நல்விருந்தாம்.

பாலைக் கலியைப் படிக்கும்போது நெஞ்சு பதறுகிறது. பிரிவை எண்ணுகிறோம். பாலை நிலம்! வறண்ட பாலை! நம்முன் நிற்கின்றது. வெயிலில் நடப்பதுபோன்ற உணர்ச்சி தோன்றுகிறது! நா வறள்வதுபோல் இருக்கிறது! நீர் வற்றிய சுனைகள் கண்முன் தோன்றுகின்றன. காதலனும் காதலியும் மாறி மாறித் தோன்றுகின்றனர்.

முல்லைக் கலியைப் படிக்கும்போது நாமும் காளைகள் ஆகிறோம். ஏறு தழுவும் எழுச்சி தோன்றுகிறது.

ஆனால், அதே சமயத்தில் மற்றொன்றும் கண்முன்னே தோன்றுகிறது. ஆயர்குல மக்களின் வாழ்வு, உயிருடன் கண்முன் காட்சி தருகிறது.

மருதம் என்ன செய்கிறது? மணம் வீசுகிறது. என்ன மணம்? இன்ப மணம். சுக ஜீவனத்தின் மணம்.

நீர்வளம், நிலவளம் செறிந்த பூமியில் வாழும் மக்களின் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகிறார் கவி.

நெய்தல் கலியைப் படிக்கும்போது கடற்கரைப் பட்டினங்கள் கண்முன் வருகின்றன. காதலனைப் பிரிந்து ஏங்கும் காதலியுடன் நாமும் ஏங்குகிறோம். உடைந்த உள்ளத்தின் ஓலம் கேட்டு எதிரொலி செய்கிறது நமது உள்ளம்.

எனவே, கலித்தொகையில் என்ன காண்கிறோம்? பழந்தமிழ்ச் சமுதாயத்தைக் காண்கிறோம்; வாழ்க்கையைக் காண்கிறோம்; இயற்கை வளம் காண்கிறோம். மனித உள்ளத்தின் நெகிழ்ச்சி காண்கிறோம்; உணர்ச்சி காண்கிறோம்; உள்ளத்தைக் காண்கிறோம்.

பழைய இலக்கியங்களைப் பயில்வது எதற்கு?

கவிநயம் காண்பதற்கு என்பர் சிலர். வருணனைகளைக் கண்டு வியப்பதற்கு என்பர் வேறு சிலர். இப்படிப் பலர் பல வாறு கூறுவர். அவரவர் விரும்பியன காணட்டும்.

இவற்றிற்கு அப்பாலும் சென்று காண வேண்டியது ஒன்று உண்டு. அதுவே மனித வாழ்வு. அதையே நான் கலித்தொகையில் காண்கிறேன். மனித வாழ்வின் ஒவ்வொரு பகுதியையும் கலித் தொகையிலே காண்கிறேன்.

தமிழ் மொழிப்பற்று என் உள்ளத்திலே குடி கொண்டது. எப்போது? சிறுவனாயிருந்தபோது. தாய்ப் பற்று பின் எப்போது குடி கொள்ளும்?

அம் மொழிப் பற்றினை வளர்த்தவர் பலர். ஒவ்வொருவரையும் பற்றிக் கூறினால் விரியும். எனவே, விடுகிறேன்.

மாணவனாயிருந்தபோது என் உள்ளம் எதிலே படிந்தது? பகுத்தறிவிலே. அக் கண் கொண்டு நோக்கினேன் தமிழ்ப் பாடல்களை. உள்ளத்திலே என்ன தோன்றும்? போராட்டம்; போராட்டம்.

சம்பிரதாயமான முறையில் தமிழ்ப் பாடல்களுக்குப் பொருள் கூறியவர் பலர். அவற்றை என் உள்ளம் ஏற்கவில்லை. முரண் செய்தது.

தமிழ் வகுப்பு எனது போர்க்களமாயிற்று. மதங்கொண்ட யானைபோல் திரிந்தேன். வெறி! வெறி! தமிழ் வெறி! பகுத்தறிவு வெறி!

அங்குசங்கொண்டு வந்தார் ஒருவர். அவர் யார்? கரந்தைக் கவி அரசு திரு. ஆர். வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்.

தஞ்சை செயின்ட் பீட்டர்ஸில் தமிழாசிரியராக இருந்தார் அவர். தமிழ் இலக்கியத்தைக் காலத்துக்கு ஏற்ற முறையில் போதித்தார் அவர். அவர் பால் என் உள்ளம் படிந்தது.

சங்க இலக்கியங்களிலே என் கருத்தைச் செலுத்தியவர் அவரே. குறிப்பாக கலித்தொகைப் பாடல்களைக் கூறுவார். புனைந்துரை இல்லை! வாழ்க்கையோடு ஒட்டிய பாடல்கள்! இயற்கை வாழ்வு!

அவரைப் பின்தொடர்ந்தேன். திருவையாறு அரசர் கல்லூரியிலே வித்துவான் படிக்கச் சென்றேன். மூன்று ஆண்டுகள் அங்கே வாசம். என்ன கண்டேன்?

"காரிகை கற்றுக் கவி பாடுவதினும் பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்று" என்று கண்டேன். வித்துவான் படிப்புக்கு முழுக்குப் போட்டேன். வந்துவிட்டேன்.

எனது புரட்சி உள்ளத்துக்கு அங்கே ஏதுமில்லை. பல இருந்தன தமிழ் இலக்கியத்திலே. ஆனால் அவற்றை உரிய முறையில் எடுத்துச் சொல்வார் இல்லாது போயினர்.

பின்னே என் செய்தேன்? கடலை அடுத்தேன். எந்தக் கடல்? தமிழ்க் கடல்; திரு. வி. க. கடல் என்ன அளித்தது? முத்து பவழம் முதலியன நல்கியது.

அந்தப் பெரியார் எனது உள்ளத்தை அறிந்தார்; நன்கு அறிந்தார். அவரது நிழலிலே அமர்ந்தேன். இலக்கியத்தின் மீது கண்ணோட்டம் செய்தேன்.

என்ன கண்டேன்? கண்டறியாதன கண்டேன். பேரின்பம் கண்டேன். இலக்கியம் சுவை தரக் கண்டேன். பழந் தமிழனைக் கண்டேன். தமிழர் வாழ்வு கண்டேன்.

கலித்தொகையைப் பலகால் படித்தேன். படித்துப் படித்து இன்பத்தில் திளைத்தேன். படிக்குந்தொறும், படிககுந்தொறும் புதியன பல கண்டேன்.

கலித்தொகையை எல்லாரும் படித்தல் வேண்டும் என்று விரும்பினேன். எல்லாரும் எப்போது படிப்பர்?

கதை படிக்கும் காலம் இது. கதைபோல் சொன்னால்தான் அதிலே விருப்பம் ஏற்படும். எனவே, புதிய முறையில் எழுதியிருக்கிறேன். பாடல்களின் கருத்துக்களைப் புதுமை வழியில் சொல்லியிருக்கிறேன்.

பாடல்களின் அமைப்பிலே சிறு மாறுதல் செய்திருக்கிறேன். பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்ற அமைப்பு முறையை மாற்றியிருக்கிறேன்.

"குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே" என்பது நம்பி அகப் பொருள். இந்த முறையையே பின்பற்றியிருக்கிறேன்.

ஏன்? குறிஞ்சிக்குக் காதல். பாலைக்குப் பிரிவு. முல்லைக்கு ஏறு தழுவல். மருதத்துக்குப் பரத்தையிற் பிரிதல். நெய்தலுக்கு இரங்கல்.

காதல் நிகழாமல் பிரிவு எங்ஙனம் நிகழும்? பரத்தை வீடு சென்று வலி குன்றியவன் ஏறு தழுவல் எங்ஙனம் இயலும்?

எனவே, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற முறையிலேயே பொருள்மீது சென்றிருக்கிறேன்.

நான் எல்லாம் அறிந்தவன் அல்லன். குறைகள் உள்ளவன். எனது குறைகளை யான் அறிவேன். எனினும், ஆசை உந்தியது. ஆசை பற்றியே இச் செயலில் இறங்கினேன். தவறுகளை அறிஞர் உலகம் பொறுப்பதாக.

இதனைப் படித்து இன்புறுவோர்க்கு ஒன்று சொல்வேன். இந்த நூல் இன்பம் தருமாயின் எனக்கு மகிழ்வே. ஆனால் அந்த இன்பத்துக்குப் பொறுப்பு நான் அல்லன். கலித்தொகையைப் பாடிய கவிஞர்களே! அதை நன்முறையில் தொகுத்த நல்லந்துவனாரும் ஆவர்.

இதை நன்முறையில் வெளியிட்டு, விற்பதற்கு முன்வந்த எனது அன்பர்களுக்கு நன்றி.

—**சக்திதாசன் சுப்ரமணியன்**

# பதிப்புரை

'கற்று அறிந்தார் ஏத்தும் கலி' என்று புகழப் பெற்றது கலித் தொகை. பலரும் விரும்பிப் படித்து இன்புறத்தக்க முறையில் இதனை வெளியிட எண்ணினோம்.

விலையும் குறைவாயிருக்க வேண்டும். சுவையும் குன்றா திருக்க வேண்டும். எளிய நடையில் இருக்கவேண்டும். எல்லா ரும் படிக்கவேண்டும். எனவே, மலிவு வரிசையில் இதனை வெளியிடுகிறோம்.

"இக் கலித்தொகைக்கு உரை வேண்டுமே! யாரைக் கொண்டு எழுதச் செய்யலாம்" என்று எண்ணினோம். திரு. சக்திதாசன் சுப்பிரமணியன் அவர்கள் மீது எண்ணம் சென்றது.

அவரைக் கேட்டுக்கொண்டோம். அவரும் ஏற்றுக்கொண் டார். சுவைமிக்க உரை எழுதியிருக்கிறார். எளிய உரை! புதிய முறை! படிக்கப் படிக்க இன்பமளிக்கும் உரை!

திரு. சக்திதாசன் தமிழ் உலகுக்குப் புதியவர் அல்லர். தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களிடம் நீண்ட காலமாகத் தொடர்பு கொண்டவர். அவர்தம் அன்புக்கு உறைவிடமானவர்; அவர் தம் மாணவர். அப் பெரியார் நடத்திவந்த "நவசக்தி" பத்திரிகை யைத் தாம் ஏற்று நடத்தி வருபவர். பத்திரிகை உலகிலே நீண்ட நாளாய் அநுபவம் உள்ளவர்; சிறந்த எழுத்தாளர். புதுமையிலே விருப்பமுள்ளவர்.

எனவே, புதுமை உரை தந்திருக்கிறார். அவர்க்கு நன்றி.

இந் நூலை அழகிய முறையில், கண்ணைக் கவரும் விதமாக நன்கு பதிப்பிக்க உறுதுணை புரிந்த நண்பர் திரு. முல்லை முத்தையா அவர்களுக்கும் நன்றி.

புதுச்சேரி.

**செம்பியன்**
பதிப்பாசிரியன்
அன்பு வெளியீடு.

# பொருள் அடக்கம்

## 1. குறிஞ்சிக் கலி — 134

## 2. பாலைக் கலி

## 3. முல்லைக் கலி

எண் பக்கம்



## 4. மருதக் கலி

## 5. நெய்தற் கலி

# குறிஞ்சிக் கண்ணாடி

1. **தெய்வம்:** முருகன்.
2. **உயர்ந்தோர்** பொருப்பன், வெற்பன், சிலம்பன், குறத்தி, கொடிச்சி.
3. **தாழ்ந்தோர்:** குறவர், கானவர், குறத்தியர்.
4. **பறவை:** கிளி, மயில்.
5. **விலங்கு:** புலி, கரடி, யானை, சிங்கம்.
6. **ஊர்:** சிறுகுடி.
7. **நீர் நிலை:** அருவி, சுனை.
8. **மலர்:** வேங்கைப் பூ, குறிஞ்சிப் பூ, காந்தள் பூ.
9. **மரம்:** சந்தனம், தேக்கு, அகில், அசோகு, நாகம், மூங்கில்.
10. **உணவு:** மலைநெல், மூங்கில், அரிசி, தினை.
11. **பறை:** தொண்டகப் பறை.
12. **யாழ்:** குறிஞ்சி யாழ்.
13. **பண்:** குறிஞ்சிப் பண்.
14. **தொழில்:** மலைநெல் விதைத்தல், தினை காத்தல், தேன் அழித்து எடுத்தல், கிழங்கு தோண்டி எடுத்தல்.
15. **விளையாட்டும், பொழுது போக்கும்:** அருவி நீராடல், சுனை நீராடல்.



## கடவுள் வாழ்த்து

ஆறு அறி அந்தணர்க்கு
அரு மறை பல பகர்ந்து,
தேறு நீர் சடைக் கரந்து, திரிபுரம்
தீ மடுத்து,
கூறாமல் குறித்ததன் மேல் செல்லும்
கடுங் கூளி
மாறுப் போர், மணி மிடற்று, எண் கையாய்
கேள், இனி :

படு பறை பல இயம்ப, பல் உருவம்
பெயர்த்து நீ,
கொடு கொட்டி ஆடுங்கால், கோடுஉயர்
அகல் அல்குல்,
கொடி புரை நுசுப்பினாள் கொண்ட
சீர் தருவாளோ ?

மண்டு அமர் பல கடந்து,
மது கையால் நீறு அணிந்து,
பண்டரங்கம் ஆடுங்கால், பணை
எழில் அணை மென்தோள்,
வண்டு அரற்றும் கூந்தலாள்
வளர் தூக்குத் தருவாளோ ?

கொலை உழுவைத் தோல் அசைஇ,
கொன்றைத் தார் சுவற் புரள,
தலை அங்கை கொண்டு, நீ காபாலம்
ஆடுங்கால்,
முலை அணிந்த முறுவலாள் முன்
பாணி தருவாளோ ?

என ஆங்கு—
பாணியும், தூக்கும், சீரும், என்று இவை
மாண் இழை அரிவை காப்ப,
ஆணம் இல் பொருள் எமக்கு
அமர்ந்தனை, ஆடி.

## கடவுள் வாழ்த்துக்குப் பொருள்

எல்லாம் வல்ல இறைவன் என்ன செய்கிறான்? அண்ட பிண்ட சராசரங்களை எல்லாம் படைக்கிறான்; காக்கிறான்; பின்னை அழிக்கிறான்.

அப்படி அழிக்கும் காலத்திலே அவன் ருத்திர மூர்த்தியாகிறான்.

கொடு கொட்டி என்னும் கூத்தினை ஆடுகிறான்; சுட்டு எரிக்கிறான். எரித்த பின் அந்தச் சுடலையிலே உள்ள நீறைப் பூசிக் கொள்கிறான்; வெண்ணிறக் காட்சி தருகிறான். பாண்டு ரங்கம் எனும் கூத்தாடுகிறான். பாண்டு என்றால் வெண்மை. பாண்டு ரங்கன் என்றால் வெண்ணிறக் கூத்தன்.

அப்படி ஆடும் போது சுடலையிலே என்ன கிடைக்கும்? கபாலம் தானே கிடைக்கும்! அதைக் கையில் ஏந்திக் காபாலம் எனும் கூத்தாடுகிறான்.

இப்படியாக முத் தொழில் வல்ல பிரான் முக் கூத்து ஆடுகிறான்.

அப்படி ஆடும் போது அந்த உமையவள் எங்கே? அருகில் தான் இருக்கிறாள். எங்கும் போய்விடவில்லை.

இறைவனின் கூத்து மூன்றிற்கும் இன்றியமையாத மூன்று என்ன? பாணி, தூக்கு, சீர் என்பன. இம் மூன்றும் தாளம் பற்றியன. தாளம் இன்றேல் கூத்து எங்ஙனம் நிகழும்?

நிகழாது அல்லவா? கூத்து நிகழ்வதற்கு இன்றியமையாத அம் மூன்றையும் எடுத்துத் தருகிறாள் உமை.

அதே போல கவிதையும் ஆண்டவனின் திருக்கூத்து. இக் கூத்துக்கு வேண்டிய பாணி, தூக்கு, சீர் மூன்றையும் அந்த உமையவள் அளிப்பாளாக என்பது கருத்து.



## கபிலர் யார் ?

குறிஞ்சிக்கலி 29 பாடல்கள் கொண்டது. இப் பாடல்களைப் பாடியவர் கபிலர்.

இவர் பிறந்த ஊர் திருவாரூர்; திருவாதவூர் என்றும் சிலர் சொல்வர். எதுவும் திட்டமாக நமக்குத் தெரியவில்லை.

கடை எழுவள்ளல்களில் ஒருவராகிய பாரியின் சிறந்த நண்பர் கபிலர். பாரி இறந்தான். அவனுக்கு மகளிர் இருவர். அந்த இருவருக்கும் மணம் முடித்து வைப்பதற்காக இவர் பெரு முயற்சி மேற்கொண்டார். இம் முயற்சி இலக்கியப் புகழ் பெற்றது.

பெண்களது உள்ள இயலை நன்கு அறிந்தவர் இவர். அவற்றைப் பாடல்களிலே படம் பிடித்துக் காட்டுவதிலே வல்லவர்.

எளிய பாடல்கள்; இனிய சுவை; மனித இயல்பை எடுத்துக் காட்டும் நிகழ்ச்சிகள். இவையே இவர் தம் பாடல்களில் உள்ள சிறப்பாகும்.

## குறிஞ்சி என்பது என்ன ?

நமது பழந்தமிழர்கள் என்ன செய்தார்கள்? நிலத்தை ஐந்து வகையாகப் பிரித்தார்கள். எப்படி? குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்து.

மலையும் மலை சூழ்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும். இங்கே வாழ்ந்த மக்களுக்கு என்ன பெயர்? உயர் குடிப் பிறந்த ஆண்களுக்குப் பொருப்பன், வெற்பன், சிலம்பன் என்று பெயர். பெண்களுக்குக் குறத்தி, கொடிச்சி என்று பெயர். மற்றையோருக்கு குறவர். கானவர் என்றும், பெண்களுக்குக் குறத்தியர் என்றும் பெயர்.

குறிஞ்சியின் தெய்வம் முருகன். மலை நாட்டு மக்கள் முருகனை வழிபாடு செய்வர்.

குறிஞ்சி நாட்டிலே உள்ள ஊர்களுக்குச் சிறுகுடி என்று பெயர். அதாவது அவர்கள் சிறு சிறு குடியிருப்புகளிலே வாழ்ந்து வந்தார்கள்.

கிளி, மயில் இரண்டும் குறிஞ்சி நாட்டுப் பறவைகள். புலி, கரடி, யானை, சிங்கம் இவை விலங்குகள்.

அருவி, சுனை இவையே நீர் நிலைகள்.

சந்தனம், தேக்கு, அகில், அசோகு, நாகம், மூங்கில்; இவை மலை நாட்டு மரங்கள்.

வேங்கைப் பூ, குறிஞ்சிப் பூ, காந்தள் பூ; இவை மலர்கள்.

மலை நெல், மூங்கில் அரிசி, தினை இவையே அவர்தம் உணவு. அவர்கள் முழங்கிய இசைக் கருவிகள் இரண்டு. ஒன்று யாழ்; மற்றொன்று பறை. யாழுக்குக் குறிஞ்சி யாழ் என்று பெயர். பறைக்குத் தொண்டகப் பறை என்று பெயர். அவர்கள் பாடியது குறிஞ்சிப் பண் என்பது.

மலை நெல் விதைத்தல், தினை காத்தல், தேன் அழித்து எடுத்தல், கிழங்கு தோண்டி எடுத்தல் இவை அவர் தம் தொழில்.

அருவி நீராடல், சுனை நீராடல், வெறியாடல் இவை அவர் தம் பொழுது போக்கு விளையாட்டுகள்.

## கலி என்பது என்ன ?

குளத்திலோ அல்லது ஆற்றிலோ குளித்து விட்டு வருகிறார்கள் பெண்கள். வரும்போது குடத்திலே நீர் கொண்டு வருகிறார்கள். நீர் கொஞ்சம் குறைவாயிருக்கிறது. அப்போது குடத்திலே ஒருவித ஓசை எழும். அந்த ஓசை எப்படி இருக்கும்? எழும்; விழும்; எழும்; விழும்; பெண்களின் கால் அடி எப்படி இருக்கிறதுவோ அதற்கு ஏற்பத் தாளம் போடும்.

இதற்குத்தான் 'துள்ளல் ஓசை' என்று பெயர் சொன்னார்கள் நமது பழம்பெருமக்கள். 'ரிதம்' என்று சொல்வார்கள் ஆங்கிலத்திலே.

இத்தகைய துள்ளல் ஓசை கொண்ட பாட்டுக்குக் 'கலிப்பா' என்று பெயர்.

மனிதனுக்குத் துள்ளல் எப்போது நிகழும் ? எழுச்சியுள்ள போது. எழுச்சியோ மகிழ்ச்சியுடன் உள்ளபோது தோன்றும். துன்பம் தோன்றியபோதும் எழுச்சி ஏற்படும். இத்தகைய உள்ளத்து எழுச்சியைப் பாடுவதற்குச் சிறந்தது 'கலிப்பாவே'.

கலிப்பா எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றி யாப்பிலக்கணம் கூறுகிறது. அது இப்போது இங்கே தேவையில்லை.

## குறிஞ்சிக் கலி கூறுவது என்ன?

குறிஞ்சி நிலத்திலே உள்ள உயர்குடி மக்கள், குறு நில மன்னர்போல் வாழ்ந்த பெரு நிலக் குடி மக்கள், நிலப் பிரபுக்கள், செல்வர்கள், இவர்களது வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகிறது குறிஞ்சிக் கலி.

எத்தகைய வாழ்க்கை? அக வாழ்க்கை. அகம் என்பது என்ன? உள்ளத்திலே தோன்றுகிற நிகழ்ச்சி. அதாவது, நல்ல பருவம் வரப்பெற்ற ஓர் இளைஞன், பருவம் வந்த ஓர் இளம் பெண்ணைச் சந்திக்கிறன். அந்த நிமிஷம் முதல் அவ்விருவர் தம் உள்ளத்திலே தோன்றும் உணர்ச்சிகளை எல்லாம் படம் பிடித்துக் காட்டுகிறது குறிஞ்சிக் கலி. அதாவது அகப்பொருளை அழகுறச் சொல்கிறது.

அகப் பொருளிலே குறிஞ்சிக்கு உரியது எது? புணர்தலும், புணர்தல் நிமித்தமும்.

அதாவது என்ன? ஓர் இளைஞன். ஓர் இளம் பெண். இவ்விருவரும் நடந்துகொண்ட விதம்.

இளைஞன் இளம் பெண்ணைக் காண்பது; கண்டு ஏங்குவது; ஏங்கி இரவு பகலாக எண்ணுவது; அவளது இன்பம் துய்க்க முயல்வது; அவளை எப்படி அடையலாம் என்று யோசிப்பது; அவளது தோழியை மெல்ல அணுகுவது; அவள் தயவால் இன்பம் அனுபவிப்பது; இரவு நேரத்திலே திருட்டுத் தனமாகப் போய் வருவது—இவை எல்லாம்.

இவ்வாறு காதல் கொண்ட ஆண், பெண் ஆகிய இரு பாலாரின் உள்ள நெகிழ்வை இக் குறிஞ்சிக் கலியிலே காணலாம்.

கட்டழகி ஒருத்திமீது காதல்கொண்டு இன்பம் துய்க்கிறன் ஒருவன்; இளங்காளை. இதற்கு முன் அவர்தம் உள்ளத்தில் ஏற்பட்ட நெகிழ்ச்சி, இதற்குப் பின் ஏற்பட்ட நெகிழ்ச்சி, இவற்றையே கூறுகிறது குறிஞ்சிக் கலி.

ஆடவனின் உள்ளம் மாத்திரம் அல்ல. பெண்ணின் உள்ளமும் இங்கே காணலாம்.

## 1. உள்ளமும் ஊஞ்சலும்

தலைவி ஒருத்தி. தலைவனைத் தனி இடத்திலே காண்கிறாள்; உள்ளமும் உடலும் அவன் வசம் ஒப்புவிக்கிறாள்.

பிறகு அவளது இயல்பிலே மாறுதல் ஏற்படுகிறது. உடலிலே நாற்றம். தோற்றத்திலே மாறுதல். உணவிலே நாட்டம் செல்லவில்லை.

இவற்றையெல்லாம் காண்கிறாள் தோழி. ஒரு முடிவுக்கு வருகிறாள். என்ன முடிவு?

தலைவனைத் தனி இடத்திலே சந்தித்திருக்கிறாள் தலைவி என்ற முடிவு. தலைவி என்ன செய்தாள்? தான் தலைவனைச் சந்தித்தது பற்றி ஏதும் கூறவில்லை தோழியிடத்திலே. மறைத்து விட்டாள்.

'அவ்விதம் மறைக்க வேண்டியதில்லை. உனது இயல்பிலே மாறுதல் கண்டேன். காரணம் எதுவாயிருக்கலாம் என்பதை உணர்ந்து கொண்டேன்' என்று மறைமுகமாகத் தெரிவிக்கிறாள் தோழி.

அதாவது ஒரு தலைவனும் தலைவியும் சந்தித்த நிகழ்ச்சியைக் கதைபோல் கூறுகிறாள். தலைவி தலைவனைத் தனி இடத்தே கண்டு களித்தது தனக்குத் தெரியும் என்பதை அறிவிப்பதற்காக. என்ன சொல்கிறாள்? கேளுங்கள் :

கயமலர் உண்கண்ணாய்! காணாய்; ஒருவன்
வயமான் அடித்தேர்வான் போலத், தொடை மாண்ட
கண்ணியன் வில்லன், வரும்; என்னை நோக்குபு,
முன்னத்திற் காட்டுதல் அல்லது, தான் உற்ற
நோய் உரைக்கல்லான், பெயரும்மன் பன்னாளும்;

பாயல்பெறேன், படர்கூர்ந்து, அவன் வயின்
சேயேன்மன் யானும் துயர் உழப்பேன்; ஆயிடைக்
கண்நின்று கூறுதல் ஆற்றான், அவனாயின்;
பெண் அன்று, உரைத்தல், நமக்காயின்; 'இன்னதூஉம்
காணான், கழிதலும் உண்டு' என்று, ஒருநாள், என்

தோள் நெகிழ்புற்ற துயரால் துணிதந்து, ஓர்
நாண் இன்மை செய்தேன்; நறுநுதால்! ஏனல்
இனக்கிளி யாம் கடிந்து ஓம்பும் புனத்து அயல்,
ஊசல் ஊர்ந்து ஆட, ஒருஞான்று வந்தானை,
'ஐய! சிறிது என்னை ஊக்கி' எனக் கூறத்
'தையால்! நன்று' என்று அவன் ஊக்க, கைநெகிழ்பு,
பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பில்;
வாயாச் செத்து

ஒய்யென ஆங்கே எடுத்தனன்; கொண்டான்; மேல்
மெய்யறியாதேன் போல் கிடந்தேன் மன்; ஆயிடை
மெய்யறிந்து ஏற்று எழுவேன் ஆயின் மற்றுஒய்யென,
'ஒண்குழாய்! செல்க' எனக்கூறி விடும் பண்பின்
அங்கண் உடையன் அவன்.

"குளத்திலே மலர்ந்துள்ள நீல மலர் போன்ற—மை தீட்டப் பெற்ற—கண்களை உடையவளே! நான் கூறுவதைச் சிறிது எண்ணிப் பார்.

"ஓர் இளைஞன்; அழகன்; ஈடு இணை கூறல் இயலாத அழகன்; மலர் மாலை அணிந்தவன்; திறமையாகத் தொகுக்கப் பெற்ற மலர் மாலை; புகழத் தக்க மலர் மாலை; மாண்பு மிக்க மலர் மாலை.

"வில் ஏந்திய கையன்; வருவான்; அடிக்கடி வருவான்; தன் வயப்பட்டுத் தப்பிய மானைத்தேடி; அதன் அடிச்சுவடு பற்றித் தேடுவான் போல வருவான்.

"என்னை நோக்குவான். அவ்விதம் பார்க்கும்போது ஏதும் பேசான். நோயுற்றான் போல் காணப்பட்டான். எனினும் அந்த நோய் பற்றி வாய் திறவான்; முகக் குறி காட்டுவான். அவ்வளவே. திரும்பிச் செல்வான். இவ்விதம் வருவதும் போவதுமாயிருந்தான். ஒரு நாளல்ல; பல நாட்கள்.

"அவன் துயர் கண்டு எனக்கும் துன்பமுண்டாயிற்று. உறக்கம் நீங்கிற்று. படுக்கையில் படுத்தால் தூக்கம் வருவதில்லை.

"அவனும் யானும் எவ்வழி உறவினர்? எவ்வழியிலுமில்லை. எனினும் அவன் துயர் கண்டு நான் துயருற்றேன்; துன்பத்தில் அழுந்தினேன்.

"அவனோ வாய் திறந்து கூறுகிறிருக்கிறான். இந்நிலையில் நான் வாய் திறந்து கூறலாமா? 'நின் வருத்தங் கண்டேன்; உணர்ந்தேன். நின் போல் நானும் வருந்துகிறேன்' என்று கூறி விடலாமா?

"இவ்விதம் கூற எண்ணினேன். ஆனால் நாணம் தடுத்தது. நான் ஒரு பெண்ணாயிற்றே; இதை வாய் விட்டுக் கூறுதல் தகுமா? தகாதே. அது பெண்மையாகாதே. எனது உள்ளம் எவ்விதம் இருக்கிறது என்பதை அறியாமல் அவன் சென்று விட்டால்-இறந்து விட்டால்-என்ன செய்வது?

"இதை நினைத்தேன். அவன் மீது கொண்ட அன்பினாலே எனது தோள்கள் மெலிந்தன.

"அந்த மெலிவு தாங்க முடியாமல் ஒன்று செய்தேன். என்ன செய்தேன்? நாணமற்ற செயல் புரிந்தேன். அது என்ன தெரியுமா? அகன்ற நெற்றியினை உடையவளே! கேள்!

"தினைப் புனத்துக்கு வந்து சேதம் விளைவிக்கின்றனவே கிளி இனங்கள்! அவற்றை நாம் விரட்டி தினைப் புனங் காக்கின்றோம் அல்லவா? அந்த இடத்திற்கு அருகே ஓர் ஊஞ்சல் இருக்கின்றதல்லவா? அந்த ஊஞ்சலில் ஆடுவது வழக்கமல்லவா?

"இவ்விதம் ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்தேன் ஒரு நாள். அப்போது அவனும் வந்தான் அங்கே.

"வந்தவனைக் கண்டேன் நான். 'ஐயா! என்னைச் சிறிது நேரம் இந்த ஊஞ்சலில் வைத்து ஆட்டலாகாதா?' என்று கேட்டேன். கேட்டதும் அவன் என்ன கூறினான்? 'பெண்ணே! நல்லது. அப்படியே செய்கிறேன்' என்று கூறினான்; ஊஞ்சலை ஆட்டினான்.

"அவ்விதம் அவன் ஆட்டிய போது நான் என்ன செய்தேன்? அவனது மார்பின் மேல் வீழ்ந்தேன். உண்மையாகவா? அல்ல; பொய்யாக. ஊஞ்சலைப் பற்றியிருந்த பிடி நழுவி வீழ்ந்தவள் போல வீழ்ந்தேன்.

"அவன் என்ன செய்தான் தெரியுமா? அதை உண்மை என்று கருதினான்; என்னைத் தூக்கினான்; வாரி அணைத்துக் கொண்டான் தன் மேல். அப்போது நான் என்ன செய்தேன்? ஒன்றும் அறியாதவள் போல் கிடந்தேன்; மயக்குற்றவள் போல்

இருந்தேன். ஏன் தெரியுமா? விழித்து எழுந்தால் என்ன செய்வான் அவன்?

'ஒளிமிக்க கருமை வாய்ந்த கூந்தல் அழகியே! பெண்ணே! போய்வா!' என்று கூறி என்னை அனுப்பிவிடுவான். அத் தகைய பண்பு மிக்கவன் அவன்.

"அதற்கு விருப்பமில்லை எனக்கு. எனவே அவன் அணைப் பிலேயே இருந்தேன்; மயக்க முற்றவள் போல் இருந்தேன்."

இதுதான் அவள் சொன்னது.

## 2. வாட்டமும் வழியும்

**தி**னைப்புனத்திலே தலைவியிடம் தொடர்பு கொண்ட தலை வன் என்ன செய்கிறான்? ஊருக்குள் வருகிறான். எதன் பொருட்டு? தலைவியை மீண்டும் காணும் பொருட்டு.

காண்பது எப்படி? எளிதில் நடக்கிற ஒன்றா? இல்லை; பின் என் செய்வது?

தோழியின் உதவியை நாடுகிறான் தலைவன். தோழி என்ன செய்கிறாள்? தலைவனும் தலைவியும் தனி இடத்தே சந்திப்பதற்குத் துணை நிற்கிறாள். அதனால் தலைவனின் எண்ணம் நிறைவேறு கிறது. தலைவியின் மனமும் குளிர்கிறது.

பின்னர் என்ன? தலைவன் அடிக்கடி வருகிறான். பகல் நேரத்திலா? அல்ல. இரவு நேரத்திலே. தோழியின் உதவியால் [illegible]யைச் சந்திக்கிறான்; இன்பமாக இரவைக் க[illegible] [illegible]பிரியுமுன் அவன் பிரிகிறான்.

இவ்விதம் நடப்பது எவ்வளவு நாளைக்கு இயலும்? சில நாட்களே. தொடர்ந்து நடக்குமா? நடவாது. எனவே, என்ன செய்ய வேண்டும்? இரவு நேரத்திலே பிறர் அறியா வண்ணம் நடத்தலை விடவேண்டும். இரவு நேரத்தில் வருவதும், பொழுது புலருமுன் போவதும் கூடாது. தலைவனும் தலைவியும் பிரியா திருத்தல் வேண்டும்; அதற்கு வழி? ஊரார் அறியத் தலைவியை மணம் புரிதலே வழி. இதைத்தான் தோழி தலைவனுக்கு அறி வுறுத்துகிறாள்.

இமைய வில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக,
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப் பொலி தடக்கையின் கீழ்புகுத்து, அம்மலை
எடுக்கல் செல்லாது உழப்பவன் போல -

உறு புலி உரு ஏய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவு கொண்டு, அதன் முதல் குத்திய மதயானை
நீடு இரு விடர் அகம் சிலம்பக் கூய், தன்
கோடு புய்க்கல்லாது, உழக்கும் நாட ! கேள்:

ஆர் இடை என்னாய் நீ, அரவு அஞ்சாய், வந்தக்கால்
நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை,
கார் பெற்ற புலமே போல் கவின்பெறும்; அக்கவின்
தீராமல் காப்பதோர் திறன் உண்டேல்,
உரைத்தைக் காண்.

இருளிடை என்னாய் நீ, இரவு அஞ்சாய், வந்தக்கால்,
பொருள் இல்லான் இளமைபோல்
புல்லென்றாள், வைகறை,
அருள் வல்லான் ஆக்கம் போல் அணிபெறும்; அவ்வணி
தெருளாமல் காப்பதோர் திறன் உண்டேல்
உரைத்தைக் காண்.

மறம் திருந்தார் என்னாய் நீ மலையிடை வந்தக் கால்,
அறம் சாரான் மூப்பே போல் அழிதக்காள், வைகறை
திறன் சேர்ந்தான் ஆக்கம் போல் திருத்தகும்; அத்திருப்
புறங் கூற்றுத் தீர்ப்பதோர் பொருள் உண்டேல்
உரைத்தைக் காண்.

என, ஆங்கு,
நின் உரு விழுமம் கூறக் கேட்டு
வருமே, தோழி! நன்மலை நாடன் -
வேங்கை விரிவு இடம் நோக்கி,
வீங்கு இறைப் பணைத்தோள் வரைந்தனன்
கொளற்கே.

''கங்கையைத் தலையிலே கொண்டான் இறைவன். ஆதலின் அவனது சடை ஈரமாயிற்று. அந்த இறைவன் கயிலை மலையிலே அமர்ந்திருந்தான். உமையுடன் அமர்ந்திருந்தான். அவ்வளவு தானா? இல்லை. இமயத்திலே பிறந்த மூங்கிலினால் வளைக்கப் பெற்ற வில் ஏந்தியிருந்தான். அவ்விதம் இருந்தபோது என்ன நடந்தது?

''அரக்கர் கோமான் வந்தான். எத்தகைய அரக்கர் கோமான்? பத்துத் தலைகள் கொண்ட அரக்கர் கோமான். வந்து என்ன செய்தான்? கயிலையங்கிரியைப் பெயர்க்க விரும்பினான். வீர வளை பொலிந்த கைகளை அம்மலை அடியிலே கொடுத்துப் பெயர்க்க முயன்றான். இயலவில்லை. துன்புற்றான்; வருந்தினான்.

''அதே போல மதயானை என்ன செய்கிறது? வேங்கை மரத்தைக் காண்கிறது. வேங்கை மரம் எத்தகைய காட்சி வழங்குகிறது? பூத்துக் குலுங்குகிறது. அது புலிபோலிருக்கிறது. அக் காட்சியைக் கண்டதும் மதயானைக்குச் சினம் எழுகிறது; பொங்கி எழுகிறது. எழவே, என் செய்கிறது மத யானை? வேங்கை மரத்தின் அடியிலே பாய்ந்து குத்துகிறது தந்தங்களினாலே. குத்திய உடனே தந்தங்கள் மரத்திலே பதிந்து விடுகின்றன; ஆழமாகப் புதைந்து விடுகின்றன. புதைந்த தந்தங்களை மீட்க இயலாது வருந்துகிறது மதயானை; அரற்றுகிறது; பெருங் குரல் எடுத்து ஓலமிடுகிறது. அதன் எதிரொலி எங்கும் கேட்கிறது; மலைப்பாங்கான அந்தப் பள்ளத்தாக்கு எங்கும் ஒலிக்கிறது. இத்தகைய மதயானைகளும், வேங்கை மரங்களும் மலிந்த மலை நாடனே! கேள்.

''இரவு நேரத்திலே வருகின்றாய் நீ. தலைவியின் இன்பத்திற்காக. நீ வரும் வழி கொடிய பாம்புகள் நிறைந்தது. அந்தப் பாம்புகளைக் கண்டு நீ அஞ்சுவதில்லை. 'இடையூறுமிக்க வழியாயிற்றே' என்று எண்ணுவதில்லை; வருகின்றாய்.

''நின் வருகை கண்ட தலைவி அழகுபெற்று விளங்குகிறாள். எதைப்போல? விடியற் காலத்திலே மழை பொழியப்பெற்ற பயிர் போல.

''நின் வருகையால் பெற்ற எழில் என்னாகும்? நீ செல்லும்

போது தளர்வுறும் அன்றோ? அதை நீ அறிய மாட்டாய். ஏன்? நீதான் போய் விடுகிறாயே!

''அவளது எழில் அவளை விட்டு நீங்காதிருத்தல் வேண்டும். அதற்கு ஏதாவது வழியுண்டா? உண்டானால் அதைச் சொல்.

''இருள் நேரத்திலே வருகிறாய். இருள் குறித்து நீ அஞ்சுவதில்லை. இரவு நேரமாயிற்றே என்று எண்ணுவதில்லை. வருகிறாய்; அஞ்சா நெஞ்சத்துடன் வருகிறாய்.

''உன் தலைவி எப்படி இருக்கிறாள்? மெலிந்திருக்கிறாள்; வாடி இருக்கிறாள்; பொலிவிழந்து காண்கிறாள். எது போல? இளமையிலே வறுமையின் தாக்குதலுக்கு இலக்கானவன் எப்படி இருப்பானோ அப்படி இருக்கிறாள்.

''இரவு, நீ வந்து விடுகிறாய். விடியற் காலையிலே தலைவி எக் காட்சி வழங்குகிறாள்? ஆண்டவனது அருளைப் பெற்றவன் போல் காட்சி வழங்குகிறாள்; பொலிவுபெற்று விளங்குகிறாள்; வனப்புடன் தோன்றுகிறாள்.

''இவ்விதம் வனப்பும் வாட்டமும் மாறி மாறித் தோன்றினால் என்னாகும்? அயலாரின் பழிச் சொல்லுக்கு இடமாகும். அதாவது நின் வருகையைப் பலரும் அறிதலாகும். அந்நிலை ஏற்படாதவாறு காத்தல் வேண்டும். அதற்கு ஏதாவது வழி உண்டா? உண்டாயின் அதைச் சொல்.

''நீ வருவதற்கு முன்னால் தலைவி எப்படியிருக்கிறாள்? இளமையில் நல் வழியிலே நடவாதவன் முதுமையில் எப்படியிருப்பான்? உடல் கட்டுத் தளர்ந்து உடைந்திருப்பான் அன்றோ? அவ்விதமிருக்கிறாள் தலைவி.

''இரவு நேரத்திலே வருகின்றாய் நீ. மலைச் சாரல் வழியே வருகின்றாய். வரும் வழி எத்தகையது? கொலை செய்தற்கு அஞ்சாதவர் மலிந்தது. அவர்களைக் கண்டு நீ பயப்படவில்லை; வருகிறாய்.

''நீ வந்த பின்னரோ, செல்வத்தில் வளர்ந்தவள் போல் ஆக்கம் பெற்று விளங்குகிறாள்; அழகுடன் காட்சி தருகிறாள்.

''இதுபற்றிப் பிறர் ஏதும் பேசுதலாகாது. அதற்கு ஏதாவது வழியுண்டா? அதைச் சொல்.''

இவ்வாறு கூறுகிருள் தோழி. யாரிடம்? தலைவனிடம். அதன் கருத்தென்ன? இரவுக் குறியிலே தலைவன் தலைவியிடம் வந்து போகிருன் இது நீண்ட நாள் நடைபெறலாகாது. நடைபெற்ருல் ஊரிலே பலர் பலவாறு பேசுதற்கு இடமுண்டாகும். அதற்கு இடங் கொடுத்தலாகாது. அதற்கு வழி என்ன? ஊரறிய மணம் புரிதலேயாகும்.

இதைக் குறிப்பாகத் தலைவனுக்கு அறிவிக்கிருள் தோழி.

அதனை உணர்ந்து கொண்டான் தலைவன். உடனே என்ன கூறினுன்?

'வருவேன்' என்று கூறினுன். எப்போது? வேங்கை மலருங் காலத்தே. எதற்கு? தலைவியை மணம் புரிதற்கு.

உடனே தோழி தலைவியிடத்தே செல்கிருள்.

"நின் வருத்தமெல்லாம் தலைவனுக்குக் கூறினேன். இரவுக் குறியால் ஏற்படும் இன்னல்களை விளக்கினேன். அவன் மீண்டும் வருவதாகச் சொன்னுன். எதற்கு? உன்னை மணம் புரிதற்கு? எப்போது? வேங்கை மலருங் காலத்தே. எனவே, வருந்தாதிரு" என்று கூறுகிருள்.

## 3. சீற்றமும் தேற்றமும்

தலைவனுக்குப் பெண் கொடுக்குமாறு கேட்டனர், தலைவனின் பெற்ருேர். எவரிடம்? தலைவியின் பெற்ருேரிடம். என்ன நிகழ்ந்தது? பெண் கொடுக்க மறுத்துவிட்டனர் தலைவியின் பெற்ருேர். பெண் கேட்க வந்தவரும் சென்றனர்.

இதை அறிந்தாள் தோழி. தன் தாயிடம் செல்கிருள். தலைவியின் பெற்ருேர் செய்தது தவறு என்று எடுத்துக் காட்டுகிருள். அவள் சொல்கிருள்:

காமர் கடும்புனல் கலந்து எம்மோடு ஆடுவாள்,
தாமரைக் கண் புதைத்து, அஞ்சித் தளர்ந்து
அதனேடு ஒழுகலான்,
நீள் நாக நறுந்தண் தார் தயங்கப் பாய்ந்து அருளினுல்
பூண் ஆகம் உறத் தழீஇப் போத்தந்தான் அகன் அகலம்

வருமுலை புணர்ந்தன என்பதனால் என் தோழி
அரு மழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளே.

அவனும்தான், ஏனல் இதணத்து அகிற் புகை உண்டு
இயங்கும்
வான் ஊர் மதியம் வரை சேரின், அவ் வரை
"தேனின் இறால்" என ஏணி இழைத்திருக்கும்
கான் அகல் நாடன் மகன்.

சிறு குடியீரே ! சிறு குடியீரே !
வள்ளி கீழ் வீழா : வரை மிசைத் தேன் தொடா :
கொல்லை குரல் வாங்கி ஈனா—மலை வாழ்நர்
அல்ல புரிந்து ஒழுகலான்.

காந்தள் கடி கமழும், கண் வாங்கு, இருஞ் சிலம்பின்
வாங்கு அமை மென் தோள் குறவர் மட மகளிர்
தாம் பிழையார், கேள்வர்த் தொழுது
எழலால், தம் ஐயரும்
தாம் பிழையார், தாம் தொடுத்த கோல்.

என ஆங்கு,
அறத் தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க்கு உய்த்து உரைத்தாள், யாய்.

அவரும் தெரிகணை நோக்கி, சிலைநோக்கி கண் சேந்து
ஒரு பகல் எல்லாம் உருத்து எழுந்து, ஆறி
'இருவர் கண் குற்றமும் இல்லையால்' என்று
தெருமந்து சாய்த்தார் தலை.

தெரி இழாய் ! நீயும், நின் கேளும் புணர
வரை உறை தெய்வம் உவப்ப, உவந்து
குரவை தழீஇ யாம் ஆட, குரவையுள்
கொண்டு நிலை பாடிக் காண்.

நல்லாய் !—
நல் நாள் தலைவரும் எல்லை, நமர் மலைத்
தம் நாண் தாம் தாங்குவார், என் நோற்றனர் கொல்?

புன வேங்கைத் தாது உறைக்கும் பொன்
 அறை முன்றில்,
நனவில் புணர்ச்சி நடக்குமாம் அன்றோ?
நனவில் புணர்ச்சி நடக்கலும், ஆங்கே
கனவில் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ?

விண் தோய் கல் நாடனும் நீயும் வதுவையுள்
பண்டு அறியாதீர் போல் படர்கிற்பீர்மன் கொலோ?
பண்டு அறியாதீர் போல் படர்ந்தீர் பழங் கேண்மை
கண்டு அறியாதேன் போல் கரக்கிற்
 பென்மன் கொலோ?

மை தவழ் வெற்பன் மண அணி காணுமல்
கையால் புதை பெறூஉம் கண்களும் கண்களோ?
என்னை மன் நின் கண்ணால் காண் பென்மன், யான்.
நெய்தல் இதழ் உண்கண் நின்கண் ஆக, என்கண் மன!
என ஆங்கு,

நெறி அறிசெறி குறிபுரி திரிபு அறியா
 அறிவனை முந்துறீஇ,
தகை மிகு தொகை வகை அறியும் சான்றவர் இனமாக,
வேய் புரை மென் தோள் பசலையும், அம்பலும்,
மாயப் புணர்ச்சியும், எல்லாம் உடன் நீங்க
சேய் உயர் வெற்பனும் வந்தனன் ;
பூ எழில் உண் கணும் பொலிகமா, இனியே!

"காட்டாற்றிலே வெள்ளம் வந்தது ; புது வெள்ளம் ; கரை புரண்டு ஓடியது. கண்டோம் ; ஆசை கொண்டோம். எதற்கு? புதுப் புனலாடுதற்கு ; நீந்தி விளையாடுவதற்கு.

"நீரிலே இறங்கினோம் ; நீந்தினோம் ; விளையாடினோம்.

"நாங்கள் மட்டுமா? இல்லை. தலைவியுங் கூடத்தான். நாங்கள் நீந்தி விளையாடுதல் கண்டாள் தலைவி. ஆசை கொண்டாள். எதற்கு? தானும் நீந்தி விளையாடுதற்கு.

"நீரில் இறங்கினாள் ; நீந்தினாள் ; எங்களுடன் விளையாடினாள். இவ்விதம் நெடுநேரம் நீந்தியதால் சோர்வுண்டாயிற்று

தலைவிக்கு. கை சோர்ந்தாள்; தளர்வுற்றாள்; மூழ்கி விட்டாள் நீரிலே. வெள்ளம் அடித்துச் சென்றது தலைவியை.

"அஞ்சினோம். அச்சத்தால் கூச்சலிட்டோம். கேட்டான் ஓர் இளைஞன்; வந்தான்; ஓடோடி வந்தான்; ஆற்றிலே குதித்தான்; வெள்ளத்திலே பாய்ந்தான்; நீந்தினான்.

"தலைவியைப் பற்றினான்; பற்றி அப்படியே தன் உடம்புடன் சேர்த்தான்; கட்டி அணைத்தான்; கரை சேர்த்தான்.

"அன்று முதல் அவன்மீது காதல்கொண்டுவிட்டாள் தலைவி. எதனால்? அவன் அணைப்பில் அகப்பட்ட காரணத்தினால்—அன்று முதல் கற்பு நெறி நிற்கின்றாள் அவள். பெய் என்றால் பெய்யும் மழை. அத்தகைய பெருமை வாய்ந்தவள், எனது தலைவி.

"எவனோ ஒருவன். ஆற்றோடு போன பெண்ணைக் கரை சேர்த்தான். "என்ன?" என்றால், "அவன்மேல் காதல்" என்கிறாள். அவன் யாரோ? எந்த ஊரோ? என்ன தகுதியோ?

"இவ்விதம் எண்ணுகிறாய் அல்லவா? சொல்கிறேன் கேள்:

"நமது தகுதிக்கு அவன் எவ்விதத்திலும் குறைந்தவன் அல்லன். அவனுடைய நாட்டிலே உள்ள தினைப் புனத்துப் பரணியிலே அகில் புகைகிறது; அப்புகை வான் முட்டச் செல்கிறது. சென்று நிலவினை மறைக்கிறது. அதனால் நிலவு ஒளி மங்குகிறது; பழுப்பாகத் தோன்றுகிறான் சந்திரன். அவ்விதம் தோற்றமளிக்கும் சந்திரன் மலைமீது செல்லும்போது எப்படியிருக்கிறது? மலைமீது தேனடை இருப்பதுபோல் தோன்றுகிறது. அந்த மலையிலே நீண்ட மூங்கில்கள் வளர்ந்திருக்கின்றன. கணு நிறைந்த அம் மூங்கில்கள் எக்காட்சி வழங்குகின்றன?

"அந்தத் தேனடையை எடுப்பதற்கு ஏணி வைத்ததுபோன்ற காட்சி வழங்குகின்றன.

"இத்தகைய அகன்ற கானல் நாட்டு மகன்தான் தலைவியைக் கரை சேர்த்தவன். அவன் மீதுதான் தலைவி காதல்கொண்டு இருக்கிறாள். அவனுக்காகத்தான் பெண் கேட்டு வந்தனர் அவனது பெற்றோர். அவனுக்குப் பெண் கொடுக்க மறுத்தல் ஆகுமா?

"இது முறையா? நீதியா? உதவி செய்தவர்க்கு வழங்கும்

கைம்மாறு இதுதானா? அல்ல; அல்ல. இது மிகவும் நன்றி கெட்ட செயல்; தீச் செயல். மலை நாட்டு மக்கள் இத் தீச் செயலில் ஈடுபடலாகாது; நன்றி மறத்தலாகாது.

“ஆனால் இப்போது நடந்தது என்ன? மலை நாட்டு மக்கள் நன்றி கொன்றனர். சிறு குடிவாழ் மக்களே! இனி நமது நாட்டிலே விளைவு குன்றும்; வள்ளிக்கிழங்கு விளையாது; மலையிலே தேனீக்கள் கூடு கட்ட மாட்டா. தேன் கிடைக்காது. கொல்லையிலே தினைப் பயிர் ஓங்கி வளரா; கதிர் செழித்து விளையா; ஏன்? மலை நாட்டு மக்கள் நல்ல வழியில் நடக்கவில்லை.” இவ்வாறு கூறினேன். உனது செவிலித் தாயிடம்—எனது தாயிடம் கூறினேன்.

அவள் உன் தாயிடம் சென்றாள்; உரைத்தாள். உன் தாய் தக்க தருணம் பார்த்து உன் தந்தையாரிடம் கூறினாள்; தந்தையார் கேட்டார்.

கேட்டபின் என்ன செய்தார்? சீறினார். சீற்றத்தால் அவர் தம் கண்கள் சிவந்தன. சிவந்த அக் கண்கள் வில்லை நோக்கின; பின் அம்பினை நோக்கின. இவ்விதம் மாறி மாறி நோக்கிப் பெருமூச்சு விட்டார்; உறுமினார்; சினம் கொண்டு நின்றார்; வெகுண்டு எழுந்தார்.

இவ்விதம் ஒருநாள் முழுதும் சினத்துடன் இருந்தார். பின் ஒருவாறு தணிந்தார். தணிந்தவர் என்ன கூறினார்? “இருவர் மீதும் குற்றமில்லை” என்றார். “அவள்மீதும் குற்றமில்லை. அவன்மீதும் குற்றமில்லை,” என்று கூறினார். பெண் கொடுக்கச் சம்மதம் தெரிவித்தார்; திருமணத்துக்கு இசைந்தார். தலைவனின் பெற்றோருக்குச் சொல்லிவிட்டார்.

இனி எவ்வித இடையூறும் ஏற்படல் ஆகாது; திருமணம் நடைபெற வேண்டும். ஆண்டவனை வேண்டுவோம் வா! முருகனுக்கு மகிழ்ச்சி தரத்தக்க குரவைக் கூத்தாடுவோம் வா!

நாங்கள்குரவை தழுவிக் கூத்தாடுகிறோம். நீ, கொண்டு நிலை பாடு, வா.

இவ்விதம் கூறி அழைக்கிறாள் தோழி.

தலைவனின் பெற்றோர் வந்து பெண் கேட்டது நினைவுக்கு வருகிறது, தலைவிக்கு. பெற்றோர் பெண் கொடுக்க மறுத்ததும் கண்முன் தோன்றுகிறது. அப்பால் தலைவி தலைவன்மீது காதல்

கொண்டது கேட்டுப் பெற்றோர் கோபம் கொண்டதையும் எண்ணுகிறாள். கோபம் கொண்டவர் தணிந்ததும் காண்கிறாள். பிறகு தலைவனின் பெற்றோர்க்குச் சொல்லியனுப்பியதையும் சிந்திக்கிறாள்.

சிந்தித்த உடனே என்ன தோன்றுகிறது அவளுக்கு? அன்பு; அன்பு தோன்றுகிறது; நன்றி யுண்டாகிறது. யாரிடத்து நன்றி? பெற்றோரிடத்து; சுற்றத்தவரிடத்து; மலை நாட்டாரிடத்து; எதற்காக? தான் காதலித்தவனுக்கே திருமணம் செய்ய உடன் பட்டதற்காக. மகிழ்ச்சி பொங்குகிறது.

அதே நேரத்தில் மற்றோர் எண்ணமும் உண்டாகிறது, தலைவிக்கு. என்ன எண்ணம்?

அவர்கள் வலிய வந்து பெண் கேட்டபோது மறுத்தார்கள். பிறகு என்ன செய்தார்கள்? தாங்களே வலியச் சென்றார்கள் சென்று என்ன சொன்னார்கள்? 'பெண் கொடுக்கிறோம்' என்று சொன்னார்கள்.

அப்படிச் சொல்வது எளிய காரியமா? இல்லை. அவர் தகுதிக்குரிய செயலன்று. எனினும் என்ன செய்தனர்? மதிப்புக் குறைவான செயலைத் துணிவுடன் செய்தனர். எவர் பொருட்டு? தலைவியின் பொருட்டு.

அதை நினைக்கிறாள் தலைவி. "என் நோற்றனர் கொல்?" என்கிறாள். "எனது பெற்றோரும் மலை நாட்டவரும் என்ன தவம் செய்தனரோ?" என்கிறாள்.

இனி, திருமணம் நிகழும் என்பதையும் நினைக்கிறாள். அவ்வாறு எண்ணியதும் பெருமூச்சு விடுகிறாள். அவளது நெஞ்சில் நின்ற சுமை நீங்குகிறது.

கனவிலே காதலனைக் கண்டு களித்துப் பின், நனவிலே காணாமல் ஏங்கும் சுமை. அதையே பாடுகிறாள்.

தோழிமார் எதிர் நின்று பாடுகின்றனர். என்ன பாட்டு? தலைவியைக் கேலி செய்யும் பாட்டு.

"வானத்தை முட்டும் மலை நாட்டவனாகிய நின் காதலனும் நீயும் அந்தக் கலியாண மண்டபத்திலே எவ்விதம் நடந்து கொள்வீர்கள்? முன் பின் அறியாதார் போல் நடந்து கொள்வீர்களா? அல்லது பழகியவர் போல் நடப்பீர்களா?

"முன் பின் அறியாதார்போல் நீங்கள் நடந்து கொள்வீர்களா யின் நான் என்ன செய்வேன் தெரியுமா? நானும் ஒன்றும் அறி யாதவள் போலவே நடிப்பேன். உங்களது காதல் நடத்தை யெல்லாம் எனக்குத் தெரியும். தெரிந்தாலும் தெரியாதவள் போலவே நடிப்பேன்.

"அது கண்டு நீ என்ன செய்வாய்? கைகளால் முகத்தை மூடிக் கொள்வாய். எதனுல்? நாணத்தினுல்; சிரிப்பு வரும் என்ற காரணத்தினுல். சிரிப்பு ஏன்? எனது நடிப்பு கண்டு.

"ஆனுல் ஒன்று சொல்கிறேன். அவ்விதம் நீ கண்களை மூடிக் கொள்ளல் ஆகாது. ஏன்? உன் காதலனை மணக்கோலத் தில் காணுத கண்களால் பயன் என்ன? ஒன்றுமில்லை. குருட்டுக் கண்களே!"

இதுவே தோழி பாடியதன் கருத்து. இவ்விதம் தோழி பாடக் கேட்ட தலைவி என்ன செய்கிருள்? பதில் பாட்டு பாடுகிருள்:

"நான் கண்களை மூடிக் கொண்டால் என்ன? உன் கண் களையே என் கண்ணுகக் கொண்டு காண்பேன். நீ காண்பதும் நான் காண்பதும் ஒன்றல்லவா?" என்கிருள்.

அதற்குத் தோழி சொல்லுகிருள் :

"அப்படியா! ரொம்பச் சரி. நெய்தல் மலர் போன்ற மை தீட்டப் பெற்ற உனது கண் எனது கண் ஆகட்டும்," என்கிருள். அதாவது என்ன!

உங்கள் திருமணம் கண்டு நான் மகிழ்வதுபோல் நீயும் மகிழ்க. நீ மகிழ்வது போல நானும் மகிழ்க.

இதுவே! குரவைக் கூத்து முடிகிறது.

சிலநாட்கள் சென்றன. தலைவன் வீட்டார் மீண்டும் வந்தனர், பெண் பேசுவதற்கு.

இம்முறை எப்படி வந்தனர்? திறமை மிக்க ஜோசியர் களுடனே வந்தனர். எதற்கு? நன்னுள் கணிக்க. அம்மட்டுமா? ஆற்றலும் அனுபவமும் மிக்க ஆன்றோர் பலருடனும் வந்தனர் எதற்காக? பேச்சு முறியாதிருப்பதற்காக.

இதைக் கண்டாள் தோழி. ஓடிச் செல்கிருள் தலைவி யிடத்தே. சென்று சொல்கிருள்.

தலைவன் வீட்டார் மீண்டும் பெண் கேட்க வந்திருப்பதைச் சொல்கிறாள்:

“உனது பசலை நீங்கும் காலம் வந்து விட்டது. ஊராரின் ஏச்சுக்கும் பேச்சுக்கும் முற்றுப் புள்ளி வைத்தாய் விட்டது. உனக்கு மகிழ்ச்சியுண்டாகட்டும்; கவலை போகட்டும்; அதனாலே உன் கண்கள் நன்கு மலரட்டும்; அழகு பெற்று விளங்கட்டும்” என்று கூறுகிறாள்.

## 4. ஏக்கமும் இடித்தலும்

ஒரு தலைவன்; தலைவியுடன் இன்பப் பொழுது போக்கினான்; சென்றான். சென்ற பின் என்ன ஆயிற்று? தலைவிக்கு ஏக்கம் உண்டாயிற்று.

தலைவனது மலையுள்ள திசையையே நோக்கியிருந்தாள்; வாடியிருந்தாள். இப்படிப் பலநாள்.

அவளது வாட்டத்தைக் கண்டாள் தோழி; வாட்டத்தைப் போக்க நினைத்தாள்; தலைவன் மனத்தை மாற்ற விரும்பினாள்; கருத்தை வேறு வகையில் திருப்ப முனைந்தாள்; முனைந்தவள் என்ன செய்தாள்?

“அகவினம் பாடுவம் வா!” என்று அழைத்தாள். அகவினம் பாடுதலாவது என்ன? பெருங் குரல் எடுத்துப் பாடுதல்.

உரலிலே தினையைப் பெய்து இருமருங்கும் பெண்கள் நின்று கொண்டு உலக்கை கொண்டு தீட்டுவார்கள்.

அப்படித் தீட்டும் போது பெருங் குரல் கொடுத்துப் பாடுவார்கள்.

இதற்கு அழைத்தாள் தோழி. “சரி” என்று இணங்கினாள் தலைவி.

பாட்டுப் பாடவேண்டுமே! என்ன பாடுவது?

“நீ ஒரு பாட்டுப் பாடு” என்றாள் தோழி. ஆனால் தலைவியோ பாடினாள் இல்லை. எனவே தோழி பாடினாள். என்ன பாடினாள்? தலைவனின் மலையைப் புகழ்ந்து பாடினாள். ஏன்? தலைவிக்கு அது இன்பந்தரும் என்பதற்காக.

இவ்விதம் தோழி பாடிய உடனே என்ன ஆயிற்று? தலைவிக்குக் கோபம் உண்டாயிற்று. கோபம் ஏன்? தலைவன் வரவில்லை அல்லவா? அதனால். அவன் மீது கொண்ட காதலினால் கோபம். எனவே அவனை இழித்துப் பாடத் தொடங்கினாள்.

இவ்விதம் சிறிது நேரம் நிகழ்ந்தது. மறைவில் இருந்து இவற்றைக் கேட்டான் தலைவன். தன்மீது காதல் கொண்ட தலைவியின் உள்ளத்தை அறிந்தான். ஊர் சென்றான்; பெண் பேச வந்தான்; உற்றார் உறவினருடன் வந்தான். அவனது வருகை கண்டாள் தோழி. எதிர் சென்றாள். தலைவனை வாழ்த்தினாள். அப்போது தலைவன் என்ன கூறினான்? அன்று அவர்கள் அகவினம் பாடியதைக் கூறினான். அதன் விளைவாகவே இன்று மணம் பேச வந்திருப்பதாகக் கூறினான்.

கேட்டாள் தோழி; ஓடினாள் தலைவியிடம்; கூறினாள் இதை. என்ன கூறினாள்? கேட்கலாமே:

அகவினம் பாடுவாம், தோழி! - "அமர் கண்
நகை மொழி, நல்லவர் நாணும் நிலைபோல்,
தகை கொண்ட ஏனலுள் தாழ்குரல் உரீஇ,
முகை வளர் சாந்து உரல், முத்து ஆர் மருப்பின்
வகை சால் உலக்கை வயின் வயின் ஓச்சி,
பகைஇல் நோய் செய்தான் பயமலை ஏத்தி,
அகவினம் பாடுவாம், நாம்."

ஆய் நுதல் அணி கூந்தல், அம் பணைத் தட மென்
தோள்,
தேன் நாறு கதுப்பினாய்! - யானும் ஒன்று
ஏத்துகு -
வேய் நரல் விடரகம் நீ ஒன்று பாடித்தை.

கொடிச்சியர் கூப்பி வரை தொழு கை போல்,
எடுத்த நறவின் குலை அலங் காந்தள்
தொடுத்த தேன் சோர, தயங்கும் - தன் உற்றார்
இடுக்கண் தவிர்ப்பான் மலை.

கல்லாக் கடுவன் கணம் மலி சுற்றத்து,
மெல் விரல் மந்தி குறை கூறும் செம்மற்றே -
தொல் எழில் தோய்ந்தார் தொலையின் அவரினும்
அல்லற் படுவான் மலை.

புரி விரி, புதை துதை, பூத் ததைந்த தாழ்சினைத்
தளிர் அன்ன எழில் மேனி தகைவாட,
நோய் செய்தான்
அருவரை அடுக்கம் நாம் அழித்து ஒன்று பாடுவாம்.

விண் தோய் வரை, பந்து எறிந்த அயா வீட,
தண் தாழ் அருவி, அரமகளிர், ஆடுபவே -
பெண்டிர் நலம் வெளவி, தண்சாரல் தாது உண்ணும்
வண்டின் துறப்பான் மலை.

ஒடுங்கா எழில் வேழம் வீழ பிடிக்கு உற்ற
கடுஞ்சூல் வயாவிற்கு அமர்ந்து, நெடுஞ்சினைத்
தீம் கண் கரும்பின் கழை வாங்கும் - 'உற்றாரின்
நீங்கலம்' என்பான் மலை.

தன் மலைபாட நயவந்து கேட்டு, அருளி
மெய்ம் மலி உவகையன் புகுதந்தான் - புணர்ந்து ஆரா
மென் முலை ஆகம் கவின் பெற,
செம்மலை ஆகிய மலை கிழவோனே.

"தலைவனை நினைத்து ஏங்கியிருந்தாய் நீ. அப்போது நான் உன்னை அழைத்தேன். 'அகவினம் பாடுவாம், தோழீ' என்று அழைத்தேன். அதற்கு நீயும் இசைந்தாய். ஆனால் ஒன்று கூறினாய். உரல் ஒன்று கொண்டு வரச் சொன்னாய். எத்தகைய உரல்? மலையிலே விளைந்த சந்தன மரத்தாற் செய்யப்பெற்ற உரல். உரல் கொண்டு வந்தோம். பிறகு இரண்டு உலக்கைகளைக் கொண்டு வரச் சொன்னாய். யானைக் கொம்பினால் செய்யப்பட்ட உலக்கை; முத்து உலக்கை. அதையும் கொண்டு வந்தோம். பிறகு என்ன சொன்னாய்? தினை கொண்டுவரச் சொன்னாய். எத்தகைய தினை? நல்ல அழகிய கண்களும், முறுவல் பூத்த முகமும், மொழியும், கொண்ட பெண்டிர், நாணத்தால் தலை குனிர்து

நின்றால் எப்படி இருக்குமோ அத்தகைய தினை. அதாவது என்ன? முற்றிக் கதிர் வாங்கிய தினையைக் கொண்டு வரச் சொன்னாய். கொண்டு வந்தோம். உரலில் இடச் சொன்னாய். இட்டோம். அந்த யானைக் கொம்பாலாகிய உலக்கைகளில் ஒன்றை என்னிடம் கொடுத்தாய். மற்றொன்றை நீ பிடித்தாய்.

நாம் இருவரும் மாறி மாறி இடித்தோம். அப்போது பாடச் சொன்னாய்.

"என்ன பாடுவது?" என்றேன்.

"அகவினம் பாடுவம்" என்றாய்.

"யாரைப் பாடுவோம்?" என்றேன்.

"அம்மலையைப் பாடுவம்" என்றாய்.

"எம்மலை?" என்றேன்.

"இந் நோய் செய்தான் மலை" என்றாய்.

"எந்த நோய்?" என்றேன்.

"வேறு எவராலும் மருந்து கொடுக்க முடியாத இக் காதல் நோய்" என்றாய்.

உன்னை நோக்கினேன்! அழகிய நெற்றி! கண்கவரும் கருங்குழல்! இளம் மூங்கில் போன்ற மெல்லிய தோள்! பூ மணம் கமழும் கன்னம்!

இவ்வாறு காட்சி தந்தாய்.

"அம்மலை பற்றி நீயும் ஒன்று பாடு; நானும் ஒன்று பாடுவேன்" என்றேன். ஆனால் நீ பாடினாயில்லை. எனவே நானே பாடினேன். என்ன பாடினேன்? மலையின் சிறப்பைப் பாடினேன். எத்தகைய சிறப்பு?

தேன் ஒழுகும் மலை; தித்திக்கும் மலை. ஏன்? உன் காதலனது மலை அல்லவா? அதை நினைத்தாலே உனக்கு இனிக்கும் அல்லவா? அதனால்தான்!

மலையில் தேன் எங்கிருந்து வந்தது? காந்தள் பூக்களிலே சேர்ந்த தேன். காற்றிலே அக் காந்தள் பூக்கள் அசையும் போது சிந்தியது.

காற்றிலே காந்தள் அசைவது எப்படியிருந்தது? கை கூப்பி வணங்குவது போல் இருந்தது. யார் கை கூப்பி வணங்குவது

போலிருந்தது? கொடிச்சியர் கை கூப்பி வணங்குவது போலிருந்தது. யாரை? தம் குல தெய்வமாகிய முருகனை.

இத்தகைய மலைக்கு உரியவன் உன் காதலன். அவன் தன்னைச் சேர்ந்தவருடைய வருத்தத்தைப் போக்கும் பண்பினன். எனவே, அவன் வருவான்; உன் துயர் தீர்ப்பான், என்று பாடினேன்.

அதற்கு நீ ஏதும் கூறவில்லை. மகிழவுமில்லை. எனவே மற்றுமொரு பாட்டுப் பாடினேன்.

அந்த மலையிலே குரங்குகள் உள்ளன; கூட்டம் கூட்டமாக உள்ளன. அவற்றிடம் ஒரு பழக்கமுண்டு. என்ன பழக்கம் தெரியுமா? ஆண் குரங்கு ஒன்று, பெண் குரங்கின்பால் காதல் கொள்ளும். களவு நிகழும். பின்னே என் செய்யும்? குரங்குக் கூட்டத்திடம் சென்று முறையிடும், ஆண் குரங்கு.

எதற்காக? தான் காதலித்த பெண் குரங்கைத் தனக்கே, கொடுத்துவிடல் வேண்டும் என்பதற்காக.

அம் மலைவாழ் குரங்குகளுக்கே இத்தகைய பண்பு இருக்கும்போது, நின் காதலனுக்கும் இப் பண்பு இல்லாமலா போகும்? இருக்கும். எனவே அவன் வருவான். தான் சேர்ந்த மகள் துன்பமுற்றிருக்கிறாள் என்பது தெரிந்தால் அவன் என்ன செய்வான்? தானும் பன்மடங்கு துன்புறுவான். அத்தகைய நல்லான் அவன் என்று பாடினேன். கேட்டாய் நீ. உனக்குப் பொறுக்கவில்லை. ஏன் தெரியுமா? அதற்குக் காரணமுண்டு. காரணம் என்ன? உனது மேனி வாடியிருப்பதுதான் காரணம். எத்தகைய மேனி? தளிர் போன்ற மேனி; அழகிய மேனி. மலர் போன்ற மெல்லிய மேனி. எத்தகைய மலர்? அகன்ற இதழ்களையுடைய மலர்; மகரந்தம் நிறைந்த மலர்.

இத்தகைய நினது மேனி வாடியதுதான். மேனி வாடக் காரணம் நோய்; காதல் நோய். அந்த நோய்க்குக் காரணமாக இருந்தவன் நின் காதலன்; அம் மலைநாடன்.

"அவனைப் புகழ்ந்து பாடுவதா? கூடாது. இழித்தே பாடுவேன்" என்றாய்.

"பாடு" என்றேன்.

பாடினாய். என்ன பாடினாய்?

"அந்த மலையிலே வண்டுகள் உள்ளன. அவை மலர் தேடிச் செல்கின்றன. சென்று தேனைக் குடிக்கின்றன. குடித்த பின் மலரை மறந்து விடுகின்றன; விட்டுச் செல்கின்றன.

அந்த வண்டுகளின் தன்மைதானே அந்த மலைநாடனுக்கும் இருக்கும்!

"ஆனால் இது அந்ததேவ மகளிருக்குத் தெரியவில்லை. அவர்கள் என்ன செய்கிறார்கள்? பந்து விளையாடிய களை தீர வந்து நீராடுகிறார்கள், அம் மலை வீழ் அருவியிலே."

இவ்வாறு பாடினாய். அதன் பிறகு நான் ஒன்று பாடினேன்.

"அந்த மலையிலே யானைகள் பல உண்டு. அவற்றிற்கு ஒரு குணமுண்டு. அது என்ன தெரியுமா?

"ஆண் யானை தன் பெண் யானையிடம் அன்பு கொண்டு ஒழுகும்; காதல் புரியும்.

"பெண் யானை கருத்தரிக்கும். கருத்தரித்த பெண் யானைக்குக் கரும்பின் மீது ஆசையுண்டு என்பது ஆண் யானைக்குத் தெரியும்.

"எனவே, ஆண் யானை என்ன செய்யும்? கரும்பு எங்கு உளது என்று தேடிச் செல்லும். சென்று தன் காதலிக்குக் கொண்டு வந்து கொடுக்கும்.

"அந்த மலைநாட்டில், உள்ள யானைகளுக்கே இத்தகைய பண்பு இருக்கும்போது உன் காதலனுக்கு மாத்திரம் இப்பண்பு இல்லாமலா போகும்? இருக்கும். வருவான்; உன்னை மணந்து செல்வான்" என்று பாடினேன்.

இந்த நிகழ்ச்சியை நீயும் மறந்து விட்டாய். நானும் மறந்து விட்டேன். ஆனால் அவன் மறக்கவில்லை. எவன்? உன் காதலன்.

அவன் வந்து விட்டான் உன்னை மணந்து செல்வதற்கு; உன் பெற்றோரிடம் பெண் கேட்பதற்கு.

அவனைக் கண்டேன். இந்த நிகழ்ச்சியை நினைவூட்டினான் அவன். மறைந்திருந்து கேட்டனனாம்; உனது காதல் வேட்கையை அறிந்தனனாம்; எனவே விரைவில் வந்தனனாம்.

இவ்வாறு கூறினாள் தோழி. யாரிடம்? தலைவியிடம்.

## 5. பாட்டும் பயனும்

தலைவன் ஒருவன்; தலைவியுடனே தனியிடத்தில் இருந்தான்; இன்பமாகப் பொழுது போக்கினான்; போய்விட்டான்.

போகும்போது என்ன சொன்னான்? 'இனி உன்னைப் பிரியேன்' என்றான். 'பிரிந்தால் உயிர் தரியேன்' என்றாள் அவள். 'விரைவில் வருவேன்' என்றான் அவன். 'விரைந்து வா; வரைந்து செல்' என்றாள் அவள். "சத்தியம்" என்றான் அவன்.

பின் என்ன ஆயிற்று? அவன் வந்தானில்லை. ஏங்கினாள் தலைவி. அவ்விதம் ஏங்கி மனம் வருந்திய தலைவியை அழைக்கிறாள் தோழி.

'பாடுவோம் வா' என்று அழைக்கிறாள். என்ன பாட்டு? வள்ளைப் பாட்டு.

சுளகு போன்ற சேம்பின் இலையிலே தினையைக் கொண்டு வந்து உரலிலே பெய்து, உலக்கை கொண்டு இடிக்கின்றனர். எத்தகைய உலக்கை? யானைக் கொம்பினால் ஆன உலக்கை.

அப்படி இடிக்கும்போது தோழியும் தலைவியும் மாறி மாறிப் பாடுகின்றனர். தோழி தலைவனை ஏத்திப் பாடுகிறாள். அவனது உயர் பண்புகளைப் புகழ்ந்து பாடுகிறாள். ஆனால் தலைவியோ அவனை இகழ்ந்து பாடுகிறாள்.

அந்த நேரத்திலே வருகிறான் தலைவன்; மறைந்து நின்று கேட்கிறான்; தலைவியின் உள்ளத்தை உணர்ந்து கொள்கிறான்; உடனே செல்கிறான்; சுற்றத்தாருடன் வருகிறான்; தலைவியின் தந்தையைக் கண்டு பேசுகிறான்; பெண் கேட்கிறான். வேங்கை மர நிழலிலே அமர்ந்து அவர்கள் பேசினார்கள். தலைவியின் தந்தையும் அவனுக்குப் பெண் கொடுக்க இசைந்தார்.

இதை அறிந்தாள் தோழி. தலைவனிடம் சென்றாள்; அவனை வாழ்த்தினாள். அப்போது தலைவன் சொன்னான்: "அன்று நான் வந்தேன். நீயும் தலைவியும் வள்ளைப் பாட்டுப் பாடியது கேட்டேன். அதன் பிறகே விரைவாக மணம் முடிக்க வந்தேன்" என்று.

கேட்டாள் தோழி. ஓடினாள் தலைவியிடம்; எல்லாவற்றையும் கூறினாள்.

பாடுகம், வா-வாழி, தோழி!-வயக் களிற்றுக்
கோடு உலக்கையாக, நல் சேம்பின் இலை சுளகா,
ஆடு கழை நெல்லை அறை உரலுள் பெய்து, இருவாம்
பாடுகம், வா-வாழி, தோழி! நல்தோழி!-பாடுற்று

இடி உமிழ்பு இரங்கிய விரவு பெயல் நடுநாள்,
கொடி விடுபு இருளிய மின்னுச் செய்.விளக்கத்து,
பிடியொடு மேயும் புன்செய் யானை.
அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்
நெடுவரை ஆசினிப் பணவை ஏறி,
கடு விசைக் கவணையில் கல் கை விடுதலின்,
இறு வரை வேங்கை ஒள் வீ சிதறி,
ஆசினி மென் பழம் அளிந்தவை உதிரா,
தேன் செய் இறால் துளைபடப் போகி,
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கி,
குலையுடை வாழைக் கொழு மடல் கிழியா
பலவின் பழத்துள் தங்கும் மலை கெழு வெற்பனைப்
பாடுகம், வா-வாழி, தோழி! நல்தோழி! - பாடுற்று.

இலங்கும் அருவித்து; இலங்கும் அருவித்தே;
வானின் இலங்கும் அருவித்தே-தான் உற்ற
சூள் பேணான் பொய்த்தான் மலை.

பொய்த்தற்கு உரியனோ? பொய்த்தற்கு உரியனோ?
'அஞ்சல் ஓம்பு' என்றாரைப் பொய்த்தற்கு உரியனோ?
குன்று அகல் நல் நாடன் வாய்மையில் பொய்
தோன்றின்,
திங்களுள் தீத் தோன்றியற்று.

இளமழை ஆடும்; இளமழை ஆடும்;
இளமழை வைகலும் ஆடும்-என் முன்கை
வளை நெகிழ வாரா தோன் குன்று.

வாராது அமைவானோ? வாராது அமைவானோ?
வாராது அமைகுவான் அல்லன்-மலைநாடன்
ஈரத்துள் இன்னவை தோன்றின் நிழற்கயத்து
நீருள் குவளை வெந்தற்று.

மணி போலத் தோன்றும்; மணி போலத் தோன்றும்;
மண்ணு மணிபோலத் தோன்றும் - என் மேனியைத்
துன்னான் துறந்தான் மலை.

துறக்குவன் அல்லன்; துறக்குவன் அல்லன்;
தொடர் வரை வெற்பன் துறக்குவன் அல்லன்-
தொடர்புள் இனையவை தோன்றின், விசும்பில்
சுடருள் இருள் தோன்றியற்று.

நன்று ஆகின்றால்-தோழி! நம் வள்ளையுள்
ஒன்றி நாம்பாட, மறை நின்று கேட்டு அருளி
மென் தோள் கிழவனும் வந்தனன்; நுந்தையும்
மன்றல் வேங்கைக் கீழ் இருந்து,
மணம் நயந்தனன், அம்மலை கிழவோற்கே.

"அன்று ஒருநாள்...வருந்தி யிருந்தாய் நீ. உனது வாட்டம் போக்க விரும்பினேன் நான்.

'பாடுவோம் வா' என்று அழைத்தேன்.

'சரி' என்றாய்.

'என்ன பாட்டு?' என்று கேட்டாய்.

'வள்ளைப் பாட்டு' என்றேன்.

"உரலைக் கொண்டு வந்து வைத்தேன். ஆனைக் கொம்பினால் ஆன உலக்கைகளைக் கொண்டு வந்தேன். சுளகு போன்ற சேம் பிலையிலே தினை நெல் கொண்டு வந்தேன். உரலில் இட்டேன். உலக்கை கொண்டு இடித்தோம். நீயும் நானும் மாறி மாறி இடித்தோம்.

'பாடு' என்றேன் நான்.

'யாரைப் பாடுவது?' என்று கேட்டாய்.

'மலை நாடனைப் பாடு' என்றேன்.

'எம்மலை நாடன்?' என்றாய்.

'அஞ்சா நெஞ்சங் கொண்ட மலை நாடன்' என்றேன்.

'எதற்கு அஞ்சா மலை நாடு?' என்று கேட்டாய்.

'கடமை புரிதற்கு அஞ்சாக் கானவர் நாடு' என்றேன்.

'உனக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்டாய்.

'தினைப்புனங் காத்தலால் தெரியும்' என்றேன்.

'யார் காத்தனர்? எப்போது காத்தனர்?' என்று கேட்டாய்.

'இருள்! இருள்! நள்ளிருள்! இடி இடிக்கிறது! மழை பொழிகிறது! மின்னல் வெட்டுகிறது! அந்த நேரத்திலும் தினைப் புனங் காத்து நிற்கின்றனர் அம் மலைநாட்டவர்.

'எனவே, அஞ்சா நெஞ்சு கொண்டவர் அவர். கடமை புரிதலில் கருத்துள்ளவர்' என்றேன்.

'அந்த இருளிலே தினைப் புனங் காத்தல் எதற்கு?' என்று கேட்டாய்.

'யானைகள் கூட்டம் கூட்டமாக வரும். பயிரை மேயும். அவ்வாறு பயிர் நாசமாகாமல் காப்பதற்கே' என்றேன்.

'யானை வருவதுண்டா?' என்று கேட்டாய்.

'ஆம்' என்றேன்.

'எப்படி?' என்றாய்.

'கூட்டம் கூட்டமாக வரும். ஆணும் பெண்ணுமாக வரும். காதலனும் காதலியுமாக வரும்,' என்றேன்.

'அந்த இருளிலே எப்படி வழி தெரியும்?' என்று கேட்டாய்.

'மின்னலின் வெளிச்சத்திலே வழியறிந்து வரும்' என்றேன்.

'உம்; அப்படி வரும் யானைக் கூட்டத்திடமிருந்து எப்படிக் காத்தனர் தினைப்புனத்தை?' என்று கேட்டாய்.

'உயர்ந்த ஆசினி மரத்தின் மீது பரண்கட்டி அதன்மீது ஏறி நின்று கவண் கல் வீசி அந்த யானைக் கூட்டத்தை விரட்டுவர்' என்றேன்.

நீ சிரித்தாய்.

'ஏன்?' என்றேன்.

'அந்தக் காரிருளிலே கவண் வீசுதற்குக் குறி பார்க்க வேண்டாமா? இருளில் எவ்வாறு தெரியும்?' என்று கேட்டாய்.

'யானைக் கூட்டத்தின் கூச்சல் கேட்ட திசையில் கவண் விடுவர்' என்றேன்.

மீண்டும் சிரித்தாய்.

'ஏன்?' என்றேன்.

'வீசிய கவண் என்னாயிற்று?' என்று கேட்டாய்.

'குறி தவறிச் சென்றது' என்றேன்.

'எங்கே சென்றது?' என்று கேட்டாய்.

'அங்கிருந்த வேங்கை மரத்தின்பால் தாக்கியது' என்றேன்.

'கல கல' வென்று சிரித்தாய்.

'ஏன்?' என்று கேட்டேன். 'வேழத்தைக் குறி வைத்து வேங்கையைத் தாக்கினரோ?' என்று கேட்டாய்.

'வேங்கை மாத்திரமல்ல. அதற்கு அப்பாலும் உண்டு' என்றேன்.

'என்ன ?' என்றாய்.

'வேங்கையைத் தாக்கிப் பூவை உதிர்த்த அக் கவண், ஆசினிப் பலாப் பழங்களையும் நாசமாக்கியது. அப்பால் அங்கிருந்த தேன் அடைகளைத் துளைத்துச் சென்றது. பூத்துக் காய்த்துக் குலுங்கிய மாங்குலைகளை அறுத்தது. அங்கிருந்த வாழை மடலைத் துளைத்தது. வேர்ப்பலா ஒன்று பழுத்திருந்தது. அதைத் துளைத்து உள் சென்று தங்கிவிட்டது,' என்றேன்.

'இத்தகைய மலை நாடனைப் பாடு' என்றேன். புகழ்ந்து பாட விரும்பினாயில்லை. ஏன்? உன் காதலன் சொன்னபடி வரவில்லை என்ற கோபம் உனக்கு.

அந்தக் கோபத்தினால் ஓர் அடி பாடினாய். 'வருவேன் என்று கூறிப் போனான், வரவில்லை. சொல் காக்கவில்லை. பொய் சொல்லி விட்டான். பொய்யர் வாழும் நாட்டிலே மழை பொழியாது என்று சொல்லுவார்கள். ஆனால், இவனது நாட்டிலே மழை பொழிகிறது. அதனால் அருவிகள் நிறைய உள்ளன. என்ன ஆச்சரியம்!' என்று பாடினாய்.

சந்திரன் எவ்வளவு தண்மை மிக்கவன்! அவன் தீயுமிழ்கின்றான் என்றால், அது உண்மையா? அல்லவே. அதுபோலத் தான் இருக்கிறது நீ சொல்வது. அவன் ஒருநாளும் பொய் சொல்பவன் அல்லன்.

'பிரியேன்' என்றான்.

'பிரிந்தால் உயிர் தரியேன்' என்றாய்.

'வருவேன்' என்றான்.

'வரை வாய்' என்றாய்.

'விரைவில்' என்றான்.

பொய் கூறும் குணம் உடையவன் அல்லன் அவன் என்று பாடினேன் நான்.

'நான் மெலிந்து வாடுகிறேன். எனது வளைகள் நழுவி வீழ்கின்றன. எனது துன்பத்துக்குக் காரணன் அம் மலைநாடன். துன்பமிழைக்கும் கொடியவர் நாட்டிலே மேகம் குவியாது என்று சொல்லுவார்கள். ஆனால் அந்த மலையிலே மேகங்கள் குவிகின்றனவே! என்ன ஆச்சரியம்!' என்று பாடினாய் நீ.

அவன் வராதிருக்க மாட்டான். வருவான். நின் துயர் கண்டு இரங்கும் உள்ள முடையவன் அவன். எனவே வருவான்.

'குளத்திலே நீர் நிரம்பியிருக்கும்போது குவளைப் பூ:வாடிப் போவதுண்டா? கிடையாது. அவனது அன்பு உள்ளம் நிரம்பியிருக்கிறது. எனவே குவளையாகிய நீ வாடுவது மில்லை. வருந்தாதே' என்று கூறினேன்.

இவ்வாறு நாம் ஆடிப் பாடியிருந்தோம். அதை நீயும் மறந்தாய்; நானும் மறந்தேன். ஆனால் அவன் மறக்கவில்லை.

அதோ பார்! வந்துவிட்டான். வேங்கை மரத்தடியிலே அமர்ந்து பேசுகிறான். உன் தந்தையிடம் பெண் கேட்கிறான். உன்னை மணம் புரிய வந்து விட்டான். உன் தந்தையும் இணங்கி விட்டார்.

உன் காதலனைக் கண்டேன். அவன்தான் இதைக் கூறினான். அன்று நாம் வள்ளைப் பாட்டுப் பாடிய போது அவன் வந்தானும். மறைந்திருந்து நமது பாட்டைக் கேட்டானும். மனம் உருகிச் சென்றானும்.

விரைவில் வந்து விட்டான் வரை கொள்ளவே. எனவே, மகிழ்ந்திரு.''

இவ்வாறு தோழி தலைவிக்குக் கூறினாள்.

## 6. ருசியும் பசியும்

ஒரு தலைவன். ஒரு தலைவி. இருவரும் காதலித்தனர்; காதல் வழி நடந்தனர்; அவ்வழி நேர்ந்த இடர் பலவும் தாண்டினர். மணம் நடந்தது. தலைவனுடன் வாழ்கிறாள் தலைவி.

இவ்விதம் இருந்த நாளிலே ஒரு சமயம், தலைவன் தொலைவில் சென்றிருந்தான். அவனைப் பிரிந்ததால் தலைவிக்கு ஏக்கமுண்டாயிற்று. காதல் ஏக்கம். பசலை நோய் கண்டது. தன் உடலை நோக்கினாள் தலைவி; மேனியின் வாட்டம் கண்டாள். உடலின் வாட்டமும் உள்ளத்தின் வேட்கையும் பொறுக்க முடியவில்லை.

சிந்தனையில் ஆழ்ந்தாள்.

தலைநாள் நிகழ்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்றாக அவள் மனக் கண் தோன்றின! காதல் நிகழ்ச்சிகள்!

சினிமாவிலே வரும் கதா பாத்திரங்கள் பழைய நினைவுகளைக் கண் முன் நிறுத்திக் கூறுவதில்லையா? அந்தமாதிரி! தன் நெஞ்சுடன் கூறிக் கொள்கிறாள் தலைவி. அவ்விதம் கூறும்போது மகிழ்ச்சி ஏற்படுகிறது. காதலனைப் பிரிந்த ஏக்கம் நீங்குகிறது.

மறம் கொள் இரும்புலித் தொல் முரண் தொலைத்த
முறம் செவி வாரணம் முன் குளகு அருந்தி,
கறங்கு வெள் அருவி ஒலின் துஞ்சும்
பிறங்கு இருஞ் சோலை நல் மலை நாடன்
மறந்தான் ; மறக்க, இனி ; எல்லா! நமக்குச்
சிறந்தமை நாம்நற்கு அறிந்தனம், ஆயின்; அவன் திறம்,
கொல் யானைக் கோட்டால் வெதிர் நெல் குறுவாம்நாம்
வள்ளை அகவுவம், வா!' 'இகுளை! நாம்
வள்ளை அகவுவம், வா.'

காணிய வா - வாழி, தோழி! - வரைத் தாழ்பு
வாழ் நிறம் கொண்ட அருவித்தே, நம் அருளா
நாணிலி நாட்டு மலை.

ஆர்வுற்றோர் நெஞ்சம் அழிய விடுவானோ? -
ஓர்வு உற்று ஒரு திறம் ஒல்காத நேர்கோல்
அறம் புரி நெஞ்சத் தவன்?

தண் நறுங் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்
பொன் அணி யானை போல் தோன்றுமே - நம் அருளாக்
கொன்னுளன் நாட்டு மலை.

கூரு நோய் ஏய்ப்ப விடுவானோ? - தன்மலை
நீரினும் சாயல் உடையன், நயந்தோர்க்குத்
தேர் ஈயும் வண் கையவன்.

வரை மிசை மேல் தொடுத்த நெய்க்கண் இறுஅல்
மழை நுழை திங்கள் போல் தோன்றும் - இழை நெகிழ
எவ்வம் உறீஇயினன் குன்று.

எஞ்சாது, எல்லா! கொடுமை நுவலாதி -
அஞ்சுவது அஞ்சா அறனிலி அல்லன், என்
நெஞ்சம் பிணிக் கொண்டவன்.

என்று யாம் பாட, மறை நின்று கேட்டனன்,
தாழ் இருங்கூந்தல் என் தோழியைக் கை கவியா,
சாயல் இன் மார்பன் சிறுபுறம் சார்தர,
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்தது, என்
ஆய் இழை மேனிப் பசப்பு.

"ஒரு நாள்—

நான் வாடியிருந்தேன்; ஏங்கியிருந்தேன், காதலனை எண்ணி. கண்டாள் என் தோழி, எனது மனக் கவலையை மாற்ற முயன்றாள்.

'அகவுவம் வா' என்று அழைத்தாள். அதாவது 'ஓங்கிய குரலெடுத்துப் பாடலாம் வா' என்று கூப்பிட்டாள். எனக்கு மனமில்லை. பாடுதலில் விருப்பமில்லை. அவள் வற்புறுத்தினாள்.

'அவன் உன்னை மறந்தான். நீயும் இனி அவனை மறந்துவிடு' என்றாள்.

'மறக்க முடியவில்லையே' என்றேன்.

'அப்படியானால் அன்னையே பாடுவம் வா' என்றாள்.

'சரி' என்றேன்.

உரலைக் கொண்டுவந்தாள்; உலக்கை கொண்டுவந்தாள்; தினை கொண்டு வந்தாள்; உரலில் பெய்தாள்; உலக்கையில் ஒன்று, தான் பற்றினாள்; மற்றொன்றை என்னிடம் கொடுத்தாள். மாறி மாறி இடித்தோம்.

'பாடு' என்றாள்.

'எப்படிப் பாடுவது?' என்றேன்.

'அந்த மலை நாடன் தன் சோலையிலே யானைகள் உள்ளன. முறம்போன்ற செவி படைத்த யானை. அந்த யானை என்ன செய்தது. புலியை அடித்துக் கொன்றது; கொன்றுவிட்டுத் தழைகளைத் தின்றது. பின் அந்த மலை அருவியிலே இறங்கி நீர் குடித்தது. அந்த அருவி விழும் ஓசை கேட்டது. தாலாட்டுப் போலிருந்தது யானைக்கு: அப்படியே அமைதியாகத் தூங்கியது. அந்த யானையின் அமைதிகூட நமக்கில்லை. அதைப் பாடு. அமைதி குலைத்தவன் எவன்? அவனைப் பாடு' என்றாள். பாடுவதற்கு மனம் வரவில்லை எனக்கு. பிறகு தோழியே பாடினாள்.

'காதல் நோயினால் வாடுகிறாய் நீ. ஊரார் ஏசுகின்றனர். அவனுக்கு உன்மீது அருள் பிறக்கவில்லை. நாணமில்லாதவன். நெஞ்சில் ஈரமில்லாதவன். ஆனால் அவனது மலையிலே நீர் அருவிகள் நிறைய இருக்கின்றனவே, அதன் காரணம் என்ன என்று காண்போம் வா,' என்று பாடினாள்.

அப்போது நான் ஒரு பாட்டுப் பாடினேன்.

'தோழி! அவனது குணத்தை நீ அறியவில்லை. அதனால் தான் நீ அவனை இழித்துப் பேசுகிறாய். நேர்மை மிக்கவன் அவன். தராசின் முள் போன்ற நேர்மை; நன்மையே புரியும் நெஞ்சினன். அவ்விதமிருக்க, அவன்மீது காதல்கொண்ட என் நெஞ்சம் சிறிய விடுவானா? ஒருநாளும் விடமாட்டான்' என்று பாடினேன் நான்.

இவ்விதம் மாறி மாறிப் பாடிக்கொண்டிருந்தோம். அவள் மேலும் மேலும் இழித்துப் பாடிக்கொண்டேயிருந்தாள். என்னால் பொறுக்க முடியவில்லை.

'போதும் நிறுத்து' என்று கூவினேன். அவள் நிறுத்தி விட்டாள்.

திடீரென்று என்னைக் கட்டியணைத்தான் ஒருவன், எனக்குப் பின்புறமிருந்தது. 'யாரென்று' பார்த்தேன்; என் காதலன். அப்படியே அவன்மீது சாய்ந்தேன்.

'முன்னதாகச் சொல்லக் கூடாதா?' என்று கோபித்துக் கொண்டேன் தோழியை.

'வாய் திறவாதே!' என்று அவன்தான் சைகை காட்டிக் கையமர்த்திவிட்டானே! நான் எப்படிச் சொல்வேன்?' என்றாள் தோழி.

அன்று, அவன் வந்ததால் என் பசலை நீங்கிற்று.

ஆனால்—இன்று...'' என்று கூறிப் பெருமூச்சு விட்டாள் தலைவி.

## 7. நெஞ்சும் நினைப்பும்

ஓர் ஆண் மகன்; நிற்கிறான். அவனிடத்திலே ஒரு செய்தி சொல்ல விரும்புகிறாள் ஒருபெண். எப்படிச் சொல்வது? கட்டழகு வாய்ந்த காளை ஒருவனிடம் காரிகை ஒருத்தி பேசலாமா? கூடாது அல்லவா? பின் செய்தியை எப்படித் தெரிவிப்பது?

ஒரு முள்வேலி. வேலிக்கு அப்பால் நிற்கிறான் அந்த ஆண் மகன். இப்பால் இருக்கிறாள் அப் பெண். அவள்தான் தோழி.

வேலிக்கு அப்பால் நிற்கும் தலைவனின் காதிலே விழ வேண்டும் என்ற எண்ணத்துடனே சொல்கிறாள்.

நேரிடையாகத் தலைவனிடம் கூறவில்லை. தனக்குள்ளேயே சொல்லிக் கொள்கிறாள். மெதுவாகச் சொல்கிறாளோ? இல்லை. உரக்கச் சொல்கிறாள். மெதுவாகச் சொன்னால் அவன் காதிலே விழாமற் போகலாம் அல்லவா? அவன் காதில் விழவேண்டுமே. எனவே உரக்கச் சொல்கிறாள். அவள் ஏதோ தனக்குள்ளேயே பேசிக்கொண்டு புலம்புகிறாள் என்று மற்றவர் நினைப்பர். ஆனால் தலைவனோ அதைக் காது கொடுத்துக் கேட்பான். கேட்டால்

நாடகங்களிலே இந்த மாதிரி நிகழ்ச்சிகளைக் காணலாம். கதா பாத்திரங்கள் தனிமையில் தனக்குள் கூறிக்கொள்வதாக ஒரு காட்சி. ஆனால் அதை ஆயிரம் பேர் கேட்பர். தனக்குள் கூறிக் கொள்பவனும் உரக்கக் கூவுவான்.

இந்த மாதிரி முறையில் தனக்குள் சொல்லிக் கொள்கிறாள் தோழி! என்ன சொல்கிறாள்? கேளுங்கள் :

**வே**ங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்து
ஏந்து மருப்பின், இன வண்டு இமிர்பு ஊதும்
சாந்த மரத்தின், இயன்ற உலக்கையால்,
ஐவன வெண் நெல் அறை உரலுள் பெய்து, இருவாம்,
ஐயனை ஏத்துவாம் போல, அணி பெற்ற
மை படு சென்னிப் பயமலை நாடனை,
தையலாய் ! பாடுவாம், நாம்.

**த**கையவர் கைச் செறித்த தாள் போல, காந்தள்
முகையின் மேல் தும்பி இருக்கும் - பகை எனின்,
கூற்றம் வரினும் தொலையான், தன் நாட்டார்க்குத்
தோற்றலை நாணாதோன் குன்று.

**வெ**ருள்பு உடன் நோக்கி, வியல் அறை யூகம்,
இருள் தூங்கு இறுவரை ஊர்பு இழிபு ஆடும்
வருடைமான் குழவிய வள மலை நாடனைத்
தெருள - தெரியிழாய் ! நீ ஒன்று பாடித்தை.

**நு**ண் பொறி மான் செவி போல, வெதிர் முளைக்
கண் பொதி பாளை கழன்று உகும் பண்பிற்றே—
மாறு கொண்டு ஆற்றார் எனினும், பிறர் குற்றம்
கூறுதல் தேற்றாதோன் குன்று.

**பு**ணர் நிலை வளகின் குளகு அமர்ந்து உண்ட
புணர் மருப்பு எழில் கொண்ட வரை புரை செலவின்
வயங்கு எழில் யானைப் பயமலை நாடனை—
மணம் நாறு கதுப்பினாய் ! மறுத்து ஒன்று பாடித்தை.

கடுங்கண் உழுவை அடிபோல வாழைக்
கொடுங்காய் குலைதொறூஉம் தூங்கும்—இடும்பையால்
இன்மை உரைத்தார்க்கு அது நிறைக்கல் ஆற்றுக்கால்,
தன் மெய் துறப்பான் மலை.
என ஆங்கு—

கூடி அவர் திறம் பாட, என் தோழிக்கு
வாடிய மென் தோளும் வீங்கின—
ஆடு அமை வெற்பன் அளித்தக் கால் போன்றே.

"பாவம்! தலைவி, தலைவன் மீது காதல் கொண்டு விட்டாள். அவனையே எண்ணி எண்ணி ஏங்குகிறாள். அந்த ஏக்கத்தினால் அவளது உடல் தளர்ந்துவிட்டது; மேனி வாடிவிட்டது. தோள்கள் நெகிழ்ந்துவிட்டன. துரும்பு போல் இளைத்து விட்டாள்.

"நான் என்ன செய்வேன்? அவள் படும் துயரம் என்னால் பொறுக்க முடியவில்லை. எப்படியாவது அவளுக்கு ஆறுதல் கூற வேண்டும் என்று எண்ணினேன்.

"வாய் விட்டுச் சொன்னால்தானே துயரம் நீங்கும்? நெஞ்சிலே அழுத்திக் கொண்டிருக்கிற சுமை நீங்கும்?

"வாய் திறந்து சொல்லக் கூடிய விஷயமா காதல்! எனவே, 'பாட்டுப் பாடுவோம் வா!' என்று அழைத்தேன்.

'என்ன பாட்டு?' என்று கேட்டாள்.

'வள்ளைப் பாட்டு' என்றேன்.

'சரி' என்றாள்.

"சந்தன மரத்தினால் செய்யப் பெற்றதோர் உலக்கை கொண்டு வந்தேன். வேங்கையைக் கொன்ற வீரம் மிக்க யானைக் கொம்பினால் ஆகிய மற்றோர் உலக்கையும் கொண்டு வந்தேன்.

"மலையிலே விளைந்த ஐவன நெல்லை, பாறையிலே குடைந்த உரலிலே பெய்தோம். உலக்கை கொண்டு தீட்டினோம்.

'ஒரு பாட்டுப் பாடு' என்று சொன்னேன் நான்.

'என்னபாட்டு?' என்று கேட்டாள்.

'வள்ளைப் பாட்டு' என்றேன்.

'யாரைப் பாடுவது?' என்று கேட்டாள்.

'நீ காதல்கொண்ட தலைவனைப் பாடு' என்றேன்.

'ஐயோ! முடியாது. மற்றவர் கேட்டால் என்ன நினைப்பார்கள்?' என்றாள்.

'அப்படியானால் ஒன்று செய்! உன் காதலனும் மலைநாடன் தானே! முருகனும் மலைநாடன்தான். முருகனைப் பாடுவது போல் பாடு. உன் மனதிற்குள் காதலனை நினைத்துக்கொள். மற்றவர் ஏதோ முருகனைப் பாடுகிறாய் என்று எண்ணிக் கொள்ளட்டும். இரகசியம் உனக்கும் எனக்கும் மாத்திரமே தெரியும். எப்படியாவது உனக்கு மகிழ்ச்சியுண்டாகட்டும்' என்றேன்.

'நீயே பாடு' என்றாள்.

'அதோ பார்! அந்த மலையைப் பார்! அது யாருடைய மலை? எமனே வந்து எதிர்நின்று சண்டையிட்டாலும் சரி; பயந்து ஓட மாட்டான். சண்டையிட்டு வெற்றி கொள்வான். அத்தகைய வெற்றி வீரனின் மலை. அம் மலையிலே காந்தள் மொட்டு அரும்பியிருக்கிறது! 'அது எப்போது மலரும்! தேனைக் குடிக்கலாம்' என்ற எண்ணத்துடன் அதன் மீது அமர்ந்திருக்கிறது வண்டு; அது எப்படியிருக்கிறது? உன் கையிலே உள்ள நீலக்கல் மோதிரம் போலிருக்கிறது பார்' என்று பாடினேன்.

"அதாவது என்ன? தேனைக் குடிக்க வண்டு காத்திருப்பது போல் உன் தலைவனும் காத்திருக்கிறான்; காலம் வந்ததும் வருவான்; காலனே எதிர்த்தாலும் கைவிடமாட்டான்; உன்னை கடி மணம் புரிவான், என்னும் கருத்துப்படக் கூறினேன்.

'அந்த மலைச் சாரலிலே கருங்குரங்குகள் இருக்கின்றன. அவற்றைக் கண்டு மான் குட்டிகள் மருண்டு ஓடுகின்றன. ஏன்? அச்சம். இள மான்களுக்கு இயற்கையாக ஏற்பட்ட அச்சம். அதனால் கருங் குரங்கைக் கண்டு அஞ்சுகிறது.

'அந்தமாதிரி நீயும்—இளமானாகிய நீயும்—உன் சுற்றத்தாரைக் கண்டு அஞ்சுகிறாய். கலியாணத்துக்கு உடன்பட மாட்டாரோ என்று அஞ்சுகிறாய். அஞ்சாதே! உன் காதலனைப் பாடு' என்றேன். அவள் பாடினாள்.

'தலைவனது மலையிலே மூங்கில் வளர்ந்திருக்கிறது. அம் மூங்கிலின் கணுக்கள் தோறும் பாளை கழன்றிருக்கிறது. அது எப்படியிருக்கிறது? மானின் கண்ணும் அதற்கு மேல் செவியும்

போல் இருக்கிறது,' என்று பாடினாள். அதாவது என்ன? அதைக் கண்டதும் தலைவனுக்குத் தலைவி நினைவு வரும். வருவான், என்னும் கருத்துப்படப் பாடினாள்.

"இவ்வாறு தலைவனைப் புகழ்ந்து பாடவே, நான் என்ன கூறினேன்: இகழ்ந்து பாடச் சொன்னேன். 'அந்த மலைநாட்டிலே யானைகள் இருக்கின்றன. அவை என்ன செய்யும்? ஆணும் பெண்ணுமாகச் செல்லும். சென்று தழைகளைத் தின்று, பின் அழகாக நடந்து செல்லும், மலை நடந்துசெல்வது போல. தன் நாட்டு விலங்குகள் இவ்வாறு வாழ்வதைக் கண்டும்கூட உன்னை மணந்து செல்ல வேண்டும் என்ற எண்ணம் அவனுக்கில்லையே? அவனை இழித்துப் பாடு' என்றேன்.

'அந்த மலைநாட்டிலே வாழை மரங்கள் குலை தள்ளுகின்றன. கச்சலான அந்த வாழைச் சீப்புகள் புலிக் கால்போல் இருக்கின்றன என்று எண்ணி, வெட்டி எறிவதுண்டா? கொஞ்ச நாளில் அவை தானே முற்றிப் பழுக்குமே, அவன் மலையிலே!' என்று பாடினாள்.

"அதாவது என்ன? தலைவனின் செயலைத் தவறாகக் கருதாதே! கொஞ்ச நாளில் வருவான, என்னும் கருத்துப்படக் கூறினாள்.

"இவ்விதம் மனம் விட்டுப் பாடி மகிழ்ந்தபின் என்ன ஆயிற்று? அவளது துயர் நீங்கிற்று. நெஞ்சை அழுத்தியிருந்த ஏக்கம் ஒருவாறு விலகிற்று. வாடிய தோள்கள் வீங்கின."

## 8. வேங்கையும் மங்கையும்

தலைவியின் மீது காதல் கொண்ட தலைவன், அடிக்கடி வருகிறான். அவளுடன் இன்பமாகப் பொழுது போக்குகிறான்; போகிறான். இவ்விதம் களவு ஒழுக்கம் நிகழ்கிறது. இதுபற்றி ஊரார் பலவாறு பேசுகின்றனர். எனவே, விரைவில் மணம் புரிந்துகொள்ளும்படி வற்புறுத்துகிறாள் தோழி:

கதிர் விரிகனை சுடர்க் கவின் கொண்ட நனஞ்சாரல்
எதிர் எதிர் ஓங்கிய மால் வரை அடுக்கத்து,

முதிர் இணர் ஊழ்கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை,
வரி நுதல் எழில் வேழம் பூ நீர்மேல் சொரிதர,
புரி நெகிழ் தாமரை மலர் அம் கண் வீறு எய்தி
திரு நயந்து இருந்தன்ன தேம் கமழ் விறல் வெற்ப!

தன் எவ்வம் கூறினும், நீ செய்த அருள் இன்மை
என்னையும் மறைத்தாள், என் தோழி—அது கேட்டு,
நின்னை யான் பிறர் முன்னர்ப் பழிகூறல் · தான் நாணி.

கூரும் நோய் சிறப்பவும் நீ செய்த அருள் இன்மை
சேரியும் மறைத்தாள், என் தோழி—அது கேட்டாங்கு,
'ஓரும் நீ நிலையிலை' எனக் கூறல் தான் நாணி.

நோய் அட வருந்தியும், நீ செய்த அருள் இன்மை
ஆயமும் மறைத்தாள், என் தோழி—அது கேட்டு,
மாய நின் பண்பு இன்மை பிறர் கூறல் தான் நாணி.
என ஆங்கு—

இனையன தீமை நினைவனள் காத்தாங்கு,
அனை அரும் பண்பினான், நின் தீமை காத்தவள்
அருந்துயர் ஆர் அஞர் தீர்க்கும்
மருந்து ஆகிச் செல்கம், பெரும! நாம் விரைந்தே.

"குன்றுகள் இரண்டு. எதிர் எதிராக உள்ளன. இடையே பெரும் பள்ளத்தாக்கு. அப் பள்ளத்தாக்கிலே வளர்ந்திருக்கிறது வானோங்கிய வேங்கை மரம்; பூத்துக் குலுங்கி நிற்கிறது. அந்தக் குன்றுகளிலிருந்து பாய்ந்து வரும் அருவிகள் அவ் வேங்கை மரக் கிளைகளில் வீழ்கின்றன. அக் காட்சியைக் கண்டேன். இக் காட்சியைத் தலைவியின் வாழ்க்கையோடு ஒப்பிட்டுப் பார்த்தேன்.

"பள்ளத்தாக்கில் பூத்துக் காய்த்துக் குலுங்கி நிற்கும் வேங்கை போல, உனது மனையிலே அவள் எப்போது வாழப் போகிறாளோ! எதிர் எதிராக நிற்கும் குன்றுபோல, அவளது சுற்றமும், உனது சுற்றமும் அவளை ஆதரித்து நிற்பது எந்நாளோ? அக் குன்று வீழ் அருவிபோல அவளுக்கு அருள் பொழிவது என்றோ? என்று ஏங்கியிருந்தேன். நீ வந்தாய். உனக்கு ஒன்று சொல்கிறேன், கேள்.

"காதல் நோயால் வருந்துகிருள் தலைவி. ஆனால் அவளது வருத்தத்தைப் பிறர் அறிந்து விட்டால் உன்னையல்லவா பழித்துப் பேசுவர். அவ்விதம் பிறர் பழித்தல் அவளால் பொறுக்க முடியாது.

"அதனை எண்ணித் தன் துயரினை வெளியே காட்டாது தனக்குள்ளே அடக்கிக் கொள்கிருள்.

"எனவே இனிக் காலங் கடத்தாதே. விரைவில் மண முடிப்பாய்."

## 9. களவும் கண்டிப்பும்

காதலினால் வருந்துகிருள் தலைவி. கண்டு கொண்டாள் தாய். கட்டும் காவலும் மிகுந்தன. ஏச்சும் பேச்சும் மலிந்தன. மனம் புழுங்கித் துடிக்கிருள் தலைவி. உடல் தளர்ந்துவிட்டது. கண்டாள் தோழி. எவ்வாருகினும் தலைவனைக் காண விரும்பிஞள். கண்டு நிலைமையை எடுத்துக் கூற எண்ணிஞள். ஒரு நாள் தலைவனும் வந்தான். கண்டாள் தோழி. அவனிடம் சொன்ஞள். கேட்டான் அவன்.

ஊர் சென்ருன்; உற்ருருடன் திரும்பி வந்தான், பெண் கேட்க.

அதைத் தலைவிக்குச் சொல்கிருள் தோழி:

விடியல் வெங் கதிர் காயும் வேய் அமல் அகல் அறை,
கடிசுனை கவினிய காந்தள் அம் குலையினை,
அரு மணி அவிர் உத்தி அரவு நீர் உணல் செத்து,
பெருமலை மிளிர்ப்பன்ன காற்றுடைக் கனைபெயல்
உருமுக் கண்ணுறுதலின், உயர் குரல் ஒலி ஓடி,
நறு வீய நனஞ்சாரல் சிலம்பலின், கதுமென,
சிறுகுடி துயில் எழூஉம் சேண் உயர் விறல் வெற்ப!

கால் பொர நுடங்கல கறங்கு இசை அருவி நின்
மால் வரை மலிசுனை மலர் ஏய்க்கும் என்பதோ—
புல் ஆராப் புணர்ச்சியால் புலம்பிய என் தோழி
பல் இதழ் மலர் உண்கண் பசப்ப, நீ சிதைத்ததை?

புகர் முகக் களிற்ரூெடு புலி பொருது உழக்கும் நின்
அகன் மலை அடுக்கத்து அமை ஏய்க்கும் என்பதோ—
கடை எனக் கலுழும் நோய் கைம்மிக, என் தோழி
தடையின திரண்ட தோள் தகை வாட, சிதைத்ததை ?

சுடர் உற உற நீண்ட சுரும்பு இமிர் அடுக்கத்த
விடர் வரை எரி வேங்கை இணர் ஏய்க்கும் என்பதோ?
யாமத்தும் துயிலலன் அலமரும் என் தோழி
காமரு நல் எழில் கவின் வாட சிதைத்ததை ?
என ஆங்கு,

தன் திமை பல கூறிக் கழறலின், என் தோழி
மறையில் தான் மருவுற மணந்த நட்பு அருகலான்,
பிறை புரை நுதல் ! அவர்ப் பேணி நம்
உறை வரைந்தனர், அவர் உவக்கும் நாளே.

"மலை நாடனே ! கேள் ! உனது மலையிலே மூங்கில்கள் நெருங்கி ஓங்கி வளர்ந்திருக்கின்றன. அதனால் சூரிய ஒளிகூட உட்புகுவதில்லை. வெயில் புகாத அக் காட்டின் இடை இடையே சிறு சிறு சுனைகள் உள்ளன. அந்தச் சுனையிலே காந்தள் மலர்கள் நிறைந்திருக்கின்றன. அது எத்தகைய காட்சி வழங்குகின்றது ? கருநாகம் நீர் குடிப்பது போன்ற காட்சி வழங்குகின்றது. கண்ணுக் கினிய காட்சிதான். கருத்தை அள்ளும் காட்சி. அதைக் கண்டு நீ மகிழ்ந்திருப்பாய். ஆனால், உனது மலையிலே உள்ள சிங்கத்துக்கு எப்படியிருக்கும் ? அந்தக் காட்சி மகிழ்ச்சி தருகிறதா ? இல்லை. மெய்யாகவே நாகம் நீர் குடிப்பது போல் எண்ணி அந்தச் சிங்கம் உறுமுகிறது ; இடி இடிப்பது போல் கர்ஜிக்கிறது. அது கேட்டு உன் சிறு குடி மக்கள் துயில் கொள்ளாது துன்புறுகின்றனர்.

இவ்விடத்து நிலைமையும் அத்தகையதே. தலைவியிடத்தே களவு இன்பம் காண்கிருய் நீ. ஆனால் பெற்ருேர் என் செய்கின்றனர் ? சும்மா இருக்கின்றனரா ? காந்தளை நாகமென்று கருதி சிங்கம் இடித்து முழங்கியதுபோல் முழங்குகின்றனர். அதனால் ஊரார் ஏசிப் பேசுகின்றனர்.

"அதனால் தலைவிக்கு வருத்தம். தாங்க முடியாத வருத்தம். அந்த வருத்தத்தினால் அவளது கண்கள் ஒளியிழந்துவிட்டன. சுனையிலே மலர்ந்த மலர் போலும் கண்கள் வாடிவிட்டன. அவ்வாறு நிகழக் காரணம் நீயே. ஏன் அவ்விதம் செய்தாய்? உன் மலைநாட்டுச் சுனை மலர் போன்ற அவளது கண்களின் மீது நீ கொண்ட பொறாமையினாலா? அல்லது இரக்கம் இன்மையாலா? சொல்.

"எனது தலைவியின் தோள்கள் அழகியன; மூங்கில் போன்றன. அவை இன்று நெகிழ்ந்து போயின. அழகு இழந்து காணப்படுகின்றன. அதற்குக் காரணம், உன் காதல் நோய்தான். நீதான். நீ ஏன் இவ்விதம் செய்தாய்? யானையுடன் புலி போரிடும் உன் மலைக் காட்டிலே உள்ள மூங்கில் போலும் அழகிய தோள், என்ற பொறாமையினாலா? அல்லது அவள் பால் இரக்கமின்மையினாலா? சொல்.

"இரவு முழுதும் தூக்கமின்றி வாடுகிறாள் என் தலைவி. காதல் நோயினால் உருக்குலைந்துவிட்டாள். அவளை ஏன் உருக்குலைத்தாய்?

"உன் மலை நாட்டிலே உள்ள வேங்கைப் பூப் போன்றாள் என்ற காரணத்தினாலா? பொறாமையினாலா? அல்லது அவள் பால் இரக்கமின்மையாலா? சொல்.

"இவ்விதம் கூறி நான் கண்டித்தேன். ஊர் சென்ற தலைவன் பெண் கேட்டு வந்தான். நம் சுற்றத்தாரும் பெண் கொடுக்க இசைந்து விட்டனர்."

## 10. தடையும் விடையும்

ஒரு காதலன். காதலியைத் தேடி வருகிறான் இரவு நேரத்திலே. ஊர்க்காவல் கடுமையாக இருக்கிறது. காவலர் கண்ணில் படலாகாது. பட்டு விட்டால் என்னாகும்? களவு வெளியாகும். எனவே, ஊருக்குள் நுழையாமலே திரும்பிவிடுகிறான். இன்னொரு நாள் வருகிறான். வரும்போது அவனைக் கண்ட நாய்கள் குரைக்கின்றன. நாய் குரைக்கும் சத்தம் கேட்டால் ஊரார்

என்ன செய்வார்கள்? எவனே வேற்றூரான் வந்திருக்கிறுன் என்று அறிந்து எழுந்து வந்துவிடுவார்கள். அப்போது தன் களவு வெளிப்பட்டுப் போகும். எனவே, அன்றைய தினமும் அவன் ஊருக்குள் நுழையாமல் திரும்பி விடுகிறுன். மற்ருெரு நாள் வருகிறுன்.

முன்பிருந்த தொல்லைகள் இல்லை. ஊர்க்காவலர் கண்களில் படவில்லை; நாய்கள் குரைக்கவில்லை. மெதுவாகக் காதலியின் வீட்டுப்புறம் வந்து நிற்கிறுன். 'சாமி வரம் கொடுத்தும் பூசாரி வரம் கொடுக்கவில்லை' என்ற கதையாக இருக்கிறது. காதலியின் தாய் தூங்கவில்லை. விழித்துக் கொண்டிருக்கிறுள். திரும்பி விடுகிறுன் காதலன். வேறு ஒருநாள் வருகிறுன். ஊர்க் காவலைத் தாண்டிவிட்டான். நாய்களையும் தாண்டி வந்து விட்டான். காதலியின் வீட்டருகே வந்து நின்றுன். காதலியின் தாயும் தூங்கிவிட்டாள். 'சரி! இன்று காதலியைக் கண்டு இன்பமாயிருக்கலாம்' என்று எண்ணி நிற்கிறுன்.

அந்த நேரத்திலே என்னுயிற்று? நிலவு வரத் தொடங்கி விட்டது. பால் போன்ற நிலவு. இந்த நிலா வெளிச்சத்தில் காதலி வருவாளா? மாட்டாள். எனவே, 'சனியன்' என்று சந்திரனைச் சபித்துக் கொண்டே திரும்பிவிட்டான்.

அப்பால் ஒருநாள் வருகிறுன். ஊர்க்காவலைத் தாண்டினுன்; நாய்கள் கண்களினின்றும் தப்பினுன்; தாயும் தூங்கிவிட்டாள்; நிலவும் வரவில்லை.

"பேஷ்! சரியான சமயம்" என்று தனக்குள்ளே சொல்லிக் கொள்கிறுன். அவன் வந்திருப்பது காதலிக்குத் தெரிய வேண்டுமே! அதற்காக ஒரு குறிப்பு உணர்த்துகிறுன். நொச்சிப் பூ ஒன்றைப் பறித்துக் கீழே போட்டான். நொச்சி மலர் விழும் சப்தம் கேட்டால் காதலி வெளியே வருவாள். இவ்வாறு முன் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறுர்கள்.

எனவே, நொச்சி மலரைப் பறித்துப் போட்டான். காத்திருந்தான். காதலி வரவில்லை. ஏன்?

சற்று முன்புதான் நொச்சி மலர் விழுந்த சப்தம் கேட்டுக் காதலி வெளியே வந்தாள். காதலன் இல்லை. ஏமாந்தாள்.

காற்றில் அசைந்து விழுந்தது அம் மலர். அம்மாதிரியே இப்போதும் மலர் விழுகிறதாக்கும் என்று எண்ணிப் பேசாதிருந்து விட்டாள். காத்திருந்துவிட்டுத் திரும்பினன் காதலன்.

இவற்றையெல்லாம் காதலி கண்டாளா? இல்லை. எனவே, 'தலைவன் வரக் காணேமே! என்று ஒவ்வொரு நாளும் எதிர் பார்த்து ஏங்கியிருப்பாள்; ஒவ்வோர் இரவும் தூங்காது விழித்திருப்பாள். 'எப்போது நொச்சி மலர் விழும்! எப்போது நொச்சி மலர் விழும்!' என்று எதிர்பார்த்துக் கொண்டேயிருப்பாள். காதுகளைக் கூர்மையாக வைத்துக் கொண்டிருப்பாள். ஆனல் நொச்சி மலர் விழக்காணேம். எனவே, 'ஏமாற்றி விட்டான்' என்று கருதினள். தோழியிடம் கூறி வருந்தினள்.

தோழி தலைவனைக் கண்டு அவளது வருத்தத்தைத் தெரிவிக்கிருள் :

வீயகம் புலம்ப, வேட்டம் போகிய
மாஅல் அம் சிறை மணி நிறத் தும்பி,
வாய் இழி கடாத்த வால் மருப்பு ஒருத்தலோடு
ஆய் பொறி உழுவை தாக்கிய பொழுதின்,
'வேங்கை அம்சினை' என விறற் புலி முற்றியும்,
பூம்பொறி யானைப் புகர் முகம் குறுகியும்
வலிமிகு வெகுளியான் வாள் உற்ற மன்னரை
நயன் நாடி நட்பு ஆக்கும் வினைவர் போல், மறிதரும்
அயம் இழி அருவிய அணிமலை நல் நாட!

ஏறு இரங்கு இருள் இடை இரவினில் பதம் பெறுஅன்,
மாறினென் எனக் கூறி மனம் கொள்ளும்,தான் என்ப -
கூடுதல் வேட்கையான், குறிபார்த்து, குரல் நொச்சிப்
பாடு ஓர்க்கும் செவியோடு பைதலேன் யான் ஆக.

அருஞ் செலவு ஆர் இடை அருளி வந்து பெறுஅன்,
வருந்தினென் எனப் பல வாய் விடூஉம், தான் என்ப—
நிலை உயர் கடவுட்குக் கடம் பூண்டு - தன் மாட்டுப்
பல சூழும் மனத்தோடு பைதலேன் யான் ஆக.

கனை பெயல் நடு நாள் யான் கண் மாறு குறி, பெருஅன்
வருந்தினென் எனப் பலவாய் விடூஉம், தான் என்ப –
துளி நசை வேட்கையான் மிசை பாடும் புள்ளின், தன்
அளி நசைஇ ஆர்வுற்ற அன்பினேன் யான் ஆக.
என ஆங்கு,

கலந்த நோய் கைம்மிக கண்படா என் வயின்
புலந்தாயும் நீ ஆயின், பொய்யானே வெல்குவை –
இலங்கு தாழ் அருவியோடு அணிகொண்ட நின் மலைச்
சிலம்பு போல், கூறுவ கூறும்,
இலங்கு ஏர் எல் வளை, இவளுடைய நோயே!

"அழகிய அருவிகள் மிக்க மலைநாடனே, கேள்! உன்னுடைய மலைநாட்டிலே தும்பிகள் உள்ளன; கண்ணைக் கவரும் சிறகுகள் கொண்ட தும்பிகள்; மணி நிறத் தும்பிகள். 'அத் தும்பிகள் வந்து தன்னிடத்தே உள்ள தேனையுண்டு செல்லுமா, செல்லுமா!' என்று விரிந்து நிற்கின்றன மலர்கள். ஆனால் தும்பி என்ன செய்கிறது தெரியுமா? அங்கே ஒரு வேழமும் வேங்கையும் சண்டையிடுவது கண்டது.

"இது வேங்கை மலர் போலும் என்று எண்ணியது. எண்ணிப் புலியின் உடலிலே போய் மொய்த்தது. அங்கே என்ன இருக்கும்? தேனா இருக்கும்? இராது அல்லவா! பிறகு யானையின் நெற்றிக்குச் சென்றது. அங்கும் தேனில்லை. இப்படி மாறி மாறிச் சென்று கொண்டேயிருக்கும். அக் காட்சி எப்படியிருக்கிறது? இரண்டு மன்னர்கள் போரிடும் போது அவர் தம் நன்மை கருதி இருவரிடமும் அறிஞர் தூது செல்லுவதுபோலிருக்கும்.

"அத்தகைய மலைநாட்டினன் நீ. அந்த வண்டின் குணமே உனக்குமுண்டு.

"இருந்தாலும் ஒன்று சொல்கிறேன் கேள் :

"குற்றம் உன் மீது இல்லை. நீயும் நாள் தவறாமல் வருகிறாய். குற்றம் தலைவி மீதும் இல்லை. அவளும் நாள் தவறாமல் உன்னை எதிர்பார்த்திருக்கிறாள்.

"உங்கள் இருவரையும் சந்திக்கச் செய்யும் பொறுப்பு எனது. நான் அதைச் செய்யவில்லை. எனவே, குற்றம் எனதே.

"நீ உன் காதலியைக் கண்டு இவ்வாறு கூறு. பொய்யாக வேனும் கூறு.

"உன்னுடைய மலைச்சாரல் போன்றது அவளது உள்ளம். மலைப் பள்ளத்தாக்கிலே நின்று எது சொல்கிறோமோ அது எதிர் ஒலிக்கும். அம்மாதிரியே உன் தலைவியும் உன் கருத்தை எதிர் ஒலிப்பாள். வருத்தம் நீங்குவாள்" என்றான்.

## 11. கேட்டலும் கூட்டலும்

ஒரு தலைவன்; தலைவியைக் காண்கிறான்;. கண்டு காதல் கொள்கிறான். ஆனால் அவளை நெருங்குவது எப்படி? யோசிக்கிறான். யானையைக் கொண்டுதானே மற்றோர் யானையைப் பிடிக்க இயலும்? எனவே, ஒரு பெண்ணின் துணைகொண்டு மற்றொரு பெண்ணைப் பற்ற நினைக்கிறான். தான் காதல் கொண்ட தலைவியின் தோழியிடம் செல்கிறான்.

தலைவி மீது தான் கொண்ட காதலைத் தெரிவிக்கிறான். 'காதல் இன்றேல் சாதல்' என்கிறான். கேட்டாள் தோழி. மனம் இரங்கினாள். 'அவளை உன்னிடம் சேர்த்து வைக்கிறேன். உயிரை விடாதே' என்று உறுதி கூறுகிறாள்; கூறிவிட்டுத் தலைவியிடம் செல்கிறாள்; சொல்கிறாள்:

ஒன்று, இரப்பான் போல் எளிவந்தும் சொல்லும்;
    உலகம்
புரப்பான் போல்வது ஓர் மதுகையும் உடையன்;
வல்லாரை வழிபட்டு ஒன்று அறிந்தான் போல்,
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்;
இல்லோர் புன் கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வது ஓர் வன்மையும் உடையன்;
அன்னான் ஒருவன் தன் ஆண்தகை விட்டு, என்னைச்
சொல்லும் சொல் கேட்டீ—சுடரிழாய்!—பல் மாணும்:

'நின் இன்றி அமையலேன் யான்' என்னும் அவன்
    ஆயின்,

அன்னான் சொல் நம்புண்டல் யார்க்கும் இங்கு
அரிது ஆயின்,
என் உற்ற பிறர்க்கும், ஆங்கு உளகொல்லோ?
—நறுநுதால்!

'அறியாய் நீ; வருந்துவல் யான்' என்னும் அவன் ஆயின்,
தமியரே துணிகிற்றல் பெண்டிர்க்கும் அரிது ஆயின்,
அளியரோ, எம் போல ஈங்கு இவன் வலைப்பட்டார்?

'வாழலென், யான்' என்னும் 'நீ நீப்பின்'
அவன் ஆயின்,
'ஏழையர்' எனப் பலர் கூறும் சொல் பழி ஆயின்,
சூழுங்கால் நினைப்பது ஒன்று அறிகிலேன், வருந்துவல்;
சூழுங்கால், நறுநுதால்! நம்முளே சூழ்குவம்.
'அவனை,

நாண் அட, பெயர்த்தல் நமக்கும் ஆங்கு ஒல்லாது;
"பேணினர்" எனப்படுதல் பெண்மையும்
அன்று; அவன்
வெளவினன் முயங்கும் மாத்திரம் வா' எனக்
கூறுவென் போலக் காட்டி,
மற்று அவன் மேஎவழி மேவாய், நெஞ்சே!

"ஒளி மிக்க வளையல்களை அணிந்தவளே! கேள்! ஓர் ஆண் மகன். உலகத்தையே ஒரு குடைக் கீழ் ஆளத் தக்க திறமையும், வலிமையும் உடையவன். அதனால் செருக்குடையவன் அல்லன். அடக்கமுடையன். நல்ல மனிதர் எப்படி அடங்கிக் காணப்படுவார்களோ அப்படியிருக்கிறான். யாரோ பெரியவர்களை அண்டி அறிந்தவன் போல் காணப்படுகிறான்.

"அந்த அடக்க ஒடுக்கம் வறுமையினால் ஏற்பட்டவை அல்ல. வண்மையினால் தோன்றியவை. இல்லாதவர்களது துன்பம் தீர்க்கும் வண்மையான்.

"அத்தகைய ஒருவன், தனது ஆணுக்குரிய இயல்பை விட்டு, என்னிடம் வந்து ஏதோ பிச்சை கேட்பவன் மாதிரி கெஞ்சுகிறான். ஒரு நாளா; இரண்டு நாளா? பல நாட்களாகக் கேட்கிறான்.

என்ன கேட்கிறான்? உன்னைக் கேட்கிறான். நீ மறுத்தால் 'உயிர் வாழ மாட்டேன்' என்று சொல்கிறான்.

"ஆனால் நீயோ! அதற்கு உடன்படமாட்டேன் என்கிறாய். 'அவனது சொல்லை எவ்வாறு நம்புவது?' என்று கேட்கிறாய். இதற்கு இடையில் நான் கிடந்து உழல்கிறேன்.

'எனது நெஞ்சு படும்பாட்டை நீ அறியமாட்டாய்! மிக வருந்துகிறேன்' என்று கூறுகிறான் அவன்.

'சரி. அதற்காக நாமே முடிவு செய்து விடுவதா?' என்று கேட்கிறாய் நீ.

"உங்கள் இருவர் இடையிலும் கிடந்து நான் உழல்கிறேன்.

'வேண்டாம், நீயே முடிவு செய்தல் வேண்டாம். உனது ஆருயிர்த் தோழியுடன்தான் கலந்து முடிவு செய்யேன்.

'காதல்; இன்றேல் சாதல்' என்று சொல்கிறான் அவன். நீ மறுத்தால் 'உயிர் வாழேன்' என்கிறான். அவனை ஏற்றுக்கொள்வதுதான் அறிவுடைமை. ஏதாவது யோசிக்க வேண்டியிருந்தால் அதை நாமே கலந்து யோசிக்கலாம்.

"அவனை அங்கேயே நிறுத்தி வந்திருக்கிறேன். இனி யோசிப்பதில் பயனில்லை. வா, தயங்காதே. போ. போய் அவனது விருப்பத்தை நிறைவேற்று."

இவ்விதம் கூறினாள். அவளை அனுப்பினாள் தலைவனிடத்திலே.

## 12. 'விரைவாய் வரைவாய்'

காதலியுடன் களவு இன்பத்திலேயே காலம் கழிக்கிறான் தலைவன். அதனைக் கண்டிக்கிறாள் தோழி. விரைவிலே அவளை மணந்து கொள்ளுமாறு வற்புறுத்துகிறாள்:

ஆம் இழி அணி மலை அலர் வேங்கைத் தகை போல,
தேம் ஊசு, நனை கவுள், திசை காவல் கொளற்கு ஒத்த,
வாய் நில்லா வலி முன்பின், வண்டு ஊது புகர் முகப்
படு மழை அடுக்கத்த, மா விசும்பு ஓங்கிய
கடி மரத் துருத்திய, கமழ் கடாம் திகழ்தரும்

*பெருங் களிற்றினத்தொடு வீங்கு எருத்து எறும்*
*முன்பின்*
*இரும்புலி மயக்குற்ற இகல் மலை நல் நாட !*

*வீழ் பெயற் கங்குலின் விளி ஓர்த்த ஒடுக்கத்தால்,*
*வாழும் நாள் சிறந்தவள் வருந்து தோள்*
*தவறு உண்டோ—*
*தாழ் செறி கடுங்காப்பின் தாய் முன்னர், நின் சாரல்*
*ஊழ் உறு கோடல் போல், எல் வளை உகுபவால்?*

*இனை இருள் இது என ஏங்கி, நின் வரல் நசைஇ,*
*நினை துயர் உழப்பவள் பாடு இல் கண் பழி உண்டோ-*
*'இனையள்' என்று எடுத்து அரற்றும் அயல் முன்னர்*
*நின் சுனைக்*
*கனை பெயல் நீலம் போல, கண் பனி கலுழ்பவால் ?*

*பல் நாளும் படர் அட, பசலையால் உணப்பட்டாள்*
*பொன் உரை மணி அன்ன, மாமைக் கண்*
*பழி உண்டோ-*
*இன் நுரைச் செதும்பு அரற்றும் செவ்வியுள்,*
*நின் சோலை-*
*மின்உகு தளிர் அன்ன, மெலிவு வந்து உரைப்பதால் ?*
*என ஆங்கு,*
*பின் ஈதல் வேண்டும், நீ பிரிந்தோள் நட்பு—என நீவிப்*
*பூங் கண் படுதலும் அஞ்சுவல்; தாங்கிய*
*அருந்துயர் அவலம் தூக்கின்,*
*மருங்கு அறிவாரா மலையினும் பெரிதே.*

"மலைநாடனே, கேள் ! உன்னுடைய மலைநாட்டிலே காடுகள் உள்ளன! ஒளியும் உட்புகாத காடுகள். அக் காடுகளிலே யானைக் கூட்டங்கள் வாழ்கின்றன. எட்டுத் திசையும் காக்கும் திறன் மிக்க யானைகள் ! மதநீர் சொரியும் யானைகள்! மழை போல் மதநீர் சொரியும் யானைகள்! வேங்கை மலர்போல் தோன்றும் புள்ளிகள் நெற்றியிலே கொண்ட யானைகள் ! மதநீர் ஒழுகுவதாலும், வேங்கைப் பூப் போன்ற புள்ளிகள் தெரிவ

தாலும் வண்டுகள் வந்து மொய்க்கின்றன யானைகளின் நெற்றியிலே!

"கழுத்துப் பெருத்த புலிகள் இந்த யானைகளுடன் போரிடு கின்றன; அஞ்சாது போரிடுகின்றன.

"அதே மாதிரி இங்கேயும் நிகழ்கிறது. யானையுடன் வேங்கை சண்டையிடுவது போல எனது தலைவியின் பெற்றோ ருடன் சுற்றத்தார் போரிடுகின்றனர்.

"ஏன்? தலைவியிடம் காதல் கொண்டுள்ள நீ, அவளை விரை வில் மணம் புரிந்து செல்லாத காரணத்தினால்.

"அவளோ—உன்னையே எண்ணி எண்ணி ஏங்குகிறாள். அதனால் உடல் மெலிந்து வாடுகிறாள். வளைகள் நெகிழ ஏங்குகிறாள்.

"இரவு நேரங்களிலே மழை பொழிகிறது. இருப்பினும், அதை எண்ணுகிறாளில்லை. நின்னையே நினைத்து ஏங்குகிறாள். நடுநிசியிலும் உறங்குவதில்லை. எங்கேயாவது, ஏதாவது, ஓசை கேட்டால் எழுந்து பார்க்கிறாள், நீ வந்திருக்கிறாயோ என்று. உன்னைக் காணாது ஏமாற்றம் அடைகிறாள்.

"நீ வரும் வழியை நினைக்கிறாள். கொடிய விலங்குகள் உண்டே வழியில் என்று எண்ணுகிறாள். வரும் வழியில் உனக்கு ஏதாவது இடர் ஏற்பட்டதோ என்று நினைக்கிறாள்; வருந்துகிறாள். அதனால் அவளது தோள்கள் மிக மிக மெலிந்து விட்டன. கண் ணீர் விட்டுக் கண்ணீர் விட்டு வருந்துகிறாள். கண்ணிலே எப் போதும் நீர் தேங்கியிருக்கிறது, உன்னுடைய சுனையிலே நீலம் மலர்ந்திருப்பதுபோல. இவ்விதம் பல நாளாக வாடுவதால் மேனி பசலை கண்டது. இளவேனிற் காலத்திலே நிறம் மாறித் தோன்றும் தளிர் போலாயிற்று அவள் மேனி. உன் மலைச்சாரலில் உள்ள வெண் காந்தள் பூக்கள் வெயிலால் வாடிக் காம்பற்று வீழ்வனபோல் அவளது வளைகள் நழுவி வீழ்கின்றன.

"தூங்கினாலாவது அவளது துயரம் மறையுமோ என்று நினைக்கிறேன். தூக்கத்திலேயும் உன்னையே நினைத்து, உன் னுடன் இன்பப் பொழுது போக்குவதாக மகிழ்ந்து, விழித்துப் பார்க்குங்கால் நீ இல்லாது போனால் அவளது துன்பம் பன்மடங்

காகுமே! அதை எண்ணும்போது அவள் தூங்காதிருப்பதே நல்லது என்று எண்ணுகிறேன்.

"இவ்வாறு இவள் வருந்துகிருள். நீயோ இதை அறியாதிருக்கிருய். அவள் உனக்குச் செய்த தவறு என்ன? ஏன் அவளை இப்படி வருத்துகிருய்? போதும். இனி வருத்தாதே. மணம் புரிந்து வாழ்வாயாக."

## 13. இரவும் இன்னலும்

"இனிமேல் இரவு நேரத்திலே வராது இருப்பாயாக. பகல் நேரத்திலே வரலாம். உன் காதலியுடன் இன்பமாக இருக்கலாம் வா" என்று சொல்கிருள் தோழி :

கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை,
நனவில் தான் செய்தது மனத்தது ஆகலின்,
கனவில் கண்டு, கதுமென வெரீஇ,
புதுவதாக மலர்ந்த வேங்கையை
'அது' என உணர்ந்து, அதன் அணிநலம் முருக்கி,
பேணு முன்பின் தன்சினம் தணிந்து, அம்மரம்
காணும் பொழுதின் நோக்கல் செல்லாது,
நாணி இறைஞ்சும் நல் மலை நாட!

போது எழில் மலர் உண்கண் இவள் மாட்டு நீ இன்னை
காதலை என்பதோ இனிது-மற்று இன்ருதே,
மின்ஒரும் கண் ஆக, இடி என்ருய், பெயல் என்ருய்,
இன்னது ஓர் ஆர் இடை, ஈங்கு நீ வருவதை.

இன்புற அளித்தனை இவள் மாட்டு நீ இன்ன
அன்பினை என்பதோ இனிது-மற்று இன்ருதே
மணம் கமழ் மார்பினை மஞ்சு இவர் அடுக்கம் போழ்ந்து,
அணங்குடை ஆர் இடை, ஈங்கு நீ வருவதை.

இருள் உறழ் இருங் கூந்தல் இவள் மாட்டு நீ இன்ன
அருளினை என்பதோ இனிது - மற்று இன்ருதே,

ஒளிறு வேல் வலன் ஏந்தி, 'ஒருவன் யான்' என்னுது
களிறு இயங்கு ஆர்இடை ஈங்கு நீ வருவதை.
அதனால்,

இரவின் வாரல், ஐய! விரவு வீ
அகல் அறை வரிக்கும் சாரல்,
பகலும் பெறுவை இவள்தட மென்தோளே.

''மலைநாடனே, கேள்! உன்னுடைய நாட்டிலே உள்ள யானை என்ன செய்கிறது? புலியுடன் போரிடுகிறது. போரிட்டு வெற்றி கொள்கிறது. பின் தூங்குகிறது, போர் செய்த அயர்விலுலே. அவ்விதம் தூங்கும்போது கனவு காண்கிறது. என்ன கனவு? புலி வந்து எதிரே நிற்பதுபோலவும், சண்டை செய்வது போலவும் கனவு. உடனே சினந்து எழுகிறது யானை. எழுந்து பார்க்கிறது. எதிரே வேங்கைமரம் பூத்துக் குலுங்கி நிற்கிறது. புலி போல் காட்சி தருகிறது. அதைத் தாக்கிக் கீழே வீழ்த்து கிறது யானை. வீழ்த்திய பிறகு சினம் தணிகிறது. தணிந்த பிறகு பார்க்கிறது. வேங்கைப் புலியல்ல, வேங்கை மரம், ''ஐயோ! இதையா தாக்கினேம்!'' என்று எண்ணுகிறது யானை. எண்ணிய உடனே வெட்கம் மண்டுகிறது. வேங்கை மரம் உள்ள பக்கம் திரும்பாமலே இருக்கிறது யானை. இது உன் நாட்டிலே நடக்கிற நிகழ்ச்சி என்று மாத்திரம் நினையாதே; இங்கேயும் நடக்கிறது.

''நீ வந்து போவது ஊரிலே அலராகி விட்டது. அது கேட்டுத் தலைவியின் தாய் தலைவியைக் கோபித்தாள். அது அவள் மனத்திலே ஆழப் பதிந்துவிட்டது. ஊராரின் அலர் அவள் மனம் விட்டு அகலவில்லை. தூக்கத்திலே கனவு கண்டாள். பயந்து எழுந்தாள். என்னைக் கண்டாள். இவ்வளவுக்கும் காரணம் நானே என்று கோபித்தாள். பிறகு கோபம் தணிந்தாள். அவளது ஒழுக்கத்தைக் காத்து நிற்பவள் நான் என்றுணர்ந்தாள். நாணத்தால் தலை குனிந்தாள். என்னைக் காணவுமில்லை. வெட்கினுள், வேங்கை மரத்தைத் தாக்கிய வேழம் போல.

''நீ இதை அறியமாட்டாய். வருகிறுய். 'இவள் மீது காதல் கொண்டேன்' என்று சொல்கிறுய். அதுவும் நல்லதுதான்.

என்றும், மழை என்றும், மின்னல் என்றும் பாராது நேரத்திலே வழி நடந்து வருகிறாயே! அது நல்லதல்ல.

"இவளிடத்து இன்பம் கண்டாய்; அன்பு கொண்டாய்; அது நல்லதுதான். ஆனால் இந்த இரவு நேரத்திலே பனி தோய்ந்த மலைச்சாரல் வழியே நடந்து வருவது நல்லதல்ல.

"கரிய கூந்தலினையுடைய இவளிடத்து நீ காதல் கொண்டாய்; அது நல்லதுதான். ஆனால், 'இரவு நேரத்திலே தன்னந் தனியனாய் செல்கிறோமே!' என்று நினையாது, கையில் வேல் ஏந்தி யானைகள் நடமாடும் மலை வழி வருகிறாயே! அதுதான் நல்லதல்ல.

"ஆகவே, இனி இரவில் வராதே ஐயா! பகல் நேரத்திலேயே வா! மலைச்சாரலிலே வந்து நின்றால் இவளது மென்தோள்களைத் தழுவலாம், வா."

## 14. கொஞ்சுவதும் கெஞ்சுவதும்

தலைவியுடன் இன்பங் கூட்டி வைக்குமாறு கெஞ்சுகிறான் தலைவன். இரங்குகிறாள் தோழி. அவன் வேண்டுகோளுக்கு இணங்குகிறாள்.

இன்பம்! இன்பம்! இன்பம்! இன்பம் துய்த்து வருகிறான் தலைவன்.

இப்போது தோழியின் முறை! அவள் தலைவனிடத்திலே கெஞ்சுகிறாள். எதற்காக?

தலைவியைப் பிரியாது வாழ்ந்து, என்றும் இன்பமாய் வாழ வேண்டும் என்பதற்காக :

வாங்குகோல் நெல்லொடு வாங்கி வருவைகல்,
மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி,
தூங்கு இலை வாழை நளிபுக்கு, ஞாங்கர்
வருடை மட மறி ஊர்வு இடைத் துஞ்சும்
இருள் தூங்கு சோலை, இலங்குநீர் வெற்ப!

அரவின் பொறியும் அணங்கும் புணர்ந்த
உரவு வில்மேல் அசைத்த கையை, ஓராங்கு,

நிரைவளை முன்கை என்தோழியை நோக்கி,
படி கிளி பாயும் பசுங்குரல் ஏனல்
கடிதல் மறப்பித்தாய் ஆயின், இனி நீ
நெடிது உள்ளல் ஓம்புதல் வேண்டும்; இவளே
பல் கோட் பலவின் பயிர்ப்பு உறுதீம் கனி
அல்கு அறைக் கொண்டு ஊண் அமலைச் சிறுகுடி
நல் கூர்ந்தார் செல்வ மகள்.
நீயே, வளியின் இகல்மிகும் தேரும் களிறும்—
தளியின் சிறந்தனை—வந்த புலவர்க்கு
அளியொடு கைதூவலை.
கதனுல,

கடுமா கடவுறூஉம் கோல்போல் எனைத்தும்
கொடுமை இலையாவது அறிந்தும், அடுப்பல்—
மழை வளர் சாரல் வருடை நன் மான்
குழவி வளர்ப்பவர் போல, பாராட்டி,
உழையின் பிரியின், பிரியும்,
இழை அணி அல்குல் என் தோழியது கவினே.

"சூரியனுடைய கிரணங்கள் உள்ளே புகாதவாறு இருள் கவிந்திருக்கும் சோலைகள் பல கொண்ட மலை நாடனே! நான் சொல்வதைக் கேள்!

"உன்னுடைய மலை நாட்டிலே பெண் யானைகள் ஏராளமாக உள்ளன. அவை, தாமே சென்று மூங்கில் குருத்துகளையும், நெல்லையும் உண்டு மகிழ்கின்றன. பின் வாழைத் தோட்டத்திலே சென்று வாழைப் பழங்களைப் பறித்துத் தின்கின்றன. அது மாத்திர மல்ல; அந்தச் சோலையிலே உள்ள மான் குட்டிகள், புலி, முதலிய வற்றிற்கு அஞ்சாது துயில்கின்றன.

"இதை எதற்காகச் சொன்னேன்? என் தலைவி உன்பால் காதல் கொண்டுவிட்டாள். நீயும் அவள்மீது காதல் கொண்டாய். கூடுதலும் ஆயிற்று. இனி நீ அவளைப் பேணி வளர்த்தல் வேண்டும். உன் மலைநாட்டிலே உள்ள மூங்கில் குருத்தைத் தின்றும், வாழைக் கனி உண்டும் பெண் யானை இன்புற்று வாழ்கிறது அல்லவா? அதேமாதிரி இந்தப் பெண் யானையாகிய நின்

காதலியும் நின் மனையிலே இன்புற்று வாழ்தல் வேண்டும். புலி அஞ்சாது மான் குட்டிகள் உன் மலைநாட்டிலே தூங்குகின்றன அல்லவா? அந்தமாதிரி உன் காதலியும் நின் மனையிலே அஞ்சாது இன்புற்றுத் துயில் கொள்ளல் வேண்டும். இதுவே என் வேண்டுகோள்.

"உன் காதலி நல்ல குடிப் பிறந்தவள்; செல்வச் செழுங்குடி மகள்; சீரும் சிறப்புமாகப் பேணி வளர்க்கப்பட்டவள். தினைப் புனங் காத்து நின்றாள். அவள் சிந்தை கவர்ந்து விட்டாய். தொழில் மறக்கச் செய்துவிட்டாய். காதல் கொடுத்து விட்டாய். காதலை விரும்பியவள் இனி உனது காத்தலையும் விரும்புவாள். எனவே, நீ அவளுடனை இடைவிடாது இருத்தல் வேண்டும். எனது வேண்டுதல் இதுவே.

"கொடை மிகு வள்ளல் நீ; வரையாது கொடுப்போன் நீ; உன்பால் வந்த புலவர்க்கு வாரி வழங்குபவன்; உனக்குச் சொல்ல வேண்டியதில்லை. இருந்தாலும் என் மனம் கேட்கவில்லை.

"குதிரை வேகமாகத்தான் ஓடுகிறது. இருந்தாலும், சாட்டைக் கோலால் வீசுகிறான். எதற்காக? இன்னும் விரைவாகப் போகவேண்டும் என்பதற்காக.

"அந்த மாதிரி ஒன்று சொல்கிறேன், கேள்! காட்டிலே பிடித்து வந்த மான் குட்டியை நன்கு பாதுகாத்து இன்புடன் வளர்த்து என்றும் பிரியாதிருப்பர் கானவர்.

"அம்மாதிரி இவளை நன்கு பாதுகாப்பாய்; பிரியாதிருப்பாய். பிரிந்தால் அவள் அழகும் அவளை விட்டுப் பிரியும்."

## 15. கையும் பொய்யும்

வரக் கூடாத இடம். வரத் தகாத நேரம். வராத விருந்தினன். வந்து விட்டான். வீட்டிலே விருந்து இருக்கிறது; ஆனால் பலருடன் அதைப் பகிர்ந்து உண்ணல் முடியாது. எனினும், ஒரு பகுதியை ருசி பார்க்கிறான் விருந்தினன்.

இது போன்றதொரு நிகழ்ச்சி. அந்த நிகழ்ச்சியைத் தலைவி தோழிக்குச் சொல்கிறாள்.

எதற்காக? ருசிக்கிறது. மேலும் 'விருந்து உண்ணல்' வேண்டும் என்பதற்காக. எப்படிச் சொல்கிருள்? கேட்போம்:

சுடர்த் தொடீஇ! கேளாய்!—தெருவில் நாம் ஆடும்
மணற் சிற்றில் காலின் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து, வரிப்பந்து கொண்டு ஓடி,
நோதக்க செய்யும் சிறுபட்டி, மேல் ஓர்நாள்,
அன்னையும் யானும் இருந்தேமா, 'இல்லிரே!
உண்ணு நீர் வேட்டேன்' என வந்தாற்கு, அன்னை,
'அடற் பொற் சிரகத்தால் வாக்கி, சுடரிழாய்!
உண்ணு நீர் ஊட்டி வா' என்ருள்: என, யானும்
தன்னை அறியாது சென்றேன்; மற்று என்னை
வளை முன்கை பற்றி நலிய, தெருமந்திட்டு,
'அன்னாய்! இவன் ஒருவன் செய்தது காண்,' என்றேனு,
அன்னை அலறிப் படர்தர, தன்னை யான்,
'உண்ணு நீர் விக்கினன்' என்றேனு; அன்னையும்
தன்னைப் புறம்பு அழித்து நீவ, மற்று என்னைக்
கடைக்கணுல் கொல்வான் போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தான், அக் கள்வன் மகன்.

"ஒளி பொருந்திய வளையலை அணிந்தவளே! கேள்!

"ஒருநாள்—

"நானும் தாயும் வீட்டினுள் இருந்தோம். வாசலில் இருந்து ஒரு குரல் கேட்டது:

'அம்மா! தாகத்துக்குத் தண்ணீர்.'

"கேட்டாள் என் தாய். 'வாசலில் யாரோ தண்ணீர் வேண்டுமென்று கேட்கிருர். கொண்டு போய் கொடு' என்ருள்.

"தண்ணீர் எடுத்து வந்தேன். வரும் போதே என் உள்ளம் என் வசமில்லை. என்னவோ செய்தது! உணர்ச்சி தலைக்கு

"தண்ணீர்ச் செம்பைக் கொண்டு வந்தேன். வாசலில் நின்ருன் ஓர் இளைஞன். அவனிடம் கொடுத்தேன். செம்பை வாங்கினன் அவன். அதே சமயத்தில் என் செங்கை பற்றி இழுத்தான்.

"'அம்மா' என்று அலறினேன்.

"கரம் பற்றி இழுத்தவன் எவன் என்று பார்த்தேன். அவன்தான்! அந்தச் சுட்டிப் பயல்! நாம் சிறுவயதில் மணலிலே வீடு கட்டி விளையாடியபோது, அவ் வீட்டைத் தன் காலால் சிதைத்து விட்டு ஓடுவானே? அவன்!

"கண்ணையும் கருத்தையும் கவரும் காளையாகி வந்துநின்றான். கண்டேன் அவனை; உள்ளம் பறி கொடுத்தேன்.

"'அம்மா' என்று அலறிய குரல் கேட்டாள் என் தாய்.

'என்ன?' என்று கேட்டுக் கொண்டே ஓடி வந்தாள்.

"என்ன சொல்வது? என்று விழித்தேன். கை பிடித்து இழுத்தான் என்று சொல்வதா?

"சொன்னால் என்னாகும்? அவனை நையப் புடைத்து விரட்டி விடுவார்களே! அப்படிச் செய்யலாமா? கூடாது. எனவே, ஒரு பொய் சொன்னேன்:

'மட மட வென்று நீர் குடித்தான். புறையேறிற்று. அதனால் தான் உன்னை அழைத்தேன். எங்கேயாவது இறந்துவிடப் போகிறானே, என்ற பயம் வந்து விட்டது' என்றேன்.

'அப்படியா! என்ன அப்பா அவசரம்? மெதுவாக நீர் குடிப்பதுதானே!' என்று கூறினாள் தாய். கூறிக்கொண்டே அவன் முதுகிலே தடவிக் கொடுத்தாள்.

"அப்போது அந்தத் திருட்டுப் பயல் என்ன செய்தான் தெரியுமா? என்னைப் பார்த்துக் கண் சிமிட்டினான்; புன்முறுவல் பூத்தான்!"

## 16. உளவும் களவும்

இரவு நேரத்திலே வந்து கள்ளக் காதல் புரிவதிலேயே கருத்துடன் இருக்கிறான் அவன். "தம்பீ! இது நடவாது இனிமேல்! விரைவில் கலியாணம் செய்துகொள்" என்று சொல்கிறாள் தோழி. கேளுங்கள்:

முறம் செவி மறைப் பாய்பு முரண் செய்த புலி செற்று,
மறம் தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்

குறங்கு அறுத்திடுவான் போல், கூர் நுதி
மடுத்து, அதன்
நிறம் சாடி முரண் தீர்ந்த நீள் மருப்பு எழில் யானை,
மல்லரை மறம் சாய்த்த மால் போல் தன்
கிளை நாப்பண்,
கல் உயர் நனஞ்சாரல் கலந்து இயலும் நாட! கேள் :

தாமரைக் கண்ணியை, தண் நறுஞ் சாந்தினை,
நேர் இதழ்க் கோதையாள் செய்குறி நீ வரின்,
'மணம் கமழ் நாற்றத்த மலைநின்று பலி பெறூஉம்
அணங்கு' என, அஞ்சுவர், சிறுகுடியோரே.

ஈர்ந்தண் ஆடையை, எல்லி மாலையை,
சோர்ந்து வீழ் கதுப்பினாள் செய்குறி நீ வரின்,
ஒளி திகழ் ஞெகிழியர், கவணையர், வில்லர்,
''களிறு' என ஆர்ப்பவர் ஏனல் காவலரே.

ஆர மார்பினை, அண்ணலை, அளியை,
ஐது அகல், அல்குலாள் செய்குறி நீ வரின்,
'கறி வளர் சிலம்பில் வழங்கல் ஆனாப்
புலி' என்று ஓர்க்கும் இக்கலி கேழ் ஊரே!
என ஆங்கு,

விலங்கு ஓரார், மெய் ஓர்ப்பின், இவள் வாழாள்;
இவள் அன்றி,
புலம் புகழ் ஒருவ! யானும் வாழேன் :
அதனால், பொதி அவிழ் வைகறை வந்து நீ குறை கூறி,
வதுவை அயர்தல் வேண்டுவல்; ஆங்கு,
புதுவை போலும் நின் வரவும், இவள்
வதுவை நாண் ஒடுக்கமும், காண்குவல், யானே.

''மலைநாடனே! கேள்! உன்னுடைய நாட்டிலே யானைகள் மிக உண்டு. ஒருநாள் யானை ஒன்றைக் கண்டது வேங்கை. அதன்மீது பாய்ந்து கொல்ல நினைத்தது. முன்புறமாகச் சென்று தாக்குதற்கு அச்சம். எனவே பின்புறமாகவே சென்றது, சமயம் பார்த்து அதன்மீது பாய்ந்து தாக்குவதற்கு. முறம்

போன்ற காதுகள் மறைப்பதால் யானையின் கண்ணுக்குப் புலி தெரியவில்லை.

"புலி பாய்ந்தது. யானையின் மத்தகத்தைத் தாக்கியது. உடனே யானை என்ன செய்தது? புலியைக் கீழே தள்ளித் தன் கொம்புகளால் குத்திப் பிளந்தது. அக்காட்சி எப்படி இருந்தது? பாரதப் போரிலே வீமன் துரியோதனனைக் கீழே தள்ளி அவன் தொடையைப் பிளந்து இரத்தம் குடித்தது போல் இருந்தது. கம்சனின் ஏவலால் வந்து போரிட்ட சாணூரன் முதலிய மல்லர்களை வென்று கண்ணன் ஆரவாரித்தது போலிருந்தது. அவ்வாறு வெற்றி பெற்ற யானை பெருமிதத்துடனே நடந்து சென்று தன் கூட்டத்துடன் கலந்து மகிழ்ந்தது.

"உனது காதலியிடம் களவு பூண்டு ஒழுகுகிறாய் நீ. அது கண்டு ஊரார் பலவாறு பேசுகின்றனர். புலியை வென்ற உன் நாட்டு யானை போல் உன் காதலியும் இந்த ஊராரின் தூற்றுதலை வெல்ல வகை செய்வாய்.

"இரவு நேரத்திலே நீ வருகிறாய், காதலியிடம் களவு இன்பம் பெறுவதற்காக. உனது மாலையையும், மணம் வீசுதலையும் கண்டு ஊரார் அஞ்சியிருக்கின்றனர். மலையிலே நின்று பலி கொள்ளும் ஓர் அணங்கு என்று எண்ணியிருக்கின்றனர்.

"இரவு நேரத்திலே நீ வருகிறாய். துணியைப் போர்த்தி வருகிறாய். அதுகண்டு ஊரார் என்ன நினைப்பார்கள். ஏதோ யானை வந்து விட்டது என்று நினைப்பார்கள். கவணும் கல்லும் கொண்டு எறியத் தலைப்படுவார்கள். அப்போது உன்பாடு ஆபத்தாய் முடியும். எங்களுக்கும் துன்பம் வரும்.

'இரவு நேரத்திலே நீ வருகிறாய். அதுகண்டு விலங்குகள் ஓடும். ஊரார் என்ன எண்ணுவார்கள்? புலி வந்து விட்டது என்று நினைப்பார்கள். புலியைக் கொல்ல வருவார்கள். அப்போது ஆபத்தாய் முடியும். விஷயம் வெளிப்படும். எங்களுக்கும் துன்பமாகும். நாணத்தால் உன் தலைவி உயிர் துறப்பாள். அவள் உயிர் துறந்த பின் நானும் உயிர் வாழேன். எனவே, நீ இரவு வருதலை விடு. விரைவில் இவளை மணந்து கொள்வாய்."

## 17. கூட்டியதும் கண் காட்டியதும் கண்

களவிலே காதல் புரிந்து வருகிறான் தலைவன். 'ஒருமுறை ஊர் சென்று வருகிறேன்' என்று கூறிப் போகிறான். அவ்விதம் போயிருந்தபோது தலைவி பட்ட துன்பத்தைக் கூறுகிறாள் தோழி :

வறன் உறல் அறியாத வழை அமை நறுஞ்சாரல்
விறல் மலை வியல் அறை, வீழ் பிடி உழையதா,
மறம் மிகு வேழம், தன் மாறுகொள் மைந்தினான்,
புகர் நுதல் புண் செய்த புய் கோடு போல,
உயர் முகை நறுங் காந்தள் நாள் தோறும் புதிது ஈன,
அயம் நந்தி அணி பெற, அருவி ஆர்த்து இழிதரும்
பய மழை தலை இய பாடு சால் விறல் வெற்ப!

மறையினின் மணந்து, ஆங்கே மருவு அறத் துறந்த பின்,
இறை வளை நெகிழ்பு ஓட, ஏற்பவும் ஒல்லும் மன்-
அயல் அலர் தூற்றலின், ஆய்நலன் இழந்த, கண் ;
கயல் உமிழ் நீர்போல, கண் பனி கலுழாக்கால்?

இனிய செய்து அகன்று, நீ இன்னாதத் துறத்தலின்,
'பனி, இவள் படர்' எனப் பரவாமை ஒல்லும் மன் -
ஊர் அலர் தூற்றலின், ஒளி ஓடி, நறுநுதல்
பீர் அலர் அணிகொண்டு, பிறை வனப்பு இழவாக்கால்?

'அஞ்சல்' என்று அகன்று, நீ அருளாது துறத்தலின்,
நெஞ்சு அழி துயர் அட, நிறுப்பவும் இயையும் மன் -
நனவினால் நலம்வாட, நலிதந்த நடுங்கு அஞர்
கனவினால் அழிவுற்று, கங்குலும் அரற்றாக்கால்?
என ஆங்கு,

விளியா நோய் உழந்து ஆனா என் தோழி, நின்மலை
முளிவுற வருந்திய முளை முதிர் சிறுதினை
தளி பெறத் தகை பெற்றாங்கு, நின்
அளிபெற நந்தும், இவள் ஆய் நுதல் கவினே.

"மலை நாடனே! கேள்! உனது மலையிலே வறட்சி என்பதே கிடையாது. எப்போதும் மழை பொழியும். அருவிகள் பெருக்கெடுத்து ஓடும். நீர் நிலைகள் எங்கும் மலிந்திருக்கும். அவற்றிலே தினமும் செங்காந்தள் புதிதாக மலர்ந்திருக்கும்.

"அக் காட்சி எது போலிருந்தது?

"அந்த மலையிலே ஓர் ஆண் யானை, அதன் காதலியான பெண் யானையுடன் இருந்தது. அப்போது அங்கே மற்றோர் ஆண் யானை வந்தது. காதலியுடன் இன்பமாயிருக்கும் ஆண் யானைக்குப் பகை தோன்றுவது இயற்கைதானே!

"வந்த யானையுடன் சண்டை செய்தது இருந்த யானை. தன் கொம்புகளால் குத்திக்குத்தி விரட்டியது. வந்த யானை ஓடிப் போயிற்று. தனது வீர வெற்றிவிழாவைக் கொண்டாடுவதுபோல் பெண் யானையுடன் இருந்தது ஆண் யானை.

"அதன் கொம்பிலே இரத்தக்கறை படிந்திருந்தது.

"இதுபோலிருந்தது அங்கே செங்காந்தள் மலர்ந்திருந்த காட்சி. இக் காட்சியை உனக்கு நினைப்பூட்டுகிறேன். ஏன்?

"உங்கள் இருவரது காதலுக்கும் பகையாயிருக்கும் ஒன்றை ஒழிக்க வேண்டும் என்பதற்காக. பகை எது? ஊராரின் ஏச்சான பேச்சு. அப் பேச்சை ஒழித்து நீயும் உன் காதலியுடன் வாழ்தல் வேண்டும். எதுபோல? பகை யானையை ஒழித்துவிட்டுப் பிடியுடன் மகிழ்ந்த ஆண் யானைபோல.

"காதல் கொண்டாய் நீ; களவிலே இன்புற்றாய்; பின், சென்றாய்; சென்றவன் மீண்டும் வந்தாயா? இல்லை. அதனால் என்னாயிற்று? இவள் வருந்தினாள்; வாடினாள்; ஏங்கினாள். தோள் நெகிழ்ந்தது; வளைகள் கழன்றன. கண்டனர் அயலார். "இவள் ஏன் இப்படி வருந்துகிறாள்? இளைத்துத் துரும்பாகிறாள்?" என்று கேட்டனர். அவர்களுக்கு என்ன பதில் சொல்வது?

"அவர்கள் அறியும்படியாக ஏன் நடந்து கொள்ளவேண்டும்? வளை நழுவினால் அதை மறைத்துக் கொஞ்சம் மேலே தூக்கினால் சரியாகாதா?' என்று நீ கேட்கலாம். உண்மைதான். அதை மறைத்துவிடலாம். ஆனால் அந்தக் கண்களை மறைப்பது எப்படி?

"உன்னைப் பிரிந்த வருத்தத்தால் அவளுக்குத் தூக்கம் வர வில்லை. அதனால் கண்கள் ஒளியிழந்துவிட்டன. அயலார்தம் ஏச்சும் பேச்சும் காதில் விழும்போது கண் நீர் சொரிகிறது, குளத்திலே உள்ள மீன் நீரையுண்டு மீண்டும் உமிழ்வது போல.

"அதற்கு என்ன செய்வேன்? அந்தக் கண்களை என்ன செய்வேன்? அவையல்லவா காட்டிக்கொடுத்துவிட்டன! அவள் சொரியும் கண்ணீரை எப்படித் தடுப்பேன்?

"இவளது நிலை கண்டாள் தாய். 'பெண்ணுக்கு ஏதோ பேய் பிடித்துவிட்டது' என்று எண்ணினாள். மாரியம்மனுக்குப் பூசை போட்டாள். பூசாரி வந்தான். உடுக்கடித்தான்; பேய் ஓட்டினான். 'பேய்' போகுமா? பூசாரிக்குப் பயந்து ஓடுகிற 'பேயா' அது? காதல் பேய் அல்லவா! அதற்குப் பூசாரி நீதானே!

"இப்படி ஊர் கூட்டியதாலே என்ன ஆயிற்று? பலர் பலவாறு பேசலாயிற்று.

'பேயுமில்லை, பிசாசுமில்லை; சும்மா இருங்கள், என்று சொல்லக் கூடாதா? மாரியம்மனுக்குப் பூசை போட்டதை நிறுத்தக் கூடாதா? பூசை போட்டதாலும், பூசாரி வந்ததாலும்தானே ஊரார் பேச்சுக்கு இடமாயிற்று?" என்று நீ கூறலாம்.

"பூசையை நிறுத்திவிட்டால் மாத்திரம் ஊராருக்குத் தெரியாமலா போகும்?

"மதிபோல் அழகாயிருந்த அவளது முகம்தான் வாடிவிட்டதே! பசலை பாய்ந்துவிட்டதே! பீர்க்கம் பூப் போலாகிவிட்டதே!

"அதற்கு நான் என்ன செய்வேன்? அதுவல்லவா காட்டிக் கொடுத்து விட்டது!

'இவ்விதமெல்லாம் ஏன் வீணாகத் துன்புறவேண்டும். சில நாள் நான் மறந்து இருக்கவில்லையா? அதுபோல் அவளும் மறந்திருக்கக் கூடாதோ?' என்று நீ கேட்கலாம்.

"அதுவும் கூடும். மறந்திருக்கலாம். ஆனால் ஒன்றே ஒன்று வந்து காரியத்தைக் கெடுக்கிறது. அது என்ன தெரியுமா? கனவு! உன்னுடன் இன்பமாகப் பொழுதுபோக்கியது கனவிலே

யும் வந்து தோன்றுகிறதே. அதைத் தடுத்து நிறுத்த முடிய வில்லையே, என்ன செய்வேன்!

"அவளது வாட்டத்தை நீ அறியமாட்டாய். எப்படி? உன் மலையிலே தினை வளர்ந்திருக்கிறது. மழையின்றி வாடுகிறது. அப்போது, பார்க்கிறாய் நீ. பயிரின் வாட்டத்தை அறிகிறாய்

"பிறகு மழை பொழிகிறது. தினை செழிக்கிறது. அப்போது பார்க்கிறான் வேறு ஒருவன். அவனுக்குத் தெரியுமா அத் தினை யின் வாட்டம்? தெரியாது. தினை, 'செழிப்பாகத்தானே இருக் கிறது' என்று கேட்பான்.

"வாட்டத்தைக் கண்ட உனக்கல்லவோ உண்மை தெரியும்?

"நீ இல்லாத போது உன் காதலி வாடுகிறாள். நீ வந்ததும் மழை கண்ட பயிர்போல் தளிர்த்து எழுகிறாள், மகிழ்ச்சியால்.

"அவள் வாட்டம் உனக்கு எப்படித் தெரியும்? உடன் இருந்து பார்க்கும் எனக்கல்லவோ தெரியும்!"

## 18. அணைப்பும் பிணைப்பும்

அவனும் வருகிறான்; அவளும் போகிறாள். கள்ளத்தனமா கக் காதல் நடந்து கொண்டேயிருக்கிறது.

இது தெரியுமா பெற்றோருக்கு! தெரியாது. எனவே என்ன செய்தனர்? தங்கள் கடமையைச் செய்தனர். அதாவது: மண மகனைத் தேடினர்.

கலியாணப் பேச்சு நடக்கிறது. அப்போதுதான் அவளுக்குத் தகவல் தெரிந்தது.

'இது ஏதடா! வேறு எவனுக்கோ நம்மைக் கலியாணம் செய்துவிடப் போகிறார்கள் போலிருக்கிறதே' என்று எண்ணி னாள்; கலங்கினாள்.

என்ன செய்வது? கலியாணம் வேண்டியதுதான்! காத லித்தவனுக்கல்லவா கலியாணம் செய்து கொடுக்க வேண்டும்!

இவர்களது திருட்டுக் காதல் எப்படிப் பெற்றோருக்குத் தெரியும்? தெரியாது. எனவே, அதைத் தெரிவித்தாக வேண் டும். யார் தெரிவிப்பது?

தோழிதான் தெரிவிக்க வேண்டும். எனவே, தோழியிடம் சொல்கிறாள் :

'கொடியவும் கோட்டவும் நீர் இன்றி நிறம்பெற,
பொடி அழல் புறந்தந்த பூவாப் பூம் பொலன் கோதை,
தொடி செறி யாப்பு அமை அரி முன்கை,
அணைத் தோளாய் !
அடிஉறை அருளாமை ஒத்ததோ, நினக்கு ?' என்ன,
நரந்தம் நாறு இருங் கூந்தல் எஞ்சாது நனி பற்றி,
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை,
நலம் பெறச் சுற்றிய குரல் அமை ஒரு காழ்
விரல் முறை சுற்றி, மோக்கலும், மோந்தனன் ;
நறாஅ அவிழ்ந்தன்ன என் மெல் விரற் போது கொண்டு,
செறாஅச் செங்கண் புதைய வைத்து,
பறாஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன் ;
தொய்யில் இளமுலை இனிய தைவந்து,
தொய்யில் அம் தடக் கையின், வீழ்பிடி அளிக்கும்
மையல் யானையின், மருட்டலும் மருட்டினன்.
அதனால்,

அல்லல் களைந்தனன், தோழி ! நம் நகர்
அருங்கடி நீவாமை கூறின், நன்று என,
நின்னொடு சூழ்வல், தோழி ! 'நயம் புரிந்து,
இன்னது செய்தாள் இவள்' என,
மன்ற உலகத்து மன்னுவது புரைமே.

"அன்று ஒருநாள் - தனியே இருந்தேன். வந்தான் ஒரு கட்டழகன். என்னைக் கட்டி அணைத்தான்.

'அடி பெண்ணே ! உன் மீது காதல் கொண்டு, எத்தனை நாளாக நான் தவிக்கிறேன் ! இன்னும் ஏன் உனக்குத் தயவு பிறக்கவில்லை ?' என்றான்.

"எனக்குப் பயமாக இருந்தது. நெஞ்சு 'பக் பக்' என்று அடித்துக் கொண்டது. தலை சுற்றியது. தொண்டையில் ஏதோ அடைத்தது. நா வறண்டது. மூச்சு முட்டியது. என் உடம்பு சிலிர்த்தது. என்னவோ செய்தது. இன்னதென்று தெரியவில்லை.

"அவன் எனது கூந்தலைத் தடவினன். கூந்தலில் இருந்த மலரை முகர்ந்தான். என் கையைத் தூக்கித் தன் தோளிலே சாத்திக் கொண்டான். அவன் முகத்தை என் முகத்திலே புதைத்தான். கொல்லன் உலைத் துருத்திபோல் மூச்சுவிட்டான். எனது மார்பிலே கை வைத்தான். இனிமையாகத் தடவிக் கொடுத்தான். பிறகு என் மேனி முழுதும் அமுக்கினன். அப்போதுதான் எனது பயம் ஒருவாறு நீங்கிற்று. உடம்பை என்னவோ செய்ததே! அது ஒழிந்தது.

"அவனை நான் கைவிடலாமா தோழி? எனது துன்பத்தைப் போக்கியவனை மறக்கலாமா? கூடாதல்லவா?

"நீ இதை எப்படியாவது என் பெற்றோர்க்குக் கூறிவிடுவாயாக. 'உங்கள் பெண் இப்படிச் செய்து விட்டாள்' என்று சொல்லிவிடு."

## 19. நெறியும் வெறியும்

"சரி சரி. வருந்தாதே! அவனை எப்படியாவது உன்னிடம் வரச் செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு வருகிறாள் தோழி. வந்து தலைவியிடம் சொல்கிறாள். என்ன சொல்கிறாள்? காதலன் அவளுக்காக ஏங்கி நிற்பதை.

கேட்டாள் தலைவி. 'இது ஏதடா! நமது ரகசியம் வெளிப்பட்டு விட்டதே' என்று எண்ணினாள்.

'நீ சொல்லாவிட்டாலும் உன் ரகசியம் வெளியாய்விட்டதே!' என்று தோழி கேலி செய்வதுபோல் இருந்தது அவளுக்கு! நிலைமையைச் சமாளிக்க எண்ணினாள். ஒரு குட்டிக் கரணம் போட்டாள். என்ன அது?

'அவன் என்ன என்னவோ செய்துதான் பார்த்தான். ஆனாலும் நானா லேசில் இணங்கி விடுவேன்? அதெல்லாம் ஒன்றும் பாச்சா பலிக்கவில்லை என்னிடத்திலே!' என்று சொல்கிறாள் தலைவி:

மின் ஒளிர் அவிர் அறல் இடை போழும் பெயலேபோல்,
பொன் அகை தகை வகிர் வகைநெறி வயங்கிட்டு,

போழ் இடை இட்ட கமழ் நறும் பூங்கோதை,
இன் நகை, இலங்கு எயிற்று, தேமொழி, துவர்ச்
செவ்வாய்
நன்னுதால்! நினைக்கு ஒன்று கூறுவாம்; கேள் இனி:

'நில்' என நிறுத்தான்; நிறுத்தே வந்து,
நுதலும், முகனும், தோளும், கண்ணும்,
இயலும், சொல்லும், நோக்குபு நினைஇ,
'ஐ தேய்ந்தன்று, பிறையும் அன்று;
மை தீர்ந்தன்று, மதியும் அன்று;
வேய் அமன்றன்று, மலையும் அன்று;
பூ அமன்றன்று, சுனையும் அன்று;
மெல்ல இயலும், மயிலும் அன்று;
சொல்லத் தளரும், கிளியும் அன்று'
என ஆங்கு,

அனையன பல பாராட்டி, பையென,
வலைவர் போல, சோர் பதன் ஒற்றி,
புலையர் போல, புன்கண் நோக்கி,
தொழலும் தொழுதான்; தொடலும் தொட்டான்;
காழ்வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்
தொழூஉம்; தொடூஉம்; அவன் தன்மை
ஏழைத் தன்மையோ இல்லை, தோழி!

"மேகங்களின் இடையே தோன்றுகிறது மின்னல். அந்த மாதிரி இருக்கிறது உன் தலையிலே அணிந்திருக்கிற தலையலங்காரம். தலையை வகிர்ந்து தாழம்பூ வைத்துப் பின்னிய கூந்தலுடைய தோழியே! நான் ஒன்று சொல்கிறேன், கேள்!

"சிறிது நேரம் முன்பு நீ ஒருவனைப்பற்றிக் கூறினாயே! அவன் என்ன செய்தான் தெரியுமா?

"தனியாக ஒருநாள் நான் வந்துகொண்டிருந்தேன். 'நில்' என்று சொன்னான்; நின்றேன். என் அருகே வந்தான். வந்தவன் என்ன செய்தான்? என் முகத்தைப் பார்த்தான்; நெற்றியைப் பார்த்தான்; தோளைப் பார்த்தான்; கண்ணைப் பார்த்தான். இப்படி ஒவ்வோர் அங்கமாகப் பார்த்தான். பார்த்து என்ன சொன்னான் தெரியுமா?

'அடடா, தேய்ந்துபோயிற்றே!' என்றான். எது தெரியுமா? எனது நெற்றி.

'இது என்ன பிறையா?' என்று கேட்டான். நான் பதில் கூறவில்லை. 'பிறையில்லை; பிறையில்லை. இவளது நெற்றிதான்' என்று தானே கூறிக்கொண்டான்.

'இது என்ன முகமா? அல்லது முழுமதியா?' என்று கேட்டான். அப்போதும் நான் பதில் சொல்லவில்லை.

'சீச்சீ! முழுமதியல்ல. முகம்தான்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

'இது என்ன தோளா? அல்லது இளம் மூங்கிலா?' என்று கேட்டான். நான் பதில் கூறவில்லை.

'மூங்கில் என்றால் மலை இருக்கவேண்டுமே! அதைக் காணோமே! எனவே, தோள்தான்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

'இது என்ன கண்ணோ? அல்லது சுனையிலே மலர்ந்த நீல மலரா?' என்று கேட்டான்.

அப்போதும் நான் பதில் பேசவில்லை.

'சீச்சீ! சுனையுமன்று. நீல மலருமன்று. கண்களேதான்' என்று கூறினான்.

'அடேடே! நடக்கிற நடை பாரடா; மயிலோ!' என்று கூவினான். அப்போதும் நான் பேசவில்லை.

'மயில் அல்ல; மங்கைதான்' என்று கூறிக்கொண்டான்.

'அடாடா! என்ன கொஞ்சுதலான பேச்சு! என்ன கொஞ்சுதலான பேச்சு! ஒருகால் கிளியோ!' என்று கூறினான். அப்போதும் நான் பதில் கூறவில்லை. பேசாதிருந்தேன்.

'சீச்சீ! கிளி அல்ல. பெண்தான்' என்று தனக்குத்தானே கூறிக் கொண்டான்.

"இப்படிப் பலவாறு பேசிக்கொண்டே என்னைச் சுற்றிச்சுற்றி வந்தான்.

"மானைக் கண்ணிவைத்துப் பிடிப்பதற்கு வலையர் வருவார்களே, அந்த மாதிரி!

"அவன் இந்தமாதிரி எனது ஒவ்வோர் அங்கத்தையும் பற்றிப் புகழ்ந்து பேசப்பேச என்னாயிற்று?

''எனக்கும் 'கிளு கிளுப்பு' உண்டாயிற்று. நெஞ்சு நெகிழ்ந்தது. என்னவோபோல் இருந்தது.

"கண்டான் அவன். 'ஆகா! பட்சி வீழ்ந்து விட்டது' என்று

"அறிந்தவன் என்ன செய்தான்?

"கிட்ட வந்தான். தொட்டுப் பார்த்தான். சும்மா இருந்தேன். கட்டி அணைத்தான். ஒரு முறையா? இரு முறையா? அல்ல; பன்முறை! பன்முறை! மதம்கொண்ட யானை வெறி பிடித்து அலைதல்போல, வெறிகொண்டு கட்டி அணைத்தான்.

'இவ்வளவு நேரம் வரையில் நீ ஏன் சும்மா இருந்தாய்? ஓடி வருவதற்கென்ன ?' என்று கேட்கலாம் நீ.

"ஐயோ, பாவம்! அவன் ஒன்றும் அப்படிக் கீழ்த்தரமாக நடந்துகொள்ளக் கூடியவன் அல்ல. அதனால்தான் எனக்கும் வர மனமில்லை.''

## 20. முதுகும் முற்றுகையும்

ஒரு சோலை; பூஞ்சோலை; ஊர் நடுவே உள்ளது. அந்தச் சோலையிலே தனியாக உலவுகிறாள் ஒரு பெண். அங்குள்ள மலர்களைப் பறித்து அழகாகத் தொடுத்துத் தலையிலே அணிந்திருக்கிறாள். முழுமதிபோல அழகுபெற விளங்குகிறாள்.

அவளைப் பார்த்து விட்டான் ஒருவன்.

"ஆகா! என்ன அழகு! என்ன அழகு! இவள் யாரோ? எந்த ஊரோ? என்ன பேரோ? தேவ உலகத்து ரம்பையோ? சிற்ப நூல் வல்லவனாகிய மயன் தனது திறமை முழுவதையும் உபயோகித்துச் செய்த சிற்பமோ? ஆண் மகனைக் கொல்வதற்கென்றே கூற்றுவன் இவ்வுருவங்கொண்டு வந்தானோ?-ஒன்றும் புரியவில்லையே!'' என்று எண்ணி எண்ணி வியந்தான்.

"இவள் யாரோ செல்வர் வீட்டுப் பெண்தான்! வேறு மகவு ஏதும் இல்லாததாலே இவளைச் சீரும் சிறப்புமாக வளர்க்கிறார்கள் போலும்!'' என்று நினைத்தான். நினைத்த உடனே அவளது பெற்றோர்மீது மனம் சென்றது. கோபம் உண்டாயிற்று.

"சீ! என்ன மனிதர்கள் இவர்கள். இவ்வளவு அழகிய பெண்ணை வீட்டுக்குள்ளேயே பூட்டி வையாமல் வெளியே உலாவ விட்டு நம்மைக் கொல்கிருர்களே!" என்று சீறினன்.

"வெளியேதான் வந்துவிட்டாளே! உள்ளே இருக்க முடியாமல்தானே வந்திருக்கிருள்! கிட்டச் சென்று பேச்சுக் கொடுத்துப் பார்ப்போம். விழுந்தால் விழட்டுமே!" என்று நினைத்து அவளுடன் பேசுகிருன் :

ஊர்க்கால் நிவந்த பொதும்பருள், நீர்க் கால்,
கொழு நிழல் ஞாழல் முதிர் இணர் கொண்டு,
கழும முடித்து, கண்கூடு கூழை
சுவல் மிசைத் தாதொடு தாழ, அகல் மதி
தீம் கதிர் விட்டதுபோல, முகன் அமர்ந்து,
ஈங்கே வருவாள் இவள் யார் கொல்? ஆங்கே ஓர்
வல்லவன் தைஇய பாவை கொல்? நல்லார்
உறுப்பு எலாம் கொண்டு, இயற்றியாள் கொல்?
வெறுப்பினல்,
வேண்டு உருவம் கொண்டதோர் கூற்றம் கொல்?
ஆண்டார்,
கடிது, இவளைக் காவார் விடுதல்: கொடி இயல்,
பல்கலை, சில்பூங் கலிங்கத்தள்-ஈங்கு இது ஓர் !
நல் கூர்ந்தார் செல்வ மகள் !
இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்து.

நல்லாய்! கேள் !
ஆய் தூவி அனம் என, அணி மயிற் பெடை என
தூது உண் அம்புறவு என, துதைந்த நின் எழில் நலம்-
மாதர் கொள் மான் நோக்கின் மட நல்லாய் ! -
நிற் கண்டார்ப்
பேதுறூஉம் என்பதை அறிதியோ? அறியாயோ ?

நுணங்கு அமைத் திரள் என, நுண் இழை அணை என,
முழங்கு நீர்ப்புணை என, அமைந்த நின் தட மென்தோள்

வணங்கு இறை, வால் எயிற்று, அம் நல்லாய்! -
நிற் கண்டார்க்கு
அணங்காகும் என்பதை அறிதியோ? அறியாயோ?

முதிர் கோங்கின் முகை என, முகம் செய்த
குரும்பை என,
பெயல்துளி முகிழ் என, பெருத்த நின் இளமுலை -
மயிர் வார்ந்த வரி முன்கை மட நல்லாய்! - நிற்கண்டார்
உயிர் வாங்கும் என்பதை உணர்தியோ? உணராயோ?
என ஆங்கு,

பேதுற்றாய் போலப் பிறர் எவ்வம் நீ அறியாய்,
யாது ஒன்றும் வாய் வாளாது இறந்தீவாய்! கேள்,இனி:
நீயும் தவறு இலை; நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமரும் தவறு இலர்;
நிறை அழி கொல் யானை நீர்க்கு விட்டாங்கு,
'பறை அறைந்தல்லது செல்லற்க!' என்று
இறையே தவறு உடையான்.

"மான் விழி! மருண்ட பார்வை! அன்ன நடை! மயில் போன்ற சாயல்! புறாப் போன்ற வண்ணம்! ஆகா! என்ன அழகு! என்ன அழகு!

"சிங்காரியே! உன்னைக் கண்டது முதல் உள்ளம் துடிக்கிறதே! உச்சிக்கு ஏறி நிற்கிறதே மையல். பார்! இதோ பார்! இப்படிப் பார்! இது உனக்குத் தெரியுமா, தெரியாதா?"

சிங்காரி பதில் பேசவில்லை; மீண்டும் அவன் சொல்கிறான்:

"ஆகா! உன் கையினுடைய அழகுதான் என்ன? பல் வரிசையின் அழகுதான் என்ன? மெல்லிய தோளின் அழகு தான் என்ன?

"அந்தத் தோளின் அழகை என்ன என்று சொல்வேன்? மெல்லிய இள மூங்கிலோ...! நீர்ச் சுனையிலே நீந்தி விளையாடும் போது அணைத்துக் கொள்ளும் தெப்பமோ...!

"அந்தத் தோள்...! ஆகா! அது என்னை வாட்டுகிறதே! இது உனக்குத் தெரியுமா, தெரியாதா?"

இப்போதாவது அவள் பேசுவாள் என்று எண்ணினான். அப்போதும் பேசவில்லை அவள். மீண்டும் சொல்கிறான் அவன்.

"உன்னுடைய அந்த மார்புதான் என்ன! இளங் குரும்பையோ! மலர் அரும்போ! நீர்க் குமிழியோ! என் உயிரை வாங்குகிறதே! இது உனக்குத் தெரியுமா, தெரியாதா?"

பேசாமடந்தையானாள் அவள். மும்முறையும் முற்றுகை போட்டுத் தோல்வியடைந்தான் அவன். தோல்வியுற்ற உள்ளத் திலிருந்து என்ன பிறக்கும்? தோல்விக்கு ஆறுதல்தான் பிறக் கும். எனவே, ஆறுதலாக ஒன்று சொல்லிக் கொள்கிறான்:

"உம். நானுந்தான் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தேன். என் உள்ளத்தைத் திறந்து காட்டினேன். மையலால் பிறந்த மொழிகளை அள்ளி வீசினேன். உனக்கு மனம் இரங்கவில்லை போலிருக்கிறது.

"ஆனால் அப்படியும் சொல்லிவிட முடியாது. உனக்கு மாத் திரம் என் மீது கொஞ்சம்கூடவா அன்பு தோன்றாமலிருக்கும்? எல்லாம் தோன்றியிருக்கும். இருந்தாலும், ஒரு வார்த்தைகூட பேசாமல் போகிறாய். போ.

"உன் மீது தவறு இல்லை. உன்னை வீட்டுக்குள்ளே வைத்துப் பூட்டி வைக்காமல் இருக்கிறார்களே, உனது பெற்றோர், அவர் மீதுதான் தவறு!

"அப்படியும் சொல்லிவிட முடியாது. இந்த ஊர் அரசன் இருக்கிறானே, அவன் மீதுதான் தவறு!

"கட்டுக்கு அடங்காத மதயானை ஒன்று. ஆற்றிலே குளிப் பாட்டக் கொண்டு போகிறார்கள். அப்போது என்ன நடக்கிறது? 'பொல்லாத யானை வருகிறது. எட்டிப் போ! ஓடிப் போ' என்று சொல்லி பறை அறிவிக்கவில்லையா? அந்த மாதிரி,

'அழகி வருகிறாள், அப்பால் போ! கட்டழகி வருகிறாள், கண்ணை மூடிக் கொள்! காளையே! காதல் கொள்ளாதே!' என்று கூறி, இந்த நாட்டு அரசன் பறை அறிவிக்கவேண்டும்.

"அவ்விதம் செய்யாத அரசன் மீதுதான் குற்றம் சொல்லு வேன் நான்."

## 21. இரத்தலும் இழத்தலும்

பந்து விளையாடிக்கொண்டு இருந்தாள் பாவை. மான் விழி. மயில் போன்ற சாயல். மணம் வீசும் கூந்தல். இள மூங்கில் போன்ற தோள். காலில் சிலம்பு ஒலிக்க, கையில் வளை மின்ன குதித்துக் குதித்து ஆடினாள். கண்டான் ஒரு காளை; கொண்டான் அவள் மேல் மையல்.

"யார் இவள்? பூங்கொடியோ? மின்னலோ? அணங்கோ? ஒன்றும் தெரியவில்லையே!" என்று எண்ணிய வண்ணம் அருகில் சென்றான். பேசத் தொடங்கினான்.

அவளோ! அவன் பேசிய எல்லாவற்றையும் கேட்டாள். தலைகுனிந்து கேட்டுக்கொண்டே இருந்தாள். பிறகு ஓடிவிட்டாள்.

பெருமூச்சு விட்டுக் கொண்டே திரும்பினான் அவன். வீடு சேர்ந்தான். வாட்டமாகப் படுத்திருந்தான்.

அப்போது வந்தான் அவனுடைய தோழன். அவனிடத்திலே சொல்கிறான் :

**வே**ய் எனத் திரண்ட தோள், வெறி கமழ் வணர்
ஐம்பால்,
மா வென்ற மட நோக்கின், மயில், இயல், தளர்பு ஒல்கி-
ஆய் சிலம்பு அரி ஆர்ப்ப, அவிர் ஒளி இழை இமைப்ப,
கொடி என, மின் என, அணங்கு என, யாது ஒன்றும்
தெரிகல்லா இடையின்கண் கண் கவர்பு ஒருங்கு ஓட,
வளமை சால் உயர் சிறப்பின் நுந்தை தொல் வியல்நகர்
இளமையான் எறிபந்தோடு -இகத்தந்தாய்! கேள்,இனி:

**பூ**ந்தண் தார், புலர் சாந்தின், தென்னவன் உயர் கூடல்,
தேம்பாய அவிழ் நீலத்து அலர் வென்ற அமர் உண்கண்,
ஏந்து கோட்டு எழில் யானை ஒன்னாதார்க்கு
அவன் வேலின்,
சேந்து நீ இனையையால்; ஒத்ததோ? - சின்மொழி!

**பொ**ழிபெயல் வண்மையான் அசோகம் தண் காவினுள்,
கழிகவின் இளமாவின் தளிர் அன்னாய்! அதன் தலை,

பணை அமை பாய் மான்தேர் அவன் செற்றார்
  நிறம் பாய்ந்த
கணையினும், நோய் செய்தல் கடப்பு அன்றோ?
  கனங்குழாய்!

வகை அமை தண் தாரான் கோடு உயர்
  பொருப்பின் மேல்,
தகை இணர் இளவேங்கை மலர் அன்ன சுணங்கினாய்!
மதவலிமிகு கடாஅத்து அவன் யானை மருப்பினும்
கதவவால் - தக்கதோ? - காழ் கொண்ட இள முலை.
என ஆங்கு,

இனையன கூற, இறைஞ்சுபு நிலம் நோக்கி,
நினையுபு நெடிது ஒன்று நினைப்பாள் போல்,
  மற்று ஆங்கே
துணை அமை தோழியர்க்கு அமர்த்த கண்ணள்,
மனை ஆங்குப் பெயர்ந்தாள், என் அறிவு அகப்படுத்தே.

"முத்துத் தெறித்ததுபோல் சில வார்த்தைகளே பேசும் மோக னாங்கி! பாண்டிய நாட்டுப் பாவாய்! பாண்டியன் தன் பகைவர் மீது ஏவிய அம்பு போல் இருக்கிறதே உன் கண்! செங்குருதி தோய்ந்த அந்த அம்பு எதிரியைத் துளைப்பது போல என்னைத் துளைக்கிறதே உன் கண்! வாட்டுகிறதே! வருத்துகிறதே! கொல்லுகிறதே! இது உனக்குத் தகுமா? தருமமா? இவ்வாறு ஏன் அந்த அம்புகளை என்மீது ஏவுகிறாய்?

"'பாண்டியனின் படையிலே மதம் மிக்க யானைகள் இருக்கின் றனவே! அவை தன் கோடுகளால் எதிரிகளைக் குத்தி இன்னல் விளைக்கின்றன! அந்த மாதிரி என்னைக் குத்துகிறதே, எடுப்பான உன் மார்பு!

"'ஏன் இப்படி என்னை வதைக்கிறாய்?'

"இவ்வாறு நான் அவளைக் கெஞ்சினேன்; கொஞ்சினேன்.

"ஆனால் அவள் ஒன்றும் பேசவில்லை. தன்னுடைய கால் கட்டை விரலால் மண்ணைக் கீறிக்கொண்டே நின்றாள். நான் கூறியவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள்.

"பிறகு தோழியை நினைத்து ஓடிவிட்டாள். போகிற போக்கில் பந்து போல் என் உள்ளத்தையும் தட்டிப் பறித்துக் கொண்டு போய்விட்டாள்.

"இவளை எப்படியாவது நான் அடைய வேண்டுமே! என்ன செய்வேன், தோழனே!"

என்று கூறினான்; வருந்தினான்.

## 22. மடலும் மங்கையும்

மிக அழகான பெண். வனப்புடன் விளங்குகிறாள். எடுப்பான தோற்றம். அந்த எடுப்புக்கு எழில் தரும் அழகான உடை! அன்ன நடை நடந்து செல்கிறாள்.

கண்டான் ஒருவன்; காதல் கொண்டான். அவளைப் பின் தொடர்ந்து செல்கிறான்; சீட்டியடிக்கிறான்; முன்னும் பின்னுமாக நடந்து அவளை இடைமறிக்கிறான். எதற்கும் மசியவில்லை அவள்.

அவனது அம்புறாக் கூட்டில் இருந்த அஸ்திரங்கள் எல்லாம் தீர்ந்துபோயின. வேறு வழியில்லை. வாய் திறந்து பேசத் தொடங்கினான்.

அதற்கும் அவள் பதில் பேசவில்லை. போய்க் கொண்டேயிருந்தாள்.

அவளது அழகான அங்கங்களைப் புகழ்ந்தான். அது படுத்தும் பாட்டைச் சொன்னான். தனது உள்ள அவதியைக் கூறினான். எதற்கும் பதில் கூறவில்லை அவள்.

கோபம் வந்தது அவனுக்கு. முடிவாக ஒன்று சொன்னான். எச்சரிக்கை செய்தான். 'உன் வீட்டுக்கு வந்து சத்தியாக்கிரகம் செய்வேன்' என்றான்.

அதாவது 'மடலேறுவேன்' என்றான்.

மடல் ஏறுவது என்றால் என்ன?

ஒரு காளை. காதல் கொள்கிறான் ஒரு பெண்மீது. ஆனால் அவளோ பிடி கொடுக்கவில்லை. மன்றாடுகிறான்; கெஞ்சுகிறான். பயனில்லை. பிறகு பனங் கருக்கினால் ஒரு குதிரை செய்வான்.

தன் காதலியின் படத்தை எழுதுவான். கையிலே பிடித்துக் கொள்வான். அந்தப் பனங் குதிரைமீது ஏறிக்கொள்வான். சிறு பிள்ளைகளை அழைப்பான். குதிரையை இழுக்கச் சொல்வான். அவர்களும் ஆனந்தமாக அந்தக் குதிரையை இழுத்துக்கொண்டு போவார்கள்.

அவன் விரும்பிய காதலி எங்கிருக்கிறாளோ அந்த ஊரிலே, எல்லாரும் காணக்கூடிய பொது இடத்திலே கொண்டுபோய் நிறுத்துவார்கள்.

அவனும் அவள் படத்தைப் பார்த்துக்கொண்டே உண்ணு விரதம் இருப்பான்; உயிர் விடுவான்.

இதற்குப் பெயர்தான் மடல் ஏறல்.

அவன் சொன்னதை முழுவதும் கேட்கலாமே:

வார் உறுவணர் ஐம்பால், வணங்கு இறை நெடு
மென் தோள்,
பேர் எழில் மலர் உண்கண், பிணை எழில் மான்
நோக்கின்,
கார் எதிர் தளிர் மேனி, கவின் பெறு சுடர் நுதல்,
கூர் எயிற்று முகை வெண் பல், கொடி புரையும்
நுசுப்பினுய் !
நேர் சிலம்பு அரி ஆர்ப்ப, நிரை தொடிக் கை வீசினை,
ஆர் உயிர் வௌவிக் கொண்டு அறிந்தீயாது
இறப்பாய் ! கேள் :

உளனு, என் உயிரை உண்டு, உயவு நோய் கைம்மிக,
இளமையான் உணராதாய்! நின் தவறு இல்லானும்,
களைநர் இல் நோய் செய்யும் கவின் அறிந்து,
அணிந்து, தம்
வளமையான் போத்தந்த நுமர் தவறு இல் என்பாய்.

நடை மெலிந்து, அயர்வு உறீஇ, நாளும்
என் நலியும் நோய்
மடமையான் உணராதாய்! நின் தவறு இல்லானும்,

இடை நில்லாது எய்க்கும் நின் உரு அறிந்து,
அணிந்து, தம்
உடைமையால் போத்தந்த நுமர் தவறு இல் என்பாய்.

அல்லல் கூர்ந்து அழிவுற, அணங்காகி அடரும் நோய்
சொல்லினும் அறியாதாய்! நின் தவறு இல்லானும்,
ஒல்லையே உயிர் வெளவும் உரு அறிந்து, அணிந்து, தம்
செல்வத்தால் போத்தந்த நுமர் தவறு இல் என்பாய்.
என ஆங்கு –

ஒறுப்பின், யான் ஒறுப்பது நுமரை ; யான், மற்று
இந் நோய்
பொறுக்கலாம் வரைதது அன்றிப் பெரிதாயின்,
பொலங் குழாய்!
மறுத்து இவ்வூர் மன்றத்து மடல் ஏறி,
நிறுக்குவென் போல்வல் யான், நீ படு பழியே.

"அடி ! மான் உருட்டும் கண் அழகி ! மென் தோள் மெய் அழகி ! முல்லை வெண் முறுவல் அழகி ! கொடி இடை அழகி !என் உயிர் கொண்டு செல்பவளே !" என்றான்.

இந்த வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாதவள் போல் அவள் போய்க் கொண்டேயிருந்தாள். பின்னும் தொடர்ந்தான் :

"அடி ! உன்னைக் கண்டது முதல் உளம் பறிகொடுத்து நிற்கிறேன். கொஞ்சம் உயிரை மாத்திரம் என்னிடம் விட்டு எஞ்சிய உயிரையெல்லாம் நீ எடுத்துச் செல்கிறாய். நானோ தவிக்கிறேன். தத்தளிக்கிறேன். காம நோயால் வாடுகிறேன். அதை அறியாமல் போகிறாயே..." என்று கெஞ்சினான். அப்போதும் அவள் பேசாது சென்று கொண்டிருந்தாள்.

'நான் என்ன செய்வேன். உனது வருத்தத்தை அறிந்து கொள்ளும் வயதா எனக்கு?' என்று நீ கேட்கக் கூடும்.

"உண்மை ! உண்மை ! உனக்கு வயது கொஞ்சம்தான். இருந்தாலும் உன் மெய்யும், முகமும் பூரித்து நிற்கின்றனவே! என் உயிரை வாங்குகின்றனவே.

'அது என் குற்றமா ?' என்று நீ கேட்கக்கூடும். இல்லை இல்லை. உன் குற்றமில்லை. எடுப்பான உன் மேனிக்குப் பகட்டான உடை அணிவித்து வெளியே அனுப்புகிறார்களே உன் பெற்றோர், 'அவர்களுடைய குற்றம் !' என்று சொல் !" என்றான்.

அப்பொழுதும் அவள் பேசாது சென்றாள். மேலும் பின் தொடர்ந்து சொல்கிறான் :

"என் நெஞ்சைக் கொள்ளை கொண்டாய் ! பொல்லாத துன்பம் தந்து விட்டாய் ! போகின்றாய் ! நானோ, மதியிழந்தேன் ! மன வலியிழந்தேன் ! மானமிழந்தேன் ! நடை மெலிந்தேன் ! உடல் மெலிந்தேன் ! அயர்ந்தேன் ! உழல்கின்றேன் ! நீயோ... போகின்றாய்... போகின்றாய் ! அறியாது போகின்றாய்..."

'அது என் குற்றமா ?' என்று கேட்பாய். உன் குற்றமில்லை; உன் குற்றமில்லை. காதலை அறியும் வயது உனக்காகவில்லை. காதலால் வாடும் பருவமும் நீ பெறவில்லை. பின் யார் குற்றம் ?

"உன் இளவயது அறிந்திருந்தும், எடுப்பான உன் அங்கங்களுக்குப் பகட்டாக அணி புனைந்து அனுப்புகின்றனரே உன் பெற்றோர்...'அவர், குற்றம்' என்று கூறு."

—இதற்கும் அவள் பதில் பேசவில்லை. மேலும் அவளை விடாது தொடர்ந்தான். கோபம் வந்து விட்டது. ஆண்பிள்ளையல்லவா !

"எவ்வளவு தூரம் சொல்கிறேன் ! வெட்கத்தை விட்டு வாய் திறந்து புலம்புகிறேன் ! கெஞ்சிக் கேட்கிறேன். இதெல்லாம் குறிப்பால் உணர்ந்து நடக்க வேண்டிய விஷயம். ஓயாமல் புலம்பியும் கூட நீ உணராதிருக்கிறாய். மனம் இரங்காதிருக்கிறாய். இணங்க மறுக்கிறாய். முடிவாக ஒன்று சொல்கிறேன்.

"என்னால் முடிந்தவரை பொறுப்பேன். தாங்க முடியாவிட்டால் என்ன செய்வேன் தெரியுமா ? மடல் ஏறுவேன் ; உயிரை விடுவேன். அந்தப் பழி உன் மேல்தான் விழும்."

இவ்விதம் கூறினான். அவளை விட்டு அகன்றான்.

## 23. நோயும் நோன்பும்

**தை** மாதம். விடியற் காலத்திலே எழுந்து நீராடி, ஆண்டவனை வழிபட்டு நோன்பு இருக்கிறார்கள் சிறு பெண்கள். துறவுக் கோலம் பூண்டு தவநெறி பற்றியிருக்கிறார்கள். தலை சீவி முடிப்பதில்லை. மலர்கள் சூடுவதில்லை. உடம்பிலே அணிகள் புனைவதில்லை. கையில் வளை இல்லை. இப்படியாக சந்நியாசிப் பெண்களைப் போல காட்சியளிக்கிறார்கள். வீடு வீடாகச் சென்று பிச்சை எடுத்து உண்கிறார்கள்.

இந்த மாதிரி நோன்பு எதற்காக? நல்ல கணவரைப் பெறுதல் வேண்டும் என்பதற்காக.

சிவ பூசை நேரத்தில் கரடி புகுந்தது போல வருகிறான் ஓர் இளைஞன். துறவுக் கோலத்திலே இயற்கை எழிலுடன் நிற்கும் மங்கை ஒருத்தியைக் காண்கிறான்; காதல் கொள்கிறான். சொல்கிறான் :

**த**ளை நெகிழ் பிணி நிவந்த பாசடைத் தாமரை
முளை நிமிர்ந்தவை போலும் முத்துக்கோல் அவிர்
 தொடி,
அடுக்கம் நாறு அலர் காந்தள் நுண் ஏர் தண் ஏர்
 உருவின்
துடுப்பு எனப் புரையும் நின் திரண்ட, நேர், அரி,
 முன்கை,
சுடர் விரி வினை வாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட, அரிபெய்த அழகு அமை புனை வினை
ஆய் சிலம்பு எழுந்து ஆர்ப்ப, அம் சில இயலும் நின்
பின்னு விட்டு இருளிய ஐம்பால் கண்டு, என் பால
என்னை விட்டு இகத்தர, இறந்தீவாய்! கேள், இனி:

**ம**ருளி, யான் மருள் உற 'இவன் உற்றது எவன்?'
 என்னும்
'அருள் இலை இவட்கு' என அயலார் நிற்
 பழிக்குங்கால்,

வை எயிற்றவர் நாப்பண், வகை அணி பொலிந்து, நீ
தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ?

உருளிழாய்! 'ஒளிவாட இவன் உள் நோய் யாது?
என்னும்
'அருள் இலை இவட்கு' என அயலார் நிற் பழிக்குங்கால்,
பொய்தல மகளையாய் பிறர், மனை பாடி நீ
எய்திய பலர்க்கு ஈத்த பயம் பயக்கிற்பதோ?

ஆய்தொடி! 'ஐது உயிர்த்து, இவன் உள் நோய்
யாது?' என்னும்'
'நோய் இலை இவட்கு' என நொது மலர் பழிக்குங்கால்
சிறு முத்தனைப் பேணி, சிறு சோறு மடுத்து நீ
நறு நுதலவரொடு நக்கது நன்கு இயைவதோ?
என ஆங்கு,

அனையவை - உளையவும், யான் நினக்கு உரைத்ததை
இனைய நீ செய்தது உதவா யாயின், சேயிழாய்!
செய்ததன் பயம் பற்று விடாது;
நயம் பற்று விடின் - இல்லை - நசை இயோர் திறத்தே.

"என் உள்ளங் கவர்ந்து செல்பவளே! உன்பால் நான் காதல் கொண்டேன். அதனால் துன்புற்றேன். துன்பத்தால் அறிவு மயங்கினேன். சில சொற்கள் கூறுகிறேன், கேள்:

"நான் துன்புற்று வாடுகிறேன்; 'நீயேன் இவ்வாறு வருந்துகிறாய்' என்று கேட்க வில்லை நீ; இரக்க மில்லை உனக்கு. நோன்பிருக்கிறாய். நோன்பு இருப்பவர் பிறரைத் துன்புறுத்தல் கூடாது. பிறர்பால் இரக்கம் காட்டவேண்டும். அப்போதுதான் நோன்பின் பலனை அடைவார்கள். நீயோ அவ்விதம் இரங்கி ஏதும் கேட்கவில்லை. உனக்கு நோன்பின் பலன் கிடைக்குமா? பிச்சையெடுத்துப் பிறர்க்குக் கொடுக்கிறாய். எதனால்? நீ வேண்டிய பலன் கிடைக்க வேண்டும் என்பதனால்.

"நானோ! நின்பால் யாசிக்கிறேன். நீயோ யாசகனுக்கு அளிக்கும் இரக்கமற்றிருக்கிறாய். நோன்பிருக்கிறாய். அதன் பலன் கிட்டுமா? கிட்டாது. எனவே, எனது விருப்பத்தை நிறைவேற்று. நீ கோரிய பலன் கிடைக்கும்."

## 24. உருக்கலும் மழுப்பலும்

'காதல் கொண்டேன்' என்றான் அவன். 'நல்ல காரியம்' என்றாள் தோழி. 'களித்தின்புறல் முடியவில்லையே' என்றான்; கண்ணீர் விட்டான்; கலங்கினான். கண்டாள் தோழி. 'கவலைப் படாதே! எப்படியும் அவளை உன்னிடம் சேர்ப்பிக்கிறேன்' என்றாள் தோழி. தலைவியிடம் சென்றாள். மெதுவாகப் பேச்சைத் தொடங்கினாள்.

சுணங்கு அணிி வன முலை, சுடர் கொண்ட நறு நுதல்,
மணம் கமழ் நறுங் கோதை மாரி வீழ் இருங் கூந்தல்,
நுணங்கு எழில், ஒண் தித்தி, நுழை நொசி மட
மருங்குல்,
வணங்கு இறை வாி முன்கை, வரி ஆர்ந்த அல்குலாய்!

'கண் ஆர்ந்த நலத்தாரை, கதுமென, கண்டவர்க்கு
உள் நின்ற நோய் மிக, உயிர் எஞ்சு துயர் செய்தல்
பெண் அன்று, புனையிழாய்!' எனக் கூறி -
தொழூஉம்; தொழுதே,
கண்ணும் நீராக நடுங்கினன், இன் நகாய்
என் செய்தான் கொல்லோ-இஃது ஒத்தன் தன்கண்
பொரு களிறு அன்ன தகை சாம்பி, உள்உள்
உருகுவான் போலும், உடைந்து?

தெருவின் கண் காரணம் இன்றிக் கலங்குவார்க்
கண்டு, நீ
வாரணவாசிப் பதம் பெயர்த்தல், ஏதில
நீ நின்மேல் கொள்வது; எவன்?

'அலர் முலை ஆய் இழை நல்லாய்! கதுமென,
பேர் அமர் உண்கண் நின் தோழி உறீஇய
ஆர் அஞர் எவ்வம் உயிர் வாங்கும்;
மற்று இந் நோய் தீரும் மருந்து அருளாய்
ஒண் தொடீ!

நின் முகம் காணும் மருந்தினேன்' என்னுமால்;
நின் முகம் தான் பெறின் அல்லது, தொன்னோ
மருந்து பிறிது யாதும் இல்லேல், திருந்திழாய்!
என் செய்வாம் கொல், இனி நாம்?
பொன் செய்வாம்.
"ஆறு விலங்கித் தெருவின் கண் நின்று ஒருவன்
கூறும் சொல் வாய் எனக் கொண்டு, அதன் பண்பு
உணராம்,
'தேறல், எளிது' என்பாம் நாம்.
'ஒருவன் சாம் ஆறு எளிது' என்பாம், மற்று.
சிறிது ஆங்கே-'மாணு ஊர் அம்பல் அலரின் அலர்க' என,
நாணும் நிறையும் நயப்பு இல் பிறப்பு இலி.
பூண் ஆகம் நோக்கி இமையான், நயந்து, நம்
கேண்மை விருப்புற்றவனை, எதிர் நின்று
நாண் அடப் பெயர்த்த நய வரவு இன்றே.

"நான் வரும் வழியிலே ஒருவன் நின்று கொண்டிருந்தான். யானைபோல் இருந்தான். இருந்தாலும், எதையோ நினைந்து உருகுவான் போலிருந்தான். என்னைக் கண்டான். கண்டதும் விரைந்து வந்து தொழுதான். கண்ணீர் விட்டான்.

'என்ன?' என்று கேட்டேன்.

'இதுதான் பெண்களுக்கு அழகா?' என்று கேட்டான்.

'எது?' என்றேன்.

'கலங்கச் செய்வது? உள்ளத்தைக் கொள்ளை கொண்டு பின் மறைந்து வாழ்வது?' என்றான்.

"எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. உன்னைக் கேட்டால் தெரியும் என்று நினைத்து வந்தேன். உனக்கு ஏதாவது தெரியுமா? அவன் ஏன் கலங்குகிறான்?" என்று கேட்டாள் தோழி.

"தெருவிலே எவனாவது காரணம் இல்லாமல் கலங்கிக் கொண்டு நிற்பான். நீ ஏன் அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்கிறாய். காசியில் உள்ளவர் அல்லவோ போவார் வருவார் துன்பத்தையெல்லாம் தன்மேல் தூக்கிப் போட்டுக்கொண்டு அலைவர்?" என்று பதில் கூறினாள் தலைவி.

"அது சரிதான். தெருவில் நிற்பவன் என்னிடம் கூறுவானேன்? தெருவிலே எவ்வளவோ பேர் போகின்றனர். அவரிடம் கூறலாமே. ஏன் கூறவில்லை? என்னைக் கண்டு என்னிடம் கூறியதேன்? உன் மீது காதல் கொண்டிருப்பதாகக் கூறினான். அந்த நோய்க்கு உன் முகம் தவிர, வேறு மருந்தில்லை என்றும் கூறிவிட்டான். ஆகவே, நீ ஏன் வீணாக என்னிடம் மறைக்கிறாய். மறையாதே! அவன் கேட்கும் மருந்தைக் கொடுப்பதுதான் சரி" என்றாள் தோழி.

"ஆமாம்! தெருவிலே எவனோ ஒருவன் நின்றுகொண்டு ஏதாவது உளறுவான். அதை மெய்யென நம்பி நாம் உடனே இணங்கவேண்டும். இதுதானே, நீ சொல்வது?" என்றாள் தலைவி.

"இணங்காவிட்டால் அவன் இறந்துவிடுவானே!" என்றாள் தோழி.

"அப்படி ஒன்றும் பயப்படாதே! அவன் இறந்துவிடமாட்டான். அத்தகைய உயர்ந்த பண்பு அவனிடமில்லை. அவன் உயர்ந்த பண்புள்ளவன் ஆயின், வெட்கமில்லாமல் தெருவில் நின்று கண்ணீர் விடுவானா? கண்டவரிடம் எல்லாம் தன் காதலைச் சொல்வானா? மாட்டான். சிந்தையை அடக்கும் திறன் அவனுக்கில்லை. 'செத்துப் போவேன்' என்கிறானே! கோழை!" என்று இகழ்ந்து கூறினாள் தலைவி.

## 25. அடலும் விடலும்

தலைவி ஒருத்தி மீது காதல் கொண்டான் அவன். அதை அவளது தோழிக்குக் கூற விரும்பினான். அவளது துணையை நாடினான். அவளைக் கண்டான்.

அவளிடத்தில் தனது காதலைக் கூற விரும்பினான். ஆனால் நா எழவில்லை. அவளை நோக்குவான். பிறகு தலையைக் குனிந்து கொள்வான். இப்படிப் பல முறை கண்டாள் தோழி. விஷயம் உணர்ந்தாள். பேசாது சென்றாள். அவனும் நாய்க்குட்டிபோல் அவள் பின்னே சென்றான்.

தலைவி இருக்குமிடம் வந்தாயிற்று.

"ஏன் என்னைப் பின்தொடர்ந்து வருகிறாய்? வாயைத் திறந்து சொல்லேன். உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டாள் தோழி.

"கொடுக்கக் கூடிய பொருள் உன்னிடமில்லை. அதோ, அவளிடம் இருக்கிறது. அவள் கொடுப்பாளா என்று சொல். பிறகு நான் எனக்கு வேண்டியதைக் கேட்கிறேன்" என்றான்.

"கொடுப்பாள். இவள் தந்தை பெரும் செல்வர். வரையாது வழங்குபவர். அக் குணம் இவளிடமும் உண்டு" என்றாள் தோழி.

கல கலவென்று சிரித்தான் அவன்.

"பொருள் ஏதும் எனக்கு வேண்டியதில்லை! அவளது அருள் தான் வேண்டும்" என்றான்.

உடனே அவள் சொன்னாள்:

"பெரிய சூரனைப்போல் இருக்கிறாய். 'உன் அருள் வேண்டும்' என்று ஒரு பெண்ணிடம் பல்லைக் காட்டுகிறாயே" என்று கேலி செய்தாள்.

கோபம் வந்து விட்டது அவனுக்கு.

"அப்படியா! பார்! நீ என்னைப் பார்த்துச் சிரிக்கிறாயா? உன்னைப் பார்த்து ஊரார் சிரிக்கச் செய்கிறேன் பார்" என்று கூறிவிட்டு விரைந்து சென்றான்.

'இவன் மடல் ஏறி வந்தாலும் வருவான்' என்று கூறினாள் தோழி தலைவியிடம் :

எல்லா! இஃது ஒத்தன் என் பெறான்? கேட்டைக்
    காண்பு :
செல்வம் கடை கொள, சாஅய், சான்றவர்
அல்லல் களை தக்க கேளிருழைச் சென்று,
சொல்லுதல் உற்று, உரைக்கல்லாதவர் போல -
பல் ஊழ் பெயர்ந்து என்னை நோக்கும்; மற்று யான்
    நோக்கின்,
மெல்ல இறைஞ்சும் தலை.

எல்லா! நீ முன்னத்தான் ஒன்று குறித்தாய் போல்
    காட்டினை ;

நின்னின் விடாஅ நிழல் போல் திரிதருவாய்!
என், நீ பெறாதது? ஈது என்?

சொல்லின் மறாதீவாள் மன்னோ,! இவள்?
செறாஅது ஈதல் இரந்தார்க்கு ஒன்று, ஆற்றாது
வாழ்தலின்,
சாதலும் கூடுமாம் மற்று.

இவள் தந்தை காதலின் யார்க்கும் கொடுக்கும்
விழுப் பொருள்;
யாது நீ வேண்டியது?

பேதாய்! பொருள் வேண்டும் புன் கண்மை
ஈண்டு இல்லை; யாழ
மருளி மட நோக்கின் நின் தோழி என்னை
அருளியல் வேண்டுவல், யான்.

'அன்னையோ' - 'மண்டு அமர் அட்ட களிறு அன்னான்
தன்னை ஒரு
பெண்டிர் அருளக் கிடந்தது எவன் கொலோ?'

ஒண் தொடீ! நாண் இலன் மன்ற இவன் -
ஆயின், ஏஎ!
'பல்லார் நக்கு எள்ளப் படுமடல் மா ஏறி,
மல்லல் ஊர் ஆங்கண் படுமே, நறுநுதல்
நல்காள் கண்மாறி விடின்', எனச் செல்வானும் -
எள்ளி நகினும் வரூஉம்; இடை இடைக்
கள்வர் போல் நோக்கினும் நோக்கும்; குறித்தது
கொள்ளாது போகாக் குணன் உடையன், எந்தை தன்
உள்ளம் குறைபடாவாறு.

## 26. இணக்கும் பிணக்கும்

இளைஞன் ஒருவன். ஒருத்தியைக் கண்டான். காதல் கொண்டான். கொண்டதும் பல்லைக் காட்டினானா? பாடிக்

கொண்டிருந்தானா? இல்லை; இல்லை. என்ன செய்தான்? விரைந்து சென்றான்.

ஒரே கட்டாகக் கட்டிக் கொண்டான் அவளை. கட்டி அணைத் தான். பிறகு நடந்ததைக் கேளுங்கள்:

ஏஎ! இஃது ஒத்தன், நாண் இலன் - தன்னொடு
மேவேம் என்பாரையும் மேவினன் கைப் பற்றும்.

'மேவினும், மேவாக் கடையும், அஃது எல்லாம்
நீ அறிதி; யான் அஃது அறிகல்லேன்; பூ அமன்ற
மெல் இணர் செல்லாக் கொடி அன்னாய்! நின்னை யான்
புல் இனிது ஆகலின், புல்லினென்' - 'எல்லா
தமக்கு இனிது என்று வலிதின் பிறர்க்கு இன்னா
செய்வது நன்று ஆமோ மற்று?'

சுடர்த் தொடீ! போற்றாய் களை, நின் முதுக் குறைமை;
போற்றிக் கேள்!
வேட்டார்க்கு இனிது ஆயின் அல்லது நீர்க்கு
இனிது என்று
உண்பவோ, நீர் உண்பவர்?
செய்வது அறிகல்லேன்; யாது செய்வேன் கொலோ -
ஐ வாய் அரவின் இடைப்பட்டு நை வாரா?
'மை இல் மதியின் விளங்கும் முகத்தாரை
வெளவிக் கொளலும் அறன்' எனக் கண்டன்று.

'அறனும் அது கண்டற்றாயின் திறன் இன்றி,
கூறும் சொல் கேளான், நலிதரும்; பண்டு நாம்
வேறு அல்லம் என்பது ஒன்று உண்டால்; அவனொடு
மாறு உண்டோ நெஞ்சே! நமக்கு?

"என்ன இது! தூ! இப்படியா கட்டி அணைப்பது? எனக் குச் சம்மதமிருக்க வேண்டாமா?" என்றாள் அவள்.

"உனக்குச் சம்மதமோ இல்லையோ எனக்குத் தெரியாது. அது உன் உள்ளம் அறியும். கொடி போன்ற பெண்ணே! உன்னைக் கட்டி அணைத்தால் இன்பமாயிருக்கும் என்று தோன்றிற்று. கட்டி அணைத்துக் கொண்டுவிட்டேன். அவ்வளவுதான்" என்றான்.

"நமக்கு இன்பமாக இருக்கிறது என்று எண்ணிப் பிறர்க்குத் துன்பம் தரலாமா?" என்ருள் அவள்.

"பெண்ணே! தாகம் எடுக்கிறது! நீர் குடிக்கிரும். நமது தாகத்தைத் தீர்த்துக் கொள்ளத்தானே நீர் குடிக்கிரும். நீருக்கு இன்பமாயிருக்குமா? இராதா என்று யோசித்தா நீர் குடிக்கிரும். இல்லையே! உன்னைக் கண்டது முதல் என் உள்ளம் துடித்தது, பாம்பின் வாயில் அகப்பட்ட உயிர்போல். அதனால் செய்வது என்ன என்று புரியவில்லை. செய்து விட்டேன். அதனால் என்ன?

"பெண்களை வலிந்து கொள்வதும் தவறில்லை" என்ருன் அவன்.

"ஓகோ! அப்படியா! அப்படியானால் நான் சொன்னால் நீ கேட்கவா போகிருய். ஏதோ முன் பிறப்பிலும் ஒன்ருயிருந் தோம் போலிருக்கிறது. சரி, சரி. ஆகட்டும்" என்ருள் அவள்.

## 27. ஆசையும் பாசாங்கும்

அவனுக்கு அவள்மீது காதல். அவளுக்கும் அவன்மீது காதல். தோழிக்கும் தெரியாது. இப்படி எவ்வளவு நாள் நடக்கும்?

தோழியின் துணை இல்லாவிட்டால் ஒன்றும் நடவாது. எனவே தோழியிடம்போய் அவள் தயவை நாடுகிருன் அவன்.

"சரி. வருந்தாதே! அவளை உன்னிடம் சேர்ப்பிக்கிறேன்" என்று சொல்லிப் போகிருள் தோழி. போய்த் தலைவியிடத்தே சொல்கிருள் :

நோக்குங்கால், நோக்கித் தொழூஉம், பிறர் காண்பார்
தூக்கு இலி; தூற்றும் பழி எனக் கை கவித்துப்
போக்குங்கால், போக்கு நினைந்து இருக்கும்; மற்றுநாம்
காக்கும் இடம் அன்று, இனி.

எல்லா! எவன் செய்வாம்?

பூக்குழாய்! செல்லல் அவனுழைக் கூஉய்க் கூஉய்
விரும்பி யான் விட்டேனும் போல்வல்; என்
 தோள்மேல்
கரும்பு எழுது தொய்யிற்குச் செல்வல்; 'ஈங்கு ஆக
இருந்தாயோ?' என்று ஆங்குஇற.
அவன் நின் திருந்து அடிமேல் வீழ்ந்து இரக்கும்,
 நோய் தீர்க்கும்
மருந்து நீ ஆகுதலான்.

இன்னும், கடம் பூண்டு, ஒருகால் நீ வந்தை;
 உடம்பட்டாள்
என்னுமை என் மெய் தொடு.

இஃதோ? அடங்கக் கேள் :
நின்னொடு சூழுங்கால் நீயும் நிலம் கிளையா,
என்னொடு நிற்றல் எளிது அன்றோ? மற்று அவன்
தன்னொடு நின்று விடு.

"தூ! கொஞ்சம்கூட வெட்கம், மானம் இராதுபோல் தோன்றுகிறது" என்றாள் தோழி.

"என்ன?" என்று கேட்டாள் தலைவி.

"அந்த ஆண்பிள்ளையைத்தான் சொல்லுகிறேன்" என்றாள்.

"எந்த ஆண்பிள்ளை?"

"அதோ! அங்கே நிற்கிறான் பார்! நம்மையே விழித்து விழித்துப் பார்த்துக்கொண்டு, அவனைத்தான் சொல்கிறேன்."

"நின்றுவிட்டுப் போகட்டுமே! நம்மை என்ன செய்கிறான்?" என்றாள் தலைவி.

"என்ன செய்கிறானா? நாம் அந்தப் பக்கம் திரும்பினால் போதும், சும்மா நம்மையே பார்த்துப் பார்த்துப் பல்லைக் காட்டுகிறான். கையை வீசி வீசி அலையாட்டுகிறான். இதெல்லாம் என்ன? பார்ப்பவர் என்ன நினைப்பார்கள்? கேலி செய்ய மாட்டார்களா?" என்றாள்.

"'இங்கே நிற்காதே! போ!' என்று நல்ல வார்த்தை கூறி நயமாகப் போகச் சொல்லேன்."

"சொல்லிப் பார்த்தேன். அசையமாட்டேன் என்கிறானே!"

"இதற்கு என்ன செய்வது?"

"என்ன செய்வது : அவன் விருப்பத்துக்கு இணங்குவது தவிர வேறு வழியில்லை."

"வழியில்லையா?"

"ஊஹூம், இல்லை."

"வலிய நானே அவனிடம் எப்படிச் செல்வேன் தோழீ! அவன்தான் தொலைவிலேயே நின்று கொண்டிருக்கிறானே!"

"பூ! இதுதானா பெரிய விஷயம்! நான்போய் விடுகிறேன், தொய்யில் எழுதும் குழம்பு கொண்டுவர......'எங்கே போனாய்? எங்கே இருக்கிறாய்? எவ்வளவு நேரமாயிற்று? என்ன செய்கிறாய்?' என்று கூறிக்கொண்டே வா.

"என்னைத் தேடிக்கொண்டு வருபவள்போல, அவன் இருக்குமிடம் வந்துவிடு.

"அப்போது அவன் தானாகவே உன்னிடம் பேசுவான் தன் காதலைத் தெரிவிப்பான். 'சரி' என்று இணங்கிவிடு" என்றாள் தோழி.

தோழி சொன்னவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டே நின்றாள் தலைவி. பதில் கூறவில்லை. காலால் மண்ணைக் கீறிக் கொண்டிருந்தாள்.

"இதோபார்! நீ இதெல்லாவற்றையும் அவனிடத்திலே போய் சொல்லிவிடாதே! நான் உடனே இணங்கி விட்டதாகச் சொல்லமாட்டாயே! சத்தியமாகச் சொல்" என்று கேட்டாள் தலைவி.

"அடியே! உன் உள்ளம் எனக்குத் தெரியுமடீ! நான் சொல்லிக் கொண்டிருந்ததையெல்லாம் வாய்திறவாது கேட்டுக் கொண்டிருந்தாய். காலால் மண்ணைக் கீறிக்கொண்டிருந்தாய். அதன் அர்த்தம் என்னடீ? எனக்குத் தெரியாதா? எல்லாம் தெரியும். அப்புறம் ஏன் இந்தப் பாசாங்கு? இதோபார்! என்னிடம் பாசாங்கு செய்த மாதிரி அங்கேயும் போய், அவனிடத்திலும்

செய்யாதே! அவன் மனம் உடைந்து போவான். போனதும் இரண்டறக் கலந்துவிடு. தெரிந்ததா?" என்று கூறி அவளை அனுப்பினாள் தோழி.

## 28. பொன்னும் பெண்ணும்

அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள். இருவரும் இரண்டறக் கலந்தனர். சிலநாள் களவு ஒழுக்கம் நடந்தது. பிறகு சிலநாள் அவன் வரவில்லை.

ஒருநாள் வந்தான். அவளுக்கு அவன்மீது கோபம். முகம் கொடுத்துப் பேசவில்லை. திரும்பியிருந்தாள். அவளது பின் அழகையும், பின்னல் அழகையும் ரசித்தான் அவன்.

இளங் காதலர் இருவரும் மனத்தாங்கலுடன் பேசுகின்றனர். மிக ரசமான பேச்சு. நீங்களும் கேளுங்கள். ரகசியம்!

அணி முகம் மதி ஏய்ப்ப, அம் மதியை நனி ஏய்க்கும்,
மணி முகம், மா மழை, நின் பின் ஒப்ப, பின்னின்கண்
விரி நுண் நூல் சுற்றிய ஈர் இதழ் அலரி
அரவுக் கண் அணி உறழ் ஆரல் மீன் தகை ஒப்ப,
அரும்படர் கண்டாரைச் செய்து, ஆங்கு இயலும்
விரிந்து ஒலி கூந்தலாய்! கண்டை; எமக்குப்
பெரும் பொன் படுகுவை பண்டு.

ஏஎ, எல்லா! மொழிவது கண்டை ; இஃது ஒத்தன் ;
தொய்யில்
எழுதி இறுத்த பெரும் பொன் படுகம்;
உழுவது உடையமோ, யாம்?

உழுதாய்,

சுரும்பு இமிர் பூங்கோதை அம் நல்லாய்! யான் நின்
திருந்து இழை மென்தோள் இழைத்த, மற்று இஃதோ,
கரும்பு எல்லாம் நின் உழவு அன்றோ? ஒருங்கே
துகள் அறு வாள் முகம் ஒப்ப மலர்ந்த

குவளையும், நின் உழவு அன்றோ? 'இகலி
முகைமாறு கொள்ளும் எயிற்றாய்! இவை அல்ல
என் உழுவாய் நீ, மற்று இனி.

எல்லா! நல்தோள் இழைத்த கரும்புக்கு நீ கூறு;
முற்று எழில் நீல மலர் என உற்ற,
இரும்பு ஈர் வடி அன்ன, உண்கட்கும், எல்லாம்,
பெரும் பொன் உண்டு என்பாய்! இனி.

நல்லாய்! இகுளை! கேள் :
ஈங்கே தலைப்படுவன், உண்டான் தலைப்பெயின்
வேந்து கொண்டன்ன பல.

'ஆங்கு ஆக!' 'அத்திறம் அல்லாக்கால், வேங்கை வீ
முற்று எழில் கொண்ட சுணங்கு அணிபூண் ஆகம்
பொய்த்து ஒருகால் எம்மை முயங்கினை சென்றீமோ,
முத்து ஏர் முறுவலாய்! நீ படும் பொன் எல்லாம்
உத்தி எறிந்துவிடற்கு.'

"ஆகா! உன் முகம்தான் என்ன! பூரண சந்திரனோ! கரு கரு என்று அடர்ந்து தொங்கும் உன் கூந்தல்தான் என்ன! அந்தச் சந்திரனைச் சூழ்ந்திருக்கும் மேகமோ!

"உன்னுடைய கூந்தலில் பின்னித் தொடுக்கப்பட்டுள்ள மலர்தான் என்ன! மேகக் கூட்டத்திடையே தோன்றும் நட்சத்திரமோ! என்ன அழகு! என்ன அழகு!

"இந்த அழகு யாரால் வெளிப்பட்டது!' என்றால் அல்லவோ! பெண்ணே! எண்ணிப் பார்! எனக்கு இதற்குப் பெரும்பொன் கொடுக்க வேண்டும் நீ! தெரிந்ததா?" என்றான் அவன்.

"அடேடே! இவ்வளவு அழகும் இவரால் வந்ததாமே! சொல்லுவதைப்பார்! எப்பொழுதோ...கனவு போலிருக்கிறது... வந்து போனாய்...ஏதோ...கொஞ்சம் உழுதது...அதற்குத் தகுந்த படி பயன் விளைந்திருக்கிறது...நன்றாக...இடைவிடாது உழுதிருந்தால்....நல்ல பயன் விளைந்திருக்கும்....இன்னும் அதிகமாகவே

விளைந்திருக்கும்: நிறையப் பொன் கொடுக்கக் கடமைப்பட்டவள் தான். இப்பொழுது எப்படி?'' என்றாள் அவள்.

''உன் மென்தோள் கரும்பு போல் கண்ணுக்கினியதாய் விளங்குவது யாரால்? குவளைப் பூவுடன் போட்டியிடும் நின் கண்கள் ஒளி பெற்று எழில் பெற்றுத் திகழ்வது எவரால்?

''முல்லை மொட்டுடன் போர் தொடுக்கும் முறுவல் அழகி! இது போதாது. இன்னும் பேரழகு வேண்டும் என்று நீ விரும்பினால், அதற்குத்தான் நான் இருக்கிறேனே, இனி! அப்புறம் பஞ்சமா என்ன ?

''ஆமாம்! நீதான் கண்டாய்! தோள் மெலிந்து கிடக்கிறது. அழகு இழந்து நிற்கிறது. ஆனால் அதிலே நீ எழுதிய தொய்யில் மாத்திரம் அழகாயிருக்கிறது. அவ்வளவுதான். என் கண்களோ! வாடி வதங்கி, தூக்கமின்றிச் சிவந்து விட்டது! உடம்பு பசலை படர்ந்து விட்டது. இவை ஒன்றும் உன் கண்ணில் படவில்லையோ!'' என்று முணுமுணுத்தாள் அவள்.

''ஆமாம்! உன் உடம்பு பசலை பாய்ந்து பொன்னிறமாகி விட்டதல்லவா! அதைத்தான் நான் கேட்கிறேன். எங்கே? என்னைக் கட்டிக்கொள். பொன்னிறமான பசலை நீங்கும். இதைத்தான் நான் முதலில் கூறினேன். 'பொன் கொடு! பொன் கொடு' என்றேன். அது தெரியாமல் கோபிக்கிறாய்'' என்றான் அவன். அப்புறம் கேட்கவும் வேண்டுமோ!

## 29. புலி வலையில் நரி விழுந்தது!

இரவு நேரத்திலே எவரும் அறியாமல் வந்து போய்க்கொண்டிருக்கிறான் அவன். யாராவது கண்டுவிட்டால் ?

ஏச்சுக்கும் பேச்சுக்கும் இடமாகும். எனவே, இதை நிறுத்தி விட விரும்பினாள் தோழி. ''இனிமேல் இரவு வரலாகாது'' என்பதைச் சொல்லாமல் சொல்கிறாள், வெகு நாகரிகமாக. அதற்கு ஒரு பொய்க் கதை ஜோடித்துச் சொல்கிறாள். அதுதான் புலி பிடிக்க விரித்த வலையில் நரி விழுந்த கதை :

திருந்திழாய்! கேளாய், நம் ஊர்க்கு எல்லாம் சாலும்
பெருநகை! அல்கல் நிகழ்ந்தது; ஒரு நிலையே
மன்பதை எல்லாம் மடிந்த இருங்கங்குல்,
அம் துகில் போர்வை அணி பெறத் தைஇ, நம்
இன்சாயல் மார்பன் குறி நின்றேன் யான்ஆக-
தீரத் தறைந்த தலையும், தன் கம்பலும்,
காரக் குறைந்து, கறைப்பட்டு வந்து, நம்
சேரியின் போகா முடமுதிர் பார்ப்பானை,
தோழி! நீ போற்றுதி என்றி-அவன் ஆங்கே,
பாரா, குறழா, பணியா, 'பொழுது அன்றி,
யார், இவண் நின்றீர்?' எனக் கூறி, பையென,
வைகாண் முது பகட்டின், பக்கத்தின் போகாது,
'தையால்! தம்பலம் தின்றியோ' என்று, தன்
பக்கு அழித்து, 'கொண்டீ' எனத் தரலும்-
யாது ஒன்றும்
வாய் வாளேன் நிற்ப - கடிது அகன்று கைமாறி,
'கைப் படுக்கப் பட்டாய் சிறுமி நீ'—மற்று யான்
ஏனைப் பிசாசு; அருள்; என்னை நலிதரின்
இவ் ஊர்ப்பலி நீ பெறு அமல் கொள்வேன்'
எனப் பலவும் தாங்காது வாய்பாடி நிற்ப-
முது பார்ப்பான் அஞ்சினன் ஆதல் அறிந்து, யான்,
எஞ்சாது,
ஒரு கை மணல் கொண்டு, மேல் தூவக் கண்டே,
கடிது அரற்றிப் பூசல் தொடங்கினன் ஆங்கே.
ஒடுங்கா வயத்தின், கொடுங்கேழ், கடுங்கண்,
இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுள் ஓர்
ஏதில் குறு நரி பட்டற்றால்! காதலன்
காட்சி அழுங்க, நம் ஊர்க்கு எலாஅம்
ஆகுலம் ஆகி விளைந்ததை-என்றும் தன்
வாழ்க்கை அதுவாகக் கொண்ட முது பார்ப்பான்
வீழ்க்கைப் பெருங் கருங் கூத்து.

"நமது ஊரார் கேட்டால் ஒருநாள் முழுதும் விழுந்து விழுந்து சிரிப்பார்கள்" என்றாள் தோழி.

"என்ன அது?" என்று கேட்டாள் தலைவி.

"நேற்று இரவு உன் காதலன் வருவான் என்று காத்திருந்தேன்..." என்று நீட்டினாள் தோழி.

"உம்... அப்போது என்ன நடந்தது?" என்று கேட்டாள் தலைவி படபடப்புடன்.

"நம்ம ஊர் கிழட்டுப் பார்ப்பான் வந்தான்..."

"ஐயோ... அவனிடம் நீ எச்சரிக்கையாயிரு என்று சொல்லியிருந்தேனே! என்ன நடந்தது?"

"என்னிடம் வந்தான். உற்றுப் பார்த்தான். 'யார் நீ? இந்த நேரத்திலே ஏன் இங்கே நிற்கிறாய்?'' என்று கேட்டான்.

வாய் திறவாது நின்றேன்.

"என்னிடம் அகப்பட்டுக் கொண்டாய். உன்னை விடமாட்டேன்" என்றான். அப்போதும் வாய் திறக்கவில்லை நான்.

கிழட்டுப் பசு. பல் எல்லாம் தேய்ந்து போயிற்று. இருந்தாலும் வைக்கோல் தின்ன ஆசை. வைக்கோல் போரைப் பார்த்துக் கொண்டே அதனடியில் படுத்துக் கிடக்கும்.

அந்த மாதிரி ஆசையுடன் என்னிடம் வந்தான்.

"வெற்றிலை பாக்கு வேண்டுமா? இந்தா!" என்று வெற்றிலைப் பையை நீட்டினான். அப்போதும் நான் வாய் திறக்கவில்லை.

பார்ப்பானுக்கு பயம் வந்துவிட்டது. பேயோ! பிசாசோ என்று நடுங்கினான். எட்டிப் போய்விட்டான்.

"நீ பெண் பேய்; நான் ஆண் பேய். தெரிந்ததா? நான் சொன்னபடி கேள். இல்லாவிட்டால் உனக்கு பலி கிடைக்காமல் செய்து விடுவேன்" என்று உறுமினான்.

பார்ப்பான் பயந்து கொண்டான் என்பது நன்றாகத் தெரிந்து விட்டது எனக்கு. இரண்டு கைகளாலும் மண்ணை வாரி இறைத்தேன். உடனே அலறிப் புடைத்துக் கொண்டு ஓடினான்.

'இனி இங்கே நின்றால் ஆபத்து. ஊரார் வந்து விடுவார்' என்று எண்ணி நானும் வந்துவிட்டேன். புலி பிடிக்க விரித்த வலையில் நரி விழுந்த மாதிரி ஆயிற்று" என்றாள்.

**குறிஞ்சிக் கலி முற்றும்.**

# பாலைக் கலி

## ௨

பாடியவர் : சேரமான் பெருங் கடுங்கோ

## பாலைக் கண்ணாடி

1. **தெய்வம் :** துர்க்கை.

2. **உயர்ந்தோர் :** விடலை, காளை, மீளி, எயிற்றி.

3. **தாழ்ந்தோர் :** எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர்

4. **பறவை :** புறா, பருந்து, எருவை, கழுகு.

5. **விலங்கு :** செந்நாய்.

6. **ஊர் :** குறும்பு.

7. **நீர் நிலை :** பாழுங் கிணறு, நீர் வற்றிய நிலைகள்.

8. **மலர் :** குராம்பூ, மராம்பூ.

9. **மரம் :** உழிஞை, பாலை, ஓமை, இருப்பை.

10. **உணவு :** வழிப்பறிப் பொருள்கள், திருடிய பொருள்கள்.

11. **பறை :** துடி.

12. **யாழ் :** பாலை யாழ்.

13. **பண் :** பஞ்சுரம்.

14. **தொழில் :** போரிடுதல், பகற் கொள்ளையடித்தல்.



## சேரமான் பெருங் கடுங்கோ யார்?

பாலைக் கலி 35 பாடல்கள் கொண்டது. பாடியவர் பெருங் கடுங்கோ. பாலை பாடிய பெருங் கடுங்கோ என்று சொல்வதும் உண்டு.

மிகச் சிறந்த இப் பாலைக் கலியைப் பாடியதாலேயே இவர் இந்தச் சிறப்புப் பெயர் பெற்றார்.

இவர் சேரர் மரபினைச் சேர்ந்தவர். சேரமான் பாலை பாடிய பெருங் கடுங்கோ என்பது இவரது முழுப் பெயர்.

சிறந்த கொடை வள்ளல்; செந்தமிழ்ப் புரவலர்; புலவர். பாலைக் கலி தவிர, இன்னும் பல பாடல்களும் பாடியிருக்கிறார். நற்றிணையிலே பத்து, அகநானூறிலே பன்னிரண்டு, குறுந்தொகையிலே பத்து, ஆக முப்பத்திரண்டு பாடல்கள் இவர் பாடியன என்று சொல்கிறார்கள்.

அற நூல், மர நூல், விலங்கு நூல், இசை நூல் முதலிய பல நூல்களும் வல்லவர் இவர்.

## பாலை என்பது என்ன?

பழந் தமிழ்ப் பெருமக்கள் நிலத்தை ஐந்து வகையாகப் பிரித்தார்கள் அல்லவா? அந்தப் பிரிவில் ஒன்றுதான் பாலை என்பது.

பாலை என்பது ஒரு தனி நிலம் அன்று. இயற்கையின் சீற்றத்திலே உருக்குலையப் பெற்ற நிலமே பாலை. மலைப் பாங்கான பகுதிகள் பாலை நிலமாதலும் உண்டு. காட்டுப் பகுதிகள் பாலை நிலமாதலும் உண்டு.

பாலை நிலத்திலே வாழும் உயர் குடி மக்கள் எவ்வாறு அழைக்கப் பெறுவர்? ஆண்கள் விடலை, காளை என்று அழைக்கப் பெறுவர். பெண்களுக்கு எயிற்றி, மீளி என்று பெயர். மற்ற குடிப் பிறந்தோருள் ஆண்களுக்கு எயினர் என்றும் மறவர் என்றும் பெயர்; பெண்களுக்கு மறத்தியர் என்றும் எயிற்றியர் என்றும் பெயர்.

புரு, பருந்து, கழுகு இவை பாலை நிலத்துப் பறவைகள்.

செந்நாய்தான் பாலை நிலத்திலே காணப்படும் விலங்கு.

இந் நிலத்து மக்கள் வாழ்ந்த குடியிருப்புகளுக்குக் குறும்பு என்று பெயர். நீர் வற்றிய குழிகளையும் கிணறுகளையும் இங்கே காணலாம்.

குராம் பூ, மராம் பூ இவையே இந் நிலத்துப் பூக்கள். உழிஞை, பாலை, ஓமை, இருப்பை முதலியன இங்கே காணப்படும் மரங்கள்.

போர் செய்தல், பகற் சூரையாடல், வழிப்பறி, திருட்டு இவையே இந் நில மக்களின் தொழில். இத் தொழில் செய்து பெற்றதைக் கொண்டு உண்டு உயிர் வாழ்வர்.

இந் நில மக்களின் இசைக் கருவிகள் இரண்டு. ஒன்று : யாழ். மற்றொன்று : பறை. யாழுக்குப் பாலையாழ் என்று பெயர். பறைக்கு, துடி என்று பெயர். இவர்தம் இசை : பஞ்சுரம்.

பாலை நிலத்தின் தெய்வம் கன்னி. அதாவது, துர்க்கை.

## பாலைக் கலி பகருவது என்ன ?

பெரும்பாலும் பிரிவு பற்றிய நிகழ்ச்சிகளையே இதனுள் காணலாம். யார்தம் பிரிவு? காதலர் பிரிவு.

'பிரிந்து போகிறேன்' என்று சொல்வான். உடனே வருந்துவாள் காதலி. இவ்விதம் வருந்தும் அவள் நிலை கண்டு அவன் பிரிந்து போகமாட்டான். சில சமயங்களில் அவளுக்கு ஆறுதல் கூறிச் செல்வான்.

பிரிந்தவன் குறித்த நேரத்தில் வராவிட்டாலும் அவள் வருந்துவாள். இம்மாதிரி நிகழ்ச்சிகளையும் இதிலே காணலாம்.

பிரிவு எதற்காக? பொருள் தேடுவதற்காக. போர் காரணமாகப் பிரிவதும் உண்டு. தூதுக்காகப் பிரிவதும் உண்டு. இப்படி எவ்வளவோ விதம்.

பிரிவு என்று சொன்னால் என்ன? காதலியை விட்டு ஓடிப் போவது அல்ல; சில காலம் பிரிந்திருப்பது. அவ்வளவுதான்.

வெளியூர் சென்றால் பிரியாதிருக்க முடியுமா? பிரிவு நேருமே என்பதற்காக எக் காலமும் வெளியூர் போகாமல் இருக்க முடியுமா? இரண்டும் இயலாது.

செல்வப் பெருங்குடி மக்கள், குறுநில மன்னர் போன்ற பெரு நிலச் செல்வர், இவர்களுடைய வாழ்க்கையின் ஒரு பகுதியையே இப் பாடல்களில் நாம் காண்கிறோம்.

## 30. ஆசை நின்றது; பாசம் வென்றது

களவு ஒழுக்கத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தாயிற்று. பல்லோர் முன்னிலையில் மணம் செய்து கொண்டுவிட்டான் அவன். சிலநாள் இன்பம் துய்த்தான்.

பிறகு ஓர் ஆசை தோன்றியது. என்ன ஆசை? பொருள் தேட வேண்டும் என்ற ஆசை.

முன்னோர் தேடி வைத்த பொருள் இல்லையா? இருக்கிறது. சோற்றுக்கும் உடைக்கும் பஞ்சமில்லை. செல்வக் குடும்பம்தான்.

இருப்பினும், தான் பொருள் தேட வேண்டும் அல்லவா? முன்னோர் தேடி வைத்த பொருளையே வைத்துக் கொண்டிருந்தால் எப்படி?

எனவே பொருள் தேடும் முயற்சியில் ஈடுபட்டான். பொருள் தேடுவது எப்படி?

ஊரை விட்டு, நாட்டை விட்டு தொலைவில் சென்று பொருள் தேடுதல். அவ்விதம் செல்வது சுலபமாக முடிகிற காரியமா?

வேகமாகச் செல்வதற்குத் தேர் வேண்டும். குதிரை வேண்டும். தற்காப்புக்கு ஆயுதங்கள் வேண்டும். இவை இல்லாது எப்படி வெளியே செல்ல முடியும். இந்தக் காலமா, வான வெளியில் விமானத்திலே லண்டன் சென்று விரைவில் திரும்ப? அந்தக் காலமாயிற்றே!

தலைவனது செயலைக் கண்டாள் தோழி. அவனைத் தடுத்து நிறுத்துகிறாள்:

"என்ன? வெளிநாடுகளுக்குப் பயணமோ?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் தோழி.

"ஆமாம்!" என்றான் தலைவன்.

"என்னவிசேஷமோ?"...என்று நீட்டினாள் தோழி.

"விசேஷம் என்ன...பணம்...பணம்தான் விசேஷம். அதற்காகத்தான் வெளியூர் போகிறேன்" என்றான் தலைவன்.

"சரி. மகராசராய்ப் போய் வாருங்கள்; தடுத்து ஒரு வார்த்தையும் நான் சொல்லவில்லை. ஆனால் ஒன்று..." என்று இழுத்தாள் தோழி.

"என்ன....?" என்று கேட்டான் தலைவன்.

"போகிற வழி எப்பேற்பட்டது தெரியுமா?" என்றாள்.

"தெரியுமே......நன்றாகத் தெரியும்."

"புறப்பட்டிருக்கிற நேரம் எப்படி?"

"நல்ல கோடை காலம். வெயிலின் கொடுமை தாங்க முடியாத காலம். முப்புரங்களையும் சுட்டெரித்தானே சிவன்! அந்த மாதிரி அனல் கக்கும் காலம்!"

"வழி எப்படி?"

"அவ்விதம் சிவன் சுட்டெரித்தபோது அந்த அரக்கர்களின் கோட்டைகள் தூள் தூளாகிச் சிதறினவே! அந்த மாதிரி, வழி முழுதும் பாறையும், கல்லும் பிறவும் மலிந்திருக்கும் வழி."

"இத்தகைய நேரத்திலே-இத்தகைய வழியிலே போகத்தான் வேண்டுமா......? நான் தடை செய்யவில்லை......சிறிது யோசித்துப் பார்க்கச் சொன்னேன். அவ்வளவுதான்" என்றாள் தோழி.

"போகாமல் என்ன செய்வது? பொருள் வேண்டுமே! நம்மிடம் வந்து யாசிப்பவர்க்கு 'இல்லை' எனலாமா? அது மிகவும் இழிவாயிற்றே!" என்றான் தலைவன்.

"ஆமாம்! பொருள் வேண்டியதுதான். அவசியமுந்தான். நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. நீ போ...ஆனால் ஒன்று. அதை மாத்திரம் சிறிது யோசித்துப்பார். நீ அங்கே பொருள் தேடப் போயிருக்கிற நேரத்திலே, இங்கே இந்தப் பொருள் போய்விட்டால் என்ன செய்வாய்?" என்றாள் தோழி.

"எந்தப் பொருள்?"

"உன் காதலிதான்....காதலிதானே உனக்குச் சிறந்த பொருள்! அவளைப் பிரிந்து வெளியூர் செல்கிறேன் என்கிறாய். என்ன என்றால், பொருள் தேடப்போகிறேன் என்கிறாய். நீ

பொருள் தேடிக்கொண்டு வரும் நேரத்திலே இவள் உயிருடன் இருந்தால்தானே! உனது பிரிவு ஆற்றாது உயிர் துறந்துவிட்டால் என்ன செய்வாய்? பொருள் தேடியதால் என்ன பயன்? யாருடன் அநுபவிப்பாய்? எனவே, இவளைவிடப் பெரிய பொருள் வேறு இல்லை. இவளே உனக்குச் சிறந்த பொருள்" என்றாள் தோழி.

கேட்டான் தலைவன். பாசம் வென்றது; ஆசை நின்றது. வெளியூர் செல்லும் முயற்சியைக் கை விட்டான். அங்குசத்துக்கு அடங்காத யானை, யாழ் கேட்டுப் பணிவதுபோல் பணிந்தான்.

எதனால்? அவள் பால் கொண்ட காதல் மிகுதியினால்.

தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக,
அடங்காதார் மிடல் சாய, அமரர் வந்து இரத்தலின்,
மடங்கல் போல், சினைஇ, மாயம் செய் அவுணரைக்
கடந்து அடு முன்பொடு, முக்கண்ணான் மூஎயிலும்
உடன்றக்கால், முகம் போல ஒண் கதிர் தெறுதலின்,
சீறு அருங் கணிச்சியோன் சினவலின் அவ் எயில்
ஏறுபெற்று உதிர்வன போல், வரை பிளந்து,
 இயங்குநர்
ஆறு கெட விலங்கிய அழல் அவிர் ஆர் இடை—
மறப்பு அருங் காதல் இவள் ஈண்டு ஒழிய,
இறப்பத் துணிந்தனிர், கேண்மின் மற்று—ஐஇய!

'தொலைவு ஆகி, இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு'
 என,
மலை இறந்து செயல் சூழ்ந்த பொருள்பொருள் ஆகுமோ-
நிலைஇய கற்பினாள், நீ நீப்பின் வாழாதாள்,
முலை ஆகம் பிரியாமை பொருளாயின் அல்லதை?

'இல் என, இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு' என,
கல் இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருள்
 ஆகுமோ -
தொல் இயல் வழாஅமைத் துணை எனப் புணர்ந்தவள்
புல் ஆகம் பிரியாமை பொருளாயின் அல்லதை?

'இடன் இன்றி, இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு'
 என,
கடன் இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருள்
 ஆகுமோ -
வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்
தடமென் தோள் பிரியாமை பொருளாயின் அல்லதை?

என, இவள்

புன் கண் கொண்டு இனையவும், பொருள்வயின்
 அகறல்
அன்பு அன்று, என்று யான் கூற, அன்புற்று,
காழ் வரை நில்லாக் கடுங் களிற்று ஒருத்தல்
யாழ் வரைத் தங்கியாங்கு, தாழ்பு, நின்
தொல் கவின் தொலைதல் அஞ்சி, என்
சொல் வரைத் தங்கினர், காதலோரே.

## 31. மாற்றமும் ஏமாற்றமும்

இன்னொரு தலைவன். மிகவும் நெஞ்சழுத்தம் கொண்டவன். பொருள் தேடும் பொருட்டு வெளியூர் செல்லத் தயார்

அது கேட்டாள் தலைவி. மிக வருந்தினாள்.

தோழி அதனைத் தலைவனுக்கு எடுத்துக் கூறினாள்.

அவன் கேட்கவில்லை. தான்கொண்ட உறுதி தளரவில்லை. எவ்வளவோ கூறிப்பார்த்தாள் தோழி. மன்றாடினாள்; கெஞ்சினாள். பயனில்லை. முடிவாக ஒன்று சொல்கிறாள்:

"மேற்கொண்ட காரியத்திலேயே கண்ணும் கருத்தும் உடையவனே! கேள்!

"நீ வெளியூர் செல்லப் போகிறாய் என்று கூறினேன். கேட்டாள் உன் காதலி. உடனே அவளது தோள்கள் நெகிழ்ந்தன. வளைகள் கழன்றன. கண்கள் நீரைச் சொரிந்தன.

"'சின்னஞ் சிறு வயது. இவளை விட்டுப் பிரிய மனம் எப்படி யடா வந்தது?''' என்று ஊரார் தூற்றுவார்களே என்று எண்ணி ளுள்; ஏங்கிளுள். அதை உன்னிடம் கூறினேன். நீ காதில் ஏற்றுக் கொள்ளவில்லை. பிடிவாதமாக இருக்கிருய். 'உனது பிரிவால் அவள் இறந்து போவாளே!' என்றேன். அப்போதும் நீ கேட்கவில்லை.

"இன்னும் இதைவிட வேறு என்னதான் சொல்வேன்? எப்படித்தான் சொல்வேன்? உன் மனதை எப்படித்தான் மாற்று வேன்? நீசெல்லும் வழியிலே பல காட்சிகளைக் காண்பாய். அவை தான் உன் மனதை மாற்றுதல் வேண்டும்.

"நீ செல்லும் வழியிலே சுனைகள் இருக்கும். அவற்றிலே நீர் வற்றியிருக்கும். நீர் வற்றிய அச் சுனைகளிலே நீல மலர்கள் இருக்கும். வாடிவதங்கி இருக்கும். வாடி வதங்கிய நீல மலர்களைக் கண்டதும் உனக்குக் காதலியின் நினைவு வராதா? அவளது கண் கள் பொலிவிழந்து நிற்பது தோன்ருதா? அப்போதாவது திரும்பி வர மாட்டாயா? பார்ப்போம்.

"நீ செல்லும் வழியிலே பூங்கொடிகள் இருக்கும். அவை பற்றுக்கோடு இல்லாமல் கிடக்கும். • துவண்டு வாடிக் கிடக்கும். அவற்றைக் கண்டதும் உன் காதலி நினைவு உனக்கு வராதா?

'இந்தப் பூங்கொடி எப்படி பற்றுக்கோடு இல்லாமல் துவண்டு வாடிக் கிடக்கிறதோ அப்படித்தானே நமது காதலியும் துவண்டு கிடப்பாள்' என்று எண்ணமாட்டாயா? மனம் இறங்கிட மாட் டாயா? பார்ப்போம்.

"நாங்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தோம். நீ கேட்க வில்லை. ஒரே பிடிவாதமாக இருக்கிருய். நீ செல்லும் வழி யிலே மரங்கள் நிறைய இருக்கும். அவற்றின் தளிர் வாடிக் கிடக் கும். வாடிய தளிரைக் கண்ட போதாவது உனக்குக் காதலி நினைவு வராதா?

'வாடிக் கிடக்கும் இந்தத் தளிர் போலத்தானே நமது காதலி யும் இருப்பாள். தளிர்போன்ற அவளது மேனி வாடியிருக்கும்' என்று கருத மாட்டாயா? மனம் இரங்கித் திரும்பமாட்டாயா? பார்ப்போம்.

"இவைதான் இனி உன் மனதை மாற்றவேண்டும்" என்று கூறினாள்.

அறன் இன்றி அயல் தூற்றும் அம்பலை நாணியும்,
வறன் நீந்தி நீ செல்லும் நீள் இடை நினைப்பவும் -
இறை நில்லா வளை ஓட, இதழ் சோர்பு பனி மல்க,
பொறை நில்லா நோயோடு புல்லென்ற நுதல் இவள் -
விறல் நலன் இழப்பவும், வினை வேட்டாய்! கேஎள்,
இனி :

'உடை இவள் உயிர் வாழாள், நீ நீப்பின்' என, பல
இடைகொண்டு யாம் இரப்பவும், எம கொள்ளாய்
ஆயினை;
கடைஇய ஆற்றிடை, நீர் நீத்த வறுஞ் சுனை,
அடையொடு வாடிய அணி மலர் - தகைப்பன.

'வல்லை நீ துறப்பாயேல், வகைவாடும் இவள்' என,
ஒல் ஆங்கு யாம் இரப்பவும், உணர்ந்தீயாய் ஆயினை;
செல்லு நீள் ஆற்றிடை, சேர்ந்து எழுந்த மரம் வாட,
புல்லு விட்டு இறைஞ்சிய பூங்கொடி - தகைப்பன.

'பிணிபு நீ விடல் சூழின், பிறழ்தரும் இவள்' என,
பணிபு வந்து இரப்பவும், பல சூழ்வாய்ஆயினை;
துணிபு நீ செலக் கண்ட ஆற்றிடை, அம் மரத்து
அணி செல, வாடிய அம் தளிர் - தகைப்பன.
என ஆங்கு -

யாம் நிற் கூறவும் எம கொள்ளாய்ஆயினை;
ஆனாது இவள்போல் அருள் வந்தவை காட்டி,
மேல் நின்று மெய் கூறும் கேளிர்போல், நீ செல்லும்
கானம் - தகைப்ப, செலவு.

## 32. மையல் அறிந்த தையல்

வெளியூர் செல்ல நினைத்தான் ஒருவன், பொருள் தேடுவதற்காக. செல்லும் வழியிலே இடையூறுகள் பல உண்டு.

அதுவும் அவன் அறிவான். திரும்பி வருவதற்குப் பலநாள் ஆகும். அதுவும் அவனுக்குத் தெரியும். அவனது இளங் காதலி அவனைப் பிரிந்து இருப்பது கஷ்டம். சிறிது நேரம் பிரிந்து இருப்பதே அவளால் இயலாது. அப்படியானால் நீண்ட நாள் எப்படிப் பிரிந்திருப்பாள்? முடியாதுதான்.

இவற்றையெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தால் வெளியூர் செல்வது முடியுமா? முடியாது. வெளியூர் செல்லாவிடில் பொருள் தேட முடியாது. பொருள் இல்லாவிட்டால் வாழ்க்கை பயன் தருமா? தராது. எனவே பொருள் தேவை.

பொருள் மேல் உள்ள ஆசை ஒருபுறம்; காதலிமீது உள்ள ஆசை மறுபுறம். இரண்டுக்கும் இடையே அகப்பட்டுத் தத்தளித்துக்கொண்டிருந்தான் அவன்.

அவனுடைய உள்ளம் எவ்வாறு தெரிந்தது? அவன் தன் காதலிபால் நடந்து கொண்ட விதத்திலிருந்து தெரிந்தது.

"ஏன் அம்மா! ஏன் கண்ணீர் விடுகிறாய்? உனக்கு என்ன வருத்தம்?" என்று கேட்டாள் தோழி.

"அவர் வெளியூர் செல்கிறார் போலிருக்கிறது" என்றாள் அவள்.

"அது எப்படி உனக்குத் தெரிந்தது. அவர் சொன்னாரா?" என்று கேட்டாள் தோழி.

"சொல்லவில்லை" என்றாள்.

"சொல்லாவிட்டால் பின் எப்படி? நீயாக ஏதாவது ஒன்றை நினைத்துக் கண்ணீர் விடுவதா?" என்று கேட்டாள் தோழி.

"போடி பைத்தியம்! எனக்கு என்ன, அவ்வளவுதூரம் தெரியாதா?..." என்றாள் அவள்.

"எப்படித் தெரிந்தது?" என்று மீண்டும் கேட்டாள் தோழி.

"எல்லாம் அவர் செய்கிற செயல்களிலிருந்துதான்..."

"என்னடி, அப்படி....?"

"இதுவரை என்றுமே இல்லாதபடி அன்பு காட்டுகிறார்."

"பூ! இவ்வளவுதானே! அடி போடி அசடே! இதைக் கண்டு நீ மருண்டு விட்டாயாக்கும்? வெளியூர் போகப் போகிறார் என்று எண்ணி விட்டாயாக்கும்?"

"இல்லேடி...இன்னும் என்னஎன்னவோ பண்ணுகிறாரடி."

"என்னடி அப்படி! வாய் விட்டுச்சொல்லேன்."

"போடி! வெட்கமாயிருக்கிறது."

"அடி, அசடே! என்னிடம் சொல்ல வெட்கமா உனக்கு!"

"சும்மா சும்மா கட்டிக் கொள்கிறாரடி."

"பூ! இதுதானே! இதைச் சொல்லத்தான் வெட்கமாக்கும் உனக்கு!"

"அடிக்கடி என் முகத்தைப் பார்த்துப் பார்த்துக் கூந்தலைக் கோதி விடுகிறார்."

"அதனால் என்ன? ஊம். அப்புறம் இன்னும் என்ன செய்கிறார்?"

"எனது நகைகளையெல்லாம் ஒழுங்கு பண்ணிவிடுகிறார். கள் குடித்தவன் போல எனது வாய்இதழிலே சுவைக்கிறார்."

"போடி! இவையெல்லாம் இயற்கைதானே! காதலர் வேறு எப்படி நடந்துகொள்வாராம்!"

"சீச்சீ! நீ இதையெல்லாம் சகஜமாக எண்ணாதே! அவர் ஊருக்குப் போகப் போகிறார். அதனால்தான் இவ்வளவு ஆசை. அளவுக்கு மீறிய ஆசை!" என்றாள் தலைவி. அவளது கண்கள் நீர் சொரிந்தன.

"இருந்தாலும் இருக்கும்" என்று எண்ணினாள் தோழி. தலைவனிடம் சென்றாள்.

அவன் என்ன செய்து கொண்டிருந்தான்? வெளியூர் செல்வதற்கான ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்தான். வேலினை எடுத்து பழுது பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன! வெளியூர் பயணம் போலிருக்கிறது" என்றாள் தோழி.

அவளை நிமிர்ந்து நோக்கினான் அவன்.

"சொல்லாவிட்டால் தெரியாமல் போகுமா? எல்லாம் தெரியும். சில நாளாக நீ நடந்து கொள்ளும் விதத்திலிருந்தே உன் காதலி அதை உணர்ந்து கொண்டுவிட்டாள். அதை என்னிடம் சொன்னாள். அதனால் வந்தேன்" என்றாள்.

அவன் தலையசைத்தான்.

"போய் வா. நான் தடுக்கவில்லை. ஆனால் நன்றாக யோசித்துப்

பார். எதையும் தீர யோசித்தே செய்யவேண்டும். வேல் கொண்டு வெளியூர் செல்ல நினைத்தாய். செல்லும் வழி எப்பேர்ப்பட்டது தெரியுமா ? பறவைகளும் பறவா வழி. ஏன் தெரியுமா? மறவர் மீது கொண்ட அச்சம். ஏன்? புலிப் பார்வை கொண்டவர் அம் மறவர். சுற்றும் வில் !வலிவான உடல் ! அம்பு எய்வதில் ஆசை! அது போய் உயிர்களின் மீது குறி தப்பாது தைத்து வதைப்பது கண்டு மகிழ்ச்சி ! இத்தகைய மறவர் வாழும் வழி. பறவைகளும் அவர்களுக்குப் பயந்து அங்கே பறப்பதில்லை. அவ வழியே நீ செல்லத் துணிந்துவிட்டாய். அதை நினைத்து நினைத்து உன் காதலி ஏங்குகிருள்; வருந்துகிருள்.

"நீ சென்று விட்டால் அவள் உயிர் தரிக்கமாட்டாள். எனவே, உன் பிரயாணத்தை ஒத்திப் போடு" என்ருள்.

வலி முன்பின், வல்லென்ற யாக்கை, புலி நோக்கின் -
சுற்றமை வில்லர், சுரி வளர் பித்தையர்,
அற்றம் பார்த்து அல்கும் - கடுங்கண் மறவர் தாம்
கொள்ளும் பொருள் இலர்ஆயினும், வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து, உயிர் வெளவலின்,
புள்ளும் வழங்காப் புலம்பு கொள் ஆர் இடை,
வெள் வேல் வலத்திர் பொருள் தரல் வேட்கையின்,
உள்ளினிர் என்பது அறிந்தனள், என் தோழி.

'காழ் விரி கவை ஆரம் மீ வரும் இள முலை
போழ்து இடைப்படாஅமல் முயங்கியும் அமையார்,
என்
தாழ் கதுப்பு அணிகுவர், காதலர்; மற்று, அவர்
சூழ்வதை எவன்கொல்? அறியேன்!' என்னும்.

'முள் உறழ் முளை எயிற்று அமிழ்து ஊறும் தீ நீரைக்
கள்ளினும் மகிழ்செயும் என உரைத்தும் அமையார்,
என்
ஒள் இழை திருத்துவர், காதலர்; மற்று, அவர்
உள்ளுவது எவன்கொல்? அறியேன்!' என்னும்.

'நுண் எழில் மாமைச் சுணங்கு அணி ஆகம் தம்
கண்ணொடு தொடுத்தென நோக்கியும் அமையார், என்
ஒள் நுதல் நீவுவர், காதலர்; மற்று, அவர்
எண்ணுவது எவன்கொல்? அறியேன்!' என்னும்.
என ஆங்கு,

'கழி பெரு நல்கல் ஒன்று உடைத்து' என, என்
தோழி
அழிவொடு கலங்கிய எவ்வத்தள்; ஒரு நாள், நீர்,
பொழுது இடைப்பட நீப்பின், வாழ்வாளோ?
ஒழிக இனி, பெரும! நின் பொருட் பிணிச் செலவே.

## 33. வாழ்க்கைக் கடலும் காதல் படகும்

ஆண் பிள்ளை என்று சொன்னால் அவன் வீரன் அல்லவா? காடும் மலையும் அஞ்சாது செல்பவன் அல்லவா? புலி, சிங்கம், யானை, கரடி எதுவாயினும் சரி; எதிர்த்துக் கொல்பவன் அல்லவா? நாள் முழுதும் காதலியுடனேயே இருந்துவிட்டால் எப்படி?

எல்லாம் சரிதான். ஆனால் காதல் என்ன செய்கிறது? கண்ணை மறைத்து விடுகிறது. ஒரு நிமிஷம்கூட அவனைப் பிரிய மனம் வரமாட்டேன் என்கிறது காதலிக்கு. அவன்மீது கொண்ட ஆசை அவ்வளவு!

எனவே, 'எங்காவது வெளியூர் சென்று வருகிறேன்' என்று சொன்னாலும் கூட துக்கம் தொண்டையை அடைக்கிறது அவளுக்கு. 'எப்படிப் பிரிந்திருப்போம்' என்று ஏங்குகிறாள். 'பிரிவு' என்றாலே பயமாயிருக்கிறது அவளுக்கு.

சின்னஞ்சிறு வயது. இளம் ஜோடி. இப்போதுதான் கலியாணம் ஆகியிருக்கிறது. இன்ப வாழ்விலே இப்போதுதான் அடி எடுத்து வைத்திருக்கிறார்கள். என்ன என்னவோ மனக் கோட்டை கட்டியிருக்கிறாள் அவள்.

இந்த சமயத்திலே காதலன் வெளியூர் போகிறேன் என்று சொன்னால் யாருக்குத்தான் வருத்தமாயிராது?

இந்தக் காலமா? எந்த ஊர் போனாலும் தபால் எழுதலாம். தந்தி அடிக்கலாம். அவசரம் என்றால் டெலிபோனில் பேசலாம்! அந்தக் காலத்திலே இந்த வசதி எல்லாம் ஏது? வெளியூர் போனவன் திரும்ப உயிருடன் வீடு வந்தால்தானே நிச்சயம்?

இவ்வளவு வசதிகள் நிறைந்த இந்தக் காலத்தில்கூட ரயில் விபத்து, விமான விபத்து ஆகியவற்றிற்குக் குறைவில்லை. எதிர்பாராமல் எவ்வளவோ ஏற்படுகின்றன. உயிருக்கு ஆபத்து ஏற்படாது என்று உறுதியாகச் சொல்ல முடியாது. அப்படியிருக்கும்போது அந்தக் காலத்திலே சொல்லவா வேண்டும்?

எனவே, காதலி பயப்படுகிறாள் என்றால் அது நியாயம் தானே!

காதலன் வெளியூர் செல்கிறான் என்று கேட்டதும் கண்ணீர் வடித்தாள் அவள்; கலங்கினாள்.

கண்டாள் தோழி. காதலனிடம் சென்றாள்:

"என்ன? ஊர்ப் பிரயாணம் போகிறாப் போலிருக்கிறது" என்றாள்.

"ஆம்" என்றான் அவன்.

"நன்றாயிருக்கிறது" என்றாள் அவள்.

"எது?" என்று கேட்டான் அவன்.

"உங்கள் செயல்!" என்றாள் அவள்.

"ஏன்?" என்றான்.

"ஏனா? நீங்களே யோசித்துப் பாருங்கள். கலியாணம் பண்ணி எத்தனை நாளாச்சு? ஆறு மாதம் சேர்ந்தாப் போல ஆனந்தமாயிருக்கவில்லை. அதற்குள் 'எங்கேயோ போகிறேன்' என்றால் என்ன அர்த்தம்?"

"ஆண் பிள்ளை என்றால் வேறு வேலையில்லையா? நாள் முழுவதும் வீட்டிலேயே இருக்கவேண்டுமா?" என்றான் அவன்.

"அப்படி யார் சொன்னார்? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

"வாழ்க்கை ஒரு கடல். அந்தக் கடலிலே இப்போதுதான் படகு விட்டிருக்கிறீர்கள். காதல் எனும் இன்பப் படகு. பெருங் காற்று அடித்து அப் படகைக் கவிழ்க்குமானால் எப்படியிருக்கும் மனம்? மனம் உடைந்து போகாதா? எண்ணிப் பாருங்கள். அப் படித்தான் இருக்கிறது உங்கள் செயல். படகு கவிழ்வதைக் கண்டு

மனம் உடைந்தவர் ஏதாவது வாய்திறந்து பேசுவாரோ? பேசவே மாட்டார். அந்த மாதிரிதான் இருக்கிறது உங்கள் காதலியின் நிலை.

"பெரிய திருவிழா நடக்கிறது. கண் கொள்ளாக் காட்சி. எங்கும் ஒரே இன்பம். ஒரே ஆனந்தம். ஒரே ஆரவாரம். கண் கவரும் அழகு. திருவிழாவுக்குப் பிறகு அந்த இடம் எக் காட்சி வழங்கும்? 'வெறிச்'சென்று இருக்கும் அல்லவா? பொலிவு இழந்து இருக்கும் அல்லவா?

"நீங்கள் ஊர் சென்றால், உங்கள் காதலியின் வாழ்வும் இப்படித்தானிருக்கும். இதை எப்படி அவள் சகித்திருப்பாள்.

"ஓர் அரசன் மற்றொரு நாட்டின் மீது படை எடுத்துச் செல்கிறான். போர் செய்கிறான். எதிரி நாட்டைச் சின்னபின்னமாக்குகிறான். அந்த மாதிரி பாழ்பட்டுப் போகுமே உங்கள் காதலியின் வாழ்வு. எப்படி சகித்திருப்பாள் அவள்?

"என்றைய தினம் நீங்கள் இங்கிருந்து புறப்பட்டுச் செல்கிறீர்களோ, என்றைய தினம் நீங்கள் அந்தப் பாலைவனத்திலே அடி எடுத்து வைப்பீர்களோ, அன்றைய தினமே உங்களது காதலி இறந்துபடும் நாள். இதை எண்ணிப் பாருங்கள். பிரிவதை நிறுத்துங்கள்" என்றாள் அவள்.

பாஅல் அம் செவிப் பணைத் தாள் மா நிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறு அதர்பட்ட ஆறு மயங்கு அருஞ் சுரம்
இறந்து, 'நீர் செய்யும் பொருளினும், யாம் நுமக்குச்
சிறந்தனம் ஆதல் அறிந்தனிர் ஆயின்,
நீள் இரு முந்நீர் வளி கலன் வௌவலின்
ஆள்வினைக்கு அழிந்தோர் போறல் அல்லதை,
கேள் பெருந் தகையோடு எவன் பல மொழிகுவம்?
நாளும் கோள்மீன் தகைத்தலும் தகைமே.

கல்லெனக் கவின் பெற்ற விழவு ஆற்றுப்படுத்த பின்,
புல்லென்ற களம் போலப் புலம்பு கொண்டு,
அமைவாளோ?

ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடு போல்,
பாழ்பட்ட முகத்தோடு, பைதல் கொண்டு,
அமைவாளோ?

ஓர் இரா வைகலுள், தாமரைப் பொய்கையுள்
நீர் நீத்த மலர் போல, நீ நீப்பின், வாழ்வாளோ?
என ஆங்கு -

பொய்ந் நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்டு,
எந் நாளோ, நெடுந் தகாய்! நீ செல்வது,
அந் நாள் கொண்டு இறக்கும், இவள் அரும் பெறல்
உயிரே.

## 34. இன்பமும் துன்பமும்

காதலன் வெளியூர் செல்கிறான் என்று அறிந்த உடனே கண்ணீர் வடித்த காதலிகளைத்தான் இதுவரை கண்டோம். 'போகாதே! போகாதே' என்று வழி மறித்த பெண்களைத்தான் கண்டோம்.

"என்னடா இது! என்னவோ வீரம் செறிந்த பழந்தமிழ் மகளிர் என்று சொல்கிறார்கள். காதலன், 'வெளியூர் செல்கிறேன்' என்று சொன்னால், உடனே கண்ணீர் விட்டுக் கலங்குகிறார்களே! இதுவா வீரம்?" என்ற எண்ணம்கூட எழும்.

இதுவரை கண்ட பெண்களுக்கு முற்றும் மாறான பெண் ஒருத்தி. இங்கே பாருங்கள்.

"வெளியூர் செல்கிறேன்" என்று சொன்னான் அவன்.

"எதற்கு?" என்று கேட்டாள் அவள்.

"பொருள் தேடுவதற்கு" என்றான் அவன்.

"நல்லது" என்றாள் அவள்.

"வருந்தாதே!" என்றான் அவன்.

"மாட்டேன்" என்றாள் அவள்.

"ஆற்றியிரு" என்றான் அவன்.

"பிரிந்தால்தானே?" என்றாள் அவள்.

"என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான் அவன்.

"பொருள் வேண்டியதே. அதைத் தேட நீ செல்லவும் வேண்டியதே." என்றாள்.

"நீ...?" என்றான் அவன்.

"நீ எங்கோ... அங்கே நான்" என்றாள் அவள்.

"அப்படியானால்..."

"உன்னுடன் வருவேன்......உனக்கு உதவி புரிவேன்" என்றாள்.

பார்த்தான் அவன். விழித்தான். 'ஏதடா இது! இவளை எப்படி அழைத்துச் செல்வது?' என்று எண்ணினான்.

அவளோ பிடிவாதமாக நிற்கிறாள். 'உடன் வருவேன்' என்கிறாள்.

"நீயுமா வரப்போகிறாய்?" என்று கேட்டான் அவன்.

"ஆம்" என்றாள் அவள். அதிலே உறுதி தென்பட்டது.

"வேண்டா'ம்மா! வேண்டாம். கண்ணல்லவா! வேண்டாம்." என்று சொல்லிக்கொண்டே அவளது கூந்தலைக் கோதி விட்டான் அவன்.

"ஊஹூம், முடியாது. வருவேன்" என்றாள் அவள்.

"சொல்வதைக் கேள். நான் செல்லும் பாதை மிகவும் துன்பம் நிறைந்தது. ஒருபுறம் மலை. ஒருபுறம் காடு. இவற்றிற்கு இடையே போகவேண்டும். காலமோ கோடை காலம். நீர் நிலைகள் வற்றியிருக்கும். நா வறண்டால் குடிப்பதற்கு நீர் கிடைக்காது. அத்தகைய வழியே செல்லவேண்டும். இந்தத் துன்பம் எல்லாம் உனக்கு எதற்கு?" என்றான்.

"அப்படியா! துன்பம் உனக்கில்லையோ! அதில் பங்கு கொண்டு உன் துயர் துடைப்பதுதானே எனக்கு இன்பம்...

"வீட்டிலே சுகமாக இருப்பதா எனக்கு இன்பம்? இல்லை இல்லை.

"ஆகவே, நானும் வருவேன். அழைத்துச் செல்" என்றாள் அவள்.

அவனுக்கு வேறு வழி?

மரையா மரல் கவர, மாரி வறப்ப,
வரை ஓங்கு அருஞ் சுரத்து ஆர் இடைச் செல்வோர்,
சுரை அம்பு, மூழ்கச் சுருங்கி, புரையோர் தம்,
உள் நீர் வறப்பப் புலர் வாடு நாவிற்கு -
தண்ணீர் பெறாஅத் தடுமாற்று அருந் துயரம்
கண்ணீர் நனைக்கும் கடுமைய, காடு என்றால்,
என், நீர் அறியாதீர் போல இவை கூறல்?
நின் நீர அல்ல, நெடுந் தகாய்! எம்மையும்,
அன்பு அறச் சூழாதே, ஆற்றிடை நும்மொடு
துன்பம் துணையாக நாடின், அஃது அல்லது
இன்பமும் உண்டோ, எமக்கு?

## 35. விடையும் தடையும்

"வெளி நாடு செல்கிறாயோ?" என்று கேட்டுக்கொண்டே வந்தாள் தோழி.

"இல்லையே!" என்றான் அவன்.

"இல்லையென்று நீ சொல்லிவிட்டால் நான் நம்புவேனா. இல்லாவிட்டால் எதற்காக இப்போது இந்த வில்லை எடுத்தாய்? நாண் நரம்புகள் உறுதியாக இருக்கின்றனவா என்று தட்டிப் பார்க்கிறாய்; இழுத்துப் பார்க்கிறாய். இவையெல்லாம் என்ன ஐயா? எதைக் குறிக்கின்றன? வெளியூர் செல்ல நீ எண்ணியிருக்கிறாய் என்பதைத்தானே, ஐயா? அவ்விதம் இருக்கும்போது இல்லையென்று நீ சொன்னால் நான் நம்புவேனா?" என்றாள் அவள்.

"வில்லை எடுத்துச் சரி பார்த்தேன். அவ்வளவுதான். அதனால் உடனே வெளியூர் போகப் போவதாக முடிவு கட்ட வேண்டியதோ?" என்று கேட்டான் அவன்.

"சரி. இந்தக் கையுறையை எதற்காக எடுத்துப் பார்க்கிறாய்? சண்டை செய்கிறபோதும், வேட்டையாடப் போகிறபோதும் அணிய வேண்டிய கையுறையை இப்போது எடுத்து அணிந்து கொண்டால் என்ன அர்த்தம்? அது மாத்திரமா? அம்புகளை

எல்லாம் எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறாய்; ஒவ்வொன்றாக ஆராய்கிறாய்; கூர் சரியாக இருக்கின்றனவா என்று பார்க்கிறாய். இவையெல்லாம் எதைக் குறிக்கின்றன ?'' என்று மீண்டும் கேட்டாள் தோழி.

அவன் சிரித்தான், பதில் பேச முடியாமல்.

''சரி. போய் வா. நான் அதைத் தடுக்கவில்லை. ஆனால் ஒன்று சொல்கிறேன். எதையும் சிறிது யோசித்துச் செய். நீ புறப்படுங் காலம் எப்படிப்பட்டது தெரியுமா?'' என்றாள் அவள்.

''ஓ! தெரியுமே! கோடை காலம்'' என்றான் அவன்.

''போகும் வழி...'' என்று இழுத்தாள் அவள்.

''கானகம்'' என்ற பதில் 'பளிச்'சென்று வந்தது.

''அங்கே எத்தகைய காட்சியைக் காண்பாய் ? வெயில் ! வெயில்! தாங்க முடியாத வெயில்! நீர் நிலைகள் வற்றியிருக்கும். நீர் விடாய் கொண்ட யானைகள் அங்குமிங்கும் ஓடும். நீர் நிலைகளை எல்லாம் சென்று சென்று பார்க்கும். அவை வற்றி யிருப்பது கண்டு ஏமாற்றமடையும்.

''எங்கேயாவது தண்ணீர் அகப்படுமா ? என்று ஏங்கி நோக்கும். தொலைவிலே ஆற்று நீர் தெளிந்து ஓடுவதுபோல் காட்சி தரும். அதைக் கண்டு அங்கே ஓடும். அது வெறுங் கானல் நீர். அதையறியாது மேலும் மேலும் அதைத் துரத்திக் கொண்டே ஓடும். இத்தகைய கஷ்டங்கள் உள்ளன நீ செல்லும் வழியிலே''என்று கூறி அவனது உறுதியைக் குலைக்க முயன்றாள்; அச்சம் உண்டு பண்ணினாள். அவன் கலங்கவில்லை.

''வழியிலே உள்ள துன்பங்களை அறிவேன்'' என்றான்.

தோல்வியுற்றாள் தோழி. அவளது முயற்சி பலிக்கவில்லை. முடிவாக ஒரு பாணம் தொடுக்க முடிவு செய்தாள்; சொல்கிறாள் :

''எல்லாம் சரி. நீயோ போகப் போகிறாய். முடிவு செய்து விட்டாய். இனி யார் தடுத்தாலும் கேட்கமாட்டாய். அப்படி யிருக்க நான் சொல்லிக் கேட்கப் போகிறாயா என்ன ? ஒன்று மில்லை. இருந்தாலும் சொல்கிறேன் கேள்: நீ வெளியூர் செல்வது எதற்காக? பொருள் தேடுவதற்காக. பொருள் எதற் காக? இன்பத்திற்காக. இன்பம் யாரிடம்? உன் காதலியிடத்தே. நீ பொருள் தேடிக்கொண்டு வரும்போது அவள் இருந்தால்

தானே? இல்லாவிடில் நீ தேடிக்கொண்டு வந்த பொருளால் என்ன பயன்?

"அவளோ இப்போதே வருந்துகிறாள்; வாடிவிட்டாள்; வதங்கி விட்டாள். இலையுதிர் காலத்திலே சருகுகள் உதிர்வன போல் அவளது கை வளைகள் கழன்று விழுகின்றன. முகமோ பசலை பாய்ந்துவிட்டது. சுனையிலே மலர்ந்த கரு நீல மலர் போன்ற அவளது கண்கள் நீர் சொரிகின்றன.

"நீ சென்றுவிட்டால் அவள் உயிரும் சென்றுவிடும். அது உறுதி. யோசித்து முடிவு செய்" என்றாள்.

கேட்டான் அவன். நாகபாசத்தால் கட்டுண்டவன்போல் ஆனான்.

'வேனில் உழந்த வறிது உயங்கு ஓய் களிறு
வான் நீங்கு வைப்பின் வழங்காத் தேர் நீர்க்கு அவாஅம்
கானம் கடத்திர், எனக் கேட்பின், யான் ஒன்று
உசாவுகோ - ஐய! - சிறிது?

நீயே, செய் வினை மருங்கில் செலவு அயர்ந்து, யாழ நின்
கை புனை வல் வில் ஞாண் உளர்தீயே;
இவட்கே, செய்வு உறு மண்டிலம் மையாப்பது போல்,
மை இல் வாள் முகம் பசப்பு ஊரும்மே.

நீயே, வினை மாண் காழகம் வீங்கக் கட்டி,
புனை மாண் மரீஇய அம்பு தெரிதியே;
இவட்கே, சுனை மாண் நீலம் கார் எதிர்பவை போல்,
இனை நோக்கு உண்கண் நீர் நில்லாவே.

நீயே, புலம்பு இல் உள்ளமொடு பொருள்வயிற்
செலீஇய,
வலம் படு திகிரி வாய் நீவுதியே;
இவட்கே, அலங்கு இதழ்க் கோடல் வீ உகுபவை
போல்,
இலங்கு ஏர் எல் வளை இறை ஊரும்மே.
என நின்,

செல் நவை அரவத்தும் இனையவள் நீ நீப்பின்,
தன் நலம் கடைகொளப்படுதலின், மற்று இவள்
இன் உயிர் தருதலும் ஆற்றுமோ -
முன்னிய தேஎத்து முயன்று செய் பொருளே?

## 36. வீணையும் வாழ்வும்

"ஏன் அம்மா! ஏன் கண்ணீர் வடிக்கிறாய்? என்ன வந்து விட்டது உனக்கு? யார் என்ன சொன்னார்கள்? எதை நினைத்து வருந்துகிறாய்?"

'மட மட' என்று கேள்வி மேல் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனாள் தோழி.

"ஒன்றுமில்லை" என்று கூறிக் கண்களைத் துடைத்துக் கொண்டாள் அவள். துக்கம் தொண்டையை அடைத்தது.

"அழாதே! கண்ணைத் துடை! சின்னஞ் சிறு வயது. கிளி போல் இருக்கிறாய். கண்ணுக் கினிய காதலன் கூட இருக்கிறான். இருக்கும் போது என்ன துயரம் உனக்கு. மகிழ்ச்சியினால் துள்ளி விளையாட வேண்டிய காலம் அல்லவா!"

இவ்விதம் தோழி கூறிய வார்த்தைகளைக் கேட்டாள். அடங்கி இருந்த துக்கம் பீறிக் கொண்டு கிளம்பியது. 'விம்மி விம்மி' அழுதாள்.

"அவர்....அவர்..." என்ற சொற்கள் அந்த விம்மலின் ஊடே கலந்து வந்தன.

"அவருக்கென்ன அம்மா! அவர்தான் இருக்கிறாரே!" என்றாள் தோழி.

"இல்லை....போகப் போகிறார்" என்றாள் அவள்.

"எங்கே போகப் போகிறார்?" என்றாள் தோழி.

"வெளிநாட்டுக்கு" என்று கூறிக் கொண்டே 'கோ' வென்று அழுதாள் அவள்.

"இவ்வளவுதானே! இதற்கா வருந்துகிறாய்? வருந்தாதே! இதோ நான் போகிறேன். அவரைப் பார்க்கிறேன். 'இப்போது என்ன அவசரம் வெளியூர் போக?' என்று சொல்லி நிறுத்தி விடு

கிறேன். போதுமா...?அவ்வளவுதானே!" என்று கேட்டாள் தோழி.

'உம்' என்று தலையை ஆட்டினாள் அவள்.

தோழி புறப்பட்டாள் தலைவனிடம்.

"வீணை வாசித்துக் கொண்டிருக்கிறான் ஒருவன். மிக அருமையாக வாசிக்கிறான். தந்திகள் ஏழும் மிக சுத்தமாகப் பேசுகின்றன. விரல்கள் கொஞ்சித் தடவுகின்றன. இனிய இசை. அந்த இசை கேட்டு இன்புற்றிருக்கின்றனர் பலர். 'ஆகா' என்று கூறி ஆரவாரம் செய்கிறார்கள். 'சபாஷ்' என்று சொல்லி

"இந்தமாதிரியான சமயத்திலே என்ன நடக்கிறது? தந்தி அறுந்து போகிறது.

"இன்பக் கோட்டை இடிந்து போகிறதல்லவா ?

"இந்தமாதிரி நீ செய்யலாமா? வீணையின் :தந்தியை அறுக விடலாமா ?" என்று கேட்டாள் அவள்.

"என்ன புதிர் போடுகிறாய்? எனக்கு ஒன்றும் விளங்க வில்லையே!" என்றான் அவன்.

"புரியவில்லையா? புரியும்படி சொல்கிறேன், கேள். வீணை நீ, தந்தி அவள். நீயும் உன் காதலியும் எதுபோல்? வீணையும், தந்தியும் போல். தந்தி தனியே இருந்தால் அதற்கு மதிப்பு உண்டா ? இல்லை. வீணை தந்தியின்றி இருந்தால் அதற்கு மாண்புண்டா? இல்லை. வீணையும் தந்தியும் போன்றதுதான் காதல் வாழ்க்கை. இவை இரண்டும் சேர்ந்தால்தான் காதல் வாழ்க்கை இன்பம் தரும்." என்றாள் அவள்.

"ஆமாம்; வீணையும் தந்தியும் போலத்தானே நாங்கள் வாழ்கிறோம்?" என்றான் அவன்.

"ஆமாம்; வாழ்கிறாய். வீணை வாசிக்கும் போது ஏற்படும் இன்பம்போல் இன்பமும் அளிக்கிறாய். திடீரென்று தந்தி அறுந்து விட்டால்...என்னாகிறது?" என்றாள் அவள்.

"தந்தி எங்கே அறுந்துவிட்டது ?" என்றான் அவன்.

"அதைத்தான் அறுத்துவிடப் பார்க்கிறாயே!" என்றாள் அவள்

"நான் எங்கே அறுக்கப் பார்க்கிறேன்?"

"ஆமாம்; நீயேதான்! வெளியூர் போகிறேன், என்கிருயே! அதன் பொருள் என்ன?"

"பொருளுக்காகத்தானே நான் வெளியூர் போகிறேன்."

"பொருளுக்காகத்தான் போகிருய். உண்மை. ஆனல் பொருள் எதற்கு? இன்பத்திற்கு. இன்பம் எது? எங்கேயிருக்கிறது இன்பம்? வீணையின் தந்தியில் அல்லவா இருக்கிறது? தந்தி அறுந்து போனல் இன்பம் எங்கிருந்து வரும்? வராது.

"இந்த யாழ் இன்பம் நிலையானது என்று நான் சொல்லவில்லை. யாழ் இன்பம் போன்ற காதல் இன்பமும் நிலையானது என்று நான் சொல்லவில்லை. ஆனல் நீ விரும்பிச் செல்கிற பொருள் இருக்கிறதே, அது இவற்றைவிட வெகு விரைவில் அழிந்து போகக் கூடியது; நிலையற்றது. அதை நோக்கும்போது யாழ் இன்பமும், காதல் இன்பமும் நிலை பெற்றது. நிலையற்ற இந்தப் பொருள் இன்பத்தில் பற்றுக் கொள்ளலாமா? கூடாது; கூடாது. விடு; விட்டு விடு. காதல் இன்பத்தை அநுபவி. யாழ் இன்பத்திலே ஊறித் திளை" என்ருள் அவள்.

கேட்டான் அவன். சும்மா இருந்தான். 'நமது பேச்சு, காதில் ஏறிவிட்டது' என்று கண்டு கொண்டாள் தோழி. 'அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்' என்பது அவளுக்குத் தெரியும். எனவே, மேலும் கரைக்கத் தொடங்கிளுள் அவள்.

"மந்திரிப் பதவி கிடைக்கிறது. பேரும் புகழும் கிடைக்கின்றன. நாட்டுக்கு நல்ல காரியங்கள் செய்கின்ருர் மந்திரி. அப்படிச் செய்கின்றபோது சில தவறுகளும் நிகழ்வதுண்டு. நல்ல காரியம் செய்தாரே மந்திரி என்பதற்காக, அவர் செய்த தவறு கண்டும் சும்மா இருக்க முடியுமா? முடியாது. தூக்கி எறிய வேண்டியதுதானே! இத்தகைய மந்திரிப் பதவியைவிட, நிலையற்றது பொருள். பதவி, வரும்; போகும். அதைவிட விரைவில் வந்துபோகும் பொருள்.

பொருள் வந்து விட்டது என்று தலைகொழுத்துத் திரிய முடியாது. 'பொசுக்' கென்று போய்விடும். எனவே, அந்தப் பொருளைப் பெரிதாக எண்ணதே. தங்கப் பதுமைபோல் இருக்கிருள் காதலி. அவளுடன் இன்பமாகக் காதல் செய். அதுவே பொருள் தேடும் வழி" என்ருள்.

கேட்டான் அவன். பிரயாண முயற்சியைக் கைவிட்டான். காதலிபால் சென்றான்.

நடுவு இகந்து ஒரீஇ நயன் இல்லான் வினை வாங்க,
கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல, ஞாயிறு
கடுகுபு கதிர் மூட்டிக் காய் சினம் தெறுதலின்,
உறல் ஊறு கமழ் கடாத்து ஒல்கிய எழில் வேழம்,
வறன் உழு நாஞ்சில் போல், மருப்பு ஊன்றி நிலம் சேர,
விறல் மலை வெம்பிய போக்கு அரு வெஞ் சுரம்
சொல்லாது இறப்பத் துணிந்தனிர்க்கு ஒரு பொருள்
சொல்லுவது உடையேன்; கேண்மின், மற்று ஐஇய!

வீழுநர்க்கு இறைச்சியாய் விரல் கவர்பு இசைக்கும் கோல்
ஏழும் தம் பயன் கெட, இடை நின்ற நரம்பு அறூஉம்
யாழினும் நிலை இல்லாப் பொருளையும் நச்சுபவோ?

மரீஇத் தாம் கொண்டாரைக் கொண்டக்கால் போலாது,
பிரியுங்கால் பிறர் எள்ள, பீடு இன்றிப் புறம் மாறும்
திருவினும் நிலை இல்லாப் பொருளையும் நச்சுபவோ?

புரை தவப் பயன் நோக்கார் தம் ஆக்கம் முயல்வாரை
வரைவு இன்றிச் செறும் பொழுதில், கண் ஓடாது உயிர் வௌவும்
அரைசினும் நிலை இல்லாப் பொருளையும் நச்சுபவோ?
என ஆங்கு -

நச்சல் கூடாது, பெரும! இச்செலவு
ஒழிதல் வேண்டுவல், சூழின், பழி இன்று;
மன்னவன் புறந்தர வரு விருந்து ஓம்பி,
தன் நகர் விழையக் கூடின்,
இன் உறல் வியன் மார்ப! அது மனும் பொருளே,

## 37. ஓடிய பெண்ணும் தேடிய முத்தும்

ஒரு பெண்; பருவம் வந்தவள்; நல்லகட்டழகி. பெரிய இடத்துப் பெண்தான். காதல் கொண்டாள், ஒரு கட்டழகன் மீது. கூடிக் களித்து இன்புறுவதற்கு சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. களவு ஒழுக்கம் நீடித்து நடக்கவும் வழியில்லை. கட்டும் காவலும் அதிகம்.

என்ன செய்வது? இரண்டு பேரும் ஏங்கினார்கள்.

"எங்கேயாவது ஓடிப்போய்விடலாமா?" என்று கேட்டாள் அவள்.

"தைரியம் உண்டா?" என்று கேட்டான் அவன்.

"உனது உற்றார் பெற்றார், ஊர், வீடு, இவற்றையெல்லாம் விட்டு வருவாயா?" என்றும் கேட்டான்.

"எனது உற்றார் பெற்றார், ஊர், வீடு எல்லாம் இனி நீ தானே! நீ இல்லாத இடம் எனக்கு நரகம்தானே?" என்றாள் அவள்.

"நான் ஆண் பிள்ளை. நடந்து பழக்கப்பட்டவன். பாலை வழி நடப்பேன். ஆனால் நீயோ, பெண். பாலை வழி நடந்து பழக்கமில்லாதவள். வழி, கரடும் முரடுமாக இருக்கும். கல்லும் முள்ளும் நிறைந்திருக்குமே! நடக்க முடியுமா?" என்றான் அவன்.

"ஓ! தெரியுமே எனக்கு! காதல் வழி கரடு முரடானது தான். கல்லும் முள்ளும் நிறைந்ததுதான். ஆனாலும் அந்த வழியிலே நின் கை பற்றி நடக்கும்போது—ஆகா! எப்பேர்ப்பட்ட துன்பமும் இன்பமாக அல்லவோ இருக்கும்" என்றாள் அவள்.

"அப்படியானால் சரி. புறப்படு" என்றான். நங்கை புறப்படத் தயாரானாள்.

விடியற்காலை நேரம். படுக்கையை விட்டு எழுந்தாள். படுக்கையிலே தலையணையை வைத்தாள். அதன் மீது போர்வையைப் போர்த்தினாள், யாராவது பார்த்தால் போர்த்திக் கொண்டு தூங்குவதாக நினைத்துக் கொள்ளட்டும் என்று.

அடிமேல் அடி எடுத்து வைத்து நடந்தாள். கொல்லைக் கதவின் அருகே வந்து நின்றாள். வீட்டிலே உள்ளார் அனை

வரும் நன்ருகத் தூங்கிக் கொண்டிருந்தனர். குறட்டை பலமாக வந்தது. மெதுவாக இருமினுள், யாராவது விழித்துக் கொள் கிருர்களா என்று பார்ப்பதற்காக. யாரும் விழித்துக் கொள்ள வில்லை. குறட்டை இன்னும் பலமாக வந்தது. தாழ்ப்பாளைத் தள்ளிவிட்டாள். குடுமிக் கதவு 'கிரீச்' என்று திறந்து கொண் டது. மறுபடியும் கதவைச் சாத்தினுள். வெளியேறினுள், சிறைக்குள்ளே அடைபட்டுக் கிடந்த கைதி வெளியேறியது போல. கடுகி நடந்தாள். தோட்டத்து வேலியைத் தாண்டினுள். அங்கே நின்றுகொண்டிருந்தான் காதலன். இருவரும் ஒரு முறை கட்டி அணைத்துக்கொண்டனர். வாய் பேசாது புறப்பட் டனர். நடை! நடை! வெகு வேகமான நடை! ஏன்? பொழுது விடிவதற்குள் வெகு தூரம் போய்விடவேண்டும். அதற்காக முடுகி நடந்தனர்.

• கோழி கூவிற்று. நிலம் தெளிந்தது. இருள் பிரிந்தது. பொன்னிறக் கதிர் பரப்பி வந்தான் கதிரவன். வீட்டிலே உள் ளார் எல்லாரும் எழுந்துவிட்டனர். அவரவர் தம் தம் வேலை யைக் கவனிக்கச் சென்றனர்.

அவள் எங்கே? யாரும் கவனிக்கவில்லை. 'காலை நேரம்; ஆற் றங் கரைக்குப் போயிருப்பாள். வந்து விடுவாள்' என்று எண்ணி யிருந்தனர். பொழுதும் ஏறிற்று. அவளும் வரவில்லை.

"எங்கே அவள்?" என்ற கேள்வி எல்லோரது வாயினின் றும் பிறந்தது.

தோழி வந்தாள். 'எங்கே அவள்?' என்று கேட்டாள். 'உனக்கும் தெரியாதா? நீயும் அவளும் எங்கேயோ போயிருக் கிறீர்களாக்கும் என்றல்லவா நினைத்தேன்' என்ருள் செவிலித் தாய்.

'சரி. கம்பி நீட்டிவிட்டாள்' என்று முடிவு செய்தாள் செவிலி. அவளது தாயிடம் சென்ருள். "பட்சி பறந்து போயிற்று" என்ருள்.

"ஹா! ஓடிப் போய் விட்டாளா!" என்று கேட்டாள் தாய்.

"அடி பாவி! என் தலையிலே கல்லைப் போட்டியே!" என்று முகாரி பாடத் தொடங்கினுள்.

வீட்டில் உள்ளவர் எல்லாருக்கும் விஷயம் தெரிந்துவிட்டது.

"சரி. நீங்கள் சும்மா இருங்கள். ஊர் முழுதும் அமர்க் களம் செய்து கூட்டி விடாதீர்கள். அவள் எங்கேயாவது அவ னுடன் இருக்கிறாளா என்று தேடிப் பார்க்கிறேன். இருந்தால் பிடித்து இழுத்துக்கொண்டு வருகிறேன்" என்று கூறினாள் செவிலி. பெண்ணைத் தேடிப் புறப்பட்டாள்.

ஓடிப் போனவள் எங்கே இருப்பாள். ஊருக்குள்ளேயா இருப்பாள்? இருக்கமாட்டாள். வெளியூருக்குத்தான் போயி ருப்பாள். எனவே அந்த வழியிலே கடுகி நடந்தாள். வெகு தூரம் நடந்தாள்.

ஓடிப்போன புறு இரண்டும் இளம் வயது. பயம் வேறு. வெகு வேகமாகப் பறந்திருக்கும். இவளோ கிழவி. இவள் நடந்துபோய் அவர்களைப் பிடித்துவிட முடியுமா? முடியாதல்லவா?

இந்தக் காலமா? தந்தி அடித்துக் கேட்கலாம். அல்லது போலீஸ் ஸ்டேஷனில் எழுதி வைக்கலாம். எந்தச் சீமைக்குப் போயிருந்தாலும் கண்டுபிடித்துக் கொண்டு வந்துவிடமுடியும். அந்தக் காலத்திலே என்ன செய்யமுடியும்? வழிப்போக்கர்களைக் கேட்டுத் தகவல் தெரிந்துகொள்ளத்தான் முடியும்.

அவ் வழியே சிலர் வந்தனர். ஒரு கையிலே குடை, வெயிலுக்காக; மற்றொரு கையிலே நீர்க் கரகம்; இவற்றுடன் வரும் சாதுக்கள். ஊர் ஊராகச் சுற்றித் திரிபவர். உலக இயல் தெரிந்த பெரியவர்கள்.

அவர்களைக் கண்டாள். வணங்கினாள். "ஐயா! நீங்கள் வரும் வழியிலே ஒரு பெண்ணைக் கண்டீர்களா?" என்று கேட்டாள்.

"பெண்ணா? என்ன வயசு?" என்று கேட்டனர்.

"பருவம் வந்த பெண்" என்றாள்.

"பருவம் வந்த பெண்ணா? சரிதான். ஏன் வீட்டை விட்டு வெளியேறினாள்?"

"வயசு வந்த பெண். கலியாணம் செய்து கொடுக்க எண்ணியிருந்தோம். எங்களிடம் ஒன்றும் சொல்லவில்லை. யாருடனோ ஓடிப்போய்விட்டாள். ஊரிலே தலைகாட்ட முடிய

வில்லை. அவமானம். பாவிப் பெண். எங்கள் தலையிலே கல்லைப் போட்டு விட்டாள்'' என்று அலறினாள்.

''அம்மா! வீணாக ஏன் அரற்றுகிறீர்கள்? கொஞ்சம் நிதானித்துக் கேளுங்கள் : சந்தன மரம். நல்ல வாசனைமிக்க சந்தனம். மலையிலே விளைகிறது. அதனாலே அந்த மலைக்கு ஏதாவது பயனுண்டா? மலையிலே பிறந்த சந்தன மரம் மலையிலேதான் இருக்கவேண்டும் என்று சொல்ல முடியுமா? முடியாது. இன்ன மலையிலே பிறந்த சந்தன மரம் என்று வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம். அதோடு திருப்தியடைய வேண்டியதுதானே? மலையிலே பிறந்த மரத்தைத் துண்டாக்கி இழைத்துப் பூசி மற்றையோர் அனுபவிப்பது இயற்கைதானே! பெண்ணைப் பெற்றவர்களுக்கும் இப்படித்தான். பெண் என்னவோ உங்களுடையது தான். அதற்காக உங்கள் வீட்டிலேயே வைத்துக்கொள்ள முடியுமா? என்றைக்கிருந்தாலும் மற்றொருவனுடன் போக வேண்டியவள்தானே ?

''முத்து இருக்கிறது. கடலிலேதான் பிறக்கிறது. இருந்தாலும் அதனாலே கடலுக்கு ஏதாவது பயன் உண்டா? எந்நாளும் கடலிலேதான் கிடக்கவேண்டும் என்று சொல்ல முடியுமா? முடியாது. கடலிலே பிறந்ததாயினும் நல்முத்து சிலநாள் வரைதான் கடலில் கிடக்கும். பிறகு எங்கே போகுமோ? யார் கைப்படுமோ? ஒன்றும் சொல்ல முடியாது. எது எப்படியாயினும் அதனால் கடலுக்கு ஏதும் பயனில்லை. பயன் மற்றவருக்கே! 'என்னிடம் விளைந்த முத்து. என்னிடம்தான் இருக்கவேண்டும்' என்று கடல் சொல்ல முடியுமா? உங்கள் பெண் விஷயமும் அப்படித்தான்!

''வீணை இருக்கிறது. நல்ல வீணை. அருமையான தஞ்சாவூர் வீணை. கொஞ்சும் வண்ணம் வாசிக்கிறான் ஒருவன். இனிய இசை எழுகிறது. இதனால் வீணைக்கு ஏதாவது பயன் உண்டோ? 'என்னிடத்திலிருந்து பிறந்த இசைதானே! நான்தான் அதை வைத்துக் கொள்வேன். பிறருக்குக் கொடுக்கமாட்டேன்' என்று வீணை சொல்லமுடியுமோ? முடியாது. யாழிலிருந்து பிறக்கும் இன்னிசை மற்றவர் இன்பம் பெறுவதற்கே. யாழுக்கல்ல. அதே மாதிரிதான் உங்கள் பெண்ணும். வயதுவந்த பெண்.

தான் விரும்பிய ஒருவனுடன் போனாள். போகட்டுமே. தவறு என்ன? உலகியல் இதுதானே!

"வழியில் நாங்கள் பார்த்தோம் அக் காதலரை. அவர்கள் நன்றாக வாழ்க, என்று வாழ்த்தி வந்தோம்.

"நீங்கள் சிறிதும் கவலைப்படாமல் வீடு செல்லுங்கள்" என்று அந்த சாதுக்கள் கூறினார்கள்.

செவிலித்தாய் வீடுவந்து சேர்ந்தாள்.

'எறித்தரு கதிர் தாங்கி ஏந்திய குடை நீழல்,
உறித் தாழ்ந்த கரகமும், உரை சான்ற முக்கோலும்,
நெறிப்படச் சுவல் அசைஇ, வேறு ஓரா நெஞ்சத்துக்
குறிப்பு ஏவல் செயல் மாலைக் கொளை நடை அந்தணீர்!–
வெவ் இடைச் செலல் மாலை ஒழுக்கத்திர்; இவ் இடை,
என் மகள் ஒருத்தியும், பிறள் மகன் ஒருவனும்,
தம்முளே புணர்ந்த தாம் அறி புணர்ச்சியர்;
அன்னார் இருவரைக் காணிரோ?—பெரும!'

'காணேம் அல்லேம்; கண்டனம், கடத்திடை;
ஆண் எழில் அண்ணலோடு அருஞ் சுரம் முன்னிய
மாண் இழை மடவரல் தாயிர் நீர் போறிர்.

பல உறு நறுஞ் சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை,
மலையுளே பிறப்பினும், மலைக்கு அவைதாம்
என் செய்யும்?
நினையுங்கால், நும் மகள் நுமக்கும் ஆங்கு அனையளே.

சீர் கெழு வெண் முத்தம் அணிபவர்க்கு அல்லதை,
நீருளே பிறப்பினும், நீர்க்கு அவைதாம் என் செய்யும்?
தேருங்கால், நும் மகள் நுமக்கும் ஆங்கு அனையளே.

ஏழ் புணர் இன் இசை முரல்பவர்க்கு அல்லதை,
யாழுளே பிறப்பினும், யாழ்க்கு அவைதாம்
என் செய்யும்?
சூழுங்கால், நும் மகள் நுமக்கும் ஆங்கு அனையளே.
என ஆங்கு—

இறந்த கற்பினட்கு எவ்வம் படர்ன்மின் ;
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள் ;
அறம் தலைபிரியா ஆறும் மற்று அதுவே.

## 38. 'பிரியாதே! உயிர் தரியாதே'

வெளியூர் செல்வதற்கான முயற்சியில் ஈடுபட்டிருக்கிருன் அவன். எதற்காக? பொருள் தேடுவதற்காக. அதுகண்டு வருந்தினள் காதலி. காதலியின் வருத்தம் கண்டாள் தோழி. தலைவன்பால் சென்ருள். சென்று பேசுகிருள்:

"வீட்டிலே ஒரு பொருளைக் கொண்டுவந்து வைத்திருக்கிருய். வெளியிலே போக முயற்சி செய்கிருய், இன்னும் பொருள் தேடுவதற்கு. இருக்கும் பொருளை இன்பமாக அனுபவிக்க வேண்டாமா?" என்ருள் அவள்.

அவன் பேசாதிருந்தான். வேலைத் துடைத்துக் கொண்டிருந்தான்.

"நீ செல்லும் வழி எத்தகையது தெரியுமா?" என்ருள்.

"தெரியும். பாலைவனம்" என்ருன்.

"காலம் எத்தகையது?"

"கோடை காலம்"

"ஆமாம்! மரங்கள் எப்படியிருக்கும்? இளமையிலே வறுமையால் கஷ்டப் படுபவனைப்போலிருக்கும். அற்பர்களுக்கு செல்வம் சேர்ந்தால் எப்படி மற்றவருக்குச் சிறிதும் ஈயாரோ, அம்மாதிரிகொஞ்சமும் நிழல் கொடாது இத்தகைய பாலை வழி.

"சரி நீ போ. ஆனல் ஒன்று சொல்கிறேன் கேள். உன்னுடைய காதலி இருக்கிருளே, அவள் ஒரு கணமும் உன்னைப் பிரியாதவள். ஒருநாள்—தூக்கத்தின்போது நீ என்ன செய்தாய்? உன்மீது அவள் அணைத்திருந்த கையை அப்பால் எடுத்து விட்டாய். அதற்கே அவள் மிக வருந்தினள். அந்தப் பிரிவு கூட அவளால் தாள இயலவில்லை. விளையாட்டுக்காக நீ மறைந்து நின்ருய். அதையும் தாங்க முடியவில்லை அவளுக்கு.

பிரிவு என்றால் அவ்வளவு வருத்தம். அத்தகையவள் உன் காதலி.

"பொருள் தேடுவதற்காக நீ வெளியூர் சென்றிருக்கிறாய் என்று நான் சொன்னால், அவள் எப்படிப் பொறுப்பாள்? எவ்வாறு சகிப்பாள். அந்த நிமிஷமே இறப்பாள்," என்றாள்.

கேட்டான் அவன். மனம் மாறினான். வெளியூர் செல்லும் முயற்சியைக் கை விட்டான்.

வறியவன் இளமை போல், வாடிய சினையவாய்,
சிறியவன் செல்வம் போல், சேர்ந்தார்க்கு நிழல் இன்றி,
யார்கண்ணும் இகந்து செய்து இசை கெட்டான்
 இறுதி போல்,
வேரொடு மரம் வெம்ப, விரி கதிர் தெறுதலின்,
அலவுற்றுக் குடி கூவ, ஆறு இன்றிப் பொருள் வெஃகி,
கொலை அஞ்சா வினைவரால், கோல் கோடியவன் நிழல்
உலகு போல், உலறிய உயர் மர வெஞ் சுரம்—

இடை கொண்டு பொருள்வயின் இறத்தி நீ எனக்
 கேட்பின்,
உடைபு நெஞ்சு உக, ஆங்கே ஒளியோடற்பாள்
 மன்னோ -
படை அமை சேக்கையுள் பாயலின் அறியாய் நீ
புடை பெயர்வாய் ஆயினும், புலம்புகொண்டு
 இனைபவள்?

முனிவு இன்றி முயல் பொருட்கு இறத்தி நீ எனக்
 கேட்பின்,
பனிய கண் படல் ஒல்லா படர் கூர்கிற்பாள் மன்னோ -
நனி கொண்ட சாயலாள் நயந்து நீ நகையாகத்
துனி செய்து நீடினும், துறப்பு அஞ்சிக் கலுழ்பவள்?

பொருள் நோக்கிப் பிரிந்து நீ போகுதி எனக் கேட்பின்,
மருள் நோக்கம் மடிந்து ஆங்கே மயல் கூர்கிற்பாள்
 மன்னோ -
இருள் நோக்கம் இடையின்றி, ஈரத்தின் இயன்ற நின்

அருள் நோக்கம் அழியினும், அவலம் கொண்டு
　　அழிபவள் ?
என ஆங்கு -

'வினை வெஃகி நீ செலின், விடும் இவள் உயிர்' என,
புனையிழாய் ! நின் நிலை யான் கூற, பையென,
நிலவு வேல் நெடுந் தகை நீள் இடைச்
செலவு ஒழிந்தனனால் ; செறிக, நின் வளையே !

## 39. சுரமும் சுனையும்

"கண்ணே! போய் வருகிறேன்." என்றான் அவன்.

கொம்பைத் தழுவும் பூங்கொடிபோல் கட்டிக்கொண்டாள் அவள். "நீண்ட நாள் தங்கி விடாதீர்கள்" என்றாள்.

"சீக்கிரமாக வந்து விடுகிறேன். கவலைப்படாதே" என்றான் அவன். வெளியூர் சென்றான். சென்று பல நாட்கள் ஆயின. மாதங்களும் சென்றன. அவன் வரவில்லை.

'இன்னும் வரவில்லையே! 'சீக்கிரம் வந்து விடுவேன்' என்று சொன்னாரே' என்று ஏங்கினாள்.

"'பாலை நிலத்தின் வழியே போகவேண்டும்; வெயிலின் கொடுமை தாங்க முடியாது; குடிப்பதற்கு நீர் கிடைக்காது; நீர் நிலைகள் எல்லாம் வற்றியிருக்கும்.

"'வெயிலுக்கு இளைப்பாற நிழல் இராது;மரங்கள் மொட்டை யாயிருக்கும் இலைகள் தீய்ந்து போயிருக்கும்' என்றீரே! அந்த வழியில் அவர் என்ன கஷ்டப்பட்டாரோ! எப்படிச் சென்றாரோ!

"நிற்பதற்கு நிழல் இன்றி,வருந்ினாரோ! குடிப்பதற்குத் தண்ணீர் கிடைக்காமல் தவித்தாரோ! இந்த வழியிலே சீக்கிரமாக வருவது எப்படி?" என்று புலம்பினாள் அவள். கேட்டாள் தோழி. அவள் சொல்கிறாள்:

"வருந்தாதே! அந்தப் பாலை வழி அவர் கூறிய மாதிரி வெம்மை நிறைந்ததுதான். இருந்தாலும் உன் நினைவு அவருக்கு

இருந்துகொண்டே இருக்கும். அதற்குரிய எல்லாம் அங்கே உள்ளன.

"அங்கே யானைகள் ஆணும் பெண்ணுமாகச் சுனை நோக்கிச் செல்லும். எதற்கு? நீர் குடிப்பதற்கு. அவற்றிற்கு முன்னே யானைக் குட்டிகள் ஓடும். சுனையிலே நீர் கொஞ்சமாகத்தான் இருக்கும். அதிலே இறங்கிக் குட்டையைக் கலக்கி விடும் அந்தக் குட்டிகள். ஆண் யானையும் பெண் யானையும் பின்னே வரும். நீர் கலங்கிச் சேருகி இருப்பதைக் காணும். ஆங்குள்ள சிறிது நீரைத் தன் காதலிக்கு ஊட்டும் ஆண் யானை. பிறகே தான் குடிக்கும்.

"அந்தக் காட்டு வழியிலே அழகிய புருக்கள் உண்டு. வெயில் நேரத்திலே அவை என்ன செய்யும்? ஆண்புரு தன் சிறகை விரிக்கும். அந்த நிழலில் பெண் புரு இளைப்பாறும்.

வெயிலின் கொடுமை தாளாது தவிக்கும் மான்கள். அந்த நேரத்திலே ஆண் மான்கள் என்ன செய்யும்? வெயிலிலேதாம் நிற்கும். அவற்றால் ஏற்படும் நிழலிலே தமது இன்பப் பெண் மான்கள் இளைப்பாறச் செய்யும். இவற்றையெல்லாம் காணாது இருப்பாரா உன் காதலர்? காண்பார். காணும்போது அவருக்கு உனது நினைவு தோன்றும். உடனே வந்து விடுவார். நீண்ட நாள் தங்கமாட்டார். வருவார். வருந்தாதே!

"ஆமாம்! வருவார் என்று சொல்வதுபோல என் இடது கண் துடிக்கிறது. பல்லியும் கௌளி சொல்கிறது" என்றாள் அவள். அது கேட்டு மனம் தேறினாள் தலைவி.

'அரிதாய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும்,
பெரிதாய பகை வென்று பேணாரைத் தெறுதலும்,
புரிவு அமர் காதலின் புணர்ச்சியும் தரும்' என,
பிரிவு எண்ணிப் பொருள்வயிற் சென்ற நம் காதலர்
வருவர்கொல்; வயங்கிழாஅய்! வலிப்பல், யான்;
கேஎள், இனி:

'அடி தாங்கும் அளவு இன்றி, அழல்அன்ன
வெம்மையால்,

கடியவே' - கனங் குழாஅய்! - 'காடு' என்றார்;
'அக் காட்டுள்,
துடி அடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடி ஊட்டி, பின் உண்ணும், களிறு' எனவும்
உரைத்தனரே.

'இன்பத்தின் இகந்து ஒரீஇ, இலை தீந்த உலவையால்,
துன்புறூஉம் தகையவே காடு' என்றார்; 'அக் காட்டுள்,
அன்பு கொள் மடப் பெடை அசைஇய வருத்தத்தை
மென் சிறகரால் ஆற்றும், புறவு' எனவும்
உரைத்தனரே.

'கல் மிசை வேய் வாடக் கனை கதிர் தெறுதலான்,
துன்னரூஉம் தகையவே காடு' என்றார்; 'அக் காட்டுள்,
இன் நிழல் இன்மையான் வருந்திய மடப் பிணைக்குத்
தன் நிழலைக் கொடுத்து அளிக்கும், கலை' எனவும்
உரைத்தனரே.
என ஆங்கு -

இனை நலம் உடைய கானம் சென்றோர்
புனை நலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்
பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன;
நல் எழில் உண்கணும் ஆடுமால், இடனே.

## 40. 'பருவத்தே பயிர் செய்!'

"உனது காதலி இருக்கிறாளே! அவளுக்கு உன் மீது உயிர்" என்று சொல்லிக் கொண்டே வந்தாள் தோழி.

"ஆமாம்...அதற்குப் பெயர்தானே காதல்!" என்று பதில் கூறினான் அவன்.

"அன்பு என்றால், இவ்வளவு என்று சொல்ல முடியாது, அவ்வளவு அன்பு!" என்றாள் அவள்.

"தெரியுமே!" என்றான் அவன்.

"தெரியுமா...தெரிந்திருந்தால் நீ இப்படிச் செய்யமாட்டாய்" என்றாள் அவள்.

"என்ன செய்துவிட்டேன்?" என்று கேட்டான்.

"போகத் துணிந்துவிட்டாயே!"

"எங்கே போகத் துணிந்துவிட்டேன்."

"அவளைப் பிரிந்து..."

"பிரிந்து என்றால் என்ன? ஒரேயடியாகப் பிரிந்து போய் விட்டேனா? பொருள் காரணமாக வெளியூர் போய் வரலாகாதா?" என்றான் அவன்.

"போய் வரலாம். ஆனால் அதற்கும் காலம் உண்டு அல்லவா? சின்னஞ் சிறுவயது. கிளிபோல் இருக்கிறாள் உன் காதலி, கண்ணுக்கினிய தோற்றம். இளமையின் எழில் இப்போதுதான் எடுப்பாக மலர்ந்து வருகிறது. இந்தச் சமயத்திலே காதல் இன்பத்தை அநுபவியாமல் எப்போது அநுபவிப்பது? இளமைப் பருவம் இருக்கிறதே, அது எப்போதும் இருந்துகொண்டே இருக்குமா? விரைவில் போய்விடுமே!

"காதலியுடன் கூடிச் சிலகாலம் இன்பமாயிரு. பிறகு பொருள் பற்றி நினை," என்றாள் அவள்.

"சரி. பொருள் இல்லாமல் ஏதும் நடவாதே. பொருள் அவசியமல்லவா?" என்றான் அவன்.

"அவசியம்தான். நீ போய் பொருள் தேடிக் கொண்டு வரும் வரையில் இளமை நிற்குமா? வயதாகி விடாதா? நீ பிரிந்து சென்ற பிறகு அவள் உன்னையே நினைத்து நினைத்து ஏங்குவாள்; வருந்துவாள்; வாடிப் போவாள்; வனப்பு இழந்து விடுவாள். அவளது இளமை முழுதும் இப்படி வாட்டத்திலேயே சென்றுவிடும். பிறகு நீ வந்து என்ன செய்வாய்? இரண்டு பேரும் கிழவராகி விடுவீர்கள்; இளமை போய்விடும். பிறகு காதல் இன்பம் நுகருவது எப்படி? சிறிது யோசித்துப்பார்! எனவே, காற்றுள்ள போதே தூற்றிக்கொள்! இளமை உள்ள போதே இன்பத்தைப் பருகு.

"கட்டழகி இருக்கிறாள்; காதலி இருக்கிறாள்; அவளும் நீயும் இன்பமாகக் காதல் புரிக," என்றாள் அவள்.

"வெளியூர் போகிறேன் என்றால் அதற்குள் ஏன் இப்படிப் பயப்படுகிறீர்கள். போனவன் திரும்பி வரமாட்டானா? வாழ் நாள் முழுதும் வெளிநாட்டிலேயே சென்றுவிடுமா? என்ன பைத்தியக்காரத்தனம்" என்றான் அவன்.

"ஐயா! இது, காலம் எப்படி? வெயில் காலம். காட்டு வழியே செல்ல வேண்டும். அந்த வழி எப்படி? கள்ளர் பயமுண்டு. கொலைஞர் பயமுண்டு. கொல்லுந் தொழில் அஞ்சார் வாழும் வழியே செல்கிறாய். காட்டு வழியிலே செல்வர் பலரைக் கொன்று குவித்து, இலைகளைப் போட்டு மூடி வைத்திருக்கிறார்கள். அந்த வழியேதான் நீயும் செல்ல வேண்டியிருக்கிறது. எந்த நேரத்திலே என்ன நிகழுமோ யார் கண்டார்? உயிரை என்ன, நாம் நமது கையில் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறோமா? எந்த நேரத்திலும் உயிருக்கு ஆபத்து வரலாம் அல்லவா? அதைத் தடுக்க நம்மால் முடியுமா? நீ செல்லும் வழியிலே உன் உயிருக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என் செய்வது? யோசித்துப் பார்."

"அடே டே! அப்படியும் நடந்துவிடுமோ! என்னதான் காடாக இருந்தபோதிலும், பாதை வழியே போவார் வருவாரை அக் கொலைஞர் என்ன செய்வார்? அதுவரை என் கைவேல் தூங்குமோ?" என்றான் அவன்.

"தூங்காது; தூங்காது. ஆனால் கொள்ளைக் கூட்டத்தினர் உன்னை வளைத்துக் கொண்டால் ஒருவனாக என்ன செய்வாய்? வெயில் காலம். சுனையிலே நீர் வற்றியிருக்கும். வற்றிய நீர் வெயிலின் கொடுமையால் வெந்நீராகிவிடும். நீர் வேட்கையால் வரும் யானைக் கூட்டம் அந்தச் சுனையிலே நீர் குடிக்க முயலும். கொதிக்கும் அந்த நீரின் சூடு தாங்கமாட்டாது நாலா திக்கிலும் ஓடும். அப்படி ஓடுவதால் பல பாதைகள், ஏற்பட்டிருக்கும். எனவே, நீ பாதை தவறிச் செல்வதும் கூடும். பாதை தவறிச் செல்லும் உன்னை அந்தக் கொள்ளைக் கூட்டம் வளைத்துக் கொன்று விட்டால் என் செய்வது? நன்றாக எண்ணிப் பார்! சிந்தித்துப் பார்.

"அப்படியெல்லாம் ஒன்றும் ஏற்படக் கூடாது. எல்லாம்

நன்மையாகவேதான் முடிய வேண்டும். போன காரியம் வெற்றி யாக வேண்டும்.

"வழியில் இடையூறு ஏதும் இன்றி நீ திரும்பி வர வேண்டும். என்றே நாம் நினைப்போம்.

"ஆனால் நாம் நினைக்கிறபடியே இந்த உலகத்தில் எல்லாம் நடக்கின்றனவா? இல்லையே! ஏதோ ஒன்று நிகழ்ந்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம். நஷ்டம் யாருக்கு? எப்பேர்ப் பட்ட பெரு நஷ்டம்? வாழ்வில் - இளமையில் - அநுபவிக்க வேண்டிய இன்பத்தை அநுபவியாதது பெரு நஷ்டம் அல்லவா? அந்த நஷ்டத்திற்கு ஈடு கொடுக்க, முடியுமா? நீ சம்பாதிக்கப் போகும் பொருள் ஈடு செய்யுமா? ஒரு நாளும் ஈடு செய்யாது.

"கொஞ்ச காலம் மனைவியுடன் இரு. இன்பமாக இரு. இளமை இன்பத்தை நன்கு பருகு. காதல் இன்பத்தைச் சுவைத்திரு.

"கொஞ்ச காலம் சென்ற பின் பொருள் தேடப் புறப்படு." என்று கூறினாள் அவள்.

இடு முள் நெடு வேலி போல, கொலைவர்
கொடுமரம் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடு நவை ஆர் ஆற்று, அறுசுனை முற்றி,
உடங்கு நீர் வேட்ட உடம்பு உயங்கு யானை
கடுந் தாம் பதிபு, ஆங்குக் கை தெறப்பட்டு,
வெறி நிரை வேறாகச் சார்ச்சாரல் ஓடி,
நெறி மயக்குற்ற நிரம்பா நீடு அத்தம் -
சிறு நனி நீ துஞ்சி ஏற்பினும், அஞ்சும்
நறுநுதல் நீத்துப் பொருள்வயிற் செல்வோய்!
உரனுடை உள்ளத்தை; செய் பொருள் முற்றிய
வளமையான் ஆகும் பொருள் இது என்பாய்!
இளமையும் காமமும் நின் பாணி நில்லா -
இடை முலைக் கோதை குழைய முயங்கும்
முறை நாள் கழிதல் உறுஅமைக் காண்டை -
கடை நாள் இது என்று அறிந்தாரும் இல்லை.
போற்றாய் - பெரும! நீ, காமம் புகர்பட

வேற்றுமைக் கொண்டு, பொருள்வயிற் போகுவாய்!
கூற்றமும் மூப்பும் மறந்தாரோடு ஓரா அங்கு
மாற்றுமைக் கொண்ட வழி,

## 41. அபலையும் பாலையும்

“போய் வருகிறேன்” என்று சொன்னான் அவன்.

“வெளியூருக்கா?” என்று கேட்டாள் அவள்.

“ஆம்” என்றான்.

அவளுடைய கண்கள் நீர் சொரிந்தன. தொண்டையை அடைத்தது துக்கம்.

“தனியாகவா?” என்று கேட்டாள்.

“ஆமாம்” என்றான் அவன்.

“போகாதே” என்று சொல்ல நினைத்தாள் அவள். ஆனால் நா வரவில்லை. வெளியூருக்குப் புறப்படுகிறவரைப் பார்த்துப் ‘போகாதே’ என்று சொல்வது சரியல்ல என்று எண்ணினாள்.

ஆனால், பிரிந்து இருக்கவும் மனம் வரவில்லை. ‘பிரிவு எப் போது நிகழும்? அவரை மட்டும் அனுப்பி விட்டு நான் இங்கே இருந்தால்தானே! நானும் கூடவே சென்றால்...பிரிவு ஏது? அவசியமான வேலை இருப்பதால்தானே போகிறேன் என்று சொல்கிறார்! அப்படியிருக்க, போகாதே என்று அவரைத் தடுப்பது சரியாகுமா? ஆகாது. தனியே இருந்து வருந்த வேண்டி வருமே? அதை நினைத்தால் பயமாயிருக்கிறது. எனவே, ஒரு முடிவு செய்தால் என்ன?’— இவ்வாறு எண்ணினாள்.

“நானும் வருகிறேன்” என்றாள்.

“நீயுமா?” என்று கேட்டான் அவன்.

“ஆம்” என்றாள்.

வாயடைத்து நின்றான் அவன். ‘இவளை எப்படி அழைத்துப் போவது’ என்று கலங்கினான்.

அவளது அருகில் சென்றான். அணைத்துக் கொண்டான். கூந்தலைக் கோதினான். கண்ணீரைத் துடைத்தான். கன்னத்தை வருடினான்.

"கண்ணே! அந்த வெஞ்சுரத்தின் வழியே நடக்க உன்னால் முடியாது. வெயிலின் கொடுமை தாங்கமாட்டாய். அந்தக் காட்சியைக் கண்டாலே பயப்படுவாய்.

"இரண்டு நாடுகளுக்கும் இடையே போர் நடக்கிறது. எதிரி வந்து நமது ஊரைப் பிடித்து விடுவான் போலிருக்கிறது. அப்போது என்ன செய்வது? ஊரை எதிரியிடம் விடுவதா? விடுவதில்லை. தீக்கு இரையாக்கி விடுவது வழக்கம். இவ்விதம் தீப்பட்டு எரிந்த இடம்போல் காட்சி தரும், அந்தப் பாலை நிலம். குடிப்பதற்குத் தண்ணீர் அகப்படாது. நீர் நிலைகள் எல்லாம் வற்றியிருக்கும். நீர்விடாய் கொண்ட யானைகள் வெயிலின் கொடுமை தாங்க முடியாது தவிக்கும். அந்தச் சேற்று நீரை உண்ணும். மான் தண்ணீருக்குத் தவிக்கும்; தொலைவிலே நோக்கும்; எங்கேயாவது தண்ணீர் இருக்கிறதா என்று பார்க்கும். கானல் நீர் காணப்படும். அந்தக் கானல் நீரைக் கண்டு வெகுவேகமாக ஓடும்; வெயிலின் கொடுமை தாங்க முடியாது நீர் விடாய் கொண்டு ஓடும்; அந்தப் பெண்மான் மீது அன்பு கொண்டு செல்லும் கலைமான், துணையாக.

"வெயிலின் கொடுமை தாங்க முடியாது மரங்கள் பட்டு நிற்கும்; பாறைகள் வெடித்திருக்கும். அவ்வழியே நீ நடந்து வந்தால், மெல்லிய மலர் போன்ற உன் கால் அடி என்னாகும்? கொம்பரக்குப் போல் சிவக்குமே!

"சிங்கங்கள் போல் பொம்மை வைத்த கட்டிலில் படுத்துறங்குபவள் நீ. நிஜமான சிங்கத்தைக் கண்டவள் அல்ல. அங்கே சிங்கங்கள் - உயிருடன் கூடிய சிங்கங்கள்—கர்ஜிக்கும். அப்போது என்ன செய்வாய்? நடுங்குவாயே! சிங்கத்தின் குரல் கேட்ட போதே நடுங்குபவள் அதனை நேரில் கண்டால் எப்படியிருப்பாய்?

"அந்த வழியிலே திடீரென்று தீப்பற்றி எரியும். அனல் காற்று வீசும். அக் காற்று உன் மேனியில் படும். மலர் போன்ற உன் மேனி அதை எப்படித் தாங்கும்? கருத்து வாடி விடுமே!

"எனவே என்னுடன் வருவேன் என்று பிடிவாதம் செய்யாதே, கண்ணே! வீட்டில் இரு. விரைவாக வந்து விடுகிறேன். விடை கொடு" என்றான் அவன்.

காதலன் தன்னை அழைத்துப் போகமாட்டான். தனியே செல்வான் என்பது அறிந்தாள் அவள். இதுவரையில் அவன் கூறிய வெஞ்சுரக் காட்சிகள் அவள் கண் முன் தோன்றின.

"இப்பேர்ப்பட்ட வழியில் அல்லவா அவன் செல்லப் போகிறான்..." என்று நினைத்தாள், 'கோ' வென்று கதறினாள். அப்பால் சென்றாள்.

அவளது அழுகை கேட்டாள் தோழி. அருகே வந்தாள். அறிந்தாள்.

"சீ! அசடே! அழாதே! நிஜமாகவே அவர் போகப் போகிறார் என்று எண்ணிவிட்டாயே! அதெல்லாம் ஒன்றுமில்லை. வெறும் பொய்.

"போகிறவர் உன்னிடம் எல்லாவற்றையும் சொல்வாரா? வழியில் உள்ள கஷ்டங்களையெல்லாம் கூறினால் நீ பயப்படுவாய், வருந்துவாய் என்பது அவருக்குத் தெரியாதா? தெரியும். பின் ஏன் சொன்னார்? விளையாட்டுக்காகச் சொன்னார். அதை நிஜமென்று நினைத்து அழலாமா?" என்று கூறி அவளைத் தேற்றினாள் தோழி.

செரு மிகு சின வேந்தன் சிவந்து இறுத்த புலம் போல,
எரி மேய்ந்த கரி வறல்வாய், புகவு காணாய்,
பொரி மலர்ந்தன்ன பொறிய மட மான்,
திரி மருப்பு ஏறொடு தேர் அறற்கு ஓட,
மரல் சாய, மலை வெம்ப, மந்தி உயங்க,
உரல் போல் அடிய உடம்பு உயங்கு யானை,
ஊறு நீர் அடங்கலின், உண் கயம் காணாது,
சேறு சுவைத்து, தம் செல் உயிர் தாங்கும்
புயல் துளி மாறிய, போக்கு அரு, வெஞ் சுரம் -

எல்வளை! எம்மொடு நீ வரின், யாழ நின்
மெல் இயல் மே வந்த சீறடி, தாமரை
அல்லி சேர் ஆய் இதழ் அரக்குத் தோய்ந்தவை போல,
கல் உறின், அவ் அடி கறுக்குந அல்லவோ?

நலம் பெறு சுடர்நுதால்! எம்மொடு நீ வரின்,
இலங்கு மாண் அவிர் தூவி அன்ன மென் சேக்கையுள்
துலங்கு மான் மேல் ஊர்தித் துயில் ஏற்பாய்,
மற்று ஆண்டை
விலங்கு மான் குரல் கேட்பின், வெருவுவை அல்லையோ?

கிளி புரை கிளவியாய்! எம்மொடு நீ வரின்,
தளி பொழி தளிர் அன்ன எழில் மேனி தகை வாட,
முளி அரில் பொத்திய முழங்கு அழல் இடை போழ்ந்த
வளி உறின், அவ் எழில் வாடுவை அல்லையோ?
என ஆங்கு,

அனையவை காதலர் கூறலின், 'வினைவயிற்
பிரிகுவர்' எனப் பெரிது அழியாதி, திரிபு உறீஇ;
கடுங் குரை அருமைய காடு எனின், அல்லது, --
கொடுங்குழாய்! துறக்குநர் அல்லர் -
நடுங்குதல் காண்மார், நகை குறித்தனரே.

## 42. ஆசையூட்டினாள்; ஆர்வம் காட்டினான்!

"கரு கரு என்ற உனது விழிகள், கரு நீலம் போன்ற விழிகள்!" என்றான் அவன்.

அவள் சிரித்தாள்.

"ஆகா! உனது முல்லைச் சிரிப்பை என்ன என்பேன்" என்றான்.

அப்படியே சாய்ந்தாள் அவள்.

"உன் தோள்களை என்ன என்று சொல்வேன்! வேய் என்பேனா? பட்டுத் தலையணை என்பேனா? என்ன என்று சொல்வேன்" என்றான் அவன்.

அவிழ்ந்த கூந்தலை அள்ளிப் போட்டாள் அவள்.

"ஆகா! அந்தக் கருங் கூந்தலை என்ன என்பேன்? மேகம் என்பேனா? அதன் மணம் என் மனதை மயக்குதே!" என்றான்.

"ஆமாம்! இன்று என்ன விசேஷம்?" என்று கேட்டாள் அவள்.

"ஏன்?" என்றான்.

"இல்லை; கேட்டேன். வழக்கத்துக்கு மாறாக இருக்கிறதே!" என்றாள் அவள்.

"என்ன மாறாக இருக்கிறது?" என்று கேட்டான்.

"அளவுக்கு மீறிப் புகழ்கிறாயே! இத்தனை நாள் இப்படிப் புகழவில்லையே! இன்று என்ன விசேஷம்?" என்றாள்.

"ஒன்றுமில்லை: உன்னைப் பார்த்தால் அதிக ஆசையாக இருந்தது. ஊருக்குப் போகப் போகிறேன் அல்லவா?" என்றான்.

"ஊருக்கா?" என்றாள் அவள்.

"ஆம்" என்றான்.

"எந்த ஊருக்கு?"

"வெளியூருக்கு?"

"எதற்கு?"

"பொருள் வேண்டாமா? அதைத் தேடுவதற்கு!"

கேட்டாள் அவள். துக்கம் தொண்டையை அடைத்தது. ஓடினாள் தோழியிடத்தில். "கோ" என்று கதறினாள்.

கேட்டாள் தோழி. அறிந்தாள். வந்தாள் தலைவனிடம். விட்ட இடத்திலே தொடங்கினாள் பேச்சை:

"அதனால்தானே கேட்டேன். 'என்னடா இது? அளவுக்கு மீறி ஆசை காட்டுகிறாரே! இத்தனை நாள் இந்த மாதிரி இல்லையே! என்ன காரணமோ தெரியவில்லையே!' என்று நினைத்தேன். இப்பொழுது தெரிந்துகொண்டேன், அப்படியானால் நீ ஆசை காட்டிப் பேசியது எல்லாம் பொய்தானே? உண்மையாக அவள் மீது ஆசையிருந்தால் பிரிய மனம் வருமா உனக்கு? 'பிரிவேன்' என்றுதான் சொல்வாயா?" என்று கோபித்தாள் அவள்.

"கோபங் கொள்ளாதே, கோதையே! ஆசையில்லை என்று யார் சொன்னார்? பொருள் தேட வேண்டாமா? பொருள் இல்லாவிடில் எந்தக் காரியம் நடக்கும்? காதல் இன்பத்துக்கும் பொருள் அவசியம் அல்லவா? பொருள் தேடி வெளியூர்

போகிறேன் என்று சொன்னால் ஆசையில்லை என்று அர்த்தமா? ஆசை மிகுதியாயிருப்பதால்தானே பொருள் தேடிச் செல்கிறேன். பொருள் தேடி வந்து மகிழ்ச்சிக் கடலில் நீந்த விடுவதற்காக" என்றான்.

" 'காதல் இன்பத்தை நுகர்வதற்குப் பொருள் வேண்டும், பொருள் வேண்டும்' என்று எவராவது அறியாதார் சொல் வதைக் கேட்டு அறிவிழந்துவிடாதே.

"காதல் இன்பத்தைவிடப் பெரிய பொருள் வேறு எதுவு மில்லை. அந்த இன்பம் சுரக்கும் ஊற்று உன் காதலிதான். எனவே அவளைப் பிரியாதே. காதலியைக் கூடு. இன்பத்தை நாடு. அதுவே பொருள். அதுவே எல்லாம்" என்றாள் அவள்.

என்ன செய்வான்!

'அணை மருள் இன் துயில் அம் பணைத் தட
மென் தோள்,
துணை மலர் எழில் நீலத்து ஏந்து எழில் மலர் உண்கண்,
மணை மௌவல் முகை அன்னமா வீழ் வார் நிரை
வெண் பல்,
மணம் நாறு நறு நுதல், மாரி வீழ் இருங் கூந்தல்,
அலர் முலை ஆகத்து, அகன்ற அல்குல்,
சில நிரை வால் வளை, செய்யாயோ!' என,
பல பல கட்டுரை பண்டையின் பாராட்டி,
இனிய சொல்லி, இன்னாங்குப் பெயர்ப்பது,
இனி அறிந்தேன், அது துனி ஆகுதலே.

'பொருள் அல்லால் பொருளும் உண்டோ?' என,
யாழ நின்
மருளி கொள் மட நோக்கம், மயக்கப்பட்டு
அயர்த்தாயோ?

'காதலார் எவன் செய்ப, பொருள் இல்லாதார்க்கு?'
என,
ஏதிலார் கூறும் சொல் பொருளாக மதித்தாயோ?

செம்மையின் இகந்து ஒரீஇப் பொருள் செய்வார்க்கு,
அப் பொருள்,
இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ?
அதனால்,

எம்மையும் பொருளாக மதித்தீத்தை; நம்முள் நாம்
கவவுக் கை விடப் பெறும் பொருட் திறத்து
அவவுக் கைவிடுதம்; அது மனும் பொருளே.

## 43. தேடிய பொருளும் தெவிட்டாத இன்பமும்

"லாப நஷ்டக் கணக்குப் பார்க்கலாமா?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் தோழி.

"ஏன், இப்போது என்ன வந்து விட்டது?" என்று கேட்டான் அவன்.

"நீதான் பிரிகிறேன் என்று சொல்கிறாயே! பிரிவதற்கு முன்பு லாப நஷ்டக் கணக்கைப் பார்த்துவிட வேண்டியதுதானே?" என்றாள் அவள்.

"சரி" என்றான் அவன்.

"நல்லது. பார்ப்போம். நீ இவளைப் பிரிந்து போகிறேன் என்கிறாய். பிரிவு எதற்காக? பொருள் தேடுவதற்காக.

"இவள் யார்? காதல் கனிரசம். பருகப் பருகத் தெவிட்டாத செந்தேன். இவளை விட்டுப் போகிறேன் என்கிறாய். கையில் கிடைத்த இந்தச் செந்தேனை இழக்கிறாயே! இது உனக்கு நஷ்டம் அல்லவா! என்ன என்றால், "பொருள் தேடப் போகிறேன்' என்கிறாய். உள்ள பொருளை இழவாதிருப்பது அறிவுடைமை அல்லவா?

"அசோகின் தளிர் போன்றது என்று புகழ்கிறாய் அவளது மேனியை. அது வாடிப் போகுமே! பசலை படர்ந்துவிடுமே! அது உனக்கு நஷ்டம் அல்லவா! நீ பொருள் தேடிக்கொண்டு வரலாம். ஆனால் அவளது தளிர் மேனி வனப்பைத் திரும்பக் கொண்டுவர உன்னால் ஆகுமா? இது நஷ்டம்தானே!

பொன்னைக்கொண்டு வருவாய் நீ. ஆனால் அவளது பொன்னிற மேனியைக்கொண்டு வருவாயோ!

"'முழுமதி போன்றது உன்முகம்' என்று அவளது முகத்தைப் புகழ்கிறாய். நீ பிரிந்துபோன பிறகும் அப்படியே இருக்கும் என்று நினையாதே!

"ராகு கேதுக்களால் விழுங்கப்பட்ட மதிபோல் ஆகிவிடும் இவளது வதனம்; ஒளி இழந்துவிடும்; மாசு படிந்துவிடும். பொன் கொண்டு வருவாய் நீ. பொருள்கொண்டு வருவாய். ஆனால் ஒளி இழந்த அவளது முகத்தின் ஒளி கொண்டு வருவாயோ! சொல். இது உனக்குப் பெரும் நஷ்டம் அல்லவா!

"'கன்னங்கரிய உனது விழிகள் நீல மலரோ!' என்று புகழ்கிறாயே! இந்த விழிகள் எப்போதும் இப்படியே இருக்கும் என்று நினையாதே. நீ பிரிந்த நிமிஷமே அவை தம் ஒளி குன்றிவிடும். அழகு இழந்துவிடும். எரியும் திரியினின்றும் தெறித்து விழும் எண்ணெய்த் துளிபோல் கண்ணீர்த்துளி சிந்தும். கலங்கிக் கலங்கிக் கவின் அழியும்.

"நீ கொண்டு வரும் பொருள் அவளது கண்களின் அழகுக்கு ஈடாகுமோ? சென்றுபோன அழகை மீட்டுத் தருமோ?

"பொருளைக்கொண்டு வருவாய் நீ. ஆனால் இவள்தம் இளமையைக்கொண்டு வருவாயோ? அழகைக் கொண்டு வருவாயோ? வனப்பை மீட்டு வருவாயோ? சொல்; சொல்.

"நீ கொண்டு வரும் பொருளுக்கு இத்தகைய ஆற்றல் எதுவும் இல்லை. எனவே, பொருள் என நீ நினைக்கும் பொன் பெரிதா? இந்தப் பெண் பெரிதா? எது? சொல்? யோசித்துப்பார். நன்கு யோசி!

"கையில் வந்து சிக்கியுள்ள காதல் கனியை விடாதே! ருசித்துப் பார். இளமையிருக்கும்போதே இன்பத்தை அநுபவி.

பொருளைப் பிறகு தேடிக்கொள்ள முடியும். இன்பத்தைப் பிறகு தேடுதல் முடியாது. இளமையுள்ளபோது இன்பத்தை நுகர்ந்துவிடல் வேண்டும். இளமை போனால் இன்பமும் போம்.

எனவே, இப்போது இவனை விடாதே.'' என்றாள் தோழி. பிறகு அவன் என்ன செய்ய முடியும்?

அரி மான் இடித்தன்ன, அம் சிலை வல் வில்
புரி நாண், புடையின், புறம் காண்டல் அல்லால்—
இணைப் படைத் தானை அரசோடு உறினும்—
கணைத் தொடை நாணும் கடுந் துடி ஆர்ப்பின்,
எருத்து வலிய எறுழ் நோக்கு இரலை

மருப்பின் திரிந்து மறிந்து வீழ் தாடி,
உருத்த கடுஞ் சினத்து, ஓடா மறவர்,
பொருள் கொண்டு புண் செயின் அல்லதை,அன்போடு
அருள் புறம் மாறிய ஆர் இடை அத்தம்—

புரிபு நீ புறம் மாறி, போக்கு எண்ணி, புதிது ஈண்டிப்
பெருகிய செல்வத்தான் பெயர்த்தரல் ஒல்வதோ—
செயலை அம் தளிர் ஏய்க்கும் எழில் நலம்; அந் நலம்
பயலையால் உணப்பட்டுப் பண்டை நீர் ஒழிந்தக்கால்?

பொய் அற்ற கேள்வியால், புரையோரைப் படர்ந்து, நீ
மை அற்ற படிவத்தான் மறுத்தரல் ஒல்வதோ—
தீம் கதிர் மதி ஏய்க்கும் திருமுகம்; அம் முகம்,
பாம்பு சேர் மதி போல, பசப்பு ஊர்ந்து
தொலைந்தக்கால்?

பின்னிய தொடர் நீவி, பிறர் நாட்டுப் படர்ந்து, நீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தரல் ஒல்வதோ—
புரி அவிழ் நறு நீலம் புரை உண் கண் கலுழ்பு ஆறு,
திரி உமிழ் நெய்யே போல்,தெண் பனி உறைக்குங்கால்?
என ஆங்கு,

அனையவை போற்றி, நினை இயன நாடிக் காண்;
வளமையோ வைகலும் செயலாகும்; மற்று இவள்
முளை நிரை முறுவலார் ஆயத்துள் எடுத்து ஆய்ந்த
இளமையும் தருவதோ, இறந்த பின்னே?

## 44. அவள் கெஞ்சினுள்; அவை அஞ்சின!

எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள் அவள். கேட்டால் தானே! எதையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. கொண்ட கருத்திலேயே குறியாக இருந்தான் அவன். 'பொருள் தேடப் போயே தீருவேன்' என்று பிடிவாதமாக இருந்தான்.

"நீ போய் விட்டால் இவள் இறந்து போவாளே!" என்று பயமுறுத்திப் பார்த்தாள் தோழி.

அஞ்சா நெஞ்சம் கொண்ட வீரத் தமிழன் அவன். இதற்கு அஞ்சுபவனு? அஞ்சவில்லை.

"பார்! பார்! இவளது இளமை பார்" என்று சொல்லிப் பார்த்தாள் அவள். உறுதி படைத்த வீரத் தமிழன் அவன். கொண்ட கொள்கையினின்றும் பிறழாதவன். முன்வைத்த காலைப் பின் வையாதவன்.

எனவே, இந்தப் பேச்சுக்கள் அவன் உறுதி குலைக்க முடியாது போயின.

போனுன். போய்விட்டான். நாட்கள் பல ஆயின. வருந்தி வருந்தி நாட்களைக் கழித்தாள் அவள். எப்போதும் அவன் நினைவுதான். அவன் ஏக்கமேதான்.

"ஐயோ! அந்த வழி ரொம்பவும் கஷ்டமானது என்று சொன்னுரே! என்ன பாடு படுகிருரோ, தெரியவில்லையே! வெயிலின் கொடுமை தாங்க முடியாது என்று கூறினுரே! எப்படித் தவிக்கிருரோ, தெரியவில்லையே! ஏ, ஞாயிற்றுத் தெய்வமே! காயும் கதிரவனே! கோபமாகப் பொசுக்காதே! கடுமையாகத் தாக்காதே! என் காதலர் வருகிருர். நடந்து வருகிருர். பாலை வனத்திடையே வருகிருர். வாட்டாதே! வருத்தாதே! உன்னை வேண்டிக் கொள்கிறேன்.

"பாயும் சுழல் காற்றே! அந்தப் பாலை வனத்திடையே நீ வீசும்போது அனல் கக்கிடாதே! வெம்மை மூச்சு விடாதே! அந்த வழியே எனது காதலர் வருகிருர். நீ வெம்மை பொழிந்தால் அவர் தாங்கமாட்டார்; வருந்துவார்; வாடுவார். அனல் கக்கி நீ வீசினுல் அவர் சுருண்டு போவார். உன்னைப் பணிந்து வேண்டிக்

கொள்கிறேன்; வணங்குகிறேன். என் விண்ணப்பம் கேள். அவரை வாட்டிவிடாதே; வருத்திவிடாதே! அவர் தாங்க மாட்டார்!

''உயிர்களுக்கெல்லாம் இன்பம் தரும் மாரியே! மேகமே! முகில் தெய்வமே! உன்னை வேண்டிக்கொள்கிறேன். போ! போ! அந்தப் பாலைவனத்திற்குப் போ! ஓடு! ஓடு! வேகமாக ஓடு! கறுத்துத் திரண்டு ஓடு! இடித்து முழங்கு! அந்தப் பாலைவனத்தின் வெம்மை தணியப் பொழி! மழையைக் கொட்டு! கொட்டு! வெம்மை தணியட்டும். வெப்பம் குறையட்டும். எனது காதலர் வருகிறார். அந்த வழியே வருகிறார். நடந்து வருகிறார். அவருக்குத் துன்பமில்லாதிருக்கவேண்டும்.

''உன்னை வேண்டிக்கொள்கிறேன். மழைத் தெய்வமே! எனது வேண்டுதல் கேட்டு அருள் செய்வாய்.''

இவ்விதம் புலம்பிக்கொண்டிருந்தாள் அவள்.

''என்ன புலம்புகிறாய்?'' என்று கேட்டுக்கொண்டே வந்தாள் தோழி.

''ஒன்றுமில்லை; தெய்வங்களை வேண்டுகிறேன்'' என்றாள் அவள்.

''எந்த தெய்வத்தை வேண்டினாய்?''

''காயும் கதிரவனை வேண்டினேன். பொழியும் மழையை வேண்டினேன். சூழும் காற்றை வேண்டினேன். அப்படி வேண்டுவது சரியில்லையோ? கூடாதோ ?''

''அந்த தெய்வங்கள் எல்லாம் உனக்குப் பயந்துகொண்டு விட்டன.''

''ஏன்?''

''உன் கற்பு நிலை கண்டு!''

''எப்படித் தெரியும் உனக்கு?''

''அவை உதவி செய்யாவிட்டால் உன் காதலன் இவ்வளவு விரைவில் அந்தப் பாலை நிலத்தைக் கடந்துவர முடியுமா? அதோ பார்! வந்துவிட்டார் உன் காதலர்!'' என்றாள் தோழி.

பிறகு...?

பாடு இன்றிப் பசந்த கண் பைதல பனி மல்க,
வாடுபு வனப்பு ஓடி வணங்கு இறை வளை ஊர,
ஆடு எழில் அழிவு அஞ்சாது, அகன்றவர் திறத்து, இனி
நாடுங்கால், நினைப்பது ஒன்று உடையேன்மன் ?
அதுவும்தான்.

தொல் நலம் தொலைபு, ஈங்கு, யாம் துயர் உழப்பத்
துறந்து, உள்ளார்,
துன்னி, நம் காதலர், துறந்து ஏகும் ஆர் இடை,
'கல்மிசை உருப்பு அறக் கனை துளி சிதறு!' என,
இன் இசை எழிலியை இரப்பவும் இயைவதோ ?

புனையிழாய்! ஈங்கு நாம் புலம்புற, பொருள் வெஃகி,
முனை என்னுர் காதலர் முன்னிய ஆர் இடை,
'சினை வாடச் சிறக்கும் நின் சினம் தணிந்தீக !' என,
கனை கதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ?

ஒளியிழாய்! ஈங்கு நாம் துயர் கூர, பொருள்வயின்,
அளி ஒரீஇக் காதலர் அகன்று ஏகும் ஆர் இடை,
'முளி முதல் மூழ்கிய வெம்மை தீர்ந்து உறுக!' என,
வளி தரும் செல்வனை வாழ்த்தவும் இயைவதோ ?
என ஆங்கு,

செய் பொருட் சிறப்பு எண்ணிச் செல்வார்மாட்டு,
இனையன
தெய்வத்துத் திறன் நோக்கி, தெருமரல்-தேமொழி !—
'வறன் ஓடின் வையகத்து வான் தரும் கற்பினுள்
நிறன் ஓடிப் பசப்பு ஊர்தல் உண்டு' என,
அறன் ஓடி விலங்கின்று, அவர் ஆள்வினைத் திறத்தே.

## 45. காவலா ? காதலா ?

பெண் தெய்வம் இருக்கிறதே! இது மிகப் பெரிய தெய்வம். இந்தத் தெய்வத்தினுல் செய்ய முடியாத காரியம் இந்த உலகத்

திலே ஏதுமில்லை. ஆக்குபவளும் அவள்; அழிப்பவளும் அவள். ஊக்குபவளும் அவள்; உடைப்பவளும் அவள்.

இந்தப் பெண் செய்வத்திடம்தான் எப்பேர்ப்பட்ட மன்னாதி மன்னர்கள் எல்லாரும் சிக்கியிருக்கிறார்கள்! மண்ணோடு மண்ணாகி யிருக்கிறார்கள்!

இந்தப் பெண் தெய்வத்தினால் அழிந்த சாம்ராஜ்யங்கள்தான் எத்தனை, எத்தனை! பூண்டில்லாது புகைந்துபோன வல்லரசுகள் எத்தனை, எத்தனை!

பதினேழாம் நூற்றாண்டிலே பிரான்ஸ் தேசத்திலே புகைந்து எழுந்தது புரட்சி! மன்னர் வம்சத்தைப் பூண்டோடு நசுக்கியது! காரணம் யார்? பெண் தெய்வம்! அந்தப் பெண் தெய்வம் மேரி அன்டாய்னட்! அந்தப் பெண் தெய்வத்தின் அட்டகாசம் மக்களிடையே கொதிப்பையூட்டியது. பிரெஞ்சு முடியரசைக் கவிழ்த்தது.

அதே சமயத்தில் இங்கிலாந்திலே என்ன நடந்தது? ஈடு இணையற்ற பெரியதொரு சாம்ராஜ்யம் வளர்ந்தது. இந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை வளர்த்த பெருமை இரண்டு பெண்களையே சாரும். ஒன்று எலிசபெத் என்ற பெண் தெய்வம். மற்றொன்று விக்டோரியா என்ற பெண் தெய்வம். பெண் அரசு அல்ல; பொன் அரசு என்று உலகமே புகழ்ந்த காலம்!

அதே சமயத்தில் இங்கே-நமது இந்திய நாட்டிலே—என்ன ? அந்த ஷாஜஹான்! ஈடு இணையற்ற அந்த மொகலாய மன்னன்! அவனது சாம்ராஜ்யம் உருக்குலையக் காரணம் எது? அந்த மொகலாய சாம்ராஜ்யம் அழியவும், அந்த இடத்திலே சிறிது சிறிதாக ஐரோரப்பிய வர்த்தகர் நுழையவும் காரணம் யார்? அந்தப் பெண் தெய்வம்! அவள்தான் ஜான் ரா பேகம்! ஷாஜஹானின் செல்வக் குமரி! அவள் செய்த அட்டகாசம், மொகலாய தர்பாரிலே சந்தர்ப்ப வாதிகளைச் சேர்த்து வைத்தது!

சமீபத்திலே சீனாவிலே என்ன நடந்தது? சியாங்கே ஷேக்! அவனது காலத்திலே அந்த மாடம் சியாங் செய்த அட்டகாசம், கொஞ்சமா! அவள் செய்த அட்டகாசம்தானே சீனத்தில் 'செங்' கோல் வரச் செய்தது!

நாடு காவலின் பொருட்டுச் செல்ல நினைக்கிறான் குறுநில மன்னன் ஒருவன். படைக் கலங்களையெல்லாம் பழுது பார்த்து விட்டான். எப்போதும் நாடு காவலிலேயே எண்ணம்! குறுநில மன்னனுக்கு முக்கியமான தொழில் எது? நாடு காவல்தானே! காட்டிலே வாழும் கொடிய விலங்குகள் வந்து நாட்டு மக்களுக் குத் தொந்தரவு கொடாமல் காத்தல் வேண்டும். வேற்றரசர் படை வந்து ஏழைப் பெருமக்களை வாட்டி வதைக்காமல் காக்க வேண்டும். அப்போதுதானே நாட்டில் அமைதி நிலவும். அப் போதுதானே மக்கள் பயமின்றி வாழ்தல் இயலும். எனவே, நாட்டுக்குச் செய்யவேண்டிய கடமையாற்ற நினைக்கிறான் குறுநில மன்னன். அப்போதுதானே அவனது அரசும் நிலைக்கும். இன்றேல் வேறு எவராது தோன்றி அரசைப் பிடுங்கிக்கொள்ள மாட்டார்களோ! இந்நிலையில் காதலியையும் மறக்கவில்லை அவன்! அவளைப் பிரிந்து செல்வது அவனுக்குப் பெரு வருத்தமாகத்தானி ருக்கிறது. இரவு தூக்கம் வரவில்லை. படுக்கையில் கிடந்து புரள்கிறான். இது கண்டு கலங்குகிறாள் அவனது காதலி. தோழியிடத்திலே சென்று வருந்துகிறாள். அவளது வருத்தம் போக்க விரும்புகிறாள் தோழி. அந்தக் குறுநில மன்னனிடம் பேசுகிறாள்:

"மன்னா! நான் சொல்லுவது கேள்! தாமரைப் பொய்கை ஒன்று; தண்ணீர் நிறைந்திருக்கிறது; இலைகள் அடர்ந்து இருக் கின்றன. கண்ணுக்கினிய தாமரை மொட்டுகள்! சற்று உயர்ந்து இருக்கின்றன. கண்ணுக்கினிய காட்சி! என்ன அழகு! என்ன அழகு! இந்த அழகு எவ்வளவு நாள்? அந்த மொட்டு மலரும் வரைதானே? தாமரை மலர்ந்த உடனே, அதன் அழிவும் தோன்று கிறது அல்லவா?

உங்கள் இருவருக்கும் காதல் அரும்பியது. சிறிது சிறிதாக வளர்ந்தது; மலர்ந்தது; மணம் வீசியது.

இனி, அம்மலர் சிறிது சிறிதாகத் தன் வனப்பிழக்கும்; வாடும்; மணம் இழக்கும். எனவே, வனப்புப் போகுமுன்னே, வாடு தல் நேருமுன்னே, மணம் இழக்கு முன்னே அதை நுகர்ந்து விடு; நன்றாக நுகர்ந்துவிடு. இந்தச் சமயத்திலே எங்கும் போய் விடாதே! அதனால் நஷ்டம் உனக்குத்தான்!

"மற்றொன்று சொல்கிறேன் கேள். அகன்ற குளம் ஒன்று; நீர் நிரம்பியிருக்கிறது; மலர்களும் கொண்டுள்ளது. அம் மலர்களிலே உள்ள மகரந்தத்தை நுகர்தல் வேண்டி வண்டுகள் மொய்க்கின்றன. குளத்து நீர் அப்படியே இருப்பதில்லை; வற்றுகிறது. சிறிது சிறிதாக வற்றிக்கொண்டே வருகிறது. முடிவில் என்னாகிறது? மலர்கள் அழிகின்றன. வண்டுகள் வேறிடம் செல்கின்றன. பொய்கையின் அழகும் போகிறது.

"இளமையும் இத்தகையதே! அழகு நிறைந்து கண்ணுக்கினிய காட்சிதரும் இளமை, என்றும் நில்லாது. சீக்கிரம் மறையும், குளத்திலே நீர் வற்றுவதுபோல. நீர் வற்றினால் என்னாகும்? குளத்துக்கு அழகு தந்த எல்லாம் போம். அம்மாதிரியே இளமை போனால் அழகு போம்.

"எனவே, இளமை போகுமுன் இவளது இன்பத்தை நுகர்ந்துவிடு.

"மற்றொன்று சொல்கிறேன், கேள். பதினாறு கலைகளும் ஒளி வீச விளங்குகிறது முழுமதி. அந்த ஒளி என்றும் உளதா? இல்லை. நாளுக்குநாள் தேய்கிறது; அழிகிறது.

"இவளும் அப்படித்தான். பூரண சந்திரன்போல் இன்று எழில்பெற்று விளங்குகிறாள் இவள். இந்த எழில் என்றும் நிலைத்திராது. சிறிது சிறிதாகத் தேய்ந்துவிடும். அப்புறம் நீ என்ன செய்வாய்?

"எனவே, எழில் இருக்கும்போதே இவளிடம் இன்பம் பெறுவாயாக. அரிய காலத்தை வீணே கழியாதே! வேறு எதிலும் கருத்தைச் செலுத்தாதே!" என்றாள்.

கேட்டான் குறுநில மன்னன். தங்கப் பதுமைபோல் எதிரே நிற்கிறாள் அவள். 'நாடு காவலா? நங்கை காதலா?' என்று ஊசலாடியது அவன் உள்ளம். நங்கையே வெற்றி பெற்றாள்!

இளவரசி கைகேயிதன் மனங் கரைத்த கூனிபோல் மகிழ்ச்சி கொண்டாள் தோழி. விரைந்தாள். ஓடினாள்.

"வெற்றி! வெற்றி!" என்றாள்.

"மனதைத் திருப்பிவிட்டேன். மன்னன் மாறிவிட்டான். மகிழ்ச்சிகொள்" என்றாள்.

குறுநில மன்னனே—காவலை மறந்தான்; காதலில் திளைத்தான்; இன்பச் சுனையில் நீந்தினன். அவள் மகிழ்ந்தாள்.

ஆனால்......நாடு ?

படை பண்ணிப் புனையவும், பார் மாண்ட பல அணை
புடை பெயர்ந்து ஒடுங்கவும், புறம் சேர உயிர்ப்பவும்,
'உடையதை எவன் கொல்?' என்று ஊறு அளந்தவர்
வயின்
நடை செல்லாய், நனி ஏங்கி நடுங்கற்காண்—நறுநுதால்!

'தொல் எழில் தொலைபு இவள் துயர் உழப்ப துறந்து நீ,
வல் வினை வயக்குதல் வலித்திமன்; வலிப்பளவை,
நீள் கதிர் அவிர் மதி நிறைவு போல் நிலையாது,
நாளினும் நெகிழ்பு ஓடும் நலன் உடன் நிலையுமோ ?

ஆற்றல் நோய் அட, இவள் அணி வாட, அகன்று நீ,
தோற்றம் சால் தொகு பொருள் முயறிமன் ;
முயல் வளவை,
நாற்றம் சால் நளி பொய்கை அடைமுதிர் முகையிற்குக்
கூற்று ஊழ் போல் குறைபடூஉம் வாழ்நாளும்
நிலையுமோ?

வகை எழில் வனப்பு எஞ்ச, வரை போக வலித்து நீ,
பகை அறு பய வினை முயறிமன்; முயல்வளவை,
தகை வண்டு புதிது உண்ணத் தாது அவிழ்
தண் போதின்
முகை வாய்த்த தடம்போலும் இளமையும் நிலையுமோ?
என ஆங்கு,

பொருந்தி யான் தான் வேட்ட பொருள்வயின்
நினைந்த சொல்,
திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்து போல், மருந்து ஆகி, மனன் உவப்ப—
பெரும் பெயர் மீளி—பெயர்ந்தனன் செலவே.

## 46. வற்ருத ஊற்று; வரையாத இன்பம்

"போய் வரலாம் என்று நினைக்கிறேன்" என்ருன் அவன்.

"எங்கே?" என்ருள் அவள்.

"வெளியூருக்கு" என்ருன்.

"எதற்கு?" என்று கேட்டாள்.

"பொருள் தேட" என்ருன்.

"பொருள் பொருள் என்று எப்போதும் பொருளையே நினைத்துக் கொண்டிருக்கிருயே! பொருள் என்ன அந்த ஊரிலே கொட்டியா கிடக்கிறது. போய் உடனே அள்ளிக் கொண்டு வர? பொருள் திரட்டுவதற்காக எத்தனை நாள் காத்திருக்க வேண்டுமோ! அத்தனை நாள் என்னை மறந்திருக்க உன்ருல் முடியுமா? முடியாது. இங்கேயிருக்கும்போது பொருள் பொருள் என்று அதையே நினைப்பாய். அங்கே போய்விட்டால் பிறகு என்னையே நினைப்பாய். தாங்க முடியாமல் பாதியில் ஓடி வந்து விடுவாய். பொருள் திரட்டவும் முடியாது. தோல்வியடைவாய். தோல்வியடைந்து வெறுங்கையனுய் வரும் உன்னைக்கண்டு இந்த ஊரார் எல்லாரும் கேலி செய்வர்! எதற்கு அந்த மாதிரி? இந்த ஊரிலே எவ்வளவுபேர் இருக்கின்றனர்? எல்லாரும் உன்னைப் போலப் பொருள் பொருள் என்று பித்துப் பிடித்தா அலைகின்றனர்? ஊர் ஊராகவா ஓடுகின்றனர்? இல்லையே. அப்படிப் போகாதவர் எல்லாரும் இங்கே என்ன பட்டினியாகவோ கிடக்கின்றனர்? இல்லையே! காதலைவிடப் பெரிய பொருள் ஒன்று இந்த உலகத்திலே இருக்கிறதா? உனக்குப் பொருள் நான். எனக்குப் பொருள் நீ. நம் இருவர்க்கும் பொருள் இளமை. இளமையால் வரும் பொருள் இன்பம். இன்பத்தை விடப் பெரிய பொருள் வேறு உண்டோ இந்த உலகிலே! இல்லை. இல்லவேயில்லை.

"நமது காதலே வற்ருத செல்வம். நமது அன்பே குறையாத பொருள். ஒரே ஆடையுடையவராயினும் சரி; அதை இருவரும் உடுத்தி ஒருவரை ஒருவர் அணைத்து மகிழ்வதே இன்பம். அந்த மகிழ்ச்சிக்கு இணையுண்டோ? ஈடுண்டோ? இல்லை; இல்லை.

"எனவே, உனக்கு நான்; எனக்கு நீ. வற்றாத ஊற்று; குன்றாத மகிழ்ச்சி; தீராத இன்பம்; குறையாத தேன். இதுவே வாழ்க்கை! இதுவே வாழ்க்கை!

"இதன் முன்னே அந்தப் பொருள் என்ன செய்யும்? ஒன்றும் செய்யாது" என்றாள்.

என்ன செய்வான்? தேனிலே விழுந்த ஈதான்!

*அரும் பொருள் வேட்கையின் உள்ளம் துரப்ப,*
*பிரிந்து உறை சூழாதி—ஐய!—விரும்பி நீ,*
*என் தோள் எழுதிய தொய்யிலும், யாழ நின்*
*மைந்துடை மார்பில் சுணங்கும், நினைத்துக் காண் :*
*சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது ;*
*ஒழிந்தவர் எல்லாரும் உண்ணுதும் செல்லார்;*
*இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்*
*வளமை விழைதக்கது உண்டோ? உள நாள்,*
*ஒரோஒ கை தம்முள் தழீஇ, ஒரோஒ கை*
*ஒன்றன் கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்,*
*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை; அரிது அரோ,*
*சென்ற இளமை தரற்கு!*

## 47. பிரிவும் பரிவும்

எவ்வளவோ மன்றாடினாள்; கெஞ்சினாள். ஒன்றும் பலிக்க வில்லை. அவன் சித்தம் இரங்கவில்லை. கொண்ட உறுதி குலைய வில்லை. விடாப் பிடியாக நின்றான்.

"அப்படியானால் வெளியூர் போகத்தான் போவாயோ?"

"ஆமாம்!"

"நிச்சயம்தானா?"

"நிச்சயம்."

"நினைத்துப் பார்."

"எதை?"

"நீ சொன்ன சொற்களை?"

"எப்போது சொன்ன சொற்களை?"

"அன்று; தினைப்புனத்திலே என்னைக் கை பிடித்தாயே! கட்டி அணைத்தாயே! 'கண்ணே! மணியே! கற்கண்டே, தேனே! காதற் கனி ரசமே!' என்று கொஞ்சினாயே! கொஞ்சி என்னை மயக்கினாயே. உனது பேச்சில் மயங்கினேனே! அப்போது..."

"அப்போது என்ன சொன்னேன் ?"

"ஏன், ஞாபகமில்லையோ ?"

"இல்லையே! மறந்து விட்டேன்!"

"அதைத்தான் நானும் சொல்கிறேன். மறந்துவிட்டாய் என்று!"

"என்ன சொன்னேன் ? நீதான் சொல்லேன்."

" 'பிரியேன்', என்றாய். நினைவிருக்கிறதா ?"

"ஆமாம் சொன்னேன். அதற்கென்ன ?"

"இப்போது பிரிகிறாயே! அப்படியானால் அன்று நீ சொன்னது பொய் வார்த்தைதானே? அதை நான் மெய்யென்று நினைத்தேனே! மதி மோசம் போனேனே. என்னை ஏமாற்றிவிட்டாயே! நீயும் ஓர் ஆண் மகனா? மனிதாபிமானம் இருக்கிறதா உனக்கு? பொய் சொன்னாய். என்னை ஏமாற்றினாய். எனது இதயத்தைக் கொள்ளை கொண்டாய். எனது கற்பைச் சூறையாடினாய். இப்போது 'போகிறேன்' என்கிறாய். போ. போ. உன்னை நான் தடுக்கவில்லை. ஆனால் ஒன்று சொல்கிறேன், கேள்: பொருள் தேடுவதற்காக வெளியூர் போகிறாயே! அங்கேயாவது கண்ணும் கருத்துமாயிரு. இடையே இங்கிருந்து வருவோர் எவரையாவது பார்த்தால், அவரிடம் என்னைப் பற்றி ஒன்றும் கேட்டு விடாதே. கேட்டால் அவர் என்ன சொல்வார் தெரியுமா? 'நீண்ட நாள் முன்பே அவள் செத்துவிட்டாள்' என்றுதான் சொல்வார். அப்போது நீ மிக வருந்துவாய். சென்ற காரியத்தையும் முடிக்க மாட்டாய்.

"எனவே, என்னைப்பற்றி ஒன்றும் கேளாதே. பொருளைத் தேடிச் சுகமாயிரு."

இப்படியாக ஒரு சிறு நிகழ்ச்சி – உள்ளமுருக்கும் நிகழ்ச்சி – காதலன் காதலி இருவரிடையே நிகழ்ந்தது.

பின்னர், அவன் என்ன செய்வான் ?

செவ்விய தீவிய சொல்லி, அவற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான்று, அவை எல்லாம்
பொய்யாதல் யான் யாங்கு அறிகோ மற்று?—ஐய!-
அகல் நகர் கொள்ளா அலர் தலைத் தந்து,
பகல் முனி வெஞ் சுரம் உள்ளல் அறிந்தேன்;
மகன் அல்லை மன்ற, இனி.

செல்; இனிச் சென்று நீ செய்யும் வினை முற்றி,
அன்பு அறமாறி, 'யாம் உள்ளத் துறந்தவள்
பண்பும் அறிதிரோ?' என்று, வருவாரை
என் திறம் யாதும் வினவல்; வினவின்,
பகலின் விளங்கு நின் செம்மல் சிதைய,
தவல் அருஞ் செய் வினை முற்றாமல், ஆண்டு ஓர்
அவலம் படுதலும் உண்டு.

## 48. மானும் மனமும்

"கண்ணே! வருந்தாதே!"
"எதற்கு?"
"நான் வெளியூர் போகிறேன்."
"போய் வாருங்களேன்."
"நீ வருந்தாதிரு!"
"நான் ஏன் வருந்த வேண்டும்?"
"பிரிவு கண்டு."
"பிரிவா? ஏது? நானுந்தான் வருகிறேனே!"
திடுக்கிட்டான் அவன்.
"நீயும் வருகிறாயா?"
"ஆம்."
"உன்னால் நடக்க முடியாதே!"
"மெதுவாக நடந்து வருவேன்."
"ஐயோ! அது பாலைவனமாயிற்றே!"
"இருந்தால் என்ன? உனக்குப் பாலை அது. ஆனால் எனக்குப் பாலை எது? நீ இல்லாத இடம்!"

"கண்ணே! சொல்வது கேள். வறண்ட பாலைவனத்தின் வழியே நடந்து செல்ல வேண்டும். நீர் நிலைகள் வற்றியிருக்கும். குடிக்கத் தண்ணீர் அகப்படாது. 'தண்ணீர்! தண்ணீர்' என்று நீ தவிக்கும் காட்சி கண்டு நான் எவ்வாறு சகிப்பேன் ?"

"உன்னைப் பிரிந்து நான் இங்கே எவ்வாறு தவிப்பேன் ? எவ்வாறு சகிப்பேன்.?"

"வெயிலின் கொடுமை தாங்க முடியாதே உன்னால்! இளைப் பாறுவதற்கு மர நிழல் எதுவும் இராதே! வெயில் தாங்க முடியா மல் நீ துடிப்பது கண்டு நான் எவ்வாறு சகிப்பேன் ?"

"இங்கே மரமுண்டு; நிழலுண்டு; மழையுண்டு; நீருண்டு. ஆனால் எனக்கு மகிழ்ச்சியில்லை. என் கண்ணுக்கு இதுவே பாலை. ஏன் ? நீ இல்லை! நீ இல்லாத இடமே எனக்குப் பாலை. நீ மாத்திரம் இருந்துவிட்டால், அது எப்பேர்ப்பட்ட பாலை நில மாயினும் அதுவே இந்திரலோகம். நிழல் கொடுக்கும் மரம் ஏதும் அப் பாலை நிலத்தில் இல்லை என்று சொல்கிறாய். எனக்கு நிழல் கொடுக்கும் மரம் நீதான். ஆறுதலளிக்கும் நிழல் நீதான். தாகத் திற்குத் தண்ணீர் அருந்தும் அருஞ்சுனை நீதான்."

"கண்ணே! என்மீது கொண்ட அன்பினால் ஏதேதோ சொல்கிறாய். பிடிவாதம் செய்யாதே. நான் கூறுவது கேள். கல்லும் முள்ளும் நிறைந்த காடு அது. அம்பு எய்தால் அது ஊடுருவிச் செல்ல முடியாமல் ஒடிந்து விழும் காடு. அக் காட்டு வழியே நீ எவ்வாறு நடந்து வருவாய் ?"

அவள் சிரித்தாள்.

"அந்தக் காட்டிலே கலைமான் ஓடுகிறது அல்லவா ?"

"ஆம்."

"அதைத் தொடர்ந்து பெண் மான் ஓடுகிறது அல்லவா ?"

"ஆம்."

"கலையைப் பிரிந்து பெண் மான் தவிக்கும் காட்சி கண்ட துண்டா ?"

"இல்லை!"

"அப்புறம் என்ன ? காட்டில் வாழும் மான்களின் இயல்பு கூட உன்னிடம் இல்லையே! காடு என்பதற்காகப் பெண் மானைக்

தனியே விட்டுச் செல்கிறதா கலைமான்? இல்லையே! ஆகவே என்னையும் உடன் அழைத்துச் செல்!"

இதற்கு மேல் அவன் என்ன செய்வான்?

பல் வளம் பகர்பு ஊட்டும் பயன் நிலம் பைது அற,
செல் கதிர் ஞாயிறு செயிர் சினம் சொரிதலின்,

தணிவு இல் வெங் கோடைக்குத் தண் நயந்து அணி
கொள்ளும்

பிணி தெறல் உயக்கத்த பெருங் களிற்றினம் தாங்கும்
மணி திகழ் விறல் மலை வெம்ப, மண் பக,
துணி கயம் துகள் பட்ட தூங்கு அழல் வெஞ் சுரம் -

'கிளி புரை கிளவியாய்! நின் அடிக்கு எளியவோ,
தளி உறுபு அறியாவே, காடு?' எனக் கூறுவீர்!
வளியினும் வரை நில்லா வாழு நாள், நும் ஆகத்து
அளி என, உடையேன் யான்; அவலம் கொண்டு
அழிவலோ?

'ஊறு நீர் அமிழ்து ஏய்க்கும் எயிற்றாய்! நீ உணல்
வேட்பின்,
ஆறு நீர் இல' என, அறன் நோக்கிக் கூறுவீர்!
யாறு நீர் கழிந்தன்ன இளமை, நும் நெஞ்சு என்னும்
தேறு நீர், உடையேன் யான்; தெருமந்து ஈங்கு
ஒழிவலோ?

'மாண் எழில் வேய் வென்ற தோளாய்! நீ வரின்,
தாங்கும்
மாண் நிழல் இல, ஆண்டை மரம்' எனக் கூறுவீர்!
நீள் நிழல் தளிர் போல நிறன் ஊழ்த்தல் அறிவேன்; நும்
தாள் நிழல் கைவிட்டு யான் தவிர்தலைச் சூழ்வலோ?
என ஆங்கு,

'அணை அரும் வெம்மைய காடு' எனக் கூறுவீர்!
கணை கழிகல்லாத கல் பிறங்கு ஆர் இடை,
பணை எருத்து எழில் ஏற்றின் பின்னர்ப்
பிணையும் காணிரோ? பிரியுமோ, அவையே?

## 49. பிரியும் பொருளும் பிரியாப் பொருளும்

தினைப்புனத்திலே அவளைக் கண்டான். அவளது அழகிலே மயங்கினான். காதல் கொண்டான். இன்பம் துய்த்தான்.

பிறகு அவளுக்கு ஒரு சந்தேகம். "எவனோ வந்தான்; என்னவோ சொன்னான். சரியென்று இணங்கி விட்டோமே! இன்பமாகத்தான் இருக்கிறது. அன்பாகத்தான் பேசுகிறான். ஆனால் இவன் பிரிந்து போய்விட்டால் என்ன செய்வது? 'ஏமாளி' என்றல்லவா நம்மை ஏசுவார்கள்" என்று எண்ணினாள்; கலங்கினாள். கண்டான் அவன். அறிந்து கொண்டான்.

"கண்ணே! கலங்காதே! இனி, எந்நாளும் உனைப் பிரியேன்" என்றான். கையடித்துச் சத்தியம் செய்து கொடுத்தான்.

அது அன்று. ஆனால் இன்றோ? அவன் என்ன கூறினான்? 'பிரிகிறேன்' என்றான். கேட்டாள் காதலி. சென்றாள் தோழியிடம். கூறினாள். வந்தாள் தோழி:

"அன்றைய தினம் சொன்னது மறந்தாயோ?" என்றாள்.

"என்ன சொன்னேன்?" என்று கேட்டான் அவன்.

"சத்தியம் செய்து கொடுத்தாயே! 'கண்ணே கலங்காதே! உன்னை இனி நான் பிரியேன்' என்று சொன்னாயே! அதை மறந்து விட்டாயா? அல்லது அது பொய்ச் சத்தியமா? இன்று என்னவென்றால், பிரிகிறேன் என்கிறாய். இதிலே எது மெய்? எது பொய்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!" என்றாள் அவள்.

"ஊருக்குப் போய் வருகிறேன் என்றால், அதற்கு ஏன் இவ்வளவு பெரிய குழப்பம் செய்கிறீர்கள்? பிரிகிறேன் என்றால் பிறகு ஒருநாளும் திரும்பி வரமாட்டேனா? என்ன இது?" என்றான் அவன்.

"எதற்காக ஊருக்குப் போக வேண்டும்?" என்று கேட்டாள் அவள்.

"பொருள் வேண்டாமா?" என்று கேட்டான்.

கேட்டாள் தோழி. சிரித்தாள்.

"அடேடே! தங்கக் கட்டிபோலே காதலி இருக்கிறாள். கண்ணுக்கினிய காதலி. இளம் பருவம். இன்பம் துய்க்க ஏற்ற சமயம். இதை விட்டான்; எங்கேயோ பொருள் இருக்கிறதாம். அதைத் தேடிப் போகிறானாம்!

"நீ தேட விரும்பும் பொருள் இருக்கிறதே! அதற்கு ஏதாவது ஒரு நியதி உண்டா? எவரிடம் சேரலாம், எவரிடம் சேரலாகாது என்ற கட்டுப்பாடு உண்டா? கிடையாது. சரி. சேர்ந்த பிறகு அவரிடம் நிலைத்து இருக்குமா? திடீரென்று பிரிந்து போய்விடும். இப்பேர்ப்பட்ட தன்மையுடையது. ஆனால் உன் காதலியோ என்றும் உன்னைப் பிரியாள். இன்பத்திலும் துன்பத்திலும் இணைபிரியாது வாழ்வாள். இவளைவிடப் பெரிய பொருள் வேறு ஏதுமில்லை. ஆகவே, நான் சொல்வதைக் கேள்.

"இவளைப் பிரியாதே. எங்கும் போகாதே. இன்பமாக இவளிடம் இரு" என்றாள் தோழி.

'பால் மருள் மருப்பின், உரல் புரை பாவு அடி,
ஈர் நறுங் கமழ் கடாஅத்து, இனம் பிரி ஒருத்தல்
ஆறு கடி கொள்ளும் வேறு புலம் படர்ந்து,
பொருள்வயிற் பிரிதல் வேண்டும்' என்னும்
அருள் இல் சொல்லும், நீ சொல்லினையே;
நன்னர் நறு நுதல் நயந்தனை நீவி,
'நின்னின் பிரியலன், அஞ்சல் ஓம்பு' என்னும்
நன்னர் மொழியும் நீ மொழிந்தனையே:
அவற்றுள் யாவோ வாயின? - மாஅல் மகனே!
'கிழவர் இன்னோர்' என்னாது, பொருள்தான்,
பழ வினை மருங்கின் பெயர்பு பெயர்பு உறையும்;
அன்ன பொருள்வயிற் பிரிவோய் - நின் இன்று
இமைப்புவரை வாழாள் மடவோள்
அமைக் கவின் கொண்ட தோள் இணை மறந்தே.

## 50. அரும்பிய மொட்டும் வாடிய மலரும்

குடும்பத்திலே நடந்த சிறு சண்டை இது. "வெளியூர் போகிறேன்" என்று சொன்னான் காதலன். "போகக் கூடாது" என்றாள் காதலி. "எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். அவன் கேட்கவில்லை. "போவேன்" என்று பிடிவாதமாகக் கூறினான்.

அப்போதுதான் அவள் மனம் நொந்து கூறுகிறாள்:

"நான் சிரித்தேன். எனது பல் அழகைப் பாராட்டினாய் 'முல்லை தொடுத்த முறுவல் அழகி' என்றாய். அப்போது இளம் வயது. எழில் மிக்கு விளங்கினேன். இன்றோ வயதாகிவிட்டது. இளமை தேய்கிறது. இப்போதும்தான் நான் சிரிக்கிறேன். ஆனால் முல்லை முறுவல் அழகினைக் காண்பதில்லை நீ. புகழ்வதில்லை.

"அப்போது இளம் வயது எனக்கு. அடர்த்தியான கூந்தல் இருந்தது. 'தோகையோ' என்றாய்? 'கருங் கூந்தலாய்' என்றாய். 'முகிலோ உன் கூந்தல்' என்றாய். ஆனால் இப்போதோ! எனக்கு வயதாகி விட்டது. இளமை போய்க் கொண்டிருக்கிறது. அதன் அறிகுறியை என் கூந்தலில் காண்கிறேன். அடர்த்தியாக இருந்த கூந்தல் உதிர்ந்து போயிற்று. நீளமாகத் தொங்கிய கூந்தல் குட்டையாயிற்று. அதை மறைப்பதற்காகச் செயற்கை முறைகளில் இறங்கிவிட்டேன். என் கூந்தலிலே நீ அழகு காண்பதில்லை! கருங் கூந்தலாய் என்பதில்லை! தோகையோ, முகிலோ என்று பாராட்டுவதில்லை.

"இப்போது நீ புகழ்வதற்குரியது எதுவும் என்னிடமில்லை. உன்னைக் கவர்வதற்குரிய எதுவுமில்லை என்னிடம். இப்போது நீ 'பிரிவேன்' என்று சொல்லாது வேறு என்ன சொல்வாய்! மலரிலே தேன் உள்ளவரைதானே வண்டு மொய்க்கும். பிறகு போய் விடுவது இயற்கைதானே! அந்த வண்டின் குணம் தான் உன்னிடமும் இருக்கிறது. இது உலகத்தின் இயற்கை தானே! ஒருவரிடம் கடன் வாங்கும்போது நடந்து கொள்ளும் விதம் வேறு. பிறகு கடன் கொடுத்தவர் அதைத் திருப்பிக் கேட்கும்போது நடந்துகொள்ளும் விதம் வேறு. இது ஒன்றும் புதிது

அல்லவே. உலக இயற்கைதானே! நீ அதனின்றும் எப்படி மாறுபட்டு இருப்பாய்! இருக்கமாட்டாய்.

"ஆனால் ஒன்று கூறுகிறேன், கேள்: ஓவியம் எழுதுகிறான் ஒருவன். அதற்கு உயிரூட்டுகிறான். அந்த ஓவியம் அழியும்வரையில் அந்த உயிர்ப்பும் இருக்குமல்லவா?

"அதேபோல ஒருமுறை ஒருவன் ஒரு வார்த்தை கூறினால், அதை என்றும் காக்கவேண்டும். அவ்விதம் காப்பவரே நல்லோர். சொல் காக்கும் திறம் உனக்கில்லை. உன்னிடம் பேசிப் பயன் என்ன? போய் வா!"

உண் கடன் வழிமொழிந்து இரக்குங்கால் முகனும், தாம்
கொண்டது கொடுக்குங்கால் முகனும், வேறாகுதல்
பண்டும் இவ் உலகத்து இயற்கை; அஃது இன்றும்
புதுவது அன்றே - புலனுடை மாந்திர்! -
தாய் உயிர் பெய்த பாவை போல,
நலன் உடையார் மொழிக்கண் தாவார்; தாம் தம் நலம்
தாது தேர் பறவையின் அருந்து, இறல் கொடுக்குங்கால்,
ஏதிலார் கூறுவது எவனோ, நின் பொருள் வேட்கை?

நறு முல்லை நேர் முகை ஒப்ப நிரைத்த
செறி முறை பாராட்டினாய்; மற்று, எம் பல்லின்
பறி முறை பாராட்டினையோ? - ஐய!

நெய் இடை நீவி மணி ஒளி விட்டன்ன
ஐவகை பாராட்டினாய்; மற்று, எம் கூந்தல்
செய்வினை பாராட்டினையோ? - ஐய!

குளன் அணி தாமரைப் பாசரும்பு ஏய்க்கும்
இள முலை பாராட்டினாய்; மற்று, எம் மார்பில்
தளர் முலை பாராட்டினையோ? - ஐய!
என ஆங்கு,

அடர் பொன் அவிர் ஏய்க்கும் அவ் வரி வாட,
சுடர் காய் சுரம் போகும் நும்மை யாம் எங்கண்
படர் கூற நின்றதும் உண்டோ - தொடர் கூர,
துவ்வாமை வந்தக்கடை?

## 51. களைந்த ஓலையும் கசங்கிய மலரும்

“போவேன்; போவேன்” என்று பிடிவாதம் செய்கிறவரை என்ன செய்ய முடியும்? எத்தனை நாள் தடுத்து நிறுத்த முடியும்?

நயமாகச் சொல்லிப் பார்க்கலாம். பயமாகவும் சொல்லிப் பார்க்கலாம். கேட்டால்தானே!

அவன், “போவேன்” என்றான், பொருள் தேடுவதற்கு.

“ஐயோ! என்னை விட்டா போகிறாய்? தனியாகத் தவிக்க விட்டா போகிறாய்? ஏங்கவிட்டா போகிறாய்? இது உனக்கு அடுக்குமா? நியாயமா?” என்று கண்ணீர் விட்டாள்; கதறினாள்.

அவன் கேட்டால்தானே! அசையவில்லை. கல் உளிபோல் இருந்தான்.

அவன்மீதும் தவறில்லை. அவன் என்ன செய்வான்? பாவம். வாழ்நாள் முழுவதும் மையலார் விழியின் இன்பத்தைப் பருகிக்கொண்டேயிருந்துவிட்டால்...! பிறகு...?

பொருள் வேண்டாமா? பொருள் இல்லாவிட்டால் என்ன நடக்கும்? முன்னோர் தேடிய பொருள் எவ்வளவு நாளைக்கு வரும்? புதிதாகப் பொருள் சேர்த்தால்தானே! எனவே, பொருள் சேர்க்க விரும்பினான். வெளியூர் போக எண்ணினான்.

நினைத்தபோது எல்லாம் இன்பந்தரும் காதலியை விட்டு வெளியூர் செல்வது என்றால் அது என்ன லேசில் முடிகிற காரியமா?

அதற்கு எவ்வளவோ மன உறுதி வேண்டும். காதலியைப் பிரிந்து செல்வது எவ்வளவு கஷ்டம்! அவனது மனம் எவ்வளவு கஷ்டப்படும்?

இருந்தாலும் அந்த வேதனையை உள்ளே அடக்கிக் கொண்டான்; ஒருவாறு சமாளித்துக் கொண்டான்.

“போய் வருகிறேன்” என்றான். அது தெரிகிறதா அவளுக்கு. இல்லை.

அவளோ,

“புஸ்” என்று கிளம்பினாள், நாகப் பாம்பு புற்றிலிருந்து தலை நீட்டிச் சீறுவதுபோல.

அவள் மீதும் தவறில்லை. அவளுக்கு ஆசை. அவன் மீது மட்டற்ற ஆசை. எப்போதும் அவன் அணைப்பிலே இருக்க விருப்பம். தேன் உண்ட வண்டு மயங்கிக் கிடக்கும் மலரிலே. அந்த மாதிரி அவன் மார்பிலே மயங்கிக் கிடக்க அவள் துடிக்கிறாள்.

இந்த நிலையில் "போகிறேன்" என்றால் அவளுக்கு எப்படி யிருக்கும்? 'சுருக்'கென்று தைக்கிறது உள்ளத்திலே, 'முள்' தைப்பது போல. வலிக்கிறது. சீறுகிறாள். நியாயம்தானே!

இந்த இருவர்தம் மனோநிலையிலே நாம் நின்று பார்த்தால் தான் அவரவர் உள்ளம் தெரியும்.

சிறு பிள்ளை ஒன்று தெருவிலே ஓடுகிறது; வேகமாக; வெகு வேகமாக. கால் வழுக்கி விடுகிறது. கீழே விழுகிறது அப் பிள்ளை.

அக்கம் பக்கத்தில் உள்ளவர்களைத் தலை தூக்கிப் பார்க்கிறது. 'கோ' என்று அழுகிறது.

அழுகை ஏன்? கீழே விழுந்த வலி பொறுக்க முடியாமல் அழுகிறதா? அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் பார்த்தார்களே! தன்மான உணர்ச்சி புண்பட்டதே! அதற்காக அழுகிறதா? இரண்டும்தான். வலி ஒருபுறம். தன்மானம் மறுபுறம்.

அதேபோல்தான் ஆயிற்று அவளுக்கு. 'போகிறேன்' என்று அவன் சொன்னதால் ஏற்பட்ட துக்கம் ஒருபுறம். அக்கம் பக்கத் தார் இனி நம்மை என்ன சொல்லி ஏசுவார்களோ என்பதை நினைத்துக் கொள்ளும் துக்கம் மறுபுறம்.

"அதோ பார்" என்றாள் அவள்.

"என்ன?" என்றான்.

"அந்தக் குப்பைமேட்டைப் பார்" என்றாள். பார்த்தான்.

"குப்பைமேட்டுக்கு என்ன?" என்றான்.

"குப்பைமேட்டிலே என்ன தெரிகிறது?" என்றாள்.

"என்ன தெரியும்? குப்பைதான் தெரியும்" என்றான்.

"ஆம்! குப்பை...குப்பைதான்" எனறு பெருமூச்சு விட்டாள் அவள்.

"வெயில் காலத்திலே தாகம் மிகுந்த மக்கள் என்ன செய் கிறார்கள்? ஆற்றிலே உள்ள ஊற்றுநீரைக் குடிக்கிறார்கள். எப்படி? பனை ஓலையை எடுத்துக் குடையாக்கி, அதனால் நீரை

மொண்டு குடிக்கிறார்கள். குடித்த பிறகு...குப்பைமேட்டில் எறிந்து விடுகிறார்கள். குடையோலை குப்பைமேட்டில் கிடக்கிறது. தண்ணீர் குடித்த பிறகு....தாகத்தைத் தீர்த்துக்கொண்ட பிறகு.... அந்தக் குடையோலைக்கு இடம்...குப்பைமேடு. ஆம்...ஆம்... இனி என்னுடைய நிலையும் அப்படித்தான். வேண்டிய மட்டும் நீர் குடித்துவிட்டாய். தாகத்தைத் தீர்த்துக்கொண்டாய். இன்பம் குடித்தாய். தூக்கி எறிந்து விட்டாய். இனி நான் எதற்கு? குடையோலையின் கதியாயிற்று. குப்பைமேட்டுக்குப் போய்ச் சேர வேண்டியதுதான்'' என்றாள். அவள் நா தழு தழுத்தது. துக்கம் தொண்டையை அடைத்தது. கண்கள் நீரைச் சொரிந்தன. துணியால் அதைத் துடைத்துக் கொண்டாள்.

அவன் பேசாது நின்றான். அவளும் பேசாது நின்றாள். இருவரும் எதையோ பார்த்துக் கொண்டிருந்தனர். ஆழ்ந்த யோசனை. அதன் பின் நீண்டதொரு பெருமூச்சு.

தூரத்திலே அவளது பார்வை விழுந்தது. அது என்ன? வாடிக் கருகிக் கிடந்த மலர் மேடு. நாள்தோறும் அழகிய மலர்களைக் கொண்டு வந்தாள். நாரிலே தொடுத்தாள். தலையிலே அணிந்து கொண்டாள். எழில் பெற்றாள். இன்பம் ஊட்டினாள் அவனுக்கு.

இரவு முழுதும் அவளது கூந்தலில் இருந்தது அம்மலர். காலையில் எழுந்ததும் என்ன ஆயிற்று? வாடிப் போயிற்று. வதங்கிப் போயிற்று. அதை எடுத்தாள் அவள். வீசி எறிந்தாள். தூரத்திலே போய் விழுந்தது. இப்படியே தினந்தோறும் நடந்தது. ஒரு நாளல்ல; பல நாட்கள்.

தூரத்திலே எறியப்பட்ட மலர் என்னாயிற்று? கருகிப் போயிற்று. மேலும் மேலும் அவ்வாறு விழவே, அங்கு ஓர் மேடு ஏற்பட்டுவிட்டது. அது அவளது கண்ணிலே தென்பட்டது அப்போது:

"அதோ பார்!'' என்றாள்.

"எதோ?'' என்றான்.

"அங்கே'' என்றாள்.

"எங்கே?'' என்றான்.

தன் கூந்தலில் இருந்த வாடிய மலரை வீசி எறிந்தாள். அது போய் விழுந்தது அந்தப் பழைய மேட்டிலே.

"அங்கே...கசக்கி எறிந்த மலர்...ஆம்....கசக்கி எறியப்பட்ட மலர்தான் நான்...முகர்ந்து வீசப்பட்ட முல்லை...வாடிய ரோஜா...மணம் இழந்த மல்லிகை......அதன் கதிதான் எனக்கும்......" என்றாள்.

அப்போதும் அவன் பேசவில்லை. "என்ன சொன்னாலும் உன் நெஞ்சு கரையவில்லையே! 'போகிறேன், போகிறேன்' என்கிறாய். போய் வா. நீ போன பிறகு எனக்கு உணவு செல்லாது; உறக்கம் பிடிக்காது. ஊண் உறக்கமின்றி வருந்துவேன்; வாடுவேன்; வதங்குவேன்; ஏங்குவேன்; கண்ணீர் வடிப்பேன்; இரங்குவேன்; இறப்பேன். அவ்வளவுதான்" என்றாள்.

பிறகு சிறிது நேரம் மௌனம், புயல் வீசி ஓய்ந்ததுபோல. அப்படியே கீழே சாய்ந்தாள் அவள்.

"ஐயோ! என்ன சொன்னாலும் என் மனசு கேட்கமாட்டேன் என்கிறதே! அம்பு பட்ட மானைத் துரத்திச் செல்கிறது நாய். வேடன் வருமளவும் பாதுகாக்கிறது. வேடன் வந்த பின்... நாயின் வசம் இருந்த மான் வேடன் வசமாகிறது. அதுபோலல்லவா இருக்கிறது என் மனம்.

"நான் உன்னைக் கோபிக்கிறேன். சுடு சொல் கூறுகிறேன். தாக்குகிறேன். அம்புபோல் வார்த்தைகளை வீசுகிறேன். இருந்தாலும், என் நெஞ்சை என்ன என்பேன். என் உடலில் இருந்தாலும் உன்பால்தானே வருகிறது. என்ன செய்வேன்" என்று

இலங்கு ஒளி மருப்பின் கைம்மா உளம்புநர்,
புலம் கடி கவணையின், பூஞ் சினை உதிர்க்கும்
விலங்கு மலை வெம்பிய போக்கு அரு வெஞ் சுரம்
தனியே இறப்ப, யான் ஒழிந்திருத்தல்
நகுதக்கன்று, இவ் அழுங்கல் ஊர்க்கே :
இனி யான்,

உண்ணலும் உண்ணேன் ; வாழலும் வாழேன்.

தோள் நலம் உண்டு துறக்கப்பட்டோர்
வேள் நீர் உண்ட குடை ஓரன்னர்.

நல்குநர் புரிந்து நலன் உணப்பட்டோர்
அல்குநர் போகிய ஊர் ஓரன்னர்.

கூடினர் புரிந்து குணன் உணப்பட்டோர்
சூடினர் இட்ட பூ ஒரன்னர்.
என ஆங்கு,

யானும் நின்னகத்து அனையேன்; ஆறு து,
கொலை வெங் கொள்கையொடு நாய் அகப்படுப்ப,
வலைவர்க்கு அமர்ந்த மட மான் போல,
நின் ஆங்கு வரூஉம் என் நெஞ்சினை
என் ஆங்கு வாராது ஓம்பினை கொண்மே.

## 52. தூக்கமும் துக்கமும்

காலை நேரம். படுக்கைவிட்டு எழுந்து வந்தாள் அவள். முகம் சோர்ந்திருந்தது. கண்கள் ஒளியிழந்து இருந்தன; இடுங்கியிருந்தன; சிவந்திருந்தன.

இரவு முழுதும் தூங்கவில்லை அவள். அதை அவளது முகம் எடுத்துக்காட்டி விட்டது. கண்டாள் தோழி. அவளுக்கு இதைவிட வேறு வேலை என்ன?

"ஏன் முகம் ஒரு மாதிரியாயிருக்கிறது?" என்று கேட்டாள்.

"எந்த மாதிரியிருக்கிறது?" என்றாள் அவள்.

"ராத்திரி தூக்கமில்லையோ?"

"ஆமாம்!"

"அவர்?"

"அவர் தூங்கினார்."

தோழி சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறாய்?" என்றாள் அவள்.

"அவர் தூங்கினுல் நீயும் தூங்க வேண்டியவள்தானே! நீ மாத்திரம் விழித்திருக்க வேண்டிய காரணம் என்ன?"

"அவர் புலம்பினுர்" என்ருள்.

"என்ன புலம்பினுர்? எப்போது புலம்பினுர்? ஏன் புலம்பினுர்?" என்று கேள்விகளை அடுக்கிக்கொண்டே போனுள் தோழி.

"கண்ணே, வருந்தாதே! சீக்கிரம் வந்து விடுகிறேன்" என்று சொன்னுர்.

"அவர் ஏன் அவ்விதம் சொல்ல வேண்டும்?"

"நீண்ட நாட்களாகவே நான் எது குறித்துப் பயந்தேனே அது நடந்து விட்டது. அவர் பிரியப் போகிருர். அது தெரிந்து விட்டது. கனவிலே புலம்பினுர். கண்டுகொண்டேன்" என்று கூறினுள் அவள். கண்கள் நீர் சொரிந்தன.

"அப்படியானுல் நீண்ட நாள் முன்பே நீ பயந்தது எப்படி?" என்று கேட்டாள் தோழி.

"ஒவ்வொரு நாளும் என்னிடத்தே கொஞ்சுவார்; விளையாடுவார். அளவு மீறிய அன்பு காட்டுவார், வழக்கத்துக்கு மாருக. அது கண்டேன். என் மனத்திற்குள்ளே ஒரு சந்தேகம்.

" 'இவர் இப்படி ஏன் என் மீது அன்பு காட்டுகிருர். அளவுக்கு மீறிய அன்பாயிருக்கிறதே. அப்படியானுல் பின்னே ஏதோ இருக்கிறது' என்று எண்ணினேன்.

"எண்ணியபடியே நிகழ்ந்துவிட்டது. நிச்சயமாக அவர் போகப்போகிருர்.

"இனி, அவரிடத்திலே ஒரே ஒரு வார்த்தை சொல்லி விடு தோழி. 'அவர் என்னை விட்டுச் சென்ருர் என்ற பழி நின்றது; என் உயிர் சென்றது என்று சொல்" என்ருள்.

ஓர் அரசன். அவன் மற்ருேர் அரசனிடத்தில் தூது அனுப்புகிருன். யாரை? இந்தப் பாட்டுக்கு உரிய காதலனை. தூது செல்வதற்கான ஆயத்தங்களைச் செய்துகொண்டிருக்கிருன். அது கண்டுதான் அவள் கலங்கினுள். அவளைப் பிரிந்து செல்வது அவனுக்கும் இன்பம் தரவில்லை. எனினும் என்ன செய்வது? முக்கியமான காரியம். அரசு பற்றிய செயல். கடமை. காதலா? கடமையா? காதலை விடுவதா? கடமையை விடுவதா? இதுதான்

அவனுள்ளே எழுந்த போராட்டம். இந்தப் போராட்டத்தின் விளைவே அவன் கனவில் புலம்பியது.

அவனது உள்ளம் துடித்த துடிப்பை அவள் அறியவில்லை. பிரிந்து செல்கிறான் என்பதையே அறிந்தாள். அவ்வளவுதான். வந்து விட்டது கோபம். 'பிரியின், உயிர் தரியேன்' என்றாள்.

'நெஞ்சு நடுக்குறக் கேட்டும், கடுத்தும், தாம்
அஞ்சியது ஆங்கே அணங்காகும்' என்னும் சொல் -
இன் தீம் கிளவியாய்! - வாய் மன்ற: நின் கேள்
புதுவது பல் நாளும் பாராட்ட, யானும்,
'இது ஒன்று உடைத்து' என எண்ணி, அது தேர,
மாசு இல் வண் சேக்கை மணந்த புணர்ச்சியுள்,
பாயல் கொண்டு என் தோள் கனவுவார், 'ஆய் கோல்
தொடி நிரை முன் கையாள் கையாறு கொள்ளாள்,
கடி மனை காத்து, ஓம்ப வல்லுவள் கொல்லோ -
இடு மருப்பு யானை இலங்கு தேர்க்கு ஓடும்
நெடு மலை வெஞ் சுரம் போகி, நடு நின்று,
செய் பொருள் முற்றும் அளவு?' என்றார்; ஆயிழாய்!
தாம் இடை கொண்டது அதுவாயின், தம் இன்றி
யாம் உயிர் வாழும் மதுகை இலேமாயின்,
'தொய்யில் துறந்தார் அவர்' என, தம்வயின்,
நொய்யார் நுவலும் பழி நிற்ப, தம்மொடு
போயின்று, சொல், என் உயிர்.

## 53. நகையும் பகையும்

"விரோதிகளை வீட்டுக்குள்ளேயே வைத்திருக்கிறாயே!" என்று கேட்டுக்கொண்டே வந்தாள் தோழி.

"என்ன?" என்றான் அவன்.

"ஒன்றுமில்லை. உலகத்திலே சிலர் உளர். நண்பனைப் போல நடிப்பர். எதுவரை? பையிலே பைசா இருக்கிற வரையில். செல்வாக்கு இருக்கிற வரையில். காசு கரைந்துபோனால்—செல்

வாக்குப் போய்விட்டால்—தூற்றுவதற்குத் தொடங்கிவிடுவர். யார்? இதே பேர்வழிகள்தான். வேறு எவருமில்லை.

"வேறு சிலர் உளர். எதிரிலே புகழ்வர். 'ஆகா!' என்பர். 'இவரைப் போன்ற அறிஞர் இல்லை' என்பர். 'மூன்று உலகும் தேடிக் கண்டுபிடித்து விட்டமாக்கும்' என்பர். எப்போது? ஆள் இருக்கும்வரை. அப்பால் என்ன? ஆசாமி தலை மறைய வேண்டியதுதான். 'ஆ! அவன் கிடக்கிறான்' என்பர். இந்த மாதிரி 'கண்டால் காமாச்சி நாயகன்' பேர்வழிகள் உலகத்திலே அதிகம்.

"இன்னும் சிலர் உளர். நெருங்கிப் பழகுவர். இரகசியங்களை எல்லாம் அறிந்து கொள்வார்கள். பிறகு அதை ஊர் முழுதும் பறை சாற்றுவார்கள்.

"இவையெல்லாம் என்ன? உயர்ந்த பண்புகளா? இல்லை, இல்லை. ஒரு நாளுமில்லை. இம்மாதிரி இழி பண்பு கொண்டார் நட்பு உதவாது; உதவாது; ஒருநாளும் உதவாது.

"என்ன செய்வது? நீ அந்த இழி பண்பு மிக்காருடன் சிநேகம் செய்து விட்டாய்!" என்றாள் அவள்.

திடுக்கிட்டான் அவன்.

"யாருடன் சிநேகம் செய்தேன்?" என்று கேட்டான்.

"கண்கள் செய்துவிட்ட பாவம்" என்றாள்.

"யாருடைய கண்கள்?" என்றான்.

"உனது காதலியின் கண்கள்தான்" என்றாள்.

"என்ன செய்கின்றன?"

"ஒரு காலத்திலே உன்னைக் கவர்ந்தன; அழைத்தன; உன்னுடன் உறவாடின; கவினுற விளங்கின."

"உம், பிறகு?"

"பிறகு என்ன? உன்னைக் காட்டிக்கொடுக்கத் தொடங்கிவிட்டன. நீ பிரியப் போகிறாய் என்பதை ஊராருக்குப் பறை சாற்றத் தொடங்கிவிட்டன."

அவன் சிரித்தான்.

"சிரிக்காதே! உனக்கு விரோதிகள் பலர் உள்ளனர்" என்றாள்.

"இன்னும் யார்?" என்றான்.

"உன் காதலியின் நெற்றி" என்றாள்.

"அது என்ன செய்கிறது?" என்று கேட்டான்.

"நீ கூடியிருந்தபோது—அவளுடன் சுகித்திருந்தபோது—மகிழ்ந்திருந்தபோது—பளபள என்று ஒளி வீசியது. பூரண சந்திரன்போல் இருந்தது. இப்போது களையிழந்து விட்டது; பசலை படர்ந்துவிட்டது. நீ 'பிரிகிருய்; பிரிகிருய்' என்று ஊராரிடம் தம்பட்டம் அடிக்கிறது.

"இவ்வளவுதானு? இன்னும் யாராவது உண்டா?" என்று கேட்டான்.

"அந்த வளைகள்! அவளது கையிலே கிடந்து ஒளி வீசிய வளைகள். நீ போகிருய் என்று அறிந்த உடனே, கழன்று ஓடுகின்றன; விரைவாக ஓடுகின்றன, ஊர் முழுதும் பறைசாற்ற. இத்தகைய நண்பர்களுடன்தான் நீ சிநேகம் செய்தாய்!" என்ருள்.

'இடி இடி' என்று சிரித்தான் அவன்.

"சிரிக்கிருய். பகைவர்களின் கொடுமை எப்பேர்ப்பட்டது என்பது உனக்குத் தெரியவில்லை.

"அந்தத் துரியோதனன் என்ன செய்தான். அரக்கு மாளிகை கட்டினுன். ஐவர் பாண்டவரையும் அதிலே அழைத்து வைத்தான்; நெருப்பும் வைத்தான். தீப்பற்றி எரிந்தது.

"அப்போது வீமசேனன் என்ன செய்தான்? ஐவரையும் தூக்கிக்கொண்டு புது வழியே ஓடிச் சென்ருன்.

"மூங்கில் காட்டிலே தீப்பிடித்து எரியும். அதன் இடையிலே அகப்பட்டுக்கொள்ளும் யானைக் கூட்டம். அப்போது பெரிய யானை என்ன செய்யும்? மூங்கில் காட்டை உடைத்துப் புதுவழி உண்டு பண்ணும். அவ் வழியே மற்ற யானைகளை அழைத்துச் செல்லும்.

"நீ செல்லும் காட்டு வழியிலே இத்தகைய காட்சிகளைக் காண்பாய். அப்போதுதான் பகைவர் செய்யும் அழிவு எத்தகையது என்பதை நீ அறிவாய்."

இவ்விதம் தோழி கூறினுள்.

அதாவது என்ன? பெரியதோர் அழிவு ஏற்படப்போகிறது என்பதை அறிவுறுத்தினுள் தோழி.

அழிவு ஏன்? பிரிவினுல்.

வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்,
'ஐவர்' என்று உலகு ஏத்தும் அரசர்கள் அகத்தரா,
கை புனை அரக்கு இல்லைக் கதழ் எரி சூழ்ந்தாங்கு,
களி திகழ் கடாஅத்த கடுங் களிறு அகத்தவா,
முளி கழை உயர் மலை முற்றிய முழங்கு அழல்,
ஒள் உரு அரக்கு இல்லை வளிமகன் உடைத்துத் தன்
உள்ளத்துக் கிளைகளோடு உயப் போகுவான் போல,
எழு உறழ் தடக் கையின் இனம் காக்கும் எழில் வேழம்,
அழுவம் சூழ், புகை அழல் அதர்பட மிதித்துத் தம்
குழுவொடு புணர்ந்து போம், குன்று அழல் வெஞ் சுரம்
இறத்திரால், ஐய! மற்று இவள் நிலைமை கேட்டீமின்:

மணக்குங்கால் மலர்அன்ன தகையவாய், சிறுது நீர்
தணக்குங்கால், கலுழ்பு ஆனுக் கண் எனவும் உள
அன்றே -
சிறப்புச் செய்து உழையராப் புகழ்பு ஏத்தி, மற்று அவர்
புறக்கொடையே பழி தூற்றும் புல்லியார் தொடர்பு
போல்?

ஈங்கு நீர் அளிக்குங்கால் இறை சிறந்து, ஒரு நாள் நீர்
நீங்குங்கால், நெகிழ்பு ஓடும் வளை எனவும் உள அன்றே-
செல்வத்துள் சேர்ந்தவர் வளன் உண்டு, மற்று அவர்
ஒல்கத்து நல்கிலா உணர்விலார் தொடர்பு போல்?

ஒரு நாள் நீர் அளிக்குங்கால் ஒளி சிறந்து, ஒரு நாள் நீர்
பாராட்டாக்கால்,பசக்கும் நுதல் எனவும் உள அன்றே-
பொருந்திய கேண்மையின் மறை உணர்ந்து, அம் மறை
பிரிந்தக்கால் பிறர்க்கு உரைக்கும் பீடிலார் தொடர்பு
போல்?
என ஆங்கு,

யாம் நிற் கூறுவது எவன் உண்டு? எம்மினும்
நீ நற்கு அறிந்தனை; நெடுந் தகை! - வானம்
துளி மாறு பொழுதின், இவ் உலகம் போலும் - நின்
அளி மாறு பொழுதின், இவ் ஆயிழை கவினே.

## 54. வேனிலும் வேதனையும்

மனித சமுதாயத்தின் தலை நாளிலே காலத்தை எப்படிக் கணக்கிட்டார்கள்? இயற்கையை ஒட்டிக் கணக்கிட்டார்கள். அதாவது எப்படி? மழை காலம்! இது நன்றாகத் தெரியும். வெயில் காலம்! இதுவும் நன்றாகத் தெரியும். பனிக் காலம்! இதுவும் நன்றாகத் தெரியும்.

இம் மூன்றும் இயற்கை நிகழ்ச்சிகள். பனிக் காலத்தை இரண்டாக்கினார்கள்: முன் பனி, பின் பனி என்று. அதேமாதிரி மழை காலத்தையும் இரண்டாக்கினார்கள்: கார், கூதிர் என்று. வேனில் காலத்தையும் இரண்டாக்கினார்கள்: இளவேனில், முது வேனில் என்று. ஆக இந்த ஆறும் பருவகாலங்கள் என்று கணக்கிடப்பட்டன.

இப்போது சித்திரை முதலாக மாதத்தை நாம் கணக்கிடு கிறோம். அந்த நாளிலே எப்படி? கார் காலம் முதலாக இருந் தது. ஏன்? மனிதனின் அன்றைய வாழ்வு மழையை ஒட்டி யிருந்தது. எனவே, கார், கூதிர், முன்பனி, பின் பனி, இள வேனில், வேனில் என்று ஆக ஆறு பருவங்களாகப் பிரித்துக் கணக்கிட்டார்கள்.

பருவகாலங்கள் மாறி மாறி வரும்போது மனிதனுக்கு மகிழ்ச்சி; மட்டற்ற மகிழ்ச்சி. ஏன்? அவனது வாழ்க்கை அப் பருவ காலத்துடன் இணைந்திருக்கிறது அல்லவா!

வங்காளிகள் இப் பருவங்களின் வருகையை மிக மகிழ்ச்சி யுடன் கொண்டாடுகிறார்கள். உலகத்தின் பல பகுதிகளிலும் இத் தகைய கொண்டாட்டம் உண்டு.

பழந் தமிழனும் அந்த நியதிக்கு மாறுபட்டவன் அல்லன். ஏன்? மனித சமுதாயத்தின் மூத்த பிள்ளை அவன் அல்லவா?

இளவேனில் காலம்! அதாவது வைகாசி மாதம். தவழ்ந்து வரும் இளம் தென்றல்! பால் போல் காயும் நிலவு! நிலத்தைக் குளிர வைக்கும் புது வெள்ளம்! இவற்றை விட வேறு என்ன வேண்டும் இளங் காதலருக்கு?

எனவே, இளவேனில் வந்தால் காதலருக்கு மகிழ்ச்சி. கொண்டாடுவார்கள். புதுப் புனலில் நீந்தி விளையாடுவார்கள். தென்றலில் திளைப்பார்கள். நிலவில் மகிழ்வார்கள். இது ஆண்டு தோறும்—அதாவது, இளவேனில் காலம் தோறும்—நடை பெறும்.

இளவேனில் வந்து விட்டது. காதலன் வரவில்லை. கலங்குகிருள் காதலி. காதலன் எங்கே? அயல்நாடு சென்றிருக்கிருன். எதற்காக?

அயல்நாட்டிலே அரசு பாழாகிவிட்டது. அதைச் சீர் செய்யச் சென்றிருக்கிருன்.

"எப்போது வருவாய்?" என்று கேட்டாள்.

"இளவேனில் வரும்போது நானும் வருவேன்" என்ருன்.

"நிச்சயமாகவா?"

"ஆம்! நிச்சயமாக. இளவேனில் காலத்திலே உன்னுடன் மகிழ்ந்து விளையாட வந்துவிடுவேன். வருந்தாதே!" என்று சொன்ஞன்.

'இளவேனில் வந்து விட்டது. இன்னும் வரக் காணேனே!' என்று ஏங்கிஞள் அவள்.

காதலன் முதலில் வந்து, இளவேனில் பிறகு வந்தால் அவளுக்கு மகிழ்ச்சி. ஆஞல், முதலில் வந்தது இளவேனில். அதுவே அவளுக்குக் கவலையளித்தது.

வைகை ஆற்றிலே வேனில் விழா நடக்கிறது. வேனிற் கால மலர்கள் பூத்திருக்கின்றன! மலர் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தெய்வத்தை நினைப்பூட்டுகின்றன. மலர்களின் மணம் மனதை வாட்டுகிறது. வண்டுகளின் ரீங்காரம் காதலைத் தூண்டுகிறது. என் செய்வாள்! பாவம்!

பால் போல் நிலவு காய்கிறது. இனிய தென்றல் காற்று அந்த ஆற்றினூடே 'மெல்' லெனத் தவழ்ந்து வருகிறது! அவளது மேனியைத் தடவுகிறது.

அகன்று கிடக்கும் அந்த ஆற்று வெளியிலே கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் பார்க்கிருள்; பார்த்துக் கொண்டே இருக்கிருள்.

செருந்தி மலர்! செக்கச் செவேல் என்றிருக்கிறது. பார்க்கிருள். ஞாயிற்றுத் தெய்வத்தை நினைக்கிருள். இலவமரம் பூத்

திருக்கிறது! பொன்னிறம் கலந்த செந்நிறம்! பார்க்கிருள் அதை! பொன்னுர் மேனியனுகிய சிவனை நினைக்கிருள். வெண் கடம்பு மலர்ந்திருக்கிறது! வெண்ணிற மலர்! பல தேவனை நினைப்பூட்டு கிறது. காஞ்சி மலரைக் காண்கிருள்! காமனை நினைக்கிருள்! ஞாழல் மலரைக் காண்கிருள். அவன் தம்பி சாமனை நினைக்கிருள்.

இவை எல்லாம் அவளுக்கு ஒரு கிளு கிளுப்புண்டு பண்ணின. சென்ற ஆண்டிலே - இளவேனில் வருகையைக் காதல னுடன் இன்பமாகக் கழித்தாள். அதனை எண்ணி எண்ணிப் பெருமூச்சு விட்டாள்.

"இன்னும்...வரக்காணேனே!" என்று முணு முணுத்தது அவளது வாய்.

இந் நிலையில் அவள் இருப்பது கண்டாள் தோழி. அருகே வந்தாள்.

"என்ன யோசனை?" என்ருள்.

"ஒன்றுமில்லை. வந்தது இளவேனில்; வந்திலர் காதலர்" என்ருள். கண்முன்னேயுள்ள காட்சிகளை எல்லாம் கூறிஞள். கேட்டாள் தோழி.

"உம்! அசடே! இவை எல்லாம் என்ன? யானைவரும் பின்னே, மணி ஓசை வரும் முன்னே என்பது போல்பவை அல்லவா!

"'வருகிருர்! வருகிருர்! உன் காதலர் வருகிருர்! வருந் தாதே!' என்று தூது சொல்கின்றன இவை! இளவேனில் அதைத்தான் சொல்கிறது. தண்மதி அதையே சொல்கிறது. மலர்கள் அதையே கூறுகின்றன.

"எனவே! எழு! வெற்றியுடன் வரும் உன் காதலனை வர வேற்க எழு! எழு!" என்ருள் தோழி.

'ஒரு குழை ஒருவன் போல், இணர் சேர்ந்த மராஅமும்,
பருதி அம் செல்வன் போல், நனை ஊழ்த்த செருந்தியும்,
மீன் ஏற்றுக் கொடியோன் போல், மிஞிறு ஆர்க்கும்
காஞ்சியும்,
ஏஞேன் போல், நிறம் கிளர்பு கஞலிய ஞாழலும்,

ஆன் ஏற்றுக் கொடியோன் போல், எதிரிய
இலவமும், ஆங்கு,
தீது தீர் சிறப்பின் ஐவர்கள் நிலை போல,
போது அவிழ் மரத்தொடு பொருகரை கவின் பெற,
நோ தக வந்தன்றால், இளவேனில் மே தக.

பல் வரி இன வண்டு புதிது உண்ணும் பருவத்து,
தொல் கவின் தொலைந்த என் தட மென் தோள்
உள்ளுவார்—
ஒல்குப நிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்து ஓம்பி,
வெல் புகழ் உலகு ஏத்த, விருந்து நாட்டு உறைபவர்.

திசை திசை தேன் ஆர்க்கும் திருமருதமுன்துறை,
வசை தீர்ந்த என் நலம் வாடுவது அருளுவார்—
நசை கொண்டு தம் நீழல் சேர்ந்தாரைத் தாங்கி, தம்
இசை பரந்து, உலகு ஏத்த, ஏதில் நாட்டு உறைபவர்.

அறல் சாஅய் பொழுதோடு, எம் அணி நுதல் வேறாகி,
திறல் சான்ற பெரு வனப்பு இழப்பதை அருளுவார்—
ஊறு அஞ்சி நிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்து
ஓம்பி,
ஆறு இன்றிப் பொருள் வெஃகி, அகன்ற நாட்டு
உறைபவர்.'
என, நீ—

தெருமரல் வாழி, தோழி! நம் காதலர்,
பொரு முரண் யானையர் போர் மலைந்து எழுந்தவர்
செரு மேம்பட்ட வென்றியர்;
'வரும்' என வந்தன்று, அவர் வாய்மொழித் தூதே.

## 55. கூடல் நகரும் ஆடல் மகளிரும்

**வந்தது** இளவேனில்! வையை ஆற்றின் இருபுறமும் உள்ள மரங்கள் பூத்துக் குலுங்கின. புத்தம் புதிய தளிர்விட்டுக் கவின் பெறத் தோன்றின; பொலிவு பெற்று விளங்கின. வரையாது

வழங்கும் வள்ளல் ஒருவன், அவனிடம் உள்ள செல்வத்தை என்ன செய்வான்? வாரி வாரி வழங்குவான். அம்மாதிரி, இயற்கை தன் செல்வத்தை வாரி வழங்கிற்று. மரங்களின் மீது முல்லைக் கொடி படர்ந்திருந்தது; அரும்பியிருந்தது. அக் காட்சி எப்படியிருந்தது? அழகிய பெண் ஒருத்தி; கொஞ்சும் கிளி மொழியாள்; இனிய சொல்லழகி; இன்பக் கரு விழியழகி; மானுருட்டும் மையலழகி; முல்லை முறுவல் அழகி. அவள் சிரித்தாள். அக் காட்சி வழங்கியது முல்லை.

முல்லையின் மணம் பரந்து வீசிற்று. அது அவள் உள்ளத்திலே எழுச்சியூட்டியது. காதலைத் தூண்டியது.

“எப்போ வருவாரோ?” என்று ஏங்கினாள்.

தண்மதி தோன்றிற்று. தென்றல் வீசிற்று. அவள் வருந்தினாள்; கண்ணீர் சொரிந்தாள்.

“வருந்தாதே! கண்ணைத் துடை! அவர் வந்துவிடுவார்! விரைவில் வந்து விடுவார்” என்றாள் தோழி.

மதுரை மா நகரம் இன்பக் காட்சி வழங்குகிறது, வேனிலின் வருகையாலே! எங்கும் ஆடல்! எங்கும் பாடல்! எங்கும் ஆனந்தம்! ‘ஆடும் மகளிர்களை எண்ணியாவது அவர் வரமாட்டாரா? அம் மகளிருடன் இன்பமாயிருக்க விரும்பியாவது அவர் வரமாட்டாரா!

‘அதோ பார்! குயில்கள் கூவுகின்றன. இன்பக் குயில்கள்! இளவேனிலின் பாடகர்கள்! இன்பம் பாடும் குயில்கள்! ஐயோ! அவை என்னைப் பார்த்துப் பரிகசிக்கின்றன! இகழ்கின்றன! பசலை பாய்ந்த என்னை அவை இகழட்டும்! பரிகசிக்கட்டும்! ஆனால் அவர் ஏன் வராதிருக்கவேண்டும்? இந்த இளவேனில் விழாவிலே இன்பம் பெறாதிருக்கவேண்டும்! எனக்காக வராவிட்டாலும் போகிறார்! ஆடும் மகளிர்களை எண்ணியாவது வரலாமல்லவா? ஏன் வரவில்லை? வராதிருந்துவிடுவாரோ?

‘அதோ! மயில் பார்! அழகிய தோகை விரித்தாடும் மயில்! ஆடுகிறது, இன்பமாக! ஐயோ! அது என்னைப் பரிகசிக்கிறதே! ‘உன் மேனி வண்ணம் எங்கே? வனப்பு எங்கே?’ என்று கேட்டு இகழ்வது போலிருக்கிறதே! நான் என்ன செய்வேன்? அவர் வரக் காணேமே! என்னை மறந்தாரோ! மறந்தால் மறந்து போகட்

டும்! அதனால் பாதகமில்லை! அந்தத் திருப்பரங்குன்றத்து முருகனையுமா மறந்தார்? மகளிருடன் சென்று திருப்பரங்குன்றிலே வேனில் விழாக் கொண்டாட வேண்டுமே! அதையுமா மறந்திருப்பார்! மறந்து வராதிருப்பார்?'

இவ்வாறு ஏங்கிக் கொண்டிருந்தாள் அவள். அந்த நேரத்திலே என்னாயிற்று? தொலைவிலே அவன் வருவது தெரிந்தது.

"அதோ, பார்!" என்றாள் தோழி.

"என்ன?" என்றாள் அவள்.

"அவர் வந்துவிட்டார். உன் காதலர் வந்துவிட்டார்" என்றாள் தோழி.

"என்னை நினைத்து எங்கே வரப்போகிறார்? பரத்தை வீட்டுக்கல்லவா போவார்!" என்றாள் அவள்.

"இல்லை; இல்லை! எங்கும் போகவில்லை; உன்னைத் தேடியே வருகிறார்" என்றாள் தோழி.

பிறகு கேட்க வேண்டுமா ?

'ஈதலில் குறை காட்டாது, அறன் அறிந்து ஒழுகிய
தீதிலான் செல்வம் போல், தீம் கரை மரம் நந்த;
பேதுறு மடமொழி, பிணை எழில் மான் நோக்கின்,
மாதரார் முறுவல் போல், மண மௌவல் முகை
ஊழ்ப்ப;
காதலர்ப் புணர்ந்தவர் கதுப்புப் போல், கழல்குபு
தாதொடும் தளிரொடும், தண் அறல் தகைபெற;
பேதையோன் வினை வாங்க, பீடு இலா அரசன் நாட்டு,
ஏதிலான் படை போல, இறுத்தந்தது, இளவேனில்.

நிலம் பூத்த மரமிசை நிமிர்பு ஆலும் குயில் எள்ள,
நலம் பூத்த நிறம் சாய, நம்மையோ மறந்தைக்க;
கலம் பூத்த அணியவர் காரிகை மகிழ் செய்ய,
புலம் பூத்து, புகழ்பு ஆனாக் கூடலும் உள்ளார் கொல்?

கல்மிசை மயில் ஆல, கறங்கி ஊர் அலர் தூற்ற,
தொல் நலம் நனி சாய, நம்மையோ மறந்தைக்க;
ஒன்னாதார்க் கடந்து அடூஉம், உரவு நீர் மா கொன்ற,

வென் வேலான் குன்றின்மேல் விளையாட்டும்
விரும்பார்கொல் ?

மை எழில் மலர் உண்கண் மருஊட்டி மகிழ் கொள்ள
பொய்யினால் புரிவுண்ட நம்மையோ மறந்தைக்க ;
தைஇய மகளிர் தம் ஆயமோடு அமர்ந்து ஆடும்
வையை வார் உயர் எக்கர் நுகர்ச்சியும் உள்ளார்கொல்?
என ஆங்கு,

நோய் மலி நெஞ்சமோடு இனையல், தோழி !
நாம் இல்லாப் புலம்பாயின், நடுக்கம் செய்
பொழுதாயின்,
காமவேள் விழவாயின், 'கலங்குவள் பெரிது' என,
ஏழுறு கடுந் திண் தேர் கடவி,
நாம் அமர் காதலர் துணை தந்தார் விரைந்தே.

## 56. மாவின் தளிரும் மங்கையின் தவிப்பும்

வேனிற் காலம் வந்துவிட்டது. மாமரங்கள் தளிர்விட்டன. வையை ஆற்றின் இருமருங்கும் எத்தகைய காட்சி! எத்தகைய காட்சி! மரங்கள் பூத்துக் குலுங்கும் காட்சி! பற்பல நிறப் பூக்கள்! கொத்துக் கொத்தாக அலர்ந்திருக்கும் காட்சி! மதுரை மா நகரின் மகளிர்க்குச் செண்டு கட்டித் தருவன போன்ற காட்சி!

ஆற்றின் இடையே 'தெள்'ளென ஓடும் தண்ணீர், திருமகளின் மார்பிலே புரளும் முத்துமாலைபோல் காட்சி தந்தது!

வளைந்து வளைந்து கருமணலின் ஊடே ஆற்றுத் தண்ணீர் ஓடியதால் செங்குழம்பு படிந்த காட்சி! மகளிர் தம் கரும் கூந்தலிலே செந்நிறக் கற்களால் ஆன அணி புனைந்தது போன்றிருந்தது!

இக் காட்சிகள் என்ன செய்தன? அவளது உள்ளத்திலே கிளர்ச்சியூட்டின; காதல் தூவின.

காதலனை நினைத்தாள் அவள். 'இன்னும் வரவில்லையே ! என்று ஏங்கினாள்.

"அவரது நெஞ்சு, கல்லோ? இரும்போ?" என்று முணு முணுத்தாள். பெருமூச்சுவிட்டாள்; பேசாது இருந்தாள்.

"நான் ஒருத்தி இருப்பதே அவருக்கு நினைவில்லை போலிருக்கிறது" என்று சொல்லிக்கொண்டாள்.

"அப்பா! அப்பா! ரொம்பக் கொடியவர்" என்றாள்.

கேட்டாள் தோழி.

"ஏன் வீணாக அவரைத் தூற்றுகிறாய்? அவரது பிரிவால் நீ எப்படி வருந்துகிறாய்? அதேபோல் அவரும்தான் வருந்துவார்" என்றாள் தோழி.

"நான் என்ன செய்வேன்! அதோ பார்! மா தளிர் விட்டது. மரங்கள் மலர்ந்தன! முல்லை அரும்பி விட்டது! தும்பியும் வண்டும் தேன் தேடி வந்து விட்டன! குயில்கள் கூவுகின்றன! இவற்றைக் கண்ட பிறகும் நான் எப்படியிருப்பேன்? எவ்வாறு தனிமை சகிப்பேன்?

"உறக்கம் வரவில்லை. கண்கள் ஒளியிழந்துவிட்டன. நெற்றியிலே பசலை படர்ந்துவிட்டது. என் நெஞ்சமோ அவர்பால் சென்று விட்டது. இனி எவ்வாறு உயிர் வாழ்வேன்? எனது நிலை அவர் அறியாரோ? அறிந்தால் விரைவில் வருவார் அல்லவா? வரக் காணேமே!" என்று புலம்பினாள் அவள்.

சிறிது நேரம் அமைதி நிலவியது. இருவரும் பேசாது இருந்தனர்.

"தூது சொல்லுமாறு எவரையாவது அனுப்புவோமா?" என்றாள் அவள்.

சிரித்தாள் தோழி.

"வருத்தம் தாங்கமுடியாது என்னவோ சொல்கிறாய். தூது வேண்டியதில்லை. உனக்கு வந்த இளவேனில் அவர்க்கும் உண்டு அல்லவா! அதுவே போதும். அவர் வருவார். சிறிது பொறுத்துக் கொள்" என்றாள் தோழி.

'பாடல் சால் சிறப்பின் சினையவும், சுனையவும்
நாடினர் கொயல் வேண்டா, நயந்து தாம்
கொடுப்ப போல்,
தோடு அவிழ் கமழ் கண்ணி தையுபு புனைவார்கண்

தோடுறத் தாழ்ந்து, துறை துறை கவின் பெற,
செய்யவள் அணி அகலத்து ஆரமொடு அணி கொள்பு,
தெய்யகம் தாழ்ந்த கதுப்புப் போல் துவர் மணல்
வையை வார் அவிர் அறல், இடைபோழும்
பொழுதினான்—

விரிந்து ஆறு மலராயின், விளித்து ஆலும் குயிலாயின்,
பிரிந்து உள்ளார் அவராயின், பேதுறூஉம்
பொழுதாயின்,
அரும் படர் அவல நோய் ஆற்றுவள் என்னாது
வருந்த, நோய் மிகுமாயின் – வணங்கிறை! அளி
என்னோ?

புதலவை மலராயின், பொங்கரின வண்டாயின்,
அயலதை அலராயின், அகன்று உள்ளார் அவராயின்,
மதலை இல் நெஞ்சொடு மதனிலள் என்னாது
நுதல் ஊரும் பசப்பாயின் – நுணங்கிறை!
அளி என்னோ?
தோயின அறலாயின், சுரும்பு ஆர்க்கும் சினையாயின்,
மாவின தளிராயின், மறந்து உள்ளார் அவராயின்,
பூ எழில் இழந்த கண் புலம்பு கொண்டு அமையாது
பாயல் நோய் மிகுமாயின் – பைந்தொடி!
அளி என்னோ?'
என ஆங்கு,

ஆயிழாய்! ஆங்கனம் உரையாதி; சேயார்க்கு
நாம் தூது மொழிந்தனம் விடல் வேண்டா; நம்மினும்
தாம் பிரிந்து உறைதல் ஆற்றலர்,
பரிந்து எவன் செய்தி – வருகுவர் விரைந்தே?

## 57. மங்கையும் மாரனும்

நிலம் எனும் மங்கை எப்படியிருந்தாள்? பச்சைப் பசேல் என்றிருந்தாள். எப்போது? கார் காலத்தின் கடைசியில். காயும்,

கனியும், தானியங்களுமாக கருவுற்றிருந்தாள். பின் என் ஆனுள்? கருவுற்ற பெண் பசலே கொள்வதுபோல் பசலே கொண்டாள். பச்சைப் பசேல் என்றிருந்த மேனி பொன்னிறமாயிற்று. பிறகு என்ன? மகப்பேறு பெற்றவள் போலானுள் புவி மடந்தை. காயும், கனியும், தானியங்களும் மக்கள் குலத்துக்கு வழங்கினுள். பிறகு என்ன? பேறு காலத்தின் பின் இளமை எய்திய பெண் போலானுள்.

இளவேனில் வந்தது.

மா, தளிர்விட்டது. அத் தளிர்மீது மகரந்தம் படிந்தது. அது எக் காட்சி வழங்கியது? மாயோன் மேனியிலே தேமல் படர்ந்த காட்சி வழங்கியது.

ஆற்றின் கரையிலே மணல் பரப்பு. அந்த மணல் பரப்பிலே மாவடுக்கள் உதிர்ந்து கிடக்கின்றன; மலர்களும் உதிர்ந்து கிடக்கின்றன. அது எப்படியிருந்தது?

வளேயணிடும் பருவம் வந்த பெண்கள் ஒன்றுகூடி, மணல் வீடு கட்டிப் பொம்மைக் கலியாணம் செய்து விளேயாடும் இடம் போலிருந்தது.

ஆற்றின் இடையே மணலே ஊடறுத்து ஒதுக்கி ஓடியது நீர். அது எப்படியிருந்தது. பெண்கள் தலேயிலே ஐ வகுடு எடுத்துப் பின்னியது போலிருந்தது.

இத்தகைய காட்சியைக் கண்டாள் அவள். அவளது உள்ளத்திலே வேட்கை கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது? என்ன வேட்கை? மகப்பேறு வேட்கை.

"நமக்கு ஒரு குழந்தை பிறக்கவில்லேயே! நம்மைச் சுற்றியிருக்கும் இயற்கைக் காட்சிகள் எல்லாம் பூத்துக் காய்த்துப் பழுக்கின்றன; பலன் தருகின்றன. சூல் கொள்கின்றன. பின் சூல் நீங்கி இளமை பெறுகின்றன. நாமோ ஒன்றுமில்லாத மரமாயிருக்கிறேமே!" என்று நினைத்தாள்; ஏங்கினுள்.

காதலன்மீது எண்ணம் விழுந்தது. "நம் காதலனே, இன்னும் வரக்காணும். இளவேனில் காலத்திலே உடன் இருந்து மகிழலாம் என்றல், வரவில்லேயே!" என்று வருந்தினுள்.

வருத்தம் என் செய்தது? அவனேக் காட்டிக் கொடுத்தது.

தோள்கள் மெலிந்தன. வளைகள் கழன்றன. கண்கள் நீர் சொரிந்தன.

கண்டாள் தோழி.

"ஏனடி பெண்ணே, இப்படி வருந்தி வருந்திக் கண்ணீர் விடுகிறாய்? இப்படி மனசை விடலாமா? கட்டுப்படுத்த வேண்டாமா?" என்று கூறினாள்.

"நீ சொல்வது சரிதான். மனதைக் கட்டுப் படுத்தத்தான் வேண்டும். நானும்தான் முயன்று பார்க்கிறேன். ஆனால், இந்தக் காற்று இருக்கிறதே! அது என்னைச் சும்மா விடமாட்டேன் என்கிறதே! மலர்களில் படிந்து மணங்கொண்டு வீசுகிறதே! என் மனதைத் துளைக்கிறதே! அதற்கு நான் என்ன செய்வேன்!

"இன்பம் துய்க்க வேண்டிய இளவேனிலை மறந்து சென்று விட்டார் அவர். அதனால் ஏற்படும் வேதனையை மறைக்கவும் என்றால் முடியும். ஆனால், இந்த வண்டுகள் இருக்கின்றனவே! அவற்றிற்கு என்ன செய்வேன்! மலை வாயிலில் விழும் கதிரவனின் சாயும் பொற் கிரணங்களால் மலர்கள் மலர்கின்றன. அம் மலர்களில் உள்ள தேனை உண்பதற்காக ரீங்காரம் செய்து கொண்டு வருகின்றன வண்டுகள். அவற்றின் ஊதல் கேட்கும் போது என் உள்ளம் குழைகிறதே! நான் என்ன செய்வேன்!

"பால் போல் காயும் நிலா, மனத்தைத் துளைக்கும் மலர் மணம், இவற்றிற்கு என் செய்வேன்! இவை எனது ஆற்றலை அழிக்கின்றனவே."

அவள் சொன்னதைக் கேட்டாள் தோழி.

"ஐயோ பாவம்! மாரனின் கணையால் அவதிப்படுகிறாள். இதற்கு மருந்து எது? அவள் காதலனே. வேறு யாருமில்லை" என்று அறிந்தாள்.

'தெருவில் வாரானோ?' என்று பார்த்து நின்றாள்.

அப்புறம் வாராதிருப்பானா? வந்துவிட்டான்.

"வந்துவிட்டார்! வந்துவிட்டார்! உன் காதலர்! வா! வா!" என்று கூவினாள்.

எழுந்து ஓடினாள் அவள்.

**'தொல் எழில் வரைத்து அன்றி வயவு நோய் நலிதலின்,**
**அல்லாந்தார் அலவுற ஈன்றவள் கிடக்கை போல்,**

பல் பயம் உதவிய பசுமை தீர் அகல் ஞாலம்
புல்லிய புனிறு ஓரீஇப் புது நலம் ஏர்தர ;
வளையவர் வண்டல் போல், வார் மணல் வடுக் கொள;
இளையவர் ஐம்பால் போல், எக்கர் போழ்ந்து
அறல் வார ;
மா ஈன்ற தளிர்மிசை, மாயவள் திதலை போல்,
ஆய் இதழ்ப் பல் மலர் ஐய கொங்கு உறைத்தர ;
மே தக இளவேனில் இறுத்தந்த பொழுதின்கண்—

சேயார்கண் சென்ற என் நெஞ்சினை - சின்மொழி !—
நீ கூறும் வரைத்து அன்றி, நிறுப்பென்மன்? நிறை நீவி,
வாய் விரிபு பனி ஏற்ற விரவுப் பல் மலர் தீண்டி,
நோய் சேர்ந்த வைகலான், வாடை வந்து அலைத்தரூஉம்

போழ்து உள்ளார் துறந்தார்கண் புரி வாடும்
கொள்கையைச்
சூழ்பு ஆங்கே - சுடரிழாய் ! - கரப்பென்மன் ? கைநீவி
வீழ் கதிர் விடுத்த பூ விருந்து உண்ணும் இருந் தும்பி
யாழ் கொண்ட இமிழ் இசை இயல் மாலை அலைத்தரூஉம்.

தொடி நிலை நெகிழ்த்தார்கண் தோயும் என் ஆர் உயிர் -
வடு நீங்கு கிளவியாய் ! - வலிப்பென்மன் ? வலிப்பவும்,
நெடு நிலா, திறந்து உண்ண, நிரை இதழ் வாய் விட்ட
கடி மலர் கமழ் நாற்றம், கங்குல் வந்து, அலைத்தரூஉம்.'
என ஆங்கு,

வருந்தினை வதிந்த நின் வளை நீங்க, சேய் நாட்டுப்
பிரிந்து செய் பொருட் பிணி பின் நோக்காது ஏகி, நம்
அருந் துயர் களைஞர் வந்தனர் -
திருந்து எயிறு இலங்கு நின் தே மொழி படர்ந்தே.

## 58. பாணனும் பாசறையும்

பாணன் என்று ஒருவன். இவனுடைய வேலை என்ன ? குறுநில மன்னர்களை நீங்காது நிழல் போன்றிருப்பது. பெரு

நிலச் செல்வர்க்கு மகிழ்ச்சி தரும் செய்திகள் சொல்வது ; செயல்கள் புரிவது.

ஒரு தலைவன் ; தலைவி. இவ்விருவர்க்கும் ஊடல் ஏற்படும். ஊடல் என்றால் என்ன ? சிறு பிணக்கு. இந்தச் சிறு பிணக்கு மெய்யாகவும் இருக்கும் ; பொய்யாகவும் இருக்கும். இந்த ஊடல் பெரும்பாலும் அன்பின் அடிப்படையில்தான் எழும்.

இம்மாதிரி ஊடல் காலங்களில் பாணன் வருவான். தலைவனுக்கும் தலைவிக்குமிடையே தூது செல்வான். மகிழ்ச்சி தரத்தக்க செய்திகளைச் சொல்வான் ; சுவையுள்ளன பேசுவான். இருவரையும் புகழ்வான்; போற்றுவான். மெதுவாக இருவரையும் சேர்த்து வைப்பான். ஊடல் தீர்த்து வைப்பான்.

இது பாணனின் வேலை. பாணர்களுக்கு எவ்விதமான கட்டுப்பாடும் கிடையாது. பெண்கள் இருக்குமிடம் செல்வார்கள். அவர்களுடன் பேசுவார்கள். இதை யாரும் தடை செய்ய மாட்டார்கள்.

இளவேனில் வந்து விட்டது. காதலன் வரவில்லை. ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தாள் அவள்.

மரங்கள் மலர்களைச் சொரிந்தன ; மணம் வீசின. அம் மலர்களிலே உள்ள தேனை உண்பதற்கு வண்டுகள் வந்தன. அக் காட்சி என்ன செய்தது ? அவளது உள்ளத்திலே காதலைத் தூண்டியது. காதலனை நினைத்தாள்.

"தூது செல்வாரில்லையே...எனக்கொரு வாசகம் சொல்வார் இல்லையே" என்று ஏங்கினாள்.

அந்த நேரத்திலே அங்கு வந்தான் பாணன்.

"கண்கள் நீர் சொரிவது ஏனோ ?" என்றான்.

"காதலர் வந்தாரில்லையே" என்றாள் அவள்.

"தூது செல்லவோ ?" என்றான்.

அவள் தலையசைத்தாள். நன்றி தெரிவித்தாள். அவன் புறப்பட்டான், தலைவனைத் தேடி.

அவனோ, வேற்று நாட்டிலே பாசறையிலே தங்கியிருக்கிறான். பாசறை தேடிச் சென்றான் பாணன். அவனைக் கண்டான்.

"எங்கு வந்தாய் ?" என்றான்.

"ஒன்று சொல்ல வந்தேன்" என்றான் பாணன்.

"என்ன?" என்றான்.

"இளவேனில் வந்துவிட்டது. மாரன் தன் வேலையைத் தொடங்கிவிட்டான். அவன் உன் காதலிமீது அம்புதொடுக்கிறான். "நீயோ இங்கு உன் பகைவர் மீது அன்பு தொடுத்து நிற்கிறாய். இதை நிறுத்து. ஊர் திரும்பு" என்றான்.

'அருந்தவம் ஆற்றியார் நுகர்ச்சி போல், அணி கொள
விரிந்து ஆனுச் சினை தொறூஉம், வேண்டும் தாது
அமர்ந்து ஆடி,
புரிந்து ஆர்க்கும் வண்டொடு, புலம்பு தீர்ந்து
எவ் வாயும்,
இருந் தும்பி, இறை கொள எதிரிய வேனிலான் -
துயில் இன்றி யாம் நீந்த, தொழுவை அம் புனல் ஆடி,
மயில் இயலார் மரு உண்டு, மறந்து அமைகுவான்
மன்னோ -
'வெயில் ஒளி அறியாத விரி மலர்த் தண் காவில்
குயில் ஆலும் பொழுது' எனக் கூறுநர் உளராயின்.

பாஅள் யாம் படர் கூர, பணை எழில் அணை
மென் தோள்
மான் நோக்கினவரோடு மறந்து அமைகுவான் மன்னோ-
'ஆனுச் சீர்க் கூடலுள் அரும்பு அவிழ் நறு முல்லை,
தேன் ஆர்க்கும் பொழுது' எனத் தெளிக்குநர்
உளராயின்.
உறல் யாம் ஒளி வாட, உயர்ந்தவன் விழவினுள்
விறல் இழையவரோடு விளையாடுவான் மன்னோ -
'பெறல் அரும் பொழுதோடு, பிறங்கு இணர்த் துருத்தி
சூழ்ந்து,
அறல் வாரும், வையை' என்று அறையுநர் உளராயின்.'
என ஆங்கு,

தணியா நோய் உழந்து ஆனாத் தகையவள் - தகை பெற,
அணி கிளர் நெடுந் திண் தேர் அயர்மதி - பணிபு நின்
காமர் கழல் அடி சேரா
நாமம் சால் தெவ்வரின் நடுங்கினள் பெரிதே.

## 59. வாடையும் வாட்டமும்

"போய் வருகிறேன்" என்ருன் அவன்.

"போக வேண்டுமா?" என்று கேட்டாள் அவள்.

"ஆம். கண்ணே! கடமை பெரிது" என்ருன் அவன்.

"எப்போது வருவாய்?" என்று கேட்டாள் அவள்.

"இண்டைக் கொடியின் மலர் உதிரும் காலத்தே. தாமரை மலரும் காலத்தே. முன்பனியும் பின்பனியும் கழியும் காலத்தே!" என்ருன் அவன்.

"மாரன் விழாக் கொண்டாட வந்து விடுவீர்கள் அல்லவா?" என்ருள்.

"வருவேன்" என்ருன்.

"நிச்சயமாகவா?" என்ருள்.

"ஆம்; நிச்சயம்" என்ருன்.

இளவேனில் காலத்தை எதிர்பார்த்திருந்தாள் அவள் ஆனல், முன்பனிக் காலத்து வாடைக் காற்று அவளை வாட்டிற்று. பின்பனிக் காலத்தின் பனியும் அவளால் பொறுக்க முடியவில்லை. துயர் மிகுந்தாள் அவள். வருந்திளுள்.

கண்டாள் அவளது தோழி.

"இப்போது ஏன் வருந்துகிருய்? இளவேனில் காலத்தின் தொடக்கத்தே நிச்சயம் வருவார் அவர். இப்போது பனிக்காலம் தானே!" என்ருள்.

"ஆமாம்! அவர் பொய் சொல்லமாட்டார். இளவேனில் காலத்தின் தொடக்கத்திலே கட்டாயம் வந்து விடுவார். அதுவும் எனக்குத் தெரியும். இருந்தாலும் என்ன செய்வேன்?

"அதோ பார்! அந்த நிலா! அது என்னை வாட்டுகிறதே! வருத்துகிறதே! வீசும் வாடைக் காற்று! அது என்னைச் சும்மா விடுகிறதா? விடமாட்டேன் என்கிறதே!

"அதோபார்! அரும்பிய முல்லை! அது கருகிப் போமாறு கசக்கும். இந்தப் பனி இருக்கிறதே! அது என்னைச் சும்மா விடு கிறதா! விடமாட்டேன் என்கிறதே! என் உள்ளத்தைத் சுவைக்கிறதே! என் பற்கள் [illegible]!

"இந்தக் கொடுமைகளையெல்லாம் நான் ஒருத்தியாகவே எப்படிச் சமாளிப்பேன் !

"வெற்றிக் கோலத்துடன் அவர் வருவார். விழாக் கொண்டாடுவார். காண வேண்டும் என்று என் உள்ளம் துடிக்கிறது. ஆனால் அதற்குள் என்னை வாழவிடாமல் கொல்லுகின்றதே இந்தப் பகைவர் கூட்டம். என்ன செய்வேன்?" என்றாள் அவள்.

கேட்டாள் தோழி. இவளுக்கு எவ்விதம் ஆறுதல் கூறுவது என்று தோன்றவில்லை அவளுக்கு. தூரத்தில் பார்வையைச் செலுத்திய வண்ணம் நின்று கொண்டிருந்தாள். நீடீரென்று கூவினாள்:

"அதோ ! அதோ ! வந்து விட்டார் ! வந்து விட்டார், உன் காதலர் !" என்று குதித்தாள்.

அவளும் எழுந்து ஓடினாள்.

'கடும் புனல் கால் பட்டுக் கலுழ் தேறிக் கவின் பெற,
நெடுங் கயத்து அயல் அயல் அயிர் தோன்ற, அம் மணல்
வடுத்து ஊர வரிப்ப போல் ஈங்கை வாடு உதிர்பு உக,
பிரிந்தவர் நுதல் போலப் பீர் வீய, காதலர்ப்
புணர்ந்தவர் முகம் போலப் பொய்கை பூப் புதிது ஈன,
மெய் கூர்ந்த பனியொடு மேல் நின்ற வாடையால்,
கையாறு கடைக்கூட்டக் கலக்குறாஉம் பொழுதுமன் -
"பொய்யேம்" என்று, ஆயிழாய் ! புணர்ந்தவர்
உரைத்ததை.

மயங்கு அமர் மாறு அட்டு, மண் வெளவி வருபவர்,
தயங்கிய களிற்றின்மேல், தகை காண விடுவதோ -
பயங் கெழு பல் கதிர் பால் போலும் பொழுதொடு,
வயங்கு இழை தண்ணென, வந்த இவ் அசை வாடை?

தாள் வலம்பட வென்று, தகை நன் மா மேல்கொண்டு,
வாள் வென்று வருபவர் வனப்பு ஆர விடுவதோ -
நீள் கழை நிவந்த பூ நிறம் வாடத் தூற்றுபு,
தோள் அதிர்பு அகம் சேர, துவற்றும் இச் சில் மழை?

பகை வென்று திறை கொண்ட பாய் திண் தேர்
மிசையவர்
வகை கொண்ட செம்மல் நாம் வனப்பு ஆர விடுவதோ -
புகை எனப் புதல் சூழ்ந்து, பூ அம் கள் பொதி செய்யா
முகை வெண் பல் நுதி பொர, முற்றிய கடும் பனி?'
என ஆங்கு,

வாளாதி, வயங்கிழாய்! 'வருந்துவள் இவள்' என,
நாள் வரை நிறுத்துத் தாம் சொல்லிய பொய் அன்றி,
மீளி வேற் தானையர் புகுதந்தார் -
நீள் உயர் கூடல் நெடுங் கொடி எழவே.

## 60. எஃகுக் கத்தரியும், ஏந்திழையார் கூந்தலும்!

இந்தக் காலத்திலே 'கிராப்' செய்து கொள்வது சகஜமாகி விட்டது. 'கிராப்' செய்து கொள்ளாவிட்டால் அது நாகரிகம் இல்லை என்று கருதும் அளவுக்குக் 'கிராப்' தலைகள் பெருகி விட்டன. 'கிராப்' ஏன்? முடி ஒழுங்காயிருக்க. அணி பெற்றிருக்க. ஏற்றமும் குட்டையுமாகத் தொங்காதிருக்க!

ஆணும் பெண்ணும் சமம். எல்லா வகையிலும் சமத்துவம் வேண்டுகின்ற காலம் இது. பெண்ணுக்கு ஒரு நீதி, ஆணுக்கு ஒரு நீதி என்ற காலம் மலையேறிவிட்டது. எல்லாத் துறைகளிலும் பெண்கள் போட்டி போட்டு நடக்கிறார்கள். யாருடன்? ஆண் மக்களுடன். ஆடை அணிவதில்கூட!

சைக்கிள் விடுகிறான் ஆண் மகன்; அவனுடன் போட்டி போட்டுக் கொண்டு தானும் சைக்கிள் விடுகிறாள் அவள். மோட்டார் சைக்கிளிலே ஓடுகிறான் அவன்; மணிக்கு நாற்பது மைல் வேகத்திலே ஓடுகிறான்; தலை தெறிக்க ஓடுகிறான்; அவனுக்கு அவள் சளைத்தவளா? இல்லை. அவன் பின்னே அமர்ந்திருக்கிறாள்; அவனைப் பற்றி அணைத்த வண்ணம் தானும் பறக்கிறாள்; 'பட பட' வென்று அடிக்கிறது ஆடை. அதிலே அவளுக்கு ஆனந்தம்! கார் ஓட்டுகிறான் அவன்; அவளும் கார் ஓட்டுகிறாள். விமானத்திலே பறக்கிறான் அவன்; அவளும் கூடப் பறக்கிறாள்.

இப்படி எல்லாத் துறைகளிலும் ஆணும் பெண்ணும் உற்ற தோழர் களாயிருக்கிறார்கள்.

எனவே, தலையில் மட்டும் ஏன் வேற்றுமை? தலைமயிரை அழகாகக் கத்தரித்துக் கொண்டால் என்ன ?

இந்த வார்த்தையைச் சொல்லும் போதே பலருக்குக் கோபம் வந்துவிடும். அது ஏதோ சொல்லத் தகாத வார்த்தை என்று சீறுவார்கள்.

தலைமயிரை அழகு பெறக் கத்தரித்துக் கொள்வது, ஏதோ 'பாரிஸ்' நகரத்து வழக்கம் என்று நினைக்கிறார்கள்; மேற்கு நாட்டு நாகரிகம் என்று கருதுகிறார்கள். அப்படி ஒன்றுமில்லை. சங்க காலத்துப் பெண்கள்கூடத் தலைமயிரை அழகாகக் கத்தரித்துக் கொண்டிருக்கிறார்கள்; கத்தரிகொண்டு கத்தரித்திருக்கிறார்கள். ஏற்றமும் குட்டையுமாக இருக்கும் கூந்தலை அழகாகச் செய்திருக் கிறார்கள்; ஒரே சீராக வெட்டியிருக்கிறார்கள். எப்படி என்று பார்ப்போம்.

இளவேனிற் காலம். ஆற்றிலே நீர் வடிந்துவிட்டது. சிறு சிறு ஓடையாகத் தெளிந்து ஓடிக்கொண்டிருந்தது. அதற் கிடையே கருமணல்! ஒரே ஒழுங்காக இருந்தது. அந்த மணல் மீது மலர்கள் கிடந்தன. பல நிற மலர்கள்.

இக் காட்சியைக் காண்கிறார் கவி. உடனே அவருக்கு என்ன தோன்றுகிறது? பெண்களின் கூந்தல்தான் நினைவுக்கு வருகிறது. கூந்தல் எப்படி இருக்கிறது? 'கன்னங் கறேல்' என்று இருக் கிறது; கருமேகம் போன்று இருக்கிறது. நீளமும் குட்டையுமாகத் தொங்காமல், அந்த முடியை ஒரே சீராகத் திருத்தியிருக்கிறார்கள். எது கொண்டு? எஃகினால் செய்யப்பட்ட கத்தரிக் கோல்கொண்டு. அவ்விதம் திருத்தி ஐவகைப் பின்னல் போட்டுக்கொண்டிருக் கிறார்கள். இடை இடையே அழகிய கற்கள்! பச்சை! சிவப்பு! நீலம் முதலிய பல நிறக் கற்கள் பதித்த அணி புனைந்திருக்கிறார் கள். இக் காட்சி கவியின் கண் முன்னே நின்றது. "எஃகு இடை தொட்ட, கார்க் கவின் பெற்ற ஐம்பால் போல், மையற விளங்கிய துவர் மணல்து" என்று கூறுகிறார்.

இம்மாதிரி அணி புனைந்த பெண் ஒருத்தி, காதலனை நினைத்து வருந்துகிறாள். ஏன் ? இளவேனில் வந்து விட்டது. அவன் வர

வில்லை. பூரண சந்திரன் எழில் பெற்று விளங்குகிறான். மா முதலிய மரங்கள் தளிர் விட்டன. அது எப்படியிருந்தது?

பிள்ளை பெற்ற பெண்மணியின் உடலிலே திதலைகள் தோன்றியது போலிருந்தது. அதுகாறும் ஒன்றுமில்லாதிருந்த மரங்கள் மலர்களைச் சொரிந்தன. எதுபோல? ஆன்று அவிந்து அடங்கிய பெரியவர்கள் உரிய காலம் வரும் வரை காத்து அடங்கியிருந்து, பின் தங்கள் திறமையை வெளிப்படுத்துவதுபோல.

வண்டுகள் ஊதிக் கொண்டுவந்தன, இனிய யாழ் ஒலி போல. மலர்க் கொடிகள் மெல்ல அசைந்தன, ஆடின, ஆடும் மகளிர் போல. மற்றும் சில மலர்க் கொடிகள் ஒன்றுடன் ஒன்று பிணைந்து கிடந்தன; காதலர் போல.

காதலனைப் பிரிந்து வாடும் காதலியின் உள்ளத்திலே எத்தகைய உணர்ச்சியை எழுப்பும்? காதல் உணர்ச்சியை அன்றோ? காதல் உணர்ச்சி மிக்க ஊறப் பெற்றவள் என்ன செய்வாள்? காதலனை நினைப்பாள் அல்லவா? காதலன் அருகே இல்லாவிட்டால் என்ன ஆகும்? சொல்லவா வேண்டும்!

இந்தமாதிரியான சமயத்திலே தோழி செய்ய வேண்டிய கடமை என்ன? இதமான மொழி கூறவேண்டும். ஆறுதல் கூற வேண்டும்.

எரியும் தீயில் எண்ணெய் வார்ப்பதுபோல் பேசலாமா? கூடாது. ஆனால், தோழி என்ன செய்தாள்? இளவேனிலைப் புகழ்ந்தாள்; வாழ்த்தினாள்.

கேட்டாள் அவள். கோபம் வந்து விட்டது. "எனக்குத் துன்பம் தருகிறது இந்த இளவேனில். நீ அதை வாழ்த்துகிறாய். அப்படியானால் உனது எண்ணம் என்ன?" என்று சீறினாள்.

"கோபிக்காதே! இன்னும் சற்று நேரத்தில் உன் காதலர் வரப் போகிறார். தூது வந்திருக்கிறது" என்றாள்.

சீறிய முகம் சிரித்தது!

எஃகு இடை தொட்ட, கார்க் கவின் பெற்ற
ஐம்பால் போல் -
மை அற - விளங்கிய, துவர் மணல்-அது; அது
ஐதாக நெறித்தன்ன அறல் அவிர் நீள் ஐம்பால்

அணி நகை இடையிட்ட ஈகை அம் கண்ணி போல்,
பிணி நெகிழ் அலர் வேங்கை விரிந்த பூ வெறி கொள -

துணி நீரால், தூ மதி நாளால், அணி பெற -
ஈன்றவள் திதலை போல் ஈர் பெய்யும் தளிரொடும்,
ஆன்றவர் அடக்கம் போல் அலர்ச் செல்லாச்
 சினையொடும்,
வல்லவர் யாழ் போல வண்டு ஆர்க்கும் புதலொடும்,
நல்லவர் நுடக்கம் போல் நயம் வந்த கொம்பொடும்,
உணர்ந்தவர் ஈகை போல் இணர் ஊழ்த்த மரத்தொடும்,
புணர்ந்தவர் முயக்கம் போல் புரிவுற்ற கொடியொடும்-
நயந்தார்க்கோ நல்லமன், இளவேனில்! எம் போல?

பசந்தவர் பைதல் நோய் பகை எனத் தணித்து, நம்
இன் உயிர் செய்யும் மருந்தாகி, பின்னிய
காதலர் - எயிறு ஏய்க்கும் தண் அருவி நறு முல்லைப்
போது ஆரக் கொள்ளும் கமழ் குரற்கு என்னும் -
தூது வந்தன்றே, தோழி!
துயர் அறு கிளவியோடு: அயர்ந்தீகம் விருந்தே.

## 61. இலவம் மலர்ந்தது ; இளவேனில் வந்தது

ஆற்றின் கரையிலே உள்ள குளங்கள் நீர் நிரம்பியிருந்தன. மலர்களும் நிரம்பியிருந்தன. அக் காட்சி எப்படி இருந்தது? அந்த ஆறு, தன் கண்களை அகல விரித்து நோக்கியதுபோல் இருந்தது. எதற்காக அப்படி நோக்குதல் வேண்டும்?

'மலையிலே பொழிந்த மழையைக் கொண்டு வந்து பாய்ச்சினேமே! வளம் கொழிக்கச் செய்தோமே! வளம் எப்படியிருக்கிறது, பார்க்கலாம்' என்று நினைத்து ஆறு தன் கண்களை விழித்துப் பார்க்கிறதாம்!

கரையிலே உள்ள மரங்கள் மலர்ந்திருக்கின்றன. செந்நிறப் பூக்கள்; வெண்ணிறப் பூக்கள். இன்னும் பல நிறங்கள் மலிந்த பூக்கள்.

அந்த நிழல் அப்படியே விழுகிறது குளத்தின் நீரிலே, கண்ணாடியிலே தோன்றுவது போல.

வண்டுகள் அந்த நிழல் கண்டு என்ன செய்கின்றன? அந்த நிழலைச் சுற்றிச் சுற்றி வருகின்றன.

இத்தகைய காட்சிகளைக் கண்டாள் அவள். மாரனின் கணைக்குப் பலியானாள். ஆனால் அவன் எங்கே? காதலன் எங்கே? இன்னும் வரவில்லை.

புலம்புகிறாள்:

"நான் என்ன செய்வேன்! இலவம் மலர்ந்து விட்டதே! நெருப்புப்போல் செந்நிறம் தோன்றுதே! புன்கு பூத்து விட்டதே! உதிர்ந்தும் விட்டதே! என்னைக் கண்டு நகைப்பது போலிருக்கிறதே, இக் காட்சி!

"மயில்கள் தோகை விரித்து ஆடுவது பார்! குயில் கூவுது கேள்! இவை எல்லாம் என்னை வருத்துகின்றனவே! என்ன செய்வேன்? இதுவரை என்னிடம் நெருங்கியிருந்த வளை கூட என்னை விட்டுக் கழன்று ஓடுகிறதே!"

இவ்விதம் அவள் புலம்பிக் கொண்டிருந்தபோது, வெகு வேகமாக ஓடி வந்தது ஒரு தேர். அதினின்றும் இறங்கி வந்தான் அவளது காதலன்.

'வீறு சால் ஞாலத்து வியல் அணி காணிய
யாறு கண் விழித்த போல், கயம் நந்திக் கவின் பெற,
மணி புரை வயங்கலுள் துப்பு எறிந்தவை போல,
பிணி விடு முருக்கு இதழ் அணி கயத்து உதிர்ந்து உக,
துணி கய நிழல் நோக்கித் துதைபு உடன் வண்டு ஆர்ப்ப,
மணி போல அரும்பு ஊழ்த்து மரம் எல்லாம் மலர் வேய,
காதலர்ப் புணர்ந்தவர் கவவுக் கை நெகிழாது,
தாது அவிழ் வேனிலோ வந்தன்று; வாரார், நம்
போது எழில் உண்கண் புலம்ப நீத்தவர்!

எரி உரு உறழ இலவம் மலர,
பொரி உரு உறழப் புன்கு பூ உதிர,
புது மலர்க் கோங்கம் பொன் எனத் தாது ஊழ்ப்ப
தமியார்ப் புறத்து எறிந்து எள்ளி, முனிய வந்து,

ஆர்ப்பது போலும் பொழுது ; என் அணி நலம்
போர்ப்பது போலும் பசப்பு.

நொந்து நகுவன போல் நந்தின, கொம்பு ;
 நைந்து உள்ளி
உகுவது போலும், என் நெஞ்சு ; எள்ளி,
தொகுபு உடன் ஆடுவ போலும், மயில் ; கையில்

உகுவன போலும், வளை ; என் கண் போல்
இகுபு அறல் வாரும் பருவத்தும் வாரார் ;
மிகுவது போலும், இந் நோய்.

நரம்பின் தீம் குரல் நிறுக்கும் குழல் போல்
இரங்கு இசை மிஞிறொடு தும்பி தாது ஊத –
தூது அவர் விடுதரார் துறப்பார்கொல் ? – நோதக,
இருங் குயில் ஆலும் அரோ.'
என ஆங்கு,

புரிந்து நீ எள்ளும் குயிலையும், அவரையும், புலவாதி.
நீல் இதழ் உண்கணாய் ! நெறி கூந்தல் பிணி விட,
நாள் வரை நிறுத்துத் தாம் சொல்லிய பொய் அன்றி,
மாலை தாழ் வியன் மார்பர் துணைதந்தார் –
கால் உறழ் கடுந் திண் தேர் கடவினர் விரைந்தே.

## 62. மனமும் மல்லிகையும்

இளவேனில் வந்துவிட்டது. ஆற்றிலே அருகால் எடுத்து ஓடிற்று நீர். காலமெல்லாம் அந்த ஆற்று நீரை உண்டு அதன் கரையிலே வளர்ந்த மரங்கள் என்ன செய்தன ? நன்றி தெரிவித்தன. எவ்வாறு ? மலர்களைச் சொரிந்து. அக் காட்சி எப்படி

செல்வன் ஒருவன். வாரி வாரி வழங்கினான். அதனால் வறியன் ஆனான். அவன்பால் பயன்பெற்ற ஒருவன் அவனுக்குப் பொருள் தந்து பாதுகாக்கிறான். இதுபோல் இருந்தது அக் காட்சி.

இக் காட்சி கண்டு உளம் நைந்தாள் அவள். காதலனை நினைத்து ஏங்கி நின்றாள். அவளது நிலை கண்டனர் அவ்வூரார்.

"ஐயோ பாவம்!" என்றார்கள்.

"சின்னஞ் சிறு வயது. இவளை விட்டுப் பிரிந்திருக்கிறானே அவன்" என்றார்கள்.

கேட்டாள் அவள். கலங்கினாள்; கண்ணீர் விட்டாள்.

கண்டாள் தோழி.

"வருந்தாதே! வருத்தத்தை வெளியே காட்டக் கூடாது. அடக்கிக் கொள்" என்றாள்.

"நான் என்ன செய்வேன்! அதோ பார்! காஞ்சிப் பூ மலர்ந்து விட்டது! மலர்களில் உள்ள தேனைப் பருக வந்துவிட்டன வண்டுகள். அவற்றின் ஊதல் கேட்கிறேன். குயிலின் கூவுதல் கேட்கிறேன். மலரின் மணம் தென்றலில் வந்து என் சிந்தையை வாட்டுகிறதே! என்ன செய்வேன்! எவ்வாறு என் துயரை மறைப்பேன்!" என்றாள் அவள். துக்கம் தொண்டையை அடைத்தது. நாத் தழுதழுத்தது.

இவளுக்கு எவ்வாறு தேறுதல் கூறுவது என்று யோசித்தாள் தோழி.

தொலைவிலே தலைவன் வருவது கண்டாள்.

"வந்துவிட்டார்! வருந்தாதே!" என்றாள்.

'மன் உயிர் ஏமுற, மலர் ஞாலம் புரவு ஈன்று,
பல் நீரால் பாய் புனல் பரந்து ஊட்டி, இறந்த பின்,
சில் நீரால் அறல் வார, அகல் யாறு கவின் பெற-
முன் ஒன்று தமக்கு ஆற்றி முயன்றவர் இறுதிக்கண்
பின் ஒன்று பெயர்த்து ஆற்றும் பீடுடையாளர் போல்,
பல் மலர் சினைஉக, சுரும்பு இமிர்ந்து வண்டு ஆர்ப்ப,
இன் அமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினான் -

விரி காஞ்சித் தாது ஆடி இருங் குயில் விளிப்பவும்,
பிரிவு அஞ்சாதவர் தீமை மறைப்பென்மன்;
மறைப்பவும்,
கரி பொய்த்தான் கீழ் இருந்த மரம் போலக் கவின் வாடி,

எரி பொத்தி, என் நெஞ்சம் சுடும் ஆயின், எவன்
 செய்கோ ?

பொறை தளர் கொம்பின்மேல் சிதரினம் இறைகொள,
நிறை தளராதவர் தீமை மறைப்பென்மன் ;
 மறைப்பவும்,
முறை தளர்ந்த மன்னவன் கீழ்க் குடி போலக் கலங்குபு,
பொறை தளர்பு பனி வாரும் கண் ஆயின், எவன்
 செய்கோ ?

தளை அவிழ் பூஞ் சினைச் சுரும்பு யாழ் போல
 இசைப்பவும்,
கொளை தளராதவர் தீமை மறைப்பென்மன் ;
 மறைப்பவும்,
கிளை அழிய வாழ்பவன் ஆக்கம் போல் புல்லென்று,
வளை ஆனு நெகிழ்பு ஓடும் தோள் ஆயின், எவன்
 செய்கோ ?'

என ஆங்கு,

நின்னுள் நோய் நீ உரைத்து அலமரல் ; எல்லா ! நாம்
எண்ணிய நாள்வரை இறவாது, காதலர்
பண்ணிய மாவினர் புகுதந்தார் -
கண் உறு பூசல் கை களைந்தாங்கே.

## 63. காமன் விழாவும் காதலன் வரவும்

இளவேனில் வந்துவிட்டது. ஆனால் வெளியூர் சென்ற காதலன் வரவில்லை.

மரங்கள் பூத்தன. மா தளிர் விட்டது. குயில்கள் கூவின. மலர் மணம் கொண்டு வீசியது காற்று. மலரிலே உள்ள தேனைக் குடிக்க மொய்த்தது வண்டு. ஆரவாரம் செய்தது.

இவற்றைக் கண்டாள் அவள். கலங்கினாள். ஏன் ? காதல் நினைவு. 'காதலன் வரவில்லையே' என்ற ஏக்கம்.

கண்டாள் தோழி.

"ஏன் அம்மா கலங்குகிறாய்? கலங்காதே! கண்ணீர் வடிக்காதே! அடக்கிக் கொள்" என்றாள்.

"நான் என்னடி செய்வேன்! அதோ பார்! குயில் கூவுதே! முல்லை மணம் வீசுதே! தென்றல் எனை வாட்டுதே! வண்டுகளின் ஊதல் உள்ளத்தைத் துளைக்குதே! இந்தக் காலத்தில்தானே அவர் வருவேன் என்றார். வரவில்லையே!

"வைகை ஆற்றிலே காமனுக்கு விழாச் செய்யும் காலம் இது வல்லவா! இளங் காதலர் இணை பிரியாது செல்கின்றனர் பார்! இப்போது வருவேன் என்று சொன்னவர், இன்னும் வர வில்லையே!

"இந்த வேனில் விழாக் காலத்திலேயல்லவோ நமது கூடல் மா நகர்ப் புலவர் கூடியிருந்து புதுப் புதுப் பாடல் புனைவர்! இது கேட்டு மகிழ 'வருவேன்' என்று சொன்னாரே! வரவில்லையே!" என்று ஏங்கினாள்.

அந்த நேரத்திலே என்ன ஆயிற்று. தொலைவில் அவன் வந்து கொண்டிருந்தான்.

"அதோ! வந்து விட்டார்" என்றாள் தோழி.

வருத்தம் ஒழிந்தது; மகிழ்ச்சி பொங்கியது.

'மடியிலான் செல்வம் போல் மரன் நந்த, அச் செல்வம்
படி உண்பார் நுகர்ச்சி போல் பல் சினை மிஞிறு ஆர்ப்ப;
மாயவள் மேனி போல் தளிர் ஈன, அம் மேனித்
தாய சுணங்கு போல் தளிர்மிசைத் தாது உக;
மலர் தாய பொழில் நண்ணி மணி நீர கயம் நிற்ப,
அலர் தாய துறை நண்ணி அயிர் வரித்து அறல் வார;
நனி எள்ளும் குயில் நோக்கி இனைபு உகு நெஞ்சத்தால்,
துறந்து உள்ளார் அவர்' எனத் துனி கொள்ளல் -
எல்லா! நீ.

'வண்ண வண்டு இமிர்ந்து, ஆறு ஐயை வார்
உயர் எக்கர்,
தண் அருவி நறு முல்லைத் தாது உண்ணும்
பொழுது அன்றோ -
கண் நிலா நீர் மல்கக் கவவி, நாம் விடுத்தக்கால்,

ஒண்ணுதால்! நமக்கு அவர் "வருதும்" என்று
உரைத்ததை?

மல்கிய துருத்தியுள் மகிழ் துணைப் புணர்ந்து, அவர்,
வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ -
"வலன் ஆக, வினை!" என்று வணங்கி, நாம்
விடுத்தக்கால்,
ஒளியிழாய்! நமக்கு அவர் "வருதும்" என்று
உரைத்ததை?
நிலன் நாவில் திரிதரூஉம் நீள் மாடக் கூடலார்
புலன் நாவில் பிறந்த சொல் புதிது உண்ணும் பொழுது
அன்றோ -
பல நாடு நெஞ்சினேம் பரிந்து, நாம் விடுத்தக்கால்,
சுடரிழாய்! நமக்கு அவர் "வருதும்" என்று
உரைத்ததை?'
என ஆங்கு,
உள்ளுதொறு உடையும் நின் உயவு நோய்க்கு
உயிர்ப்பாகி,
எள் அறு காதலர் இயைதந்தார் - புள் இயல்
காமர் கடுந் திண் தேர்ப் பொருப்பன்
வாய்மை அன்ன வைகலொடு புணர்ந்தே.

## 64. தோகையின் ஆடலும், தும்பியின் பாடலும்

ஆடல் இருக்கிறதே! இது பழைய கலை; மிகப் பழைய கலை. பழந் தமிழனின் உள்ளம் ஆடலில் பெரிதும் ஈடுபட்டிருந்தது. இயற்கையின் எழிலை எவ்வாறு கண்டான் அவன்? ஆடலும் பாடலுமாகக் கண்டான். காணும் காட்சியெல்லாம் கூத்து; ஆடல்; பாடல்.

இளவேனில் காலம். வெண் கடம்பு பூத்துக் குலுங்குகிறது. அக் கடம்ப மரத்தின்மீது ஒரு மயில் அமர்ந்திருக்கிறது; அழகிய தோகைவிரித்து ஆடுகிறது. ஆடும் மயிலைக்காண்கிறாள் ஒருபெண். என்ன தோன்றுகிறது அவளுக்கு? ஆடல் மேடையின்

நினைவு தோன்றுகிறது. பூத்து நிற்கும் வெண் கடம்பு, ஆடல் மேடைபோல் காட்சியளிக்கிறது. அந்த அரங்கிலே மகளிர் ஆடுவது போலிருக்கிறது. எது? மயில் ஆடுவது.

ஆடல் என்றால் பாடல் வேண்டுமே! பின்னணி இசை வேண்டுமே! பாடலும், பின்னணி இசையும் இல்லாத ஆடலும் ஓர் ஆடலாமோ? ஆகாது அல்லவா!

எனவே, மயிலின் ஆடலுக்கு ஏற்றபடி பாடுகிறான் ஒரு விறலி! அந்த விறலி யார்? தும்பி!

தும்பியின் ரீங்காரம் எப்படியிருக்கிறது? மயிலின் ஆடலுக்குத் தக்கபடி பாடுவதுபோல் இருக்கிறது.

ஆடல் ஆயிற்று; பாடலும் ஆயிற்று. ஆடலும் பாடலும் இருந்து என்ன? சுத்தமான சுருதியுடன் இணைந்தால்தானே, அழகு பெறும்!

சுருதி கூட்டுவார் யார்? வண்டின் ஊதல் சுருதி கூட்டுகிறது.

அருமையான ஆடல்! இயற்கையின் எழில் மிகும் ஆடல்! இளவேனில் தொடக்கத்திலே அரங்கேற்றம் நடக்கிறது.

"வாருங்கள்! வாருங்கள்! வந்து பாருங்கள்! பார்த்து மகிழுங்கள்" என்று வரவேற்கவேண்டுமே! எல்லாரையும் அழைக்க வேண்டுமே!

அந்த மரத்தின் இலைகளும் மலர்களும் காற்றிலே அசைகின்றன. அது எப்படி இருக்கிறது? "வா! வா" என்று அழைப்பதுபோல் இருக்கிறது.

ஆடல் கண்ட பெண் என்ன ஆனாள்? காதல் வசமானாள். "இந்த எழில் கண்டு இன்புறுவதற்கு அவன் இல்லையே!" என்று வருந்தினாள். எவன்? அவள்தன் காதலன்.

வருந்தினாள்; வாடினாள்; ஏங்கினாள். உடல் தளர்ந்தது. வளைகள் கழன்றன; ஓடின. நெற்றி, தன் அழகு இழந்தது; பசலை படர்ந்தது. கண்கள் நீர் சொரிந்தன.

"கோ" வென்று கதறினாள். கேட்டாள் அவளது தோழி.

"அழாதே! கண்ணீரைத் துடை" என்றாள்.

"அடி! நான் என்ன செய்வேன்! அவர் இன்னும் வரவில்லையே! வேனில் வந்துவிட்டதே! ஒருகால் மறந்துவிட்டாரோ! வராமலே இருந்துவிடுவாரோ" என்று புலம்பினாள் அவள்.

"இருந்தாலும் இருக்கும்! நான் என்ன கண்டேன்!" என்று கூறினாள் தோழி.

அவளுடன் சேர்ந்து கலங்கினாள்; வருந்தினாள்.

'கொடு மிடல் நாஞ்சிலான் தார் போல், மராத்து
நெடுமிசைச் சூழும் மயில் ஆலும் சீர,
வடி நரம்பு இசைப்ப போல் வண்டொடு சுரும்பு ஆர்ப்ப,
தொடி மகள் முரற்சி போல், தும்பி வந்து இமிர்தர,
இயன் எழீஇயவை போல, எவ் வாயும் இம்மென,
கயன் அணி பொதும்பருள் கடி மலர்த் தேன் ஊத,
மலர் ஆய்ந்து வயின் வயின் விரிப்ப போல் மரன்
ஊழ்ப்ப,
இருங் குயில் ஆல, பெருந் துறை கவின் பெற,
குழவி வேனில் விழவு எதிர்கொள்ளும்
சீரார் செவ்வியும், வந்தன்று;
வாரார், தோழி! நம் காதலோரே.

பாஅய்ப் பாஅய்ப் பசந்தன்று, நுதல்;
சாஅய்ச் சாஅய் நெகிழ்ந்தன, தோள்.

நனி அறல் வாரும் பொழுது என, வெய்ய
பனி அறல் வாரும், என் கண்.

மலையிடைப் போயினர் வரல் நசைஇ, நோயொடு
முலையிடைக் கனலும், என் நெஞ்சு.

காதலின் பிரிந்தார்கொல்லோ? வறிது, ஓர்
தூதொடு மறந்தார்கொல்லோ? நோதக,
காதலர் காதலும் காண்பாம்கொல்லோ?
துறந்தவர் ஆண்டு ஆண்டு உறைகுவர்கொல்லோ?
யாவது?' —
"நீள் இடைப் படுதலும் ஒல்லும்; யாழ நின்,
வாள் இடைப்படுத்த வயங்கு ஈர் ஓதி!
நாள் அணி சிதைத்தலும் உண்டு" என நய வந்து,
கேள்வி அந்தணர் கடவும்
வேள்வி ஆவியின் உயிர்க்கும், என் நெஞ்சே.'

**பாலைக் கலி முற்றும்.**

## முல்லைக் கண்ணாடி

| | | |
|---|---|---|
| 1. | தெய்வம் : | திருமால். |
| 2. | உயர்ந்தோர் | குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி. |
| 3. | தாழ்ந்தோர் : | இடையர், ஆயர், இடைச்சியர், ஆய்ச்சியர். |
| 4. | பறவை : | காட்டுக் கோழி. |
| 5. | விலங்கு : | மான், முயல். |
| 6. | ஊர் : | பாடி. |
| 7. | நீர் நிலை : | குறுஞ் சுனை, கான்யாறு. |
| 8. | மலர் : | குல்லை, முல்லை, தோன்றி, பிடவம். |
| 9. | மரம் : | கொன்றை, காயா, குருந்தம். |
| 10. | தானியம் : | வரகு, சாமை, முதிரை. |
| 11. | பறை : | ஏறங்கோட் பறை. |
| 12. | யாழ் : | முல்லை யாழ். |
| 13. | பண் : | சாதாரி. |
| 14. | தொழில் : | விதை விதைத்தல், களை கட்டல், அரிதல், கடா விடுதல், மாடு மேய்த்தல். |
| 15. | விளையாட்டும் பொழுது போக்கும் | கொன்றைக் குழல் ஊதல், குரவைக் கூத்தாடல், கான்யாறு ஆடல், ஏறு தழுவுதல். |



## உருத்திரன் யார் ?

முல்லைக் கலி 17 பாடல்கள் கொண்டது. பாடியவர் பெயர் உருத்திரன். சோழன் நல் உருத்திரன் என்று சொல்வாரும் உளர். சோழர் மரபிலே வந்தவர் இவர். இருப்பினும், பாண்டிய நாட்டைச் சிறப்பித்தே இவர் பாடியிருக்கிறார். பாண்டிய நாட்டில் நீண்ட காலம் இருந்தாரோ என்னவோ தெரியவில்லை.

முல்லை நிலத்தின் சிறப்பு; அந்த மக்களின் பண்பு; இவற்றையெல்லாம் மிக நன்றாகப் பாடியிருக்கிறார். இந்த அளவுக்கு வேறு எவரும் பாடவில்லை என்று கூறுவாரும் உளர். சாமுத்திரிகம், நிமித்தம் போன்ற நுண்ணிய துறைகளிலும் இவருக்குப் புலமையுண்டு. இவரது பாடல்களே இதற்குச் சான்று.

முல்லை நில மக்களின் வாழ்வை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறார் இந்தக் கவி.

## முல்லை என்பது என்ன

காடும், காடு சூழ்ந்த நிலமும் முல்லை எனப்படும். இடை நிலம் என்றும் சிலர் சொல்வர். அதாவது குறிஞ்சிக்கும் மருதத்துக்கும் இடையே உள்ள நிலம்.

முல்லை நிலத்தின் கடவுள் திருமால். மக்களிலே செல்வருக்கு என்ன பெயர்? குறும்பொறை நாடன், தோன்றல் என்பன ஆண்களின் பெயர். மனைவி, கிழத்தி என்பன பெண்களுக்குரிய பெயர். ஏழை மக்களை எவ்வாறு அழைப்பர்? இடையர், ஆயர் என்பர். இது ஆண்களுக்கு. பெண்கள் எவ்வாறு அழைக்கப் பெறுவர்? இடைச்சியர் என்றும் ஆய்ச்சியர் என்றும் அழைக்கப் பெறுவர்.

இங்கே காணப்படும் பறவை காட்டுக் கோழி. மானும், முயலுமே விலங்குகள். ஊர்களுக்கு, பாடி என்று பெயர். குறுஞ்சுனை, கான்யாறு இவையே நீர் நிலைகள். கொன்றை, காயா, குருந்தம், இவை மரங்கள். குல்லைப் பூ, முல்லைப் பூ, தோன்றிப் பூ,

பிடவம் பூ இவை மலர்கள். வரகு, சாமை, முதிரை முதலியன உணவு தானியங்கள்.

முல்லை நில மக்களின் இசைக் கருவிகள் இரண்டு. ஒன்று: யாழ்; மற்றொன்று: பறை.

யாழுக்கு முல்லை யாழ் என்று பெயர். பறைக்கு ஏறங்கோட் பறை என்று பெயர். அவர்கள் பாடிய பண், சாதாரி.

அவர்களது தொழில் என்ன? சாமை, வரகு முதலியன விதைத்தல்; களை கட்டல்; அரிதல்; கடா விடுதல்; ஆடு மாடு மேய்த்தல்.

முல்லை நில மக்களின் விளையாட்டும் பொழுது போக்கும் எவை?

கொன்றையினால் குழல் செய்து ஊதுவது; குரவைக் கூத்தாடுவது; காட்டாற்று நீரிலே விளையாடுவது; ஏறு தழுவல் முதலியன.

## முல்லை மொழிவது என்ன?

முல்லைக் கலி மொழிவது என்ன? முல்லை நில மக்களின் வீர விளையாட்டைக் கூறுகிறது. வீர விளையாட்டு எது? ஏறு தழுவல்.

ஏறு தழுவலாவது என்ன? ஜல்லிக் கட்டு என்று சொல்கிறார்களே! அதுதான். இதையே மஞ்சு விரட்டு என்றும் சொல்வார்கள். காளை விரட்டு என்றும் சொல்வார்கள்.

முல்லை நிலத்திலே வாழ்ந்த செல்வப் பெருங்குடி மக்கள் என்ன செய்வார்கள்? தங்கள் மந்தையிலே உள்ள காளைக் கன்று ஒன்றைத் தனியே பிரிப்பார்கள்; செல்வமாக வளர்க்கத் தொடங்குவார்கள். எதற்காக? காளை விரட்டுக்காக; ஏறு தழுவலுக்காக.

எப்போது? அச் செல்வர் வீட்டிலே பெண் மகள் பிறக்கிறாள் அல்லவா? அப்போது.

வீட்டிலே செல்வமாக வளர்வாள் பெண். மந்தையிலே செல்வமாக வளரும் காளை. மங்கைக்குப் பருவம் வரும். காளைக்கும் பருவம் வரும். "இந்தக் காளையைத்தழுவி—அடக்கி—

வெற்றி கொள்பவன் எவனோ, அவனுக்கே இவளை மணம் செய்து கொடுப்பேன்" என்று அறிவிப்பான். எவன்? அப் பெண்ணின் தந்தை.

கட்டழகி அவளது காதலனும் முன் வருவான்; காளை தழுவுவான்; வெற்றி கொள்வான்; காதலியைக் கைப் பற்றுவான்.

காதலும் வீரமும் இணைந்து நிற்பன. இந்த இணைப்பை முல்லைக் கலியிலே காணலாம்.

'ரியலிசம்' என்று சொல்கிறார்களே! அதாவது வாழ்க்கையை அதன் உண்மை உருவில் வடிப்பது! அந்த வடிப்பை இந்த முல்லைக் கலியிலே காணலாம்.

## 65. காளையும் காதலியும்

மஞ்சு விரட்டு நடக்கிறது. ஆயர்பாடி மக்கள் கூடியிருக்கிறார்கள். ஒரு பெரிய தொழுவம். அதைச் சுற்றிப் பரண் அமைத்திருக்கிறார்கள். அந்தப் பரணிலே ஆடவரும் பெண்டிரும் அமர்ந்திருக்கின்றனர், காளை விரட்டும் விளையாட்டைக் காண்பதற்காக. பிடவம், காந்தள், காயா முதலிய மலர்களைத் தொடுத்து அழகுற அணிந்திருக்கின்றனர். வெண்மை, சிவப்பு, நீலம் இப்படி மாறி மாறிக் கண்ணுக்கினிய காட்சி தருகிறது.

தொழுவத்தின் உள்ளே காளைகள் இருக்கின்றன. நன்றாகக் கொம்பு சீவி விடப்பட்ட காளைகள்.

மணம் புரிய இருக்கும் மகளிர் ஒருபால். அம் மகளிரைக் காதலிக்கும் இளைஞர் மற்றொருபால். அவர்தம் சுற்றத்தினர் இன்னொருபால்.

பறை முழங்குகிறது. அம் முழக்கம் கேட்ட காளைகள் என்ன செய்கின்றன? மருண்டு நிற்கின்றன; துள்ளிக் குதித்துத் திரிகின்றன. அதனால் தூசி எழுகிறது; எங்கும் படர்கிறது. காளை விரட்டு வெற்றி பெறவேண்டும் என்று அவ்வூரார் ஆண்டவனை வேண்டுகின்றனர், அகிற் புகை தூவி.

காதலியரைக் கைபபற்ற எண்ணிய காதலர் என்ன செய்

கின்றனர்? கடவுளை வேண்டுகின்றனர். எதற்கு? வெற்றி யருள்வதற்கு

விளையாட்டுத் தொடங்கி விட்டது. கருமை கலந்த செந்நிறக் காளை ஒன்று; கண்டார் கலங்கும் பார்வை கொண்டது அதன் மீது பாய்ந்தான் ஓர் இளைஞன்.

அடுத்த நிமிஷம் என்ன ஆயிற்று? அவனை ஒரே குத்தாகக் குத்தியது; வீழ்த்தியது. கொம்பால் கிழித்தது. தூக்கி வீசியது.

அக் காட்சி எப்படியிருந்தது? பாஞ்சாலியின் கூந்தல் பற்றி இழுத்தானே துச்சாதனன்! அவனைப் போரிலே வென்று, அவன் நெஞ்சைப் பிளந்து, ரத்தங் குடித்து, வெஞ்சினத்துடன் தூக்கி எறிந்தானே வீமன்! அக் காட்சிபோல் இருந்தது

மற்றொரு காளை. கருநிறக் காளை. மயிலைக் காளை. அழகான வெண் சுட்டி நெற்றியிலே. அந்தக் காளைமீது பாய்ந்தான் மற்றோர் இளைஞன். என்ன ஆனான்? குடல் சரிந்து கீழே விழுந்தான். அது எப்படியிருந்தது?

எருமை மீது ஏறி வந்தான் எமன். அவனை ஒரே உதை விட்டு நெஞ்சு பிளக்கச் செய்தான் இறைவன். அம்மாதிரி இருந்தது.

செவலைக் காளை ஒன்று. அதன்மீது பாய்ந்தான் மற்றோர் இளைஞன். அவன் என்ன ஆனான்? மற்றவர் போலவே!

இக் காட்சிகளையெல்லாம் பார்த்திருந்தாள் ஒரு பெண். அவள் ஒருவன் மீது காதல் கொண்டிருந்தாள். அவனும் ஏறு தழுவியாதல் வேண்டும். அதை நினைத்தாள் அவள்; கலங்கினாள்.

'நமது காதலன் ஏறு தழுவும்போது அவனுக்கு எவ்வித இடையூறும் நேராதிருக்க வேண்டுமே' என்று கலங்கினாள்.

"கலங்காதே! அப்படி ஒன்றும் அபாயம் நேர்ந்து விடாது. எவ்வளவு பொல்லாத காளையேயானாலும் சரி. அடக்கி விடுவான் அவன்" என்றாள் தோழி.

அந்த நேரத்திலே மங்கல வாத்தியங்கள் ஒலித்தன.

"பார்! நான் சொன்னதை ஆமோதிக்கும் வகையில் மங்கல வாத்தியங்கள் ஒலிக்கின்றன" என்றாள்.

இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தவள் திடீரென்று எங்கேயோ சென்றாள். எங்கே? இவ்வளவு நேரம் எவனைப்

பற்றிப் பேசிக் கொண்டிருந்தனரோ அவனைக் கண்டாள். அவனிடம் சென்றாள்.

"அதோ பார்! அந்தக் காளையைத்தான் நீ கட்டிப் பிடிக்க வேண்டும். அக் காளை அருகே கோல் ஊன்றி நிற்பவர்தான் உன் காதலியின் தந்தை. 'இந்தக் காளையை எவன் அடக்கிப் பிடிக்கிறானோ, அவனே என் மகளின் கையையும் பற்றுதற்குரியன்' என்று கூறுகிறார்.

"அஞ்சாதே! தைரியமாக அந்தக் காளையை விரட்டு. உன் காதலி அதிர்ஷ்டசாலி. உனக்கு வெற்றி கிடைக்கும்" என்று கூறினாள்; ஊக்கமூட்டினாள் தோழி.

திரும்பி வந்தாள்.

"எங்கே போனாய்?" என்று கேட்டாள் அவள்.

"அதோ" என்றாள். அவளது காதலனைச் சுட்டிக் காட்டினாள். "அவனிடம் சென்றேன்; பேசினேன். உறுதியாக இருக்கிறான். அஞ்சா நெஞ்சத்துடன் இருக்கிறான். வெற்றி பெறுவான். அஞ்சாதே" என்றாள்.

"காளைகள் களைத்தன; போதும்; இத்துடன் விளையாட்டு முடிந்தது" என்று அறிவித்தார் ஊருக்குப் பெரிய தலைவர்.

கூடியிருந்தவர் கலைந்தனர்; முல்லைக் காட்டினுள் புகுந்தனர், காதலருடன் களிக்க.

**து**ளி பெறு தண் புலத்துத் தலைப் பெயற்கு அரும்பு
ஈன்று,
முளி முதல் பொதுளிய, முட் புறப் பிடவமும்;
களி பட்டான் நிலையே போல் தடவுபு துடுப்பு ஈன்று,
ஞெலிபு உடன் நிரைத்த ஞெகிழ் இதழ்க் கோடலும்;
மணி புரை உருவின காயாவும்; பிறவும்;
அணி கொள மலைந்த கண்ணியர்—தொகுபு உடன்,
மாறு எதிர் கொண்ட தம் மைந்துடன் நிறுமார்,
சீறு அரு முன்பினோன் கணிச்சி போல் கோடு சீஇ,
ஏறு தொழூஉப் புகுத்தனர், இயைபுடன் ஒருங்கு.

**அ**வ் வழி, முழக்கு என, இடி என, முன் சமத்து
ஆர்ப்ப—

வழக்கு மாறு கொண்டு, வருபு வருபு ஈண்டி—
நறையொடு துகள் எழ நல்லவர் அணி நிற்ப,
துறையும் ஆலமும் தொல் வலி மராஅமும்
முறையுளி பராஅய், பாய்ந்தனர், தொழூஉ.

மேற்பாட்டு உலண்டின் நிறன் ஒக்கும் புன் குருக் கண்
நோக்கு அஞ்சான் பாய்ந்த பொதுவனைச் சாக் குத்தி,
கோட்டிடைக் கொண்டு, குலைப்பதன் தோற்றம் காண்-
-அம் சீர் அசை இயல் கூந்தற் கை நீட்டியான்
நெஞ்சம் பிளந்து இட்டு, நேரார் நடுவண், தன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்.

சுடர் விரிந்தன்ன சுரி நெற்றிக் காரி
விடரி அம் கண்ணிப் பொதுவனைச் சாடி,
குடர் சொரியக் குத்தி, குலைப்பதன் தோற்றம் 'காண்—
படர் அணி அந்தி, பசுங் கட் கடவுள்
இடரிய ஏற்று எருமை நெஞ்சு இடந்து இட்டு,
குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்.

செவி மறை நேர் மின்னும் நுண் பொறி வெள்ளைக்
கதன் அஞ்சான், பாய்ந்த பொதுவனைச் சாடி,
நுதி நுனைக் கோட்டால் குலைப்பதன் தோற்றம் காண்-
-ஆர் இருள் என்னுன் அருங் கங்குல் வந்து, தன்
தாளின் கடந்து அட்டு, தந்தையைக் கொன்றானைத்
தோளின் திருகுவான் போன்ம்.
என ,, ஆங்கு,

அணி மாலைக் கேள்வற் தரூஉமார், ஆயர்
மணி மாலை ஊதும் குழல்.

கடாஅக் களிற்றினும் கண்ணஞ்சா ஏற்றை
விடாஅது நீ கொள்குவை, ஆயின்; படாஅகை
ஈன்றன, ஆய மகள் தோள்.

பகலிடக் கண்ணியன்; பைதற் குழலன்,
சுவல்மிசைக் கோல் அசைத்த கையன், அயலது;

கொல் ஏறு சாட இருந்தார்க்கு, எம் பல் இருங்
கூந்தல் அணை கொடுப்பேம், யாம்.

'கோளாளர் என் ஒப்பார் இல்' என நம் ஆனுள்,
தாளாண்மை கூறும் பொதுவன் நமக்கு, ஒரு நாள்,
கேளாளன் ஆகாமை இல்லை; அவற் கண்டு
வேளாண்மை செய்தன கண்.

ஆங்கு, ஏறும் வருந்தின; ஆயரும் புண் கூர்ந்தார்;
நாறு இருங் கூந்தற் பொதுமகளிர் எல்லாரும்
முல்லை அம் தண் பொழில் புக்கார், பொதுவரோடு,
எல்லாம் புணர் குறிக் கொண்டு.

## 66. காதல் வென்றது! காளை பணிந்தது!

"அவள் யார்? உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான் அவன்.

"எவள்?" என்றான் தோழன்.

"அதோ நிற்கிறாளே! அவள்" என்றான் அவன்.

இடி இடி யென்று சிரித்தான் தோழன்.

"ஏன் சிரிக்கிறாய்?" என்று கேட்டான் அவன்.

"அங்கே எவ்வளவோ பெண்கள் இருக்கிறார்கள். யாரைப் பற்றி நீ அறிய ஆசைப்படுகிறாய்?" என்றான்.

"அந்த அழகி"

"எந்த அழகி?"

"முல்லை, கொன்றை, பிடவம் முதலிய மலர்களையும் தழைகளையும் அணிந்து நிற்கிறாளே! அவள்."

"எல்லாருமேதான் அப்படி அணிந்திருக்கிறார்கள்."

"சீ! வீண் வம்பு பேசாதே! அதோ பார்! யாரோ ஒரு பெரிய இடத்துப் பெண் மாதிரி இருக்கிறாளே!"

"ஆம்! இருக்கிறாள்! இருக்கிறாள்."

"அவளைத்தான்."

"ஓ! அவளைத்தானா! சரி; சரி."

"தெரியுமா ?"

"தெரியும்."

"யார் வீட்டுப் பெண் ?"

"நீதான் சொல்லிவிட்டாயே !"

"சீ ! விளையாடாதே !"

"நான் விளையாடினால் உனக்குப் பிடிக்குமா ? அவள் விளையாடினால்......?"

"நான் எங்கே சொன்னேன் ?"

"நீதான் சொல்லிவிட்டாயே ! பெரிய இடத்துப் பெண் என்று."

"அது சரிதான். யார் வீட்டுப் பெண் ? சீக்கிரம் சொல்."

"அவள் இந்த ஊர் தலைவன் மகள்... .."

"மகளா...?"

"ஆம்."

"கலியாணம்......"

"இனிமேல் தான்..."

"இதுவரை..."

"இதுவரை உன்னைப்போல் எவரும் வரவில்லை."

"வரவில்லையா ?"

"வந்தார்கள்."

"வந்தவர் என்ன ஆனார் ?"

"காளை முட்டிச் செத்துப் போனார்."

"எந்தக் காளை ?"

"அவர்கள் வீட்டிலே வளருது ஒரு காளை ; பொல்லாத காளை. அதை அடக்கி வெற்றி காண்பவன் எவனோ, 'அவனுக்கே என் பெண்ணைக் கலியாணம் செய்து கொடுப்பேன்' என்று அறிவித்திருக்கிறார் அவள் தந்தை."

"அறிவித்திருக்கிறாரா ?"

"சும்மா அறிவிக்கவில்லை. பறைசாற்றி அறிவித்திருக்கிறார்."

"அப்படியா ?"

"ஆம்."

"சரி. புறப்படு, போ !"

"நம்ம ஊருக்குத்தானே?"

"பின் எங்கே?"

"அந்தப் பெரிய மனிதரிடம் போ."

"போய்?"

"அந்தக் காளையை வெற்றி காண இந்தக் காளை வந்திருப்பதாகச் சொல்லி வா."

அந்த இளம் தோன்றலின் மன உறுதி கண்டான் ஆயர்குலத் தோழன்; சென்றான் ஊர்த் தலைவரிடம்; சொன்னான்.

கேட்டார் ஊர்த் தலைவர்.

"நன்று" என்றார்.

காளை விரட்டு விழாவுக்கான ஏற்பாடுகள் நடந்தன.

"ஏறு தழுவ விரும்புவோர் எல்லாரும் வருக! வருக!" என்று பறை ஒலித்தது.

கேட்டனர் ஊரார்; கூடினர்.

ஏறு தழுவுதலுக்கென்று விடப்பட்டிருந்த ஏறுகள் பலவும் கொண்டுவரப்பட்டன.

காதலியைக் கைப்பற்ற எண்ணியிருந்த பலரும் வந்தனர், ஏறு தழுவுதற்காக.

உயர்ந்த பரண்கள் அமைக்கப்பட்டன. அவற்றிலே மகளிர் பலரும் அமர்ந்தனர்.

பறை முழங்கிற்று. விளையாட்டுத் தொடங்கிற்று. இளைஞர் புகுந்தனர்; தாவினர். சீறி எழுந்தன காளைகள்.

காளைகளுக்கும், காளையொத்த காதலர்க்கும் போர்! போர்! எழுந்தது புழுதி! படர்ந்தது எங்கும்! பாய்ந்தன கொம்புகள்! தளர்ந்தனர் பலர்! கலங்கினர் பலர்!

அஞ்சாது நின்றான். அவள்மீது கொண்ட காதல் வலியூட்டிற்று. அவ் வலிவின்முன் ஏறு என் செய்யும்? மண்டியிட்டது. காளையின் கழுத்தை இறுகப் பிடித்தான்; அணைத்தான்; தாவினான்; பாய்ந்தான்; அழுத்தினான். கீழே விழுந்தது காளை.

கண்டனர் சிலர்; கலங்கினர். எனினும் வெற்றி கொண்டவன்

எவன்? நாளை அவளை மணம் முடிப்பான் அல்லனோ? இதை எண்ணினர். மகிழ்ந்தனர்.

அவன் கொண்ட வெற்றி எங்கும் பரவியது. மகிழ்ந்தனர்; மகிழ்ச்சியால் குரவைக் கூத்தாடினர்.

கண் அகன் இரு விசும்பில் கதழ் பெயல் கலந்து, ஏற்ற
தண் நறும் பிடவமும், தவழ் கொடித் தளவமும்,
வண்ண வண் தோன்றியும், வயங்கு இணர்க்
கொன்றையும்,
அன்னவை பிறவும், பல் மலர் துதைய,
தழையும் கோதையும் இழையும் என்று இவை
தைஇயினர், மகிழ்ந்து, திளைஇ விளையாடும்
மட மொழி ஆயத்தவருள் இவள் யார்—உடம்போடு
என் உயிர் புக்கவள், இன்று?

ஓஒ! இவள், 'பொரு புகல் நல் ஏறு கொள்பவர்
அல்லால்,
திரு மா மெய் தீண்டலர்' என்று, கருமமா,
எல்லாரும் கேட்ப, அறைந்து அறைந்து, எப்பொழுதும்
சொல்லால் தரப்பட்டவள்.

'சொல்லுக!'—'பாணியேம்' என்றார்; 'அறைக' என்றார்,
பாரித்தார்,
மாண்இழை ஆறுகச் சாறு.

சாற்றுள் பெடை அன்னார் கண்பூத்து, நோக்கும்
வாய் எல்லாம்
மிடை பெறின், நேராத் தகைத்து.

தகை வகை மிசைமிசைப் பாயியர், ஆர்த்து, உடன்
எதிர்எதிர் சென்றார் பலர்.

கொலை மலி சிலை செறி செயிர் அயர் சினம் சிறந்து,
உருத்து எழுந்து ஓடின்று மேல்.

எழுந்தது துகள்;
ஏற்றனர் மார்பு;
கவிழ்ந்தன மருப்பு;
கலங்கினர் பலர்.

அவருள், மலர் மலி புகல் எழ, அலர் மலி மணி புரை
நிமிர் தோள் பிணைஇ
எருத்தோடு இமிலிடைத் தோன்றினன்; தோன்றி,
வருத்தினான் மன்ற, அவ் ஏறு.

ஏறு எவ்வம் காணா எழுந்தார்-எவன்கொலோ—
ஏறு உடை நல்லார்; பகை?

மடவரே, நல் ஆயர் மக்கள்-நெருநை,
அடல் ஏற்றெருத்து இறுத்தார்க் கண்டும், மற்று
இன்றும்,
உடல் ஏறு கோள் சாற்றுவார்!
ஆங்கு, இனி—

தண்ணுமைப் பாணி தளராது எழூஉக—
பண் அமை இன் சீர்க் குரவையுள், தெண் கண்ணி,
திண் தோள், திறல் ஒளி, மாயப் போர், மா மேனி,
அம் துவர் ஆடைப் பொதுவனோடு, ஆய்ந்த
முறுவலாள் மென் தோள் பாராட்டி, சிறுகுடி
மன்றம் பரந்தது, உரை!

## 67. களத்து நிகழ்ச்சியும், காதல் நெகிழ்ச்சியும்

காளை விரட்டும் விளையாட்டு முடிந்தது. கூட்டமும் கலைந்தது. ஆனால் அவள் மட்டும் போகவில்லை. பரண்மீது உட்கார்ந்த படியே இருந்தாள். சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்; தன்னை மறந்திருந்தாள்.

அந்தத் தொழுவம் எக் காட்சி வழங்கியது? போர்க்களக் காட்சி வழங்கியது. போர் முடிந்த களம் போல் காட்சி அளித்தது.

'செக்கச் செவேல்' என்ற புழுதி எங்கும் படிந்திருந்தது. செம்மண்! செம்மண்! எங்கும் செம்மண்! ஒரே செம்மண்! ஆயர் தம் மாலையிலே கட்டப்பட்டிருந்த மலர்கள்! பலநிற மலர்கள்! எங்கும் உதிர்ந்து கிடந்தன.

அந்தக் களத்தை நோக்கினாள் அவள். சிந்தனையில் ஆழ்ந்தாள்! சிந்தனை! சிந்தனை! வெகுவேகமான சிந்தனை.

சற்று முன் நடந்த எல்லாம் அவள் கண்முன் தோன்றின; தோன்றித் தோன்றி மறைந்தன, சினிமாக் காட்சி போல.

ஆயர்கள் வருகிறார்கள்; கூட்டம் கூட்டமாக வருகிறார்கள். ஆண்களும் பெண்களுமாக வருகிறார்கள். காளை விரட்டும் இளைஞர்களும் வருகிறார்கள்; மாலையணிந்து வருகிறார்கள்; மணமகன் போல வருகிறார்கள்.

பெண்கள்! மணப் பருவம் வந்த பெண்கள்! எக்களிக்கும் சிரிப்பு! 'முல்லை அரும்போ! மயில் இறகின் முளையோ' என்று சொல்லத்தக்க முறுவல் அழகிகள்! கொஞ்சும் கிளி மொழியார்கள்! வருகிறார்கள்; வருகிறார்கள். தாய் தந்தையருடன் வருகிறார்கள்; தோழிமார் தொடர வருகிறார்கள். பரணிலே ஏறி உட்கார்ந்து கொள்கிறார்கள்.

தொழுவத்திலே காளைகள் நிற்கின்றன! மயிலைக் காளைகள்! கருநிற உடல்! வெண்ணிறக் கால்கள்! செவலைக் காளைகள்! சிவந்த நிற உடல்! இடை இடையே வெண் சுட்டிகள்! பிறை போன்ற கொம்புகள்!

பறை முழங்குகிறது. விழாத் தொடங்குகிறது. விழா! விழா! வீர-விளையாட்டு விழா! 'திமு திமு'வென்று ஓடுகிறார்கள் இளைஞர்கள்; ஆயர்குல இளைஞர்கள்; காளைகளை விரட்டுவதற்காக.

கண்டன காளைகள்! சினத்துடன் சீறுகின்றன! பாய்கின்றன; துள்ளுகின்றன; தாவுகின்றன; வீறு கொண்டு எழுகின்றன.

எழும் அக் காளைகள் என் செய்கின்றன? இளைஞர் மீது பாய்கின்றன; திரும்புகின்றன; தம் இனக் காளைகள் மீதும் பாய்கின்றன. அங்கு ஒரு குத்து! இங்கு ஒரு குத்து! இப்படி மாறி

மாறிக் குத்துகின்றன கொம்பினுல். ஒரே ரத்தம் கொம்பிலே! செக்கச் செவேல் என்றிருக்கிறது.

அந்தக் காளைகள் ஓடி வரும்போது எப்படியிருக்கிறது? சிவ பெருமான் படை ஏந்தி வருவதுபோல் இருக்கிறது.

மற்ருெருகாளை. சீறிப் பாய்கிறது; குடலைக் கிழிக்கிறது. கிழிந்த குடலைக் கொம்பிலே சுற்றிக் கொள்கிறது; அதோடு மற்ருேர் இளைஞன் மீது பாய்கிறது; சீறிப் பாய்கிறது.

பாயும் காளையைப் பக்குவமாகப் பிடிக்கிருன் இளைஞன். காளை அடங்கியது; ஒடுங்கியது. அதன் மீது தாவினுன்; அமர்ந் தான்; படுத்தான்; படுத்தபடியே அதை விரட்டினுன், ஆற்றிலே நீந்தி விளையாடுபவன் தெப்பத்தைக் கட்டிக்கொண்டு நீந்துவது போல!

"ஆகா!" என்று மகிழ்கிருள் அவள்.

"என்ன தைரியம்! என்ன தைரியம்!" என்று பாராட்டு கிருள்.

"நல்ல அழகன்" என்று சொல்லிக் கொள்கிருள்.

இவ்வளவையும் கவனித்துக்கொண்டே இருந்தாள் தோழி.

"கவலைப் படாதே! இன்றுபோலவே இன்னெரு நாளும் நடக்கும். அன்று வருவான் உன் காதலன்; ஏறு தழுவுவான்; வெற்றி கொள்வான். உன்னை மணம் செய்து கொள்வான்!" என்ருள்.

நீண்ட பெருமூச்சு விட்டாள் அவள்.

"இப்போது நம் ஆயர்பாடியிலே குரவைக் கூத்து நடக்கும். வா, போகலாம்" என்ருள் தோழி.

"இரு போகலாம்" என்ருள் அவள்.

"தாமதியாதே. அங்கே உன் காதலனும் வந்திருப்பான். அவனுக்கு உன் கருத்தைத் தெரிவிக்கலாம் வா" என்ருள் தோழி.

"ஐயோ! அவ்வளவு பேர் மத்தியிலா?" என்ருள் அவள்.

"எவ்வளவு பேர் இருந்தால் என்ன? சொல்கிற விதத்தில் சொன்னுல், அவன் தெரிந்து கொள்வான்" என்ருள் தோழி.

"எந்த விதத்தில் சொல்வது?" என்று கேட்டாள் அவள்.

"குரவைக் கூத்திலே நாமும் கலப்போம். பாடுவோம். நமது எண்ணத்தைப் பாட்டிலே தெரிவிப்போம்" என்றாள் தோழி.

"நல்ல யோசனை! ஆனால் என்ன சொல்வது? எப்படிச் சொல்வது?" என்று கேட்டாள் அவள்.

"முதலில் நமது பாண்டியனைப் பாடுவோம்; வாழ்த்து வோம்!"

"பிறகு?"

"காளையின் கொம்பு கண்டு பயப்படுகிறவனை ஆயர் மகள் காதலிக்க மாட்டாள், என்று பாடுவோம்."

"பிறகு?"

"அஞ்சாமல் காளை விரட்டுபவனையே அவள் தழுவுவாள், என்போம். அவனது வீரங்கண்டு வியப்பாள்; காதல் கொள் வாள், என்போம்."

"ஊம்."

"நமது கருத்தை அவன் அறிந்து கொள்வான். ஏறு தழுவத் துணிவான்; வருவான்."

"அப்படியானால் வா போகலாம்."

இருவரும் செல்கின்றனர். குரவைக் கூத்தில் கலக் கின்றனர்.

மெல் இணர்க் கொன்றையும், மென் மலர்க் காயாவும்,
புல் இலை வெட்சியும், பிடவும், தளவும்,
குல்லையும், குருந்தும், கோடலும், பாங்கரும் -
கல்லவும் கடத்தவும்-கமழ் கண்ணி மலைந்தனர்,
பல் ஆன் பொதுவர், கதழ் விடை கோள் காண்மார்—
முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன
பல்லர், பெரு மழைக் கண்ணர், மடம் சேர்ந்த
சொல்லர், சுடரும் கனங் குழைக் காதினர்,
நல்லவர்-கொண்டார், மிடை.

அவர் மிடை கொள -

மணி வரை மருங்கின் அருவி போல

அணி வரம்பு அறுத்த வெண் காற் காரியும்,
மீன் பூத்து அவிர் வரும் அந்தி வான் விசும்பு போல்
வான் பொறி பரந்த புள்ளி வெள்ளையும்,
கொலைவன் சூடிய குழவித் திங்கள் போல்
வளையுபு மலிந்த கோடு அணி சேயும்,
பொருமுரண் முன்பின் புகல் ஏறு பல பெய்து-
அரிமாவும், பரிமாவும், களிறும், கராமும்,
பெரு மலை விடரகத்து, ஒருங்குஉடன் குழீஇ,
படு மழை ஆடும் வரையகம் போலும்-
கொடி நறை சூழ்ந்த தொழூஉ.

தொழுவினுள் புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின, ஏறு.

ஏற்றின் அரி பரிபு அறுப்பன, சுற்றி,
எரி திகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண்
உருவ மாலை போல,
குருதிக் கோட்டொடு குடர் வலந்தன.

கோட்டொடு சுற்றிக் குடர் வலந்த ஏற்றின் முன்,
ஆடி நின்று, அக் குடர் வாங்குவான் பீடு காண் -
செந் நூற் கழி ஒருவன் கைப் பற்ற, அந் நூலை
முந் நூலாக் கொள்வானும் போன்ம்.

இகுளை! இஃது ஒன்று கண்டை; இஃது ஒத்தன்:
கோட்டினத்து ஆயர் மகன் அன்றே - மீட்டு ஓரான்
போர் புகல் ஏற்றுப் பிணர் எருத்தில் தத்துபு,
தார் போல் தழீஇயவன்?

இகுளை! இஃது ஒன்று கண்டை; இஃது ஒத்தன்;
கோவினத்து ஆயர் மகன் அன்றே - ஓவான் -
மறை ஏற்றின் மேல் இருந்து ஆடி, துறை அம்பி
ஊர்வான் போல் தோன்றுமவன்?

தொழீஇஇ! - காற்றுப் போல் வந்த கதழ் விடைக்
காரியை

ஊற்றுக் களத்தே அடங்கக் கொண்டு,அட்டு, அதன்
மேல் தோன்றி நின்ற பொதுவன் தகை கண்டை -
ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்து இட்டு,
சீற்றமோடு ஆர் உயிர் கொண்ட ஞான்று,
இன்னன்கொல்
கூற்று எனா: உட்கிற்று, என் நெஞ்சு.

இகுளை! இஃது ஒன்று கண்டை; இஃது ஒத்தன்:
புல்லினத்து ஆயர் மகன் அன்றே - புள்ளி
வெறுத்த வய வெள் ஏற்று அம் புடைத் திங்கள்
மறுப் போல் பொருந்தியவன்?

ஓவா வேகமோடு உருத்துத் தன்மேல் சென்ற
சேஎச் செவிமுதற் கொண்டு, பெயர்த்து ஒற்றும்
காயாம்பூங் கண்ணிப் பொதுவன் தகை கண்டை -
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய் பகுத்து இட்டு,புடைத்த ஞான்று,
இன்னன்கொல்
மாயோன் என்று: உட்கிற்று, என் நெஞ்சு.

ஆங்கு, இரும் புலித் தொழுதியும் பெருங் களிற்றினமும்
மாறுமாறு உழக்கியாங்கு உழக்கி, பொதுவரும்
ஏறு கொண்டு, ஒருங்கு தொழூஉ விட்டனர் -
விட்டாங்கே -
மயில் எருத்து உறழ் அணி மணி நிலத்துப் பிறழ -
பயில் இதழ் மலர் உண்கண்
மாதர் மகளிரும் மைந்தரும் மைந்து உற்றுத்
தாது எரு மன்றத்து அயர்வார், தழூஉ.

கொல் ஏற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும்
புல்லாளே, ஆய மகள்.

அஞ்சார் கொலை ஏறு கொள்பவர் அல்லதை,
நெஞ்சிலார் தோய்தற்கு அரிய - உயிர் துறந்து -
நைவாரா ஆய மகள் தோள்.

வளியா அறியா உயிர், காவல் கொண்டு,
நளிவாய் மருப்பு அஞ்சும் நெஞ்சினர் தோய்தற்கு
எளியவோ, ஆய மகள் தோள்?

விலை வேண்டார், எம் இனத்து ஆயர் மகளிர் -
கொலை ஏற்றுக் கோட்டிடை, தாம் வீழ்வார் மார்பின்
முலையிடைப் போல, புகின்.
ஆங்கு,

குரவை தழீஇ, யாம், மரபுளி பாடி,
தேயா விழுப் புகழ்த் தெய்வம் பரவுதும் -
மாசு இல் வான் முந்நீர்ப் பரந்த தொல் நிலம்
ஆளும் கிழமையொடு புணர்ந்த
எம் கோ வாழியர், இம் மலர் தலை உலகே!

## 68. ஆயனும் அழகியும்

ஆயர் குலம் இருக்கிறதே! இது மிக்க பெருமை வாய்ந்த குலம். பாண்டிய மன்னருக்கு உறு துணையாக நின்றவர்கள் ஆயர்குடிப் பெரு மக்களே. பாண்டியப் பேர் அரசின் ஒரு பகுதியைக் கடல் கொண்டது. கண்டான் பாண்டியன்; மிக வருந்தினன். 'நமது அரசு சுருங்கி விட்டதே' என்று ஏங்கினன். 'இழந்த பகுதிக்கு ஈடு செய்வது எப்படி?' என்று யோசித்தான். பிறர் நாட்டின் பகுதிகளைக் கொள்வதே தகுந்த ஈடு, என்று முடிவு செய்தான். கொள்வது எப்படி இயலும்? போர் செய்தால் தானே இயலும்? எனவே, போர் செய்யப் புறப்பட்டான். சேர மன்னனுடன் போர் செய்தான்; வென்றான். சேரரது கொடியிலே வில் இருக்கும். அந்தக் கொடியை இறக்கினன். தனது மீன் கொடியை உயர்த்தினன். பிறகு கிழக்கே நோக்கினன். சோழ அரசர் மீது படை எடுத்தான்; போர் செய்தான்; வென்றான். சோழ அரசின் கொடியிலே புலி இருக்கும். புலிக் கொடியை இறக்கினன்; மீன் கொடியை உயர்த்தினன். இப்படியாகச் சேர அரசும், சோழ அரசும் பாண்டியன் குடைக்கீழ் வந்தன

இவ்விதம் பாண்டியன் பேரரசு கொண்டான். அவனுக்குப் பக்கபலமாக நின்றவர் யார்? ஆயர். பாண்டியனின் பேரரசு காத்தவர் ஆயர்.

அந்த ஆயர்குலப் பெண் ஒருத்தி; நல்ல அழகி; பருவம் எய்தியிருந்தாள். அவளைக் கண்டான் ஓர் இளைஞன்; ஆயர் குலத்தில் தோன்றியவன்; காதல் கொண்டான். இருவரும் இன்பம் மகிழ்ந்தனர்.

காதல் இன்பம்; களவு இன்பம். இது எவ்வளவு நாள் நடைபெறும்? சிறிது சிறிதாக அலர் ஆயிற்று. ஊரார் அறிந்தனர். ஏச்சும் பேச்சும் தோன்றின; மறைமுகமாகப் பேசுவதும், குத்திக் காட்டுவதும் மிகுந்தன.

என்ன செய்வாள் பாவம்! அவளால் பொறுக்க முடியவில்லை. வருந்தினாள்; மிக வருந்தினாள். கண்டாள் தோழி. அவளது துயர் போக்க விரும்பினாள். சென்றாள் அந்த இளைஞனிடம்.

"இன்னும் எவ்வளவு நாளைக்கு?" என்று கேட்டாள்.

"எது?" என்றான அவன்.

"இந்தக் களவு இன்பம்?" என்றாள்.

"ஏன்?" என்றான்.

"ஊரில் தலை காட்ட முடியவில்லை" என்றாள்.

"என்ன?" என்றான்.

"ஏச்சும் பேச்சும் தாங்க முடியவில்லை" என்றாள்.

"அப்படியா?" என்றான்.

"ஆம்! உன் காதலி மிக வருந்துகிறாள்" என்றாள்.

"ஊம். என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?" என்று கேட்டான்.

"ஊரார் அறிய அவளை மணந்து கொள்" என்றாள்.

"சரி" என்றான் அவன்.

பெண்ணின் பெற்றோரிடம் சென்றான். "உங்கள் பெண்ணை நான் கலியாணம் செய்து கொள்ள விரும்புகிறேன்" என்றான்.

"சரி; அப்படியே ஆகட்டும்," என்றனர்.

ஆயர்பாடித் தலைவனிடம் சென்றனர்; கூறினர்.

"ஏறு தழுவும் விளையாட்டுக்கு ஏற்பாடு செய்வோம்" என்றார் தலைவர்.

'மாப்பிள்ளைத் தேர்வு! ஏறு தழுவும் விளையாட்டு! வருவோரெல்லாம் வரலாம்' என்று பறை சாற்றச் செய்தார்.

பறை ஒலித்தது.

காளை விரட்டும் விழாவும் வந்தது. ஆயர்பாடி மக்கள் வந்து கூடினார்கள். பறை ஒலித்தது; காளைகள் முழங்கின.

தொழுவத்திலே பலவிதமான காளைகள் வந்து நின்றன. வெள்ளை நிறக் காளை! கருநிறக் காளை! கபில நிறக் காளை! இம் மாதிரி காளைகள் பலப் பல.

ஊர்த் தலைவர் வந்தார். மணம் முடிக்க இருக்கும் மகளிர் ஒவ்வொருவரையும் சுட்டிக் காட்டினார். பிறகு காளைகளையும் சுட்டிக் காட்டினார்.

"அதோ! அந்த வெள்ளைக் காளை இருக்கிறதே, பலராமன் மாதிரி! அதை அடக்குபவன் எவனோ அவனுக்கு இவள் மாலையிடுவாள்.

"இதோ இருக்கிறதே, கரு நிறக் காளை! இதன் கொம்பைப் பிடித்து நிறுத்தி வெற்றி காண்பவன் இந்த மங்கையை மணம் புரிவான்," என்று, இவ்வாறெல்லாம் கூறினார்.

குங்கிலியம், அகில் முதலிய புகைகள் எழுந்தன. பறைகள் முழங்கின. காளைகள் சினங்கொண்டு நின்றன.

வெண்ணிறக் காளையிடம் சென்றான் ஓர் இளைஞன். வேல் போல் இருந்தது, அக் காளையின் கொம்பு. அது கண்டு அவன் அஞ்சவில்லை. பாய்ந்தான். கண்டது கருநிறக் காளை ஒன்று. தன் இனம் தாக்கப்படுவது கண்டு சீறிற்று. அந்த இளைஞன் மீது பாய்ந்தது. கொம்புகளால் குத்தியது. அக் காட்சி எப்படியிருந்தது? பூரணச் சந்திரனைப் பாம்பு விழுங்கியபோது திருமால் வந்து விடுவித்ததுபோல் இருந்தது. அக் காட்சி கண்டு கலங்கினாள் அந்த இளைஞனின் காதலி.

மற்றோர் இளைஞன். உடல் வலிவு மிக்கவன். வந்தான். கபில நிறக் காளை மீது பாய்ந்தான். கட்டுக்கடங்காது நின்ற அக் காளையைக் கட்டிப் பிடித்துவிட்டான். இன்னும் கொஞ்சம்! முயன்றால் அது விழுந்திருக்கும். ஆனால் என்ன செய்வான்! பாவம்! பிடி நழுவியது. அதன் முன் வீழ்ந்து விட்டான்.

என்ன செய்தது காளை? வீழ்ந்தவனைத் தன் கொம்பால்

குத்திக் கொன்றதா? இல்லை; இல்லை. "நம்மை அடக்க வந்தவன் இவனல்லவா!" என்று சினங் கொண்டதா? பழி தீர்க்க எண்ணியதா? இல்லை; இல்லை. பேசாது அவ்விடம் விட்டுச் சென்றது. அது எப்படி இருந்தது?

வீரர் இருவர். போர் செய்கின்றனர். வாள் போர். கடும் போர். நீண்ட நேரம் நடக்கிறது. இருவருள் ஒருவன் கீழே விழுகிறான். அப்போது மற்றவன் போர் செய்வானோ? மாட்டான்.

அம்மாதிரிச் சென்றது காளை. அது கண்டு ஆரவாரம் செய்தனர் பலரும்.

அவன் எங்கே? அவன் வந்தான். காளையைக் கட்டி மடக்கினான். வெற்றி கொண்டான்.

விளையாட்டு முடிந்தது!

இனி என்ன? கூத்து; மகிழ்ச்சிக் கூத்து. குரவைக் கூத்து.

குரவைக் கூத்து நடக்கிறது. ஆடினாள்; பாடினாள். அவளை உற்று நோக்கினான் அவன்; கண்டாள் அவள். தோழியிடம் சொல்கிறாள்:

"அவன் பார்க்கிற பார்வையைப் பார்."

"ஆமாம்! அந்தக் காளையை வென்றுவிட்டேன். இனி நீ எனக்குரியவள் என்று சொல்வது போல் பார்க்கிறான்" என்றாள் அவள்.

"என்ன செருக்கு!" என்றாள்.

"காளையையும் அடக்கி விட்டான்; ஊரார் நாவையும் அடக்கி விட்டான்" என்றாள்.

பாண்டியனை வாழ்த்தி குரவைக் கூத்தை முடித்தனர்.

மலி திரை ஊர்ந்து தன் மண் கடல் வௌவலின்,
மெலிவு இன்றி, மேல் சென்று, மேவார் நாடு இடம்பட,
புலியொடு வில் நீக்கி, புகழ் பொறித்த கிளர் கெண்டை,
வலியினான் வணக்கிய, வாடாச் சீர்த் தென்னவன்
தொல் இசை நட்ட குடியொடு தோன்றிய
நல் இனத்து ஆயர், ஒருங்கு தொக்கு, எல்லாரும் -
வான் உற ஓங்கிய வயங்கு ஒளிர் பனைக்கொடிப்
பால் நிற வண்ணன் போல் பழி தீர்ந்த வெள்ளையும்,

பொரு முரண் மேம்பட்ட பொலம் புனே புகழ் நேமித்
திரு மறு மார்பன் போல் திறல் சான்ற காரியும்,
மிக்கு ஒளிர் தாழ் சடை மேவரும் பிறை நுதல்
முக்கண்ணான் உருவே போல் முரண் மிகு குராலும்,
மா கடல் கலக்குற மா கொன்ற மடங்காப் போர்
வேல் வல்லான் நிறனே போல் வெரு வந்த சேயும்,
ஆங்கு அப்
பொரு வரும் பண்பினவ்வையும், பிறவும் -
உருவப் பல் கொண்மூக் குழீஇயவை போல,
புரிபு புரிபு புகுத்தனர், தொழூஉ.

அவ் வழி, 'முள் எயிற்று ஏஎர் இவளைப் பெறும்,
இது ஓர்
வெள் ஏற்று எருத்து அடங்குவான்.

ஒள்ளிழை வாருறு கூந்தல் துயில் பெறும்,
வை மருப்பின்
காரி கதன் அஞ்சான் கொள்பவன் - ஈர்-அரி
வெரூஉப் பிணை மான் நோக்கின் நல்லாட்
பெறூஉம், இக்
குரூஉக் கண் கொலை ஏறு கொள்வான். - வரிக் குழை
வேய் உறழ் மென் தோள் துயில் பெறும்,
வெந் துப்பின்
சேஎய் சினன் அஞ்சான் சார்பவன்' - என்று ஆங்கு
அறைவனர், நல்லாரை, ஆயர் முறையினால்,
நாள்மீன் வாய் சூழ்ந்த மதி போல், மிடைமிசைப்
பேணி நிறுத்தார் அணி.

அவ் வழி, பறை எழுந்து இசைப்ப, பல்லவர் ஆர்ப்ப,
குறையா மைந்தர் கோள் எதிர் எடுத்த -
நறை வலம் செய விடா இறுத்தன ஏறு.
அவ் ஏற்றின்

மேல் நிலை மிகல் இகலின், மிடை கழிபு இழிபு,
மேற்சென்று,

வேல் நுதி புரை விறல் திறன் நுதி மருப்பின்
மாறு அஞ்சான்,
பால் நிற வெள்ளை எருத்தத்துப் பாய்ந்தானை
நோனாது குத்தும் இளங் காரித் தோற்றம் காண் -
பால் மதி சேர்ந்த அரவினைக் கோள் விடுக்கும்
நீல் நிற வண்ணனும் போன்ம்.

இரிபு எழுபு அதிர்பு அதிர்பு இகந்து உடன் பலர் நீங்க,
வரி பரிபு இறுபு இறுபு குடர் சோரக் குத்தி, தன்
கோடு அழியக் கொண்டானை ஆட்டித் திரிபு உழக்கும்
வாடா வெகுளி எழில் ஏறு - கண்டை, இஃது ஒன்று -
வெரு வரு தூமம் எடுப்ப, வெகுண்டு
திரிதரும் கொல் களிறும் போன்ம்.

தாள் எழு துணி பிணி இசை தவிர்பு இன்றித்
தலைச் சென்று,
தோள் வலி துணி பிணி, துறந்து இறந்து எய்தி,
மெய் சாய்ந்து,
கோள் வழுக்கித் தன் முன்னர் வீழ்ந்தான்மேல்
செல்லாது,
மீளும் புகர் ஏற்றுத் தோற்றம் காண் - மண்டு அமருள்,
வாள் அகப்பட்டானை, 'ஒவ்வான்' எனப் பெயரும்
மீளி மறவனும் போன்ம்.
ஆங்க, செறுத்து அறுத்து உழக்கி ஏற்று எதிர் நிற்ப,
மறுத்து மறுத்து மைந்தர் சார,
தடி குறை இறுபு இறுபு தாயின கிடப்ப,
இடி உறழ் இசையின் இயம் எழுந்து ஆர்ப்ப -
பாடு ஏற்றுக் கொள்பவர், பாய்ந்து மேல் ஊர்பவர்,
கோடு இடை நுழைபவர், கோள் சாற்றுபவரொடு -
புரிபு மேல் சென்ற நூற்றுவர் மடங்க,
வரி புனை வல்வில் ஐவர் அட்ட
பொரு களம் போலும், தொழூஉ.

தொழுவினுள் கொண்ட ஏறு எல்லாம் புலம் புக,
தண்டாச் சீர்,

வாங்கு எழில், நல்லாரும் மைந்தரும், மல்லல் ஊர்
ஆங்கண் அயர்வர், தழூஉ.

பாடுகம், வம்மின் - பொதுவன் கொலை ஏற்றுக்
கோடு குறி செய்த மார்பு.

நெற்றிச் சிவலை நிறை அழித்தான் நீள் மார்பில்,
செற்றார் கண் சாய, யான் சாராது அமைகல்லேன் ;
பெற்றத்தார் கவ்வை எடுப்ப, அது பெரிது
உற்றியாள், ஆயர் மகள்.

தோழீ இஇ! - ஒருக்கு நாம் ஆடும் குரவையுள், நம்மை
அருக்கினன் போல் நோக்கி, அல்லல் நோய் செய்தல்,
'குரூஉக் கண் கொலை ஏறு கொண்டேன், யான்'
என்னும்
தருக்கு அன்றோ - ஆயர் மகன் ?

நேரிழாய் ! கோள்' அரிதாக நிறுத்த கொலை ஏற்றுக்
காரி கதன் அஞ்சான் பாய்ந்த பொதுவற்கே,
ஆர்வுற்று, எமர், கொடை நேர்ந்தார் - அலர் எடுத்த
ஊரானரை உச்சி மிதித்து.
ஆங்கு,

தொல் கதிர்த் திகிரியாற் பரவுதும் - ஒல்கா
உரும் உறழ் முரசின் தென்னவற்கு
ஒரு மொழி கொள்க, இவ் உலகு உடன்! எனவே.

## 69. தருக்கும் செருக்கும்

அன்று அவளுடைய காதலன் ஏறு தழுவுகிறான். அவள் வந்திருக்கிறாள். பரணிலே அமர்ந்திருக்கிறாள். அவளுடைய காதலனும் வந்திருக்கிறான்.

பறை முழங்கிற்று. காளைகள் வெகுண்டன. இளைஞன் புகுந்தான். காளையை மடக்கினன். வெற்றி கண்டான்.

அவளுக்கு ஒரே மகிழ்ச்சி. மட்டற்ற மகிழ்ச்சி; உள்ளம் பூரித்தாள். தன்னை மறந்தாள். காளையுடன் நிற்கும் அவனையே பார்க்கிறாள்; கண் கொட்டாமல் பார்க்கிறாள்; பார்த்துக் கொண்டேயிருக்கிறாள்.

"ஏனடீ, அப்படிப் பார்க்கிறாய்! கண் இமையாமல் பார்க்கிறாயே! அவனைப் பார்த்த கண் இனி இமையாதோ!" என்றாள் தோழி.

அப்போதுதான் அவளுக்குச் சுய நினைவு வந்தது. சுற்று முற்றும் பார்த்தாள். அவளது உறவினர் சிலர் வரக் கண்டாள். அவர்களைக் கண்ட உடனே பழைய நினைவு ஒன்று வந்தது அவளுக்கு.

ஒரு நாள். அவள் தன் கூந்தலை விரித்து உலர்த்திக் கொண்டிருந்தாள். அப்போது இந்த உறவினர் அங்கே வந்தனர்.

"என்னடீ! மணக்கிறது!" என்றாள் ஒருத்தி.

"ஆமாம். முல்லை மணம் வீசுகிறது" என்றாள் இன்னொருத்தி.

"ஏனடி! எண்ணெய் மணம் வீசவேண்டிய கூந்தல் முல்லை மணம் வீசுகிறதே!" என்றாள் மற்றொருத்தி.

அவளைப் பார்த்துக் கண் சிமிட்டிச் சிரித்தனர்.

அந்த நிகழ்ச்சியை நினைவு கொண்டாள் அவள்.

"அன்று என்னவோ பேசினார்களே! இன்று என்னடி சொல்வார்கள். காதலன் முன் அடங்கிய காளைபோல் அடங்கிக் கிடப்பதைப் பார்" என்று சுடுதலாகக் கூறினாள் அவள்.

சிறிது நேரம் சென்றது. ஊரார் சிலர் வந்தனர்.

"அன்று, கண்ணிலே தீப்பொறி பறக்கப் பார்த்தார்களே! இப்பொழுது என்ன செய்வார்கள்!" என்று கூறிச் சிரித்தாள்.

அவ்விதம் பேசிக்கொண்டே வந்தாள். வழியிலே அவளது தாய் நின்று கொண்டிருந்தாள். தாயைக் கண்டும் காணாதவள் போல் சென்றாள். தாய் மீதும் கோபம் அவளுக்கு! அவன்மீது காதல் கொண்டது கண்டு அவளும் அவளைக் கடிந்தாள் அல்லவா! அதனால்.

"ஊரார்தான் என்னை ஏசினர். அது கேட்டு என் அம்மாவும் என்னை ஏசினாளே! இப்போது அவர்கள் என்ன செய்வார்

கள்?" என்று கூறினுள் அவள். அந்தச் சொல் தனது தாயின் காதிலே விழ வேண்டும் என்பது அவளது எண்ணம்.

"இவர்கள் எல்லாரும் இப்போது தலைகுனிய வேண்டியவர் தானே !" என்ருள்.

அந்த நேரத்திலே பறை ஒலி கேட்டது. என்ன என்று கவனித்தாள் அவள். அவனை, அவனுக்கு மணம் செய்விக்கத் தீர்மானித்து விட்டனராம் பெற்ருேர். அச் செய்தி பறை அறி விக்கப்பட்டது. கேட்டாள் அவள். 'கலகல' என்று சிரித்தாள்.

"ஏன்?" என்று கேட்டாள் தோழி.

"அவனைக் கண்ட அன்றே என் நெஞ்சு பறிகொடுத்து விட் டேன் நான். அவன் மனைவியாகி விட்டேன். இவர்கள் என் னடா,என்ருல், இப்போதுதான் புதிதாகச் சேதி சொல்கிருர்கள்!" என்ருள்.

அரைசு படக் கடந்து அட்டு, ஆற்றின் தந்த -
முரைசு கெழு முது குடி முரண் மிகு செல்வற்கு -
சீர் மிகு சிறப்பினேன் தொல் குடிக்கு உரித்து எனப்
பார் வளர், முத்தமொடு படு கடல் பயந்த
ஆர் கலி உவகையர் ஒருங்கு உடன் கூடி,
'தீது இன்று பொலிக!' எனத் தெய்வக் கடி அயர்மார்,
வீவு இல் குடிப் பின் இருங் குடி ஆயரும்,
தா இல் உள்ளமொடு துவன்றி, ஆய்பு உடன்,
வள் உருள் நேமியான் வாய் வைத்த வளை போலத்
தெள்ளிதின் விளங்கும் சுரி நெற்றிக் காரியும்,
ஒரு குழையவன் மார்பில் ஒண் தார் போல் ஒளி மிகப்
பொரு அறப் பொருந்திய செம் மறு வெள்ளையும்,
பெரும் பெயர்க் கணிச்சியோன் மணி மிடற்று
அணி போல
இரும் பிணர் எருத்தின் ஏந்து இமில் குராலும்,
அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரம் கண் ஏய்க்கும்
கணம் கொள் பல் பொறிக் கடுஞ் சினப் புகரும்,
வேல் வலான் உடைத் தாழ்ந்த விளங்கு வெண்
துகில் ஏய்ப்ப

வாலிது கிளர்ந்த வெண் காற் சேயும்,
கால முன்பின் பிறவும், சால
மடங்கலும், கணிச்சியும், காலனும், கூற்றும்,
தொடர்ந்து செல் அமையத்துத் துவன்று உயிர்
உணீஇய,
உடங்கு கொட்பன போல் புகுத்தனர், தொழூஉ.

அவ்வழி,

கார் எதிர் கலி ஒலி கடி இடி உருமின் இயம் கறங்க,
ஊர்பு எழு கிளர்பு உளர் புயல் மங்குலின் நறை பொங்க,
நேர் இதழ் நிரைநிரை நெறி வெறிக் கோதையர்
அணி நிற்ப,
சீர் கெழு சிலை நிலைச் செயிர் இகல் மிகுதியின், சினப்
பொதுவர்
தூர்பு எழு துதைபுதை துகள் விசும்பு உற எய்த,
ஆர்பு, உடன் பாய்ந்தார், அகத்து.

மருப்பில் கொண்டும், மார்பு உறத் தழீஇயும்,
எருத்திடை அடங்கியும், இமில் இறப் புல்லியும்,
தோள் இடைப் புகுதந்தும், துதைந்து பாடு ஏற்றும்,
நிரைபு மேல் சென்றாரை நீள் மருப்பு உறச் சாடி,
கொள இடம் கொள விடா நிறுத்தன, ஏறு.

கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்
குத்தி,
கொள்வார்ப் பெருஅக் குரூஉச் செகில் காணிகா -
செயிரின் குறை நாளால் பின் சென்று சாடி,
உயிர் உண்ணும் கூற்றமும் போன்ம்!

பாடு ஏற்றவரைப் படக் குத்தி, செங் காரிக்
கோடு எழுந்து ஆடும் கண மணி காணிகா
நகை சால் அவிழ் பதம் நோக்கி, நறவின்
முகை சூழும் தும்பியும் போன்ம்!

இடைப் பாய்ந்து எருத்தத்துக் கொண்டானோடு எய்தி,
மிடைப் பாயும் வெள் ஏறு கண்டைகா -
வாள் பொரு வானத்து, அரவின் வாய்க் கோட்பட்டுப்
போதரும் பால் மதியும் போன்ம்!

ஆங்க, ஏறும் பொதுவரும் மாறுற்று, மாறு
இரு பெரு வேந்தரும் இகலிக் கண்ணுற்ற
பொரு களம் போலும், தொழூஉ.

வெல் புகழ் உயர் நிலைத் தொல் இயல், துதை புதைத்
துளங்கு இமில்
நல் ஏறு கொண்ட, பொதுவன் முகன் நோக்கி,
பாடு இல, ஆய மகள் கண்.

நறுநுதால்! - என்கொல் - ஐங் கூந்தல் உளர,
சிறு முல்லை நாறியதற்குக் குறு மறுகி,
ஒல்லாது உடன்று, எமர் செய்தார், அவன் கொண்ட
கொல் ஏறு போலும் கதம்?

நெட்டிருங் கூந்தலாய்! கண்டை, இஃது ஓர் சொல் :

கோட்டினத்து ஆயர் மகனோடு யாம் பட்டதற்கு
எம் கண் எமரோ பொறுப்பர் ; பொறுதார்
தம் கண்பொடிவது எவன்?

ஒண்ணுதால்!

இன்ன உவகை பிறிது யாது - யாய் என்னைக்
கண்ணுடைக் கோலள் அலைத்ததற்கு, என்னை
மலர் அணி கண்ணிப் பொதுவனோடு எண்ணி,
அலர் செய்துவிட்டது இவ் ஊர்?

ஒன்றிப் புகர் இனத்து ஆய மகற்கு - ஒள்ளிழாய்! -
இன்று எவன், என்னை எமர் கொடுப்பது - அன்று,
அவன்
மிக்குத் தன்மேல் சென்ற செங் காரிக் கோட்டிடைப்

புக்கக்கால் புக்கது, என் நெஞ்சு ?
 என,

பாடு இமிழ் பரப்பகத்து அரவணை, அசைஇய
ஆடு கொள் நேமியாற் பரவுதும் - 'நாடு கொண்டு,
இன் இசை முரசின் பொருப்பன், மன்னி
அமை வரல் அருவி ஆர்க்கும்
இமையத்து உம்பரும் விளங்குக !' எனவே.

## '0. ஆயர் வீரமும் ஆய்ச்சியர் காதலும்

ஆயர்களின் தொழில் என்ன? ஆடு மேய்த்தல்; மாடு மேய்த்தல். ஆடு மாடுகளுக்கு வேண்டிய புல் ஓரிடத்திலேயே கிடைக்குமா? கிடைக்காது. எவ்வளவுதான் புல் இருந்தாலும் போதாது. எனவே, புதிய புதிய மேய்ச்சல் நிலங்கள் தேடிப் போகவேண்டி வரும்.

எனவே, ஆயர்கள் என்ன செய்வார்கள்? கூட்டம் கூட்டமாகச் செல்வார்கள். தங்கள் ஆடு மாடுகளையும் கூட்டம் கூட்டமாக ஓட்டிச் செல்வார்கள்.

செல்லும் இடங்களில் காட்டு விலங்குகளால் ஆபத்து ஏற்படுமே. மாடுகளுக்குத் தீங்கு நேருமே! அதற்கு என்ன செய்வது? எல்லாரும் ஒன்று கூடித் தங்கள் மந்தைகளைக் காத்திருப்பார்கள்.

ஆடு மாடுகளை மேய்க்கவேண்டுமே என்பதற்காகத் தொலை தூரம் போய்விட மாட்டார்கள். வீடு சென்று திரும்பக் கூடிய தூரம்தான் செல்வார்கள். மந்தையிலே கறக்கும் பாலை வீட்டுக்குக் கொண்டு வந்து கொடுத்துச் செல்வார்கள். சில சமயங்களில் ஆயர் பெண்கள் மந்தைக்குச் சென்று, குடங்களில் பால் கொண்டு வருதலும் உண்டு.

பாண்டிய நாட்டிலே இத்தகைய ஆயர் பலர் வாழ்ந்திருந்தனர்.

ஒரு நாள் ஓர் ஆயர்பாடியிலே வாழ்ந்த சிலர் ஒன்று கூடினர். தங்கள் ஆடு மாடுகளையும் ஒன்று கூட்டினர். வளம் பெற்ற புல் வெளி நாடிப் புறப்பட்டனர்.

பால் குடங்கள்! அவை வைக்கும் உறிகள்! சூட்டுக்கோல்! அடங்காத கன்று காலிகளுக்கு மாட்டும் தொழு! இவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டனர்; குழல் எடுத்தனர்; குரல் கொடுத்தனர். கால்நடைகளை ஓட்டிச் சென்றனர்.

செல்லும் வழியிலே என்ன நடந்தது? காளைகளில் சில, புழுதியை எழுப்பின. எப்படி? கால்களால்! மற்றும் சில, கொம்புகளால் மண்ணைக் குத்தின; புழுதியை எழுப்பின. வேறு சில ஒன்றுடன் ஒன்று எதிர்த்தன; முறைத்தன; போரிட்டன.

அவ்விதம் காளைகள் போர் செய்ததால் என்ன ஆயிற்று? ஒன்றன் கொம்பு மற்றொன்றின் உடம்பில் குத்தியது. குத்தியதால் என்ன ஏற்பட்டது? புண்! புண்! உடம்பு முழுதும் புண்! அவற்றிலிருந்து ரத்தம் கசிந்தது.

சில நாட்கள் கழிந்தன. சென்ற ஆயர் திரும்பி வந்தனர். அவரவர் தம் ஆடு மாடுகளைப் பிரித்துக் கொண்டனர்.

அப்போது காளைகள் என்ன செய்தன? வெகுண்டன. வெகுண்டு அவர் மீது பாய்ந்தன; கொம்புகளால் குத்தின. உடலிலே ரத்தம் வந்தது; கை வழுக்கியது.

ஆயர்கள் அதைக் கண்டு கலங்கினார்களா? இல்லை. கீழே குனிந்து மண்ணை எடுத்தார்கள். கையிலே தேய்த்துக் கொண்டார்கள். காளைகளின் மீது பாய்ந்தார்கள். அவற்றை அடக்கினார்கள்; ஓட்டினார்கள். எப்படி? கடல் நீரிலே கட்டு மரத்தின் மீது தாவி ஏறிச்செல்லும் பரதவர்போல.

காளைகள் குத்தியதால் சரிந்த குடல்களில் சிலவற்றைப் பருந்துகள் தூக்கிச் சென்றன. சென்று என்ன செய்தன? மரக் கிளைகளில் விட்டன. அவை அங்கேயே தொங்கின. அக் காட்சி எப்படியிருந்தது?

மரத்தடியிலே உள்ள சாமிகளைக் கும்பிடுவோர் அக் கிளைகளிலே மலர் மாலைகளைத் தொங்க விடுவதுபோல் இருந்தது.

இவ்வாறு ஆடு மாடுகளை மேய்த்துக்கொண்டு ஆயர்கள் வந்து விட்டார்கள் அல்லவா? பெண்களுக்கு மகிழ்ச்சி. மகிழ்ச்சியினால் குரவைக் கூத்து ஆடினார்கள்.

ஒருத்தி பாடுகிறாள் :

"என் காதலரைக் கட்டி அணைத்துக்கொள்வேன். அவர் மார்பிலே காளைகள் குத்தியதால் ஏற்பட்ட புண் ஆறும்படியாக எனது மார்பை அவர்தம் மார்புடன் இணைத்து இறுகத் தழுவிக் கொள்வேன்."

மற்றொருத்தி சொல்கிறாள் :

"காலையிலிருந்து தயிர் கடைந்தேன். அதனால் வெண்ணெய்யும் தயிரும் புள்ளி புள்ளியாக என் மார்பிலே தெறித்துக் கிடக்கின்றன. காளைகள் குத்திடதால் என் காதலர் மார்பிலே ரத்தம் சிந்தியிருக்கின்றன. இவை இரண்டும் ஒன்று கலக்கும்படியாக இறுகத் தழுவிக் கொள்வேன்."

மற்றொருத்தி பாடுகிறாள் :

"காளையின் கொம்பு கண்டு ஆயன் அஞ்சுவதுண்டோ? இல்லை. அப்படி அஞ்சுபவன் மீது காதல் கொள்ளும் ஆயர் பெண்ணும் இருப்பாளோ? இருக்கமாட்டாள்."

"அடியே! எனக்கு ஓர் ஆசை. மோர் விற்க வேண்டும் என்ற ஆசை. அப்படி மோர் விற்று வரும்போது என்னைப் பார்க்கும் ஊரார் என்ன சொல்வார்? பொல்லாத காளையை அடக்கிய ஆயன் மனைவி என்று சொல்வார். என் காது குளிரக் கேட்கவேணடும் அதை" என்றாள் பிறிது ஒருத்தி.

"போதுமடி! நிறுத்துங்கள். வாழ்த்துப் பாடுங்கள்" என்றாள் முதிய பெண்மணி ஒருத்தி.

குரவைக் கூத்து முடிந்தது. எல்லாரும் வீடு சென்றனர்.

கழுவொடு சுடு படை சுருக்கிய தோற்கண்,
இமிழ் இசை மண்டை உறியொடு, தூக்கி,
ஒழுகிய கொன்றைத் தீம் குழல் முரற்சியர்,
வழூஉச் சொற் கோவலர், தத்தம் இன நிரை
பொழுதொடு தோன்றிய கார் நனை வியன் புலத்தார்.

அவ்வழி,

நீறு எடுப்பவை, நிலம் சாடுபவை,
மாறு ஏற்றுச் சிலைப்பவை, மண்டிப் பாய்பவையாய் -
துளங்கு இமில் நல் ஏற்றினம் பல - களம் புகும்
மள்ளர் வனப்பு ஒத்தன.

தாக்குபு தம்முள் பெயர்த்து ஒற்றி, எவ் வாயும்,
வை வாய் மருப்பினுன் மாருது குத்தலின்,
மெய் வார் குருதிய, ஏறு எல்லாம் - பெய் காலைக்
கொண்டல் நிரை ஒத்தன.

அவ் ஏற்றை,

பிரிவு கொண்டு, இடைப் போக்கி, இனத்தோடு
புனத்து ஏற்றி,
இரு திறனு நீக்கும் பொதுவர் -
உரு கெழு மா நிலம் இயற்றுவான்,
விரி திரை நீக்குவான், வியன் குறிப்பு - ஒத்தனர்.

அவரை, கழல, உழக்கி, எதிர் சென்று சாடி,
அழல் வாய் மருப்பினுல் குத்தி, உழலை
மரத்தைப் போல் தொட்டன - ஏறு.

தொட்ட தம், புண் வார் குருதியால் கை பிசைந்து,
மெய் திமிரி,
தங்கார் - பொதுவர் - கடலுள் பரதவர்
அம்பி ஊர்ந்தாங்கு, ஊர்ந்தார், ஏறு.

ஏறு தம், கோலம் செய் மருப்பினுல் தோண்டிய
வரிக் குடர்
ஞாலம் கொண்டு எழூஉம் பருந்தின் வாய் வழீஇ,
ஆலும் கடம்பும் அணிமார் விலங்கிட்ட
மாலை போல், தூங்கும் சினை.

ஆங்கு,

தம் புல ஏறு பரத்தர உய்த்த தம்
அன்பு உறு காதலர் கை பிணைந்து, ஆய்ச்சியர்
இன்புற்று அயர்வர், தழூஉ.

முயங்கிப் பொதிவேம்; முயங்கிப் பொதிவேம்;
முலை வேதின் ஒற்றி, முயங்கிப் பொதிவேம் -
கொலை ஏறு சாடிய புண்ணை - எம் கேளே!

பல் ஊழ் தயிர் கடையத் தாஅய் புள்ளி மேல்
கொல் ஏறு கொண்டான் குருதி மயக்குறப்
புல்லல் எம் தோளிற்கு அணியோ? - எம் கேளே!

ஆங்கு, போர் ஏற்று அருந் தலை அஞ்சலும், ஆய்ச்சியர்
காரிகைத் தோள் காமுறுதலும் இவ் இரண்டும்
ஓராங்குச் சேறல் இலவோ? - எம் கேளே!

கொல் ஏறு கொண்டான், இவள் கேள்வன்' என்று, ஊரார்
சொல்லும் சொல் கேளா, அலை மாறி யாம் வரும்
செல்வம் எம் கேள்வன் தருமோ? - எம் கேளே!

ஆங்க,

அருந் தலை ஏற்றொடு காதலர்ப் பேணி,
சுரும்பு இமிர் கானம் நாம் பாடினம் பரவுதும்;
ஏற்றவர் புலம் கெடத் திறை கொண்டு,
மாற்றாரைக் கடக்க, எம் மறம் கெழு கோவே!

## 71. மாலையும் மங்கையும்

"பயமாக இருக்கிறதே!" என்றாள் அவள்.
"ஏன்?" என்று கேட்டாள் தோழி.
"அந்த மலரை..."
"எந்த மலரை...?"
"அதுதான்......வந்து விழுந்ததே! அந்த மலரை...."
"எங்கிருந்து வந்து விழுந்தது? யார் வீசிய மலர்?"
"அவனது குடுமியில் சுற்றியிருந்த மலர்."
"குடுமியில் சுற்றிய மலரா? யாருடைய குடுமியில்?"
"என் காதலன்......"
"ஊம்......அது எப்படி வந்து விழுந்தது?"
"ஏறு தழுவியபோது அந்தக் காளை தன் கொம்பால் தூக்கி எறிந்தது..."

"அது உன்மீது வந்து விழுந்ததோ?"

"ஆமாம்."

"பேஷ்! பேஷ்! அதிர்ஷ்டம்தான்......என்ன செய்தாய் அதை?"

"எடுத்து என் தலையில் சூடிக்கொண்டேன்"—அவள் முகம் நகை அரும்பியது.

"சூடிக் கொண்டாயா?" என்று கூறிக்கொண்டே தலை யசைத்தாள் அவள்; சிரித்தாள் 'கல கல' வென்று.

அவளும் சிரித்தாள். சிறிது நேரம் மௌனம்.

"அதை நினைத்தால்தான் பயமாயிருக்கிறது" என்றாள் அவள்.

"சீ! என்னடி பயம்?" என்றாள் தோழி.

"ஒருகால் அம்மா இதைப் பார்த்திருப்பாளோ..."

"இருக்கட்டுமே! இருந்தால் என்ன?"

"அக்கம் பக்கத்தில் உள்ளவர் கவனித்திருப்பாரோ?"

"கவனிக்கட்டுமே! அதனால் என்ன?"

"பயமாயிருக்கே."

"சீ. என்ன பயம்? மாலை யாருடையது? நீ மணந்து கொள்ளப்போகும் காதலனுடையதுதானே! வேறு எவருடையதும் இல்லையே!"

"இல்லை."

"அப்புறம் ஏன் அஞ்சுகிறாய்?"

"'ஏண்டி! பூ என்றால் எங்கிருந்து வந்தாலும் சூடிக்கொள் வதா? இதைத்தான் சூடிக்கொள்ளலாம்; இதைச் சூடிக்கொள்ள லாகாது என்பது தெரிய வேண்டாமோ' என்று அம்மா கோபித் தால் என்ன செய்வேன்!"

"அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம். சும்மா இரு."

"இல்லை. எனக்குப் பயமாக இருக்கிறதே! ஏதாவது ஒரு வழி சொல்லமாட்டாயா?" என்று கெஞ்சினாள் அவள் தோழியிடம்.

"அடி போடி! பயந்தாங்குளிப் பெண்ணே! அவனும் ஆயன். நீயும் ஆய்ச்சி. அவனும் உன்னைக் காதலிக்கிறான். நீயும் அவனைக் காதலிக்கிறாய். இதிலே என்ன இருக்கிறது தாய் கோபிக்க?" என்று கேட்டாள் தோழி.

•

"என்னவோ! என் நெஞ்சு 'பக் பக்' என்கிறது" என்றாள்.

"கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை என்பதுபோல் இருக்கிறதே, நீ சொல்வது. காதலும் செய்யவேணும் என்கிறாய்; தாயும் கோபிக்கக் கூடாது என்கிறாய். இது எப்படி இயலும்? காதல் செய்ய ஆசையிருக்கிறதா? அம்மாவைக் கண்டு அஞ்சாதே! அம்மாவுக்கு அடங்கி நடக்க விருப்பமா? காதல் கீதல் என்று எதுவும் பேசாதே!" என்று சிறிது சூடாகக் கூறினாள் தோழி.

கேட்டாள் அவள்; கண்ணீர் சொரிந்தாள்.

தோழிக்கு இரக்கம் வந்துவிட்டது. அவளைத் தழுவிக் கொண்டாள்; கண்ணீரைத் துடைத்தாள்.

"போடி அசடே! உன்னைப்போல பித்துக்குளியை நான் பார்த்ததே இல்லை. அந்த மலர் மாலை வந்து விழுந்தது உன் பெற்றோருக்குத் தெரியாது என்று நினைக்கிறாயா? தெரியும்; தெரியும்... .."

"தெரியுமா ?......" என்றாள் அவள்.

"தெரியுமடி; தெரியும்!"

"அப்படியானால் நிச்சயம் கோபம் கொண்டிருப்பார்களே!"

"அதுதான் இல்லை!"

"ஊம்."

"இவன்தான் உன் கணவன் என்று திருமாலே நேர்நின்று காட்டியதாக எண்ணிவிட்டார்கள்."

"அப்படியா?"

"ஆமாம்."

"அப்புறம்?"

"அப்புறம் என்ன? அவனுக்கே உன்னை மணம் செய்து கொடுக்கத் தீர்மானித்துவிட்டார்கள்."

கேட்டாள் அவள். துள்ளிக் குதித்தாள், மகிழ்ச்சியினால்.

எல்லா! இஃது ஒன்று கூறு - குறும்பு இவர்
புல்லினத்தார்க்கும், குடம் சுட்டவர்க்கும், 'எம்
கொல் ஏறு கோடல் குறை' என, கோவினத்தார்
பல் ஏறு பெய்தார் தொழூஉ.

தொழுவத்து,

சில்லைச் செவி மறைக் கொண்டவன் சென்னிக் குவி
முல்லைக்
கோட்டம் காழ் கோட்டின் எடுத்துக்கொண்டு ஆட்டிய
ஏழை இரும் புகர் பொங்க, அப் பூ வந்து என்
கூழையுள் வீழ்ந்தன்று மன்.

அதனை, கெடுத்தது பெற்றார் போல், கொண்டுயான்
முடித்தது
கேட்டனள், என்பவோ, யாய் ?

கேட்டால், எவன் செய்ய வேண்டுமோ ? - மற்று,
இகா !
அவன் கண்ணி அன்றோ, அது ?

'பெய் போது அறியாத் தன் கூழையுள் ஏதிலான்
கை புனை கண்ணி முடித்தாள், என்று' யாய் கேட்பின்,
செய்வது இலாகுமோ மற்று ?

எல்லாத் தவறும் அறும்.

ஓஒ ! அஃது அறுமாறு ?

'ஆயர் மகன் ஆயின், ஆய மகள் நீ ஆயின்,
நின் வெய்யன் ஆயின், அவன் வெய்யை நீ ஆயின்,
அன்னை நோதக்கதோ இல்லைமன்' - 'நின் நெஞ்சம்,
அன்னை நெஞ்சு, ஆகப் பெறின்.'
அன்னையோ?

ஆயர் மகனையும் காதலை, கைம்மிக
ஞாயையும் அஞ்சுதி ஆயின், அரிதுஅரோ—
நீ உற்ற நோய்க்கு மருந்து.

மருந்து இன்று யான் உற்ற துயர் ஆயின் - எல்லா!-
வருந்துவேன் அல்லனோ, யான் ?

வருந்தாதி—

மண்ணி மாசு அற்ற நின் கூழையுள் ஏற அவன்
கண்ணி தந்திட்டது எனக் கேட்டு, 'திண்ணிதா,
தெய்வ மால், காட்டிற்று இவட்கு' என, நின்னை அப்
பொய் இல் பொதுவற்கு அடை சூழ்ந்தார்-தந்தையோடு
ஐயன்மார் எல்லாம் ஒருங்கு.

## 72. மோரும் மோகமும்

**மோர்** விற்பவள் அவள். மோர் விற்று விட்டு வெறுங் கூடையைத் தலையிலே வைத்து வந்து கொண்டிருந்தாள்.

நல்ல அழகி; கரு கரு என்ற கூந்தல்; 'மினு மினு' என்ற மேனி. மாவடுவை இரண்டாகப் பிளந்து வைத்தாற்போன்ற விழிகள்! முல்லை அரும்புப் பல் வரிசை; பிறை போன்ற நெற்றி; சிறு இடை; சிறு கால்கள். 'சிலுக்கு சிலிக்'கென்று நடந்துவந்தாள்.

அவளை வழி மறித்தான் அவன்.

அவனோ —

ஆயர்குல இளைஞன். மாடு மேய்க்கிறான்; மேயும் மாடுகளைக் காத்து நிற்கிறான்; கோல் ஊன்றி நிற்கிறான்.

கோல் ஊன்றி நின்றவன் என்ன கண்டான்? தூரத்திலே அவள் வருவது கண்டான்.

'வரட்டும்' என்று எண்ணி நின்றான்.

வந்தாள்; வழியே சென்றாள். சென்றவளை மறித்தான்; நிறுத்தினான்.

"ஏய்! என்னை ஏன் வழி மறிக்கிறாய்?" என்றாள்.

"என் மீது ஏன் போர் தொடுக்கிறாய்?" என்றான்.

"நானா போர் தொடுத்தேன்?"

"நீ அல்ல. உன் கண்; உனது முகம்; உனது இடை; உனது நகை; உனது நடை; உனது தோள்!"

"எது, அடுக்கு மொழி பேசுகிறாய்?"

"ஆம்! இவ்வளவு படைகளையும் என் மீது ஏவி விட்டாய்; பேசாது போகிறாய். அதனால் வழி மறித்தேன்."

"அப்படியா?"

"ஆம்! அப்படித்தான். அந்தக் காமனே கலங்கும் கட்டழகி, நீ! ஏழை இடையன் எம்மாத்திரமடி!"

"ஊஹூம்!"

"அடி! உன் படைகள் என்னைப் படுத்தும் பாட்டை என்ன என்று சொல்வேன்! பாண்டியனின் படைகள் எதிரியை வதைத்து உயிர் குடிப்பதுபோல், என்னை வாட்டுகின்றனவே! வதைக்கின்றனவே!"

"வாட்டுதா...வதைக்குதா?" என்று கூறிச் சிரித்தாள் அவள்.

"அடி! உனக்கு நான் என்ன பிழை செய்தேன்! என்னை ஏன் இப்படி வாட்டுகிறாய்?"

"ஏய்! சும்மா இருக்க முடியவில்லையா உனக்கு!"

"முடியவில்லையே!"

"எப்படி முடியும்? நீ உண்மையான இடையனாயிருந்தால் முடியும்."

"ஐயையோ! நான் இடையன்தானே! உண்மையான இடையன்!"

"இடையனின் தொழில் என்ன? ஒழுங்காக மாடு மேய்ப்பது. அதைக் காணோம்! வழியிலே போகும் மங்கைகளையெல்லாம் வம்பு செய்கிறாய்..."

"நானா வம்பு செய்தேன்? நீ அல்லவா வம்பு செய்கிறாய். உன் விழி வம்புக்கிழுக்கிறது என்னை."

"நான் இடைப் பெண். மோர் விற்பது எங்கள் தொழில். நான் எங்கள் குலத் தொழிலைச் செய்கிறேன். அப்படி வரும் என்னை ஏன் வீணாகப் பேசுகிறாய்?"

"அப்பா! அப்பா! ரொம்பப் பொல்லாதவள் நீ. உன்னுடன் பேசி வெல்ல முடியாது. இனி நான் பேசவில்லை. ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. வாய் திறவேன்," என்றான்.

"சரி. ரொம்ப நல்லது. நான் போகிறேன்" என்று புறப்பட்டாள்.

"போக விடுவேனா?" என்றான். அவளை மறித்து நிறுத்தினான்.

"நீதான் பேசமாட்டேன் என்றாயே!"

"பேச மாட்டேன் என்றது உண்மை. ஆனால் 'நீ, போ' என்று சொன்னேனா? இல்லையே!" என்றான்.

"ஏய்! நான் என்ன குழந்தையா, வழியிலே யார் எது சொன்னாலும் கேட்டுக் கொண்டிருக்க? வயது வந்தவள் அல்லவா? என் மோர்க் கூடையைப் பிடித்துக்கொண்டு என்ன என்னவோ கேட்கிறாயே!" என்று சீறினாள் அவள்.

இப்போது இடையனுக்குத் துணிவு வந்து விட்டது. அவள் இணங்குவாள் என்பது அறிந்தான். எனவே, அவள் சீற்றம் கண்டு அஞ்சவில்லை. அது பொய்ச் சீற்றம் என்று கண்டு கொண்டான். இன்னும் சிறிது சரசமாகவே பேசுகிறான்:

"என்ன கேட்கிறேன்?" என்றான்.

"கடன் கொடுத்தவர் மாதிரி அல்லவா கூடையைப் பிடித்து இழுத்துக் கேட்கிறாய்!" என்றாள்.

"கடனா......? என்னையே கொடுத்து விட்டேனே உனக்கு! முல்லை முறுவல் அழகி! மானுருட்டும் கண் அழகி! உன் வனப்பை நான் பாராட்டாவிடில் வேறு யாரடி பாராட்டப் போகிறார்? அடி கள்ளி! அன்று காட்டாற்றின் கரையிலே என்ன நடந்தது! மாவடு பிளந்தாற் போன்ற உன் கண்களால் நோக்கினாய்! அகல விழித்து விழித்து நோக்கினாய்! என் உள்ளத்தை உனதாகக் கவர்ந்து சென்றாய்! என் நெஞ்சை அடிமை கொண்டாய்! இதய பீடத்தில் ஏறி அமர்ந்து கொண்டாய்! அவ்விதமிருந்தும் ஒன்றும் தெரியாதவள் போல நடிக்கிறாயே!"

"உன் நெஞ்சை அடிமை கொள்ள என்னால் முடியுமா? அவ்விதம் கொள்வதால் எனக்கென்ன பயன்? எனக்கு என்ன செய்யும் உன் நெஞ்சு? கழனியிலே பயிர் செய்யும் என் அண்ணன்மாருக்குச் சோறு கொண்டு போய்க் கொடுக்குமா?" என்றாள் அவள்.

"கொடுக்கும்" என்றான்.

"மாடு மேய்க்கும் என் தந்தைக்குக் கறவைக் கலயம் கொண்டு செல்லுமா?"

"செல்லும்; செல்லும்."

"கன்று காலிகளை மேய்க்குமா?"

"மேய்க்கும்; மேய்க்கும்."

"காத்திருக்கும் என் தாயை வீட்டுக்கு அனுப்புமா?

"அனுப்பும்; அனுப்பும்."

"எனக்குப் பதிலாக அங்கே கன்றுகளுக்குக் காவல் இருக்குமா?"

"இருக்கும்; இருக்கும்."

"அப்படியானால் சரி." என்று சொல்லி ,மெல்ல நடந்தாள்.

"எங்கே போகிறாய்?" என்றான்.

"வீட்டுக்கு" என்றாள்.

"வீடு என்ன-ரொம்ப தூரமோ! இதோதானே இருக்கிறது! அங்கே மோர் கடைவது இங்கே கேட்குமே!"

"இருந்தாலும் போகவேண்டாமா?"

"இந்த வெயில் நேரத்திலே, வீட்டுக்குப் போய் என்ன செய்வாய்? நடந்து போக வேணுமே! வெய்யில் தாங்க முடியாது. கால் கொப்பளித்துப் போகும். அதோ பார்! சோலை! அங்கே போகலாம், வா! நிழலில் தங்கி இருக்கலாம். பெண் யானை படுத்து உறங்குவதுபோல் இருக்கிறதே, அந்தப் பாறைக்குப் போகலாம். பனை நுங்கு போன்றிருக்கும் சுனை! அச் சுனையிலே நீந்தி விளையாடலாம் வா! மலர்களைப் பறித்துத் தருகிறேன். சூடிக் கொள்! மகிழ்ந்து விளையாடலாம். மாலையில் வீடு போகலாம், வா!" என்று மெதுவாக அழைத்தான்.

அவளுக்கு விருப்பம்தான். இருந்தாலும் இன்னும் சிறிது பேச விரும்பினாள்.

"தினமும் இந்த வேலைதானோ உனக்கு?"

"இல்லையில்லை."

"உன்னுடைய பசப்பு மொழிகளில் மயங்கிய பெண்கள் எவ்வளவு பேரோ?"

"அப்படி எவருமில்லை."

"ஏன்! எவ்வளவோ பேர் தினமும் இந்த வழியாகப் போகவில்லையா?"

"போகிறார்கள்."

"நீ மாடு மேய்க்கிறாய் அல்லவா?"

"ஆமாம்."

"மந்தையிலே என்ன காண்கிறாய்?"

"மாடு காண்கிறேன்."

"அது அல்ல; ஒரு காளை, எவ்வளவு பசுவின் பின் ஓடித் திரிகிறது? பல பசுக்களின் பின் அல்லவா? அந்த இயல்புதான் உனக்கும் இருக்கும்?"

"சீச்சீ!"

"ஆமாம்! இவருக்கு ஒண்ணுமே தெரியாது.. விழித்திருக்கிற போதே தட்டிக் கொண்டு போகிறவராச்சே!" என்றாள்.

"பார்த்தேன்" என்றான்.

"யாரை?" என்றாள்.

"பெண்களை" என்றான்.

"உம். அப்படிச் சொல்லு. எவ்வளவு பேரை?"

"பலரை."

"பார்த்தியா? என்ன கண்டாய்?"

"உன் பேரழகை எவரிடமும் காணவில்லை."

"நிஜமாகவா?"

"ஆம்! நிஜம்! கொல்லும் விழி! கூரிய பல்! அன்று கொய்த மாந்தளிர் போன்ற மேனி! இந்த அழகு எவரிடமும் இல்லையடி, இந்த மண்ணுலகில்! இது கண்டேன்; கண்டு கொண்டேன்; காதல் கொண்டேன்; கருத்திலே பிழை ஏதுமில்லையடி, பெண்ணே! பேரின்பப் பேரழகே! சத்தியமாகச் சொல்கிறேன். திருமால் அறியச் சொல்கிறேனடி! நீ நம்பு" என்றான்.

அவளது மனம் இளகிவிட்டது.

"அப்படியானால் ஒன்று சொல்கிறேன். கேள்" என்றாள்.

"சொல்லு" என்றான்.

"சாயங்காலம், வா."

"எங்கே?"

"எங்கள் ஆயர்பாடிக்கு"

"வருகிறேன். எல்லோரும் இருப்பார்களே!"

"குரவைக் கூத்துக்கு எல்லாரும் போயிருப்பார்கள். அதுவே சரியான சமயம்."

"எங்கே வந்து இருக்க?"

"எங்கள் தோட்டத்திலே. காஞ்சி மரத்தின் அருகிலே."

"சரி. நான் வருகிறேன். ஏமாற்றி விடாதே."

"கட்டாயம் வருவேன். ஆனால் நீ யாருக்கும் தெரியாமல் வா. மறைவாக வா."

இகல் வேந்தன் சேனை இறுத்த வாய் போல -
அகல் அல்குல், தோள், கண், என மூவழிப் பெருகி,
நுதல், அடி, நுசுப்பு, என மூவழிச் சிறுகி,
கவலையால் காமனும் படை விடு வனப்பினோடு,
அகலாங்கண் அளை மாறி, அலமந்து, பெயருங்கால்,
'நகை வல்லேன் யான்' என்று - என் உயிரோடு படை தொட்ட
இகலாட்டி! நின்னை எவன் பிழைத்தேன், எல்லா! யான்?

அஃது அவலம் அன்று மன.

ஆயர் எமர் ஆனால், ஆய்த்தியேம் யாம், மிக;
காயாம்பூங் கண்ணிக் கருந் துவர் ஆடையை,
மேயும் நிரை முன்னர்க் கோல் ஊன்றி நின்றாய், ஓர்
ஆயனை அல்லை; பிறவோ அமரருள்
ஞாயிற்றுப் புத்தேள் மகன்?

அதனால் வாய்வாளேன் :

'முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன
பல்லும், பணைத் தோளும், பேர் அமர் உண்கண்ணும்,
நல்லேன், யான்' என்று, நலத்தகை நம்பிய
சொல்லாட்டி! நின்னொடு சொல் ஆற்றுகிற்பார் யார்?

சொல்லாதி.

'நின்னைத் தகைத்தனென்.'—'அல்லல் காண்மன்.

மண்டாத கூறி, மழ குழக்கு ஆகின்றே,
கண்ட பொழுதே கடவரைப் போல, நீ
பண்டம் வினைய படிற்றால் தொடீஇய, நிற்
கொண்டது எவன் - எல்லா! - யான்?'

கொண்டது :

அளை மாறிப் பெயர்தருவாய்! - அறிதியோ? -
அஞ் ஞான்று,

தளவ மலர் ததைந்தது ஓர் கானச் சிற்றாற்று அயல்,
இள மாங்காய் போழ்ந்தன்ன கண்ணினால்,
என் நெஞ்சம்
களமாக் கொண்டு ஆண்டாய்; ஓர் கள்வியை
அல்லையோ ?

**நி**ன் நெஞ்சம் களமாக்கொண்டு யாம் ஆள, எமக்கு
எவன் எளிதாகும் ?
புனத்துளான் என்னைக்குப் புகா உய்த்துக்
கொடுப்பதோ ?
இனத்துளான் எந்தைக்குக் கலத்தொடு செல்வதோ?
தினைக்காலுள் யாய் விட்ட கன்று மேய்க்கிற்பதோ?

**அ**னைத்து ஆக.

**வெ**ண்ணெய்த் தெழி கேட்கும் அண்மையால்,
சேய்த்து அன்றி,
அண்ணணித்து ஊர் ஆயின், நன்பகல் போழ்துஆயின்,
கண் நோக்கு ஒழிக்கும் கவின் பெறு பெண் நீர்மை
மயில் எருத்து வண்ணத்து மாயோய்! மற்று இன்ன
வெயிலொடு, எவன், விரைந்து சேறி? உதுக் காண் :
பிடி துஞ்சு அன்ன அறை மேல, நுங்கின்
தடி கண் புரையும் குறுஞ் சுனை ஆடி,
பனிப் பூந் தளவொடு முல்லை பறித்து,
தனி, காயாந் தண் பொழில், எம்மொடு வைகி,
பனிப் படச் செல்வாய், நும் ஊர்க்கு.

**இ**னிச் செல்வேம், யாம்.

**மா** மருண்டன்ன மழைக் கண் சிற்றாய்த்தியர்
நீ மருட்டும் சொற்கண் மருள்வார்க்கு உரை, அவை;
ஆ முனியா ஏறு போல், வைகல், பதின்மரைக்
காமுற்றுச் செல்வாய்; ஓர் கட்குத்திக் கள்வனை;
நீ எவன் செய்தி, பிறர்க்கு?

**யா**ம் எவன் செய்தும், நினக்கு?

கொலை உண்கண், கூர் எயிற்று, கொய் தளிர் மேனி,
இனை வனப்பின், மாயோய்! நின்னின் சிறந்தார்
நில உலகத்து இன்மை தெளி; நீ வருதி;
மலையொடு மார்பு அமைந்த செல்வன் அடியைத்
தலையினல் தொட்டு உற்றேன், சூள்.

ஆங்கு உணரார் நேர்ப; அது பொய்ப்பாய் நீ; ஆயின்—
தேம் கொள் பொருப்பன் சிறுகுடி எம் ஆயர்
வேந்து ஊட்டு அரவத்து, நின் பெண்டிர் காணமை,
காஞ்சித் தாது உக்கன்ன தாது எரு மன்றத்துத்
தூங்கும் குரவையுள் நின் பெண்டிர் கேளாமை,
ஆம்பற் குழலால் பயிர் பயிர் - எம் படப்பைக்
காஞ்சிக்கீழ்ச் செய்தேம் குறி.

## 73. கன்றும் கன்னியும்

ஒரு பசு; மிக அழகான பசு; 'பார்! பார்!' என்று எல்லாரும் வியந்து பாராட்டத்தக்க பசு. மழை காலத்திலே நன்ருக வளர்ந்த புல்லை மேய்ந்து குடம் குடமாகப் பால் கறக்கும் பசு.

ஒரு காளை. மிகவும் பொல்லாத காளை; கட்டுக்கு அடங்காத காளை; நல்ல உயர்ந்த இனம்.

இவை இரண்டிற்கும் பிறந்ததொரு கன்று; காளைக் கன்று; வளர்ந்து வலிவுபெற்ற கன்று.

அந்தக் கன்றை வண்டியிலே பூட்டி ஓட்டினர்கள். வண்டியை இழுத்துச் செல்கிறது கன்று. 'ஜாம் ஜாம்' என்று செல்கிறது; நிமிர்ந்து நடைபோட்டுச் செல்கிறது. அலட்சியமாகச் செல்கிறது. 'எதுவும் தனக்கு நிகர் இல்லை' என்ற இறுமாப்புடன் செல்கிறது.

இந்தக் கன்று மாதிரி வருகிருள் ஒரு பெண்; ஆயர்குலப் பெண்; மோர்க்காரி.

அவளோ —

மிகுந்த கோபக்காரி. கொஞ்சம் பெரிய இடத்துப் பெண். அவளிடத்திலே நெருங்க முடியாது. 'காதல் கீதல்' என்று

சொல்லிப் பல்லைக் காட்ட முடியாது.

இந் நிலையில் என்ன செய்வான் அவன்! பாவம். அவளது அழகிலே உள்ளம் பறி கொடுத்தான். காதல் கொண்டான்.

நாள்தோறும் அந்த வழியே போகிறாள் அவள். மோர்க் கூடையைத் தலையிலே வைத்துச் செல்கிறாள்.

அவளைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறான்.

"ஆகா! என்ன அழகு! என்ன அழகு! தலையிலே போட்டிருக்கும் கொண்டையின் அழகே அழகு! அதிலே சூடியிருக்கும் மலர்தான் எவ்வளவு நேர்த்தி! அந்தக் கண்கள்! ஆகா! என்னை வாட்டுதே! வருத்துதே! கண் மட்டுமா? இவளுடைய ஒவ்வோர் உறுப்புமல்லவா என்னை வாட்டுகிறது!

"இவள் என்ன ரம்பையோ! ஊர்வசியோ! திலோத்தமையோ! அந்த மாதிரியல்லவா இருக்கிறாள்!

"இவள் மோர் விற்க வந்தால் ஊர்ப் பெண்கள் எல்லாரும் கதவைச் சாத்திக் கொள்கிறார்களே!

"'அம்மா! மோர் வேண்டாம்! போ தாயே! நாங்கள் மாங்காய் ஊறுகாய் போட்டு வைத்திருக்கிறோம். அதைக் கூட்டிச் சாப்பிடுகிறோம்' என்று சொல்கிறார்களே! ஏன்?

"இவளது அழகிலே தங்கள் வீட்டு ஆண் பிள்ளைகள் மயங்கி விடுவார்களோ என்ற பயம் அவர்களுக்கு.

"அதனாலே எப்போதும் மூடப்படாத அவர் வீட்டுக் கதவுகள், இப்போது மூடப்படுகின்றன."

இவ்விதம் தனக்குத்தானே கூறிக்கொண்டு வருந்தி நின்றான் அவன்.

கார் ஆரப் பெய்த கடி கொள் வியன் புலத்துப்
பேராது சென்று, பெரும் பதவப் புல் மாந்தி,
நீர் ஆர் நிழல குடம்சுட்டு இனத்துள்ளும்,
போர் ஆரா ஏற்றின், பொரு நாகு, இளம் பாண்டில்
தேர் ஊர, செம்மாந்தது போல், மதைஇனள்—
பேர் ஊரும் சிற்றூரும் கெளவை எடுப்பவள் போல்,
மோரோடு வந்தாள் – தகை கண்டை; யாரோடும்
சொல்லியாள் அன்றே வனப்பு.

தமர் தந்து, ஒரு புறம் தைஇய
கண்ணி எடுக்கல்லாக் கோடு ஏந்து அகல் அல்குல்—
புண் இல்லார் புண்ணாக நோக்கும்; முழு மெய்யும்
கண்ணளோ? - ஆயர் மகள்.

இவள்தான் திருத்தாச் சுமட்டினள், ஏனைத் தோள் வீசி,
வரிக் கூழ வட்டி தழீஇ, அரிக் குழை
ஆடல் தகையள்; கழுத்தினும் வாலிது
நுண்ணிதாத் தோன்றும், நுசுப்பு.

இடை தெரியா ஏஎர் இருவரும் தத்தம்
உடை வனப்பு எல்லாம் இவட்கு ஈத்தார் கொல்லோ ?
படை இடுவான்மன் கண்டீர், காமன் - மடை அடும்
பாலொடு கோட்டம் புகின்.

இவள் தான், வருந்த நோய் செய்து இறப்பின்
அல்லால், மருந்து அல்லள் -
'யார்க்கும் அணங்காதல் சான்றாள்' என்று,
ஊரப் பெண்டிர்,
'மாங்காய் நறுங் காடி கூட்டுவேம்; யாங்கும்
எழு நின் கிளையொடு போக' என்று தத்தம்
கொழுநரைப் போகாமல் காத்து, முழு நாளும்,
வாயில் அடைப்ப, வரும்.

## 74. மத்தும் மனமும்

மோர்க்காரி மோர் கொண்டு சென்றாள். அவளைக் கண்டான் அவன்; ஓடி வந்தான்; கட்டி அணைத்தான்.

'விலவிலத்துப் போனாள் அவள். யாரென்று பார்த்தாள். அவன்! பேசாமல் போனாள் சிரித்துக்கொண்டு.

போனவளை வழி மறித்தான் அவன்.

"கொஞ்ச நேரம் இரு. இன்பமாகப் பொழுது போக்கலாம்" என்றான் அவன்.

"ஏய்! உன் காதல் என்ன தேள் கடி மருந்தோ?" என்றாள் அவள்.

"ஏன் கோபிக்கிறாய்?" என்றான் அவன்.

"என்னவோ பாவம்! ஏதோ காதல் பித்துக்கொண்டு திரிகிறானே! போனால் போகிறான் என்று நினைத்தேன். ஆசை தீர அணைத்துக் கொள்ளட்டுமே என்று பேசாதிருந்தேன். நீ என்னடா என்றால் அதோடு திருப்தியடைபவனாகத் தெரியவில்லையே. மேலும் என்ன என்னவோ பேசுகிறாயே!" என்றாள்.

"அப்படி என்ன கேட்டு விட்டேன்" என்றான் அவன்.

"நான்தான் இருக்கிறேன். மோர் விற்கிறேன். ஒருவன் வருகிறான். தாகமாயிருக்கிறது என்கிறான். போனால் போகிறது என்று சிறிது மோர் கொடுத்தேன். அதனால் என்ன? குறைந்தா போயிற்று?.இல்லை. மோர் சாடபிட்டவன் அதோடு சும்மா போக வேண்டாமோ! போகவில்லை. என்னை ஏமாளி என்று நினைக்கிறான். 'கொஞ்சம் வெண்ணெயும் கொடேன்' என்று கேட்கிறான். வெண்ணெய் கொடுக்க முடியுமா? முடியாது" என்றாள்.

"சரி. நான் என்ன செய்வேன். என் வாழ்வின் முடிவு அது. உனக்கு விருப்பமில்லை என்றால், வேண்டாம். போ" என்றான்.

அவள் மேலும் நடந்து சென்றாள். அவனும் அவள் பின் சென்றான். திரும்பிப் பார்த்தாள் அவள்.

"ஏய்! ஏன் என் பின்னாலேயே சுற்றுகிறாய்?"

"அடியே! நான் என்ன செய்வேன்! தயிர் கடையும் மத்திலே சுற்றப்பட்ட கயிறுபோல் இருக்கிறதே, என் நெஞ்சு! உன்னையே சுற்றிச் சுற்றி வருகிறதே!"

"நான்தான் கோபிக்கிறேனே! தெரியவில்லையா?"

"தெரிகிறது. நீ கோபிக்கிறாய். கோபிக்கும்போது என்னிடம் ஓடி வருகிறது. நீ ஓர் அடி எடுத்து வைத்ததும் உன் பின்னால் வருகிறது. இப்படி உன் பக்கமும் என் பக்கமுமாக அலைகிறதே! நான் என்ன செய்வேன்!"

"இது பகல் நேரமல்லவா? பலரும் வரும் இடம் அல்லவா? இப்படி நீ என் பின்னால் சுற்றலாமா?"

"தெரியும். எல்லாம் தெரியும். இது பகல் நேரம். பலர்

வரும் இடம். இருந்தாலும் என்ன? தொழுவிலே கட்டப்பட்ட கன்றைச் சுற்றிச் சுற்றி வரும் பசுமாதிரி அல்லவா இருக்கிறது என் உள்ளம் உன்னையே சுற்றிச் சுற்றி வருகிறதே! நான் என்ன செய்வேன் !"

அது கேட்டு அவள் மனம் இளகினாள். "சரி. சரி! இன்னும் சிலநாள் பொறு" என்றாள்.

"பச்சைப் பாலிலே வெண்ணெய் எடுத்தபின் தயிராக்குவதுண்டு. ஆனால் அத் தயிர் சுவையுள்ளதாயிருக்குமா? இராது. அம்மாதிரி என வாழ்வு சுவையற்றுப் போய்விட்டது. நடைப் பிணமாகத் திரிகிறேன்" என்றான்.

கேட்டாள் அவள்.

"சரி. இனி இங்கே பேசாதே. யாரானும் பார்த்து விட்டால் ஆபத்து. நாளை வா. பேசலாம்," என்றாள்.

"நாளைக்கும் இப்படித்தானே சொல்லுவாய் ?"

"நாளைக்கு மோர் கொண்டு வரமாட்டேன்."

"அப்புறம்?"

"கன்றுகளை மேய்க்க வருவேன். அங்கே வா" என்றாள்.

அவனும் சென்றான்.

'கடி கொள் இருங் காப்பில் புல்லினத்து ஆயர்
குடிதொறும் நல்லாரை வேண்டுதி - எல்லா !-
இடு தேள் மருந்தோ, நின் வேட்கை? தொடுதரத்
துன்னி, தந்தாங்கே, நகை குறித்து, எம்மைத்
திளைத்தற்கு எளியமாக் கண்டை; "அளைக்கு எளியாள்
வெண்ணெய்க்கும் அன்னள்" எனக் கொண்டாய்'-
'ஒண்ணுதால்!
ஆங்கு நீ கூறின், அனைத்தாக; நீங்குக.

அச்சத்தான் மாறி, அசைவினான் போத்தந்து,
நிச்சம் தடுமாறும் - மெல் இயல் ஆய்மகள்!
மத்தம் பிணித்த கயிறு போல், நின் நலம்
சுற்றிச் சுழலும் என் நெஞ்சு.

விடிந்த பொழுதினும் இல்வயின் போகாது,
கொடுந் தொழுவினுள் பட்ட கன்றிற்குச் சூழும்

கடுஞ்சூல் ஆ நாகு போல், நிற் கண்டு, நாளும்,
நடுங்கு அஞர் உற்றது - என் நெஞ்சு.

எவ்வம் மிகுதர, எம் திறத்து, எஞ்ஞான்றும்,
நெய் கடை பாலின் பயன் யாதும் இன்றாகி,
கை தோயல் மாத்திரை அல்லது, செய்தி
அறியாது - அளித்து என் உயிர்.'

அன்னையோ? - மன்றத்துக் கண்டாங்கே,
'சான்றார் மகளிரை
இன்றி அமையேன்' என்று, இன்னவும் சொல்லுவாய்;
நின்றாய்; நீ சென்றீ; எமர் காண்பர்; நாளையும்
கன்றொடு சேறும், புலத்து.

## 75. ஏச்சும் பேச்சும்

காலை நேரம். குடம் குடமாகப் பாலைக் கறந்து கொண்டு வருகிறார்கள். அவற்றையெல்லாம் வாங்கி வைக்கிறாள் அவள். பிறகு கன்றுகளையெல்லாம் தாம்பிலே பிணைக்கிறாள்; கம்பங்களிலே கட்டுகிறாள். பிறகு தன் தாயிடம் செல்கிறாள். அவளது தலையை வாரி விடுகிறாள் தாய்; தலையிலே மலர் சூடிவிட்டாள். நீலச் சிற்றாடை ஒன்று. கரை போட்டது. அதை உடுத்திக் கொண்டாள். தோட்டத்திற்குச் சென்றாள். மணல் வீடு கட்டி விளையாடிக் கொண்டிருந்தாள்.

அந்த நேரத்திலே அவன் வந்தான். அவளைக் கண்டான். அவளது அழகிலே திளைத்தான்; மகிழ்ந்தான்.

"நானும்கூட வீடு கட்டவா?" என்றான்.

"உம். தனக்கென்று சொந்தமாக ஒரு வீடு கட்டிக்கொள்ளத் துப்பில்லை. தாய் தந்தையர் கட்டிய வீட்டில் வசிக்கிறாய். எனக்கு வீடு கட்டிக்கொடுக்க வந்து விட்டாயாக்கும்" என்றாள்.

அவளது கூந்தலின் அழகு கண்டான் அவன்.

"அந்தப் பூவைச் சரியாக வைக்கவா?" என்று சொல்லிக் கூந்தலைப் பற்றினான்.

'வெடுக்'கென்று பின்னலை இழுத்துக்கொண்டாள் அவள்.

"ஊரார் அறிய மணந்து மலர் சூட்டத் துப்பில்லை. எனது தாய் சூடிய மலரைச் சரி செய்ய வந்து விட்டாயாக்கும்" என்ருள்.

இவ்விதம் அவள் முரட்டுத்தனமாகப் பேசவே, அவன் உள்ளம் ஒடிந்து போஞன்.

கண்டாள் அவள். கலக்கம் கொண்டாள்.

"இன்னும் அவன் என்னைக் கலியாணம் செய்துகொள்ள வில்லையே என்ற கோபத்தால் அப்படிப் பேசினேன். அவன் எங்கேயாவது மனம் முறிந்து செத்துவிடப் போகிறன். ஆயர் முறைப்படி விரைவில் என்னைக் கலியாணம் செய்து கொள்ளச் சொல்" என்று தோழியிடம் கூறி அனுப்பினாள் அவள்.

தீம் பால் கறந்த கலம் மாற்றி, கன்று எல்லாம்
தாம்பின் பிணித்து, மனை நிறீஇ, யாய் தந்த
பூங் கரை நீலம் புடை தாழ மெய் அசைஇ, பாங்கரும்
முல்லையும் தாய பாட்டங்கால்- தோழி! - நம்
புல்லினத்து ஆயர் மகளிரோடு எல்லாம்
ஒருங்கு விளையாட, அவ் வழி வந்த
குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன், மற்று என்னை,
'முற்று இழை ஏஎர் மட நல்லாய்! நீ ஆடும்
சிற்றில் புனைகோ, சிறிது?' என்ருன்; 'எல்லா! நீ,
"பெற்றேம் யாம்" என்று, பிறர் செய்த இல் இருப்பாய்;
கற்றது இலை மன்ற காண்' என்றேன், 'முற்றிழாய்!
தாது சூழ் கூந்தல் தகை பெறத் தைஇய
கோதை புனைகோ, நினக்கு?' என்ருன்; 'எல்லா! நீ
ஏதிலார் தந்த பூக் கொள்வாய்; நனி மிகப்
பேதையை மன்ற பெரிது' என்றேன். 'மாதராய்!
ஐய பிதிர்ந்த சுணங்கு அணி மென் முலைமேல்
தொய்யில் எழுதுகோ மற்று?' என்ருன்; 'யாம் பிறர்
செய் புறம் நோக்கி இருத்துமோ? நீ பெரிது
மையலைமாதோ; விடுக!' என்றேன். தையலாய்!
சொல்லிய ஆறு எல்லாம் மாறு மாறு யான் பெயர்ப்ப,
அல்லாந்தான் போலப் பெயர்ந்தான்; அவனை நீ
ஆயர் மகளிர் இயல்பு உரைத்து, எந்தையும்

யாயும் அறிய உரைத்தீயின், யான் உற்ற
நோயும் களைகுவைமன்.

## 76. அவர் சொன்னதும், இவர் சொன்னதும்!

"யாரடா?" என்றாள்.
"நான்தான்" என்றான்.
"ஏன் வழி மறித்தாய்?"
"பேசாமல் போகிறாயே!"
"ஊஹூம். இனி உன்னோடு பேசமாட்டேன்."
"மாட்டியா?"
"மாட்டேன்."
"ஏன் பேசமாட்டாய்?"
"ஆமாம்! அப்படித்தான்."
"அப்படித்தான் என்றால் போதாது. காரணம் சொல்?"
"காரணமா?"
"ஆம்."
"சொல்ல வேண்டுமா?"
"ஆம்"
"கட்டாயம் சொல்ல வேண்டுமோ?"
"கட்டாயம் சொல்லத்தான் வேண்டும்."
"அம்மா கோபித்துக்கொண்டாள்."
"ஏன் கோபித்தாள்?"
"அன்றைக்கு நீ தாமரைப் பூக் கொண்டு வந்து கொடுத்தாயே!"
"ஆமாம்."
"அதை ஆசையோடு தலையில் வைத்துக் கொண்டிருந்தேன்!"
"உம்."
"அம்மா பார்த்துவிட்டாள்.
"'ஏதுடி தாமரைப் பூ? யார் கொடுத்தா?' என்று கேட்டாள்.
"நீ கொடுத்தாய் என்று சொன்னேன்.

"'இனிமேல் அவனோடு பேசாதே' என்று சொன்னாள்."

"அப்படியா! பேஷ்! நல்லதுதான். அம்மா சொன்னபடி கேட்டு நடக்கிறாயாக்கும்?"

"ஆமாம்!"

"எங்க அம்மா ஒன்று சொன்னாள். அது என்ன தெரியுமா?"

"என்ன?"

"'குறு குறு என்று பார்க்கும் விழியும், அழகும் உள்ள பெண்ணைக் கண்டால் விடாதே! காதல் செய்! கலியாணம் பண்ணிக் கொள்'—இதுவே என் அம்மா சொன்னது. அதன்படி நான் நடக்க வேண்டாமா?"

"பேஷ்! பேஷ்! நன்றாயிருக்கிறது! இதுதான் உன் அம்மா சொல்லிக் கொடுத்ததோ?"

"ஆமாம்!"

"ரொம்ப சாமர்த்தியசாலிகள்தான்."

"ஏண்டீ! உச்சிப் பொழுதுக்கே கன்று மேய்க்கிறேன் என்று சொல்லி வருகிறயே! உன் மனசில் என்ன இருக்கிறது என்பது என் அம்மாவுக்குத் தெரியாதா?" என்றான் அவன்.

"சரி. இனி விடு அந்தப் பேச்சை. நீ கூறியது உண்மை. ஒப்புக் கொளகிறேன்."

"அப்படியானால் சரி. உன் அம்மா சொன்னபடி நீ நட. என் அம்மா சொன்னபடி நான் நடக்கிறேன்."

"எப்படி?" என்றாள் அவள்.

"என்னைக் கண்டால் பேசக்கூடாது என்றுதானே உன் அம்மா சொன்னாள்? நல்லது; பேசாதே. வேண்டாம். அன்பாக அணைத்துக் கொள்! ஓடி வா!"

அந்த இரண்டு புறாக்களும் இன்பமாக இருந்தன.

**யார்** இவன், என்னை விலக்குவான்? நீர் உளர்
பூந் தாமரைப் போது தந்த விரவுத் தார்க்
**கல்லாப்** பொதுவனை; நீ மாறு; நின்னொடு
சொல்லல் ஓம்பு என்றார், எமர்.

**எல்லா!** 'கடாஅய கண்ணால், கலைஇய நோய் செய்யும்
நடாஅக் கரும்பு அமன்ற தோளாரைக் காணின்,

விடாஅல்; ஓம்பு' என்றார், எமர்.

கடாஅயார், நல்லாரைக் காணின், விலக்கி,
நயந்து, அவர்
பல் இதழ் உண்கண்ணும் தோளும் புகழ் பாட,
நல்லது கற்பித்தார் மன்ற, நுமர் பெரிதும்
வல்லர், எமர்கண் செயல்.

ஓஒ! வழங்காப் பொழுது, நீ கன்று மேய்ப்பாய் போல்,
வழங்கல் அறிவார் உரையாரேல், எம்மை
இகழ்ந்தாரே அன்றோ, எமர்?

ஒக்கும்; அறிவல் யான் - எல்லா! - விடு.

'விடேன், யான்; என், நீ குறித்தது? - இருங் கூந்தல்!
நின்னை, "என் முன் நின்று.

சொல்லல் ஓம்பு" என்றமை அன்றி, "அவனை நீ
புல்லல் ஓம்பு" என்றது உடையரோ? மெல்ல
முயங்கு; நின் முள் எயிறு உண்கும்' - 'எவன்கொலோ?

மாயப் பொதுவன் உரைத்த உரை எல்லாம்
வாய் ஆவது ஆயின், தலைப்பட்டாம்; பொய் ஆயின்,
சாயல் இன் மார்பில் கமழ் தார் குழைத்த நின்
ஆய் இதழ் உண்கண் பசப்ப, தட மென் தோள்
சாயினும், ஏஎர் உடைத்து.'

## 77. வம்பும் வழி மறித்தலும்

ஆயர்குல மங்கை ஒருத்தி. மாடுகளை எல்லாம் மேய்க்கிறாள். மேய்ந்த மாடுகளை வீட்டுக்குத் திருப்பி ஓட்டிக்கொண்டு வருகிறாள். மாலை நேரம். சூரியன் மலைவாயிலில் வீழ்ந்து விட்டான். இருள் கவியும் நேரம்.

அப்போது அவளை வழி மறித்தான் அவன். அவனுக்கும் அவளைத் தெரியும். அவளுக்கும் அவனைத் தெரியும். இருந்தா

லும், நெருங்கின பழக்கமில்லை. மாடு மேய்க்கும் இடத்திலே பார்த்தது. அவ்வளவுதான்.

"யாரடா நீ ?"

"நான்தான், ஆட்டிடையர் மகன்."

"அப்படியா ? ஏன் எனது வழியை மறித்தாய்?"

"உன் மீது காதல் கொண்டு தவிக்கிறேன். அதைச் சொல்லவே!"

"ஆமாம் ! நான் யார் தெரியுமா ? மாட்டிடையர் மகள். குடஞ்சுட்டு ஆயர் மகள். அறிந்து கொள்."

"ஓ ! அப்படியா ! ரொம்பச் சரி. நாம் இரண்டுபேரும் சிறிது நேரம் பேசி மகிழ்வோம் வா."

"மகிழலாம். ஆனால் இருட்டிவிட்டதே. நேரமாயிற்று. வீட்டுக்குப் போக வேண்டும். வேறு எவராவது பார்த்து விடுவார்கள். நாளைக்கு ஆகட்டுமே !"

"ஊஹூம் முடியாது. உன்னைப் போக விடமாட்டேன்."

"ஏது ! அறிவு மயங்கினவனாயிருக்கிறாய் ! காமவெறிக்கு பலியாகிவிட்டாய். எது உண்மை ? எது பொய் என்று தெரியாமல் தடுமாறுகிறாய். என் வார்த்தையில் நம்பிக்கையில்லையே உனக்கு !" என்று சீறினாள்.

"சரி" என்றான். வழி விட்டான். சிறிது தூரம் சென்றதும் அவன் மனம் மாறிவிட்டது. காரணம்: அந்தக் காளைகள். அந்தக் காளைகளை அவளுக்குக் காட்டினான்.

"மனக் குறையோடு போகிறேன். மகிழ்ச்சி தரமாட்டாயா !" என்று கெஞ்சினான்; அவள் கை பற்றினான். பிறகு...?

நலம் மிக நந்திய நய வரு தட மென் தோள்,
அலமரல் அமர் உண்கண், அம் நல்லாய் ! நீ உறீஇ,
உலமரல் உயவு நோய்க்கு உய்யும் ஆறு உரைத்துச்
செல்.

பேர் ஏமுற்றார் போல, முன் நின்று, விலக்குவாய்
யார் - எல்லா ! நின்னை அறிந்ததூஉம் இல்வழி ?

தளிரியால் ! என் அறிதல் வேண்டின், பகை அஞ்சாப்
புல்லினத்து ஆயர் மகனேன், மற்று யான்.

ஒக்கும்மன்.

புல்லினத்து ஆயனை, நீ ஆயின், குடம் சுட்டு
நல் இனத்து ஆயர், எமர்.

'எல்லா !

நின்னொடு சொல்லின், ஏதமோ இல்லைமன்.'
'ஏதம் அன்று ; எல்லை வருவான் விடு.'

விடேன்.

உடம்பட்டு நீப்பார் கிளவி, மடம் பட்டு,
மெல்லிய ஆதல் அறியினும், மெல்லியால் !
நின் மொழி கொண்டு, யானோ விடுவேன் - மற்று என்
மொழி கொண்டு
என் நெஞ்சம் ஏவல் செயின் ?

'நெஞ்சு ஏவல் செய்யாது' என நின்றாய்க்கு, 'எஞ்சிய
காதல் கொள் காமம் கலக்ுற' ஏதிலார்
பொய்ம் மொழி தேறுவது என் ?

தெளிந்தேன், தெரியிழாய் ! யான்.

பல்கால், யாம் கான்யாற்று அவிர் மணற் தண்
பொழில்,
அல்கல் அகல் அறை, ஆயமொடு ஆடி,
முல்லை குருந்தொடு முச்சி வேய்ந்து, எல்லை
இரவு உற்றது; இன்னும் கழிப்பி; அரவு உற்று,
உருமின் அதிரும் குரல் போல், பொரு முரண்
நல் ஏறு நாகுடன் நின்றன,
பல் ஆன் இன நிரை; நாம் உடன் செலற்கே.

## 78. தூக்கமும் ஊக்கமும்

"'நன்றாகச் சீவி சிங்காரித்துக் கொள்ளத் தெரிகிறது. பெண்களின் மீது வலை வீசிக் காதல் புரியத் தெரிகிறது.

தைரியமாக முன் வந்து பெண் கேட்டுக் கலியாணம் பண்ணத் துப்பில்லையோ?' என்று கேட்டு வாடி அவனை,'' என்று கூறினள் அவள். யாரிடம்? தோழியிடம். ஏன்?

அவன் அவளைக் காதலித்தான். அவளும் அவனைக் காதலித்தாள். களவின்பமும் நுகர்ந்தாயிற்று.

இந் நிலையில் அவளுககு மணம் முடிக்க எண்ணினர் பெற்றோர். ஏற்பாடுகள் விரைவாக நடக்கின்றன.

அது கேட்டான். அவன், "ஐயோ! நமது காதலியை வேறு ஒருவன் தட்டிக்கொண்டு போய் விடுவானே!'' என்று ஏங்கினன்.

அவளுக்கும் தைரியமில்லை; அவனுக்கும் தைரியமில்லை, காதலைப் பெற்றோரிடம் கூற. இந்நிலையில்தான் அவள் இவ்வாறு கூறினள்.

"என்றைய தினம் காற்றின் கரையில் அவனைக் கண்டேனே, அன்றே நான் அவனுக்கு உரியவள் ஆனேன். என்னை மணம் முடிக்க வேண்டியவன் அவன். கடமையும் அவனதே. அந்தக் கடமையைச் செய்யாமல் இருக்கிறன் அவன்.

"எனது பெற்றோர் வேறு ஒருவனுக்கு மணம் முடித்து விட்டால் என் செய்வது. இருவருக்கு மாலை சூடும் வழக்கம் நமக்குத் தகாது. எனவே விரைவில் வரச் சொல். தைரியமூட்டி அனுப்பு. என் பெற்றோரிடம் வந்து பெண் கேட்கட்டும். போ! போய்ச் சொல் அவனுக்கு.''

வாரி, நெறிப்பட்டு, இரும் புறம் தாஅழ்ந்த
ஓரிப் புதல்வன் அழுதனன் என்பவோ -
புதுவ மலர் தைஇ, எமர் என் பெயரால்,
வதுவை அயர்வாரைக் கண்டு? 'மதி அறியா
ஏழையை' என்று அகல நக்கு, வந்தியாய், நீ -
தோழி! - அவனுழைச் சென்று.

சென்று யான் அறிவேன்; கூறுக, மற்று இனி.

'சொல் அறியாப் பேதை' - மடவை! - 'மற்று எல்லா!
நினக்கு ஒருஉம்; மற்று என்று அகல் அகலும்; நீடு
இன்று;

நினக்கு வருவதாக் காண்பாய்.' அனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியம் கொளக் கூறு.

தரு மணல் தாழப் பெய்து, இல் பூவல் ஊட்டி,
எருமைப் பெடையோடு, எமர் ஈங்கு அயரும்
பெரு மணம் எல்லாம் தனித்தே ஒழிய -
வரி மணல் முன்துறைச் சிற்றில் புனைந்த

திரு நுதல் ஆயத்தார் தம்முள் புணர்ந்த
ஒரு மணம் தான் அறியும்: ஆயின் எனைத்தும்
தெருமரல் கைவிட்டு இருக்கோ - அலர்ந்த
விரி நீர் உடுக்கை உலகம் பெறினும்,
அரு நெறி ஆயர் மகளிர்க்கு
இரு மணம் கூடுதல் இல் இயல்பு அன்றே?

## 79. 'பொத்' தென்ற மலரும், 'பக்' கென்ற மனமும்!

"ஏனடீ! நான் உன்னை எங்கெல்லாம் தேடினேன். ஏன் இங்கே வந்து ஒளிந்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள் தோழி.

"அடியே! கள் குடிக்க விரும்பினான் ஒருவன். மற்றவருக்குத் தெரியக்கூடாது என்று நினைத்தான் எங்கேயோ போனான். வேண்டிய மட்டும் குடித்தான். மயக்கம் தலைக்கேறியது. தள்ளாடிக்கொண்டே வந்தான். மயக்கத்தால் உளறினான். அந்த உளறல் அவனைக் காட்டிக்கொடுத்துவிட்டது. யாருக்குப் பயந்தானோ, அவர் முன்னிலையிலேயே போய் உளறினான். அந்த மாதிரி ஆகிவிட்டதே என் கதி" என்று கூறினாள் அவள்.

"என்னடி ஆய்விட்டது?" என்று கேட்டாள் தோழி.

"அந்த மலர் என்னைக் காட்டிக்கொடுத்துவிட்டது."

"எந்த மலர்?"

"என் காதலன் சூட்டிய மலர்."

"எப்போ?"

"இன்று எனக்கு எண்ணெய் தேய்க்கிறேன் என்றாள் உன்

தாய். சரி என்றேன். தலையை அவிழ்த்தாள். 'பொத்' தென்று விழுந்தது மலர். 'ஏது புதிய மலர்?'' என்று திகைத்தாள் செவிலி. அம்மாவும் கண்டாள்; அப்பாவும் கண்டார். யாரும் ஏதும் காட்டிக்கொள்ளவில்லை. ஒருவரும் வாய் திறக்கவில்லை. நெருப்புத் தொட்டவர் போல் திடுக்கிட்டனர். புழக்கடை சென்றனர்.

"நானும் கூந்தலை அள்ளி முடித்தேன். அவிழ்ந்து கிடந்த நீலச் சிற்றுடையைச் சுற்றிக் கொண்டேன். இங்கேவந்து ஒளிந்து கொண்டேன்.''

சிரித்தாள் தோழி.

"எனக்குப் பயமாயிருக்கிறது'' என்றாள் அவள்.

"போடி! அசடே! உனது பெற்றோரின் பண்பு தெரியாமல் பேசுகிறாய். நீ காதல் கொண்டிருக்கிறாய் என்பது அறிந்தனர். என்னிடம் கேட்டனர். சொன்னேன். அவனையே உனக்கு மணம் முடிக்க முடிவு செய்து விட்டனர். ஏற்பாடுகள் எல்லாம் நடக்கின்றன. வா'' என்றாள் தோழி.

'தோழி! நாம், காணுமை உண்ட கடுங் கள்ளை, மெய் கூர,
நாணுது சென்று நடுங்க உரைத்தாங்கு,
கரந்ததூஉம் கையொடு கோட்பட்டாம் கண்டாய் - நம்
புல்லினத்து ஆயர் மகன் சூடி வந்தது ஓர்
முல்லை ஒரு காழும் கண்ணியும், மெல்லியால்!
கூந்தலுள் பெய்து முடித்தேன்மன்; தோழி! யாய்
வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே,
அன்னையும் அத்தனும் இல்லரா, யாய் நாண,
அன்னை முன் வீழ்ந்தன்று, அப் பூ.

இதனை வினவலும் செய்யாள், சினவலும் செய்யாள்,
நெருப்புக் கை தொட்டவர் போல விதிர்த்திட்டு,
நீங்கிப் புறங்கடைப் போயினள்; யானும், என்
சாந்து உளர் கூழை முடியா, நிலம் தாழ்ந்த
பூங் கரை நீலம் தழீஇ, தளர்பு ஒல்கி,
பாங்கு அருங்கானத்து ஒளித்தேன்.'—'அதற்கு,
எல்லா!
ஈங்கு எவன் அஞ்சுவது ?

அஞ்சல் - அவன் கண்ணி நீ புனைந்தாய் ஆயின், நமரும்
அவன்கண் அடைசூழ்ந்தார், நின்னை; அகன் கண்
வரைப்பில் மணல் தாழப் பெய்து, திரைப்பில்
வதுவையும் ஈங்கே அயர்ப; அதுவேயாம்,
அல்கலும் சூழ்ந்த வினை.'

## 80. கன்றும் கன்னியும்

கன்றுகளை மேய்க்கப் புறப்பட்டாள் அவள். கண்டான் அவன். அவளைப் பின்தொடர்ந்தான். தாம்பும் கையுமாகத் தொடர்ந்தான்.

கன்றுகளை ஓட்டியவள் காட்டுக்குள்ளே சென்றாள். அவனும் அவள் பின் சென்றான். நடுக் காட்டில் அவள் முன் தோன்றினான்; வழி மறித்தான்.

"ஏனடா வழி மறிக்கிறாய்! காதல் பித்து தலைக்கு ஏறி விட்டதோ?" என்றாள் அவள்.

"ஆம்" என்றான்.

"விலகு" என்றாள்.

"முடியாது" என்றான்.

"வழி விடு" என்றாள்.

"முட்டித் தள்ளிவிட்டு ஓடும் கன்றுபோல் என்னைத் தள்ளி விட்டு ஓடு" என்றான்.

அதாவது என்ன? அவளைத் தழுவ ஆசை அவனுக்கு. தான் தழுவக் கூடாது. அவளாகத் தழுவ வேண்டும். எனவே அப்படிச் சொன்னான்.

அவளுக்கும் ஆசைதான். ஆனால் தாய் வந்துவிடுவாளோ என்ற பயம்.

"ஏய்! கன்றுக்குட்டியை யாராவது தடுத்தால் பசு சீறிக் கொண்டு வரும். அந்தமாதிரி அம்மா வந்து விடுவாள்" என்றாள்.

"அம்மாவே வரட்டும். உன் அப்பாவே வரட்டும். அஞ்சேன்!" என்றான்.

"ஏன்?" என்றாள்.

"உன் காதல் கிடைத்து விட்டதே" என்றான்.

அவள் சிரித்தாள். அவன் அழைத்தான்.

"நாளைக்கு" என்றாள்.

"எப்போ?" என்றான்.

"கறவைக் கலயம் ஏந்தி மேய்ச்சல் நிலத்துக்குப் போவேன். அப்பொழுது வா" என்றாள்.

"சரி" என்றான்.

சந்தோஷமாகப் போனான்.

யாங்கு அரும் பாட்டங்கால் கன்றொடு செல்வேம்; எம்
தாம்பின் ஒரு தலை பற்றினை, ஈங்கு எம்மை
முன்னை நின்றாங்கே விலக்கிய எல்லா! நீ
என்னை ஏமுற்றாய்? விடு.

விடேஎன்; தொடீஇய செல்வார்த் துமித்து, எதிர் மண்டும்
கடு வய நாகு போல் நோக்கி, தொழுவாயில்
நீங்கி, சினவுவாய் மற்று.

நீ நீங்கு; கன்று சேர்ந்தார்கண் கத ஈற்றாச் சென்றாங்கு,
வன்கண்ணள் ஆய் வரல் ஓம்பு.

யாய் வருக ஒன்றோ; பிறர் வருக; மற்று நின்
கோ வரினும் இங்கே வருக; தளரேன் யான்,
நீ அருளி நல்கப் பெறின்.

நின்னை யான் சொல்லினவும் பேணாய், நினைஇ,
கனை பெயல் ஏற்றின் தலை சாய்த்து, எனைய தூஉம்
மாறு எதிர்கூறி, மயக்குப்படுகுவாய்!—
கலத்தொடு யாம் செல்வுழி நாடி, புலத்தும்
வருவையால் - நாண் இலி! நீ.

## 81. முல்லை தந்த தொல்லை

அந்தி நேரம். காட்டிலிருந்து வருகிறாள் கட்டழகி, வீடு நோக்கி. கண்டான் அவன். வந்தான் விரைந்து.

"யார் நீ?" என்றான். திரும்பிப் பார்த்தாள். தன் காதலன்.

"இவ்வூர்த் தலைவன் மகள்" என்றாள் சிரித்துக்கொண்டே.

"கையில் என்ன ?" என்றான்.

"கூடை" என்றாள்.

"அதுதான் தெரிகிறதே! அதற்குள் என்ன ?"

"முல்லை மலர்."

"எங்கே, காட்டு!"

அவள் திறந்து காட்டினாள்.

"பேஷ்! பேஷ்! மங்கலப் பொருள்தான் வைத்திருக்கிறாய்."

அவள் சிரித்தாள்.

"அடியே! நல்ல சமயம்! மாலை நேரம். ஒருவரும் காண முடியாதபடி இருள் வருகிறது. முல்லை மலர் வாசனை வீசுகிறது. நீயும் இருக்கிறாய்; நானும் இருக்கிறேன். நமக்குள் காதலும் இருக்கிறது. எப்படி நான் உன்னைச் சும்மா விடுவேன்" என்றான்.

அவள் சிரித்தாள். அவன் அணைத்தான்.

மாணை உருக்கிய நன் பொன் மணி உறீஇ
பேணித் துடைத்தன்ன மேனியாய்! கோங்கின்
முகிரா இள முகை ஒப்ப, எதிரிய
தொய்யில் பொறித்த வன முலையாய்! மற்று, நின்
கையது எவன்? மற்று உரை.

'கையதை - சேரிக் கிழவன் மகளேன் யான்; மற்று
இஃது ஓர்
மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்தது ஓர்
போழின் புனைந்த வரிப்புட்டில்.'– 'புட்டிலுள் என் உள?
காண் தக்காய்! எற் காட்டிக் காண்.

காண், இனி:தோட்டார் கதுப்பின் என் தோழி அவரொடு
காட்டுச் சார்க் கொய்த சிறு முல்லை, மற்று இவை.

முல்லை இவை ஆயின் – முற்றிய கூழையாய்!
எல்லிற்று, போழ்து ஆயின் - ஈதோளிக் கண்டேனல்·
'செல்' என்று நின்னை விடுவேன், யான்; மற்று எனக்கு
மெல்லியது, ஓராது அறிவு.

முல்லைக் கலி முற்றும்

# மருதக் கண்ணாடி

| | | |
|---|---|---|
| 1 | தெய்வம் : | இந்திரன். |
| 2. | செல்வர் பெயர் : | ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி. |
| 3. | மற்றையோர் பெயர் | உழவர், உழத்தியர், கடையர், கடைசியர். |
| 4. | பறவை : | வண்டானம், மகன்றில், நாரை, அன்னம், பெருநாரை, கம்புள், குருகு, தாரா. |
| 5. | விலங்கு : | எருமை, நீர் நாய். |
| 6. | ஊர் : | பேரூர், மூதூர். |
| 7. | நீர் நிலைகள் : | ஆறு, கிணறு, குளம். |
| 8. | மலர் : | தாமரை, கழுநீர், குவளை. |
| 9. | மரம் : | காஞ்சி, வஞ்சி, மருதம். |
| 10. | உணவு தானியம் : | செந்நெல் அரிசி, வெண்நெல் அரிசி. |
| 11. | பறை : | நெல்லரிக்கிணை, மண முழவு. |
| 12. | யாழ் : | மருத யாழ். |
| 13. | பண் : | மருதப் பண். |
| 14. | தொழில் : | வயல் களை கட்டல், நெல் அரிதல், கடா விடல், குளங் குடைதல். |
| 15. | விளையாட்டும் பொழுது போக்கும் : | புது நீராடல். |

## நாகர் யார்?

நாகர் யார்? அஸ்ஸாம் ராஜ்யத்திலே வாழும் பழங்குடி மக்கள். இன்றைய நாளில் நமக்குக் கிடைக்கும் செய்தி இது.

ஆனால், பழந் தமிழ் நாட்டிலே:எப்படி? நாகர் என்று ஓர் இனத்தார் வாழ்ந்தனர். நாகன் என்ற பெயர் பல இடங்களில் காணப்படுகின்றன.

"சோழ அரசன் நாக நாட்டின் மீது படை எடுத்தான். நாகர் பலரைக் கொண்டு வந்து தமிழகத்திலே குடியேற்றினன்" என்பது சிலர் கருத்து. நாகை, நாகைப்பட்டினம் என்ற பெயர்களை இவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள்.

"யாழ்ப்பாணத்திலே நாகர் என்றோரினத்தார் ஆண்டனர். அவர்க்கும், நமக்கும் தொடர்புண்டு" என்று மற்றும் சிலர் கூறுகின்றனர்.

"நாகர் என்பவர் இந்திய நாட்டின் பல பகுதிகளிலும் வாழ்ந்திருக்கிறார்கள்" என்று வேறு சிலர் கூறுகின்றனர்.

"நாகபுரி" எனும் பெயரை இவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள்.

"சிவனை வழிபடுவோர் சைவர். விஷ்ணுவை வழிபடுவோர் வைஷ்ணவர். சக்தியை வழிபடுவோர் சாக்தர். புத்த மதத்தைப் பின்பற்றுவோர் பௌத்தர்; ஜைன மதத்தைப் பின்பற்றுவோர் ஜெனர். நாகத்தை வணங்கியவர் நாகர்."

—இது, மற்றும் சிலர் கூறுவது.

எது எப்படியானாலும் சரி. பழந் தமிழ் நாட்டிலே நாகர் என்ற பெயர் நிலவியது உண்மை. காரணமின்றிக் காரியும் நிகழுமா ? நிகழாது.

பழந் தமிழ் நாட்டினர் பலருக்குக் காரணப் பெயர்கள் உள்ளன.

பாரதம் பாடினர் ஒருவர். அவருக்குப் பெயர் என்ன தெரியுமா? பெருந்தேவனார் என்பது. அப் பெயர் எப்படியாயிற்று ? பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று ஆயிற்று.

பெருங்கடுங்கோ என்பவர் சேரர். பாலைக்கலி பாடினர். பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று அழைத்தனர்.

அப்படியே நாகத்தை வணங்கியவருக்கு நாகர் என்ற பெயர் வழங்கியிருக்கலாம்.

நாக மரங்கள் மலிந்த நிலங்களிலே வாழ்ந்ததால் அவர்களை நாகர் என்று பெயரிட்டு அழைத்திருத்தலும் கூடும்.

## இளநாகர் யார்?

இளநாகர் என்பவர் பழந் தமிழ் நாட்டுக் கவிஞர். அந்தக் காலத்திலே இளநாகர் என்ற பெயர் பலருக்கு இருந்தது போலும். மருதன் இளநாகர் என்று இவரை அழைத்தார்கள்.

கவிஞர் இளநாகரின் தந்தையார் பெயர் மருதன் என்பது. எனவே, மருதன் இளநாகன் என்று கூறினர் இவரை. அதாவது மருதனின் மகன் இள நாகன் என்று பொருள். இது சிலர் கூறுவது. மற்றும் சிலர் வேறு விதமாகவும் கூறுகின்றனர். அதாவது என்ன?

மருதக் கலி பாடியவர் இவர் அல்லவா? எனவே, மருதக் கலி பாடிய இள நாகனார் என்று மரியாதையாக அழைத்தார்களாம். இவ்வளவு நீளமான பெயரை எப்படி வழங்குவது? விரைவாகச் சொல்ல வேண்டுமே. மருதன் இளநாகனார் என்றார்கள். இது தான் அவர்கள் கூறுவது.

எப்படியோ?

மருதக் கலி பாடியவர் ஒரு சிறந்த கவிஞர். அவர் பெயர் மருதன் இளநாகனார் என்பது. இதுவே போதும்.

## மருதம் என்பது என்ன ?

வயலும் வயல் சூழ்ந்த இடமும் மருதம் எனப்படும். மருத நிலத்தின் தெய்வம் இந்திரன். மக்களிலே செல்வருக்கு என்ன பெயர்? ஊரன், மகிழ்நன் என்று பெயர். ஆண்களுக்கு வழங்கிய பெயர் இது. கிழத்தி, மனைவி என்பன பெண்களுக்கு வழங்கிய பெயர். நடுத்தர மக்களுக்கு உழவர் என்று பெயர். பெண்களை

உழத்தியர் என்று அழைப்பர். சமூகத்தின் கடைசித் தட்டில் வாழ்ந்த மக்களுக்கு என்ன பெயர்? கடையர் என்று பெயர். அதாவது என்ன? பொருளாதார நிலையை ஒட்டியது. பொருளாதார ரீதியில் குறைந்தவர்களுக்குக் கடையர் என்று பெயரிட்டார்கள். பெண்களுக்குக் கடைசியர் என்று பெயர்.

வயலும், புனலும் சூழ்ந்த நாட்டிலே எத்தகைய பறவை இருக்கும்?

வண்டாளம், மகன்றில், நாரை, அன்னம், பெரு நாரை, குருகு, தாரா இவையே மருத நிலப் பறவைகள்.

எருமை, நீர் நாய்—இவை இரண்டும் அந் நிலத்து விலங்குகள். ஊர்களுக்குப் பேரூர் என்றும், மூதூர் என்றும் பெயர்.

ஆறு, கிணறு, குளம் இவையே நீர் நிலைகள்.

தாமரைப் பூ, கழுநீர்ப் பூ, குவளைப் பூ—இவை மலர்கள். காஞ்சி மரம், வஞ்சி மரம், மருத மரம்—இவை மரங்கள்.

நெல் அரிசியே உணவு தானியம். இதிலே இருவகை; செந் நெல் அரிசி என்றும் வெண் நெல் அரிசி என்றும், இருவகை.

மருதநில மக்களின் இசைக் கருவிகள் இரண்டு. ஒன்று பறை. மற்றொன்று யாழ். பறையிலே இருவகை. நெல்லரிக் கிணை என்று ஒன்று. மண முழவு என்பது மற்றொன்று. அதாவது தப்பட்டையும், மத்தளமும். மருதநில வாத்தியங்கள்: தோல் கருவிகள்.

யாழுக்கு மருத யாழ் என்று பெயர். அவர்கள் இசைத்த பண் மருதப் பண் எனப்படும்.

வயலுக்குக் களை கட்டுவது, நெல் அரிவது, கடா விடுவது, குளம் தோண்டுவது—இவை அவர்தம் தொழில்.

புது நீர் நீந்தி விளையாடுவது அவருடைய பொழுது போக்கு; விளையாட்டு.

## மருதம் வீசும் மணம்

மருதக் கலியிலே என்ன காண்கிறோம்? செல்வப் பெருமக்களின் குடும்ப வாழ்வைக் காண்கிறோம். மனைவியின் குடும்

பப்பற்று. கணவனின் பரத்தையர் பற்று. இந்த இரண்டுமே இப் பாடல்களில் விரிவாகச் சொல்லப்படுகின்றன.

வளம் பொருந்திய நிலம். கவலையற்ற வாழ்க்கை. அப்புறம் என்ன? பொழுது போக்கிலே புத்தியைச் செலுத்த வேண்டியதுதானே!

ஆடலும் பாடலுமே பொழுதுபோக்கு. ஆடலிலும் பாடலிலும் நேரத்தைச் செலவிடுவோர் அம் மகளிரை மாத்திரம் மறந்து வருவாரோ?

பெரிய மனிதர்களில் சிலர் அந்தப் பக்கமும் கொஞ்சம் சென்று வந்தார்கள்.

எனினும், வீட்டுக்கு உரியவள் மனைவிதான். பரத்தையல்ல. பரத்தைக்கு இடம் சேரி. மனைவிக்கு இடம் வீடு. மனைவி எல்லாம் வல்லவள். உரிமை எல்லாம் மனைவிக்கே.

'என் வீட்டுக்குள் நுழையாதே' என்று சொல்கிற அளவு உரிமை இருந்தது மனைவிக்கு. உரிமை முழுதும் பெண்ணுக்கே.

இத்தகைய சமுதாயத்தையே மருதக்கலி படம் பிடித்துக் காட்டுகிறது. பெண் தனது உரிமையை நிலை நாட்டுகிருள். பாரத்தை வீடு சென்றுவரும் கணவனைக் கண்டிக்கிருள். கணவன் அவள் முன் கெஞ்சுகிருன்; மண்டியிடுகிருன்.

அவனது தன் மதிப்பை அவள் குறைக்கவில்லை; இகழவில்லை. ஆனல் தவறுதலையே சுட்டிக் காட்டுகிருள்.

இத்தகைய ஓர் உயர்ந்த பண்பு, அன்றைய தமிழ்ச் சமுதாயத்தின் முன்னேடிகள் காண்பித்த பண்பு. அதையே மருதக் கலியில் நாம் காண்கிறேம்.

## 82. வண்டும் வனிதையும்

இரவு; நள்ளிரவு. தூக்கம் வரவில்லை அவளுக்கு. எண்ணுகிருள்; எண்ணுகிருள் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுகிருள்; சிந்தை குழம்புகிருள். ஏக்கம்! கலக்கம்! எல்லாம் சேர்ந்து வாட்டுகின்றன அவளை. படுக்கையில் கிடந்து புரள்கிருள்; பெருமூச்சு

விடுகிருள். இப்படியே இரவு முழுதும் சென்றது; விடியற்காலை நேரம்!

தெருவிலே சத்தம் கேட்கிறது. குதிரை வரும் காலடிச் சத்தம். அந்த அமைதி குலைக்கும் சத்தம் ஏது? ஆம்! அவன்தான் அவளது காதலன். விலைமாதருடன் சுகித்திருந்து வீடு திரும்புகிருன்.

கதவைத் திறந்தாள். வாசலில் வந்திருப்பவன் அவன் தானே என்று பார்த்தாள். ஆம்! அவன்தான்! அவனேதான்!

வந்த வண்டி அப்படியே நிற்கிறது. குதிரைகளை அவிழ்த்து விடவில்லை. இன்னும் எங்கேயோ போகவேண்டும் போல் இருக்கிறது. சாரதி தயாராகக் காத்து நிற்கிருன்!

காதலனைக் கண்டாள் அவள்! கடும் சினம் கொண்டாள். ஆனல் அவனே—சொல்ல முடியாத திருக்கோலத்துடன் நிற்கிருன். அவள் சீறினுள்.

''வண்டு இருக்கிறதே! அது என்ன செய்யும் தெரியுமா? தாமரை மலரிலே மொய்த்திருக்கும். அந்த வழியே நீல மலர் கொண்டு வருவார் சிலர். அந்த நீல மலர்மீது தாவும். நீல மலருடன் ஊருள் புகும். மாலை நேரத்திலே முல்லை மலர் மணங் கண்டு திரியும். மகளிர் தமது கூந்தலிலே அம் மலரைச் சூடியிருப்பார்கள். தாம் விரும்பிய கணவரைத் தழுவியிருப்பார்கள். அவர்களுடைய கூந்தல் மலரில் மொய்த்துக் கிடக்கும். 'தேன் உண்டு கிடக்கும். தான் முதலில் வாழ்ந்த தாமரைப் பொய்கையை மறந்துவிடும். வளம் மிக்க இந்த நாட்டிலே நடப்பது இது. நீயும் அப்படித்தானே இருப்பாய்! அந்த வண்டுபோல்தானே இருப்பாய்! மலருக்கு மலர் தாவுவாய். தேன் உண்டு மகிழ்வாய். தனக்குரிய தாமரையையும் பொய்கையையும் மறந்த வண்டு போல் என்னை மறப்பாய்.

''விலை மாதருடன் நீ விளையாடும் விளையாட்டெல்லாம் கண்டு ஊர் சிரிக்கிறது. அதை நானும் பார்க்கவேண்டும் என்று இங்கே வந்தாயோ! இந்தக் கோலத்துடன் நிற்கிருயோ!

வந்த மட்டும் சரி. இப்போதாவது என்னை நினைத்து வந்தாயே! போதும். போ! போ! நேரமாகிறது. இன்னும் யார்

வீட்டுக்கோ போகவேண்டும் போல் தெரிகிறது. புறப்படு. மீதியுள்ள நேரத்தையும் வீணாக்காதே.'' என்று சீறினாள்.

வீங்கு நீர் அவிழ் நீலம் பகர்பவர் வயற் கொண்ட
ஞாங்கர் மலர் சூழ்தந்து, ஊர் புகுந்த வரி வண்டு,
ஓங்கு உயர் எழில் யானைக் கனை கடாம் கமழ் நாற்றம்
ஆங்கு அவை விருந்து ஆற்ற, பகல் அல்கி, கங்குலான்,
வீங்கு இறை வடுக் கொள, வீழுநர்ப் புணர்ந்தவர்
தேம் கமழ் கதுப்பினுள் அரும்பு அவிழ் நறு முல்லை
பாய்ந்து ஊதி, படர் தீர்ந்து, பண்டு தாம் மரீஇய
பூம் பொய்கை மறந்து, உள்ளாப் புனல் அணி நல் ஊர!

அணை மென் தோள் யாம் வாட, அமர் துணைப்
புணர்ந்து நீ,
'மண மனையாய்' என வந்த மல்லலின் மாண்பு அன்றோ-
பொதுக் கொண்ட கவ்வையின் பூ அணிப் பொலிந்த
நின்
வதுவை அம் கமழ் நாற்றம் வைகறைப் பெற்றதை?

கனலும் நோய்த் தலையும், 'நீ கனங் குழையவரொடு
புனல் உளாய்' என வந்த பூசலின் பெரிது அன்றோ -
தார் கொண்டாள் தலைக் கோதை தடுமாறிப் பூண்ட நின்
ஈரணி சிதையாது, எம் இல் வந்து நின்றதை?

தணந்ததன் தலையும், 'நீ தளரியலவரொடு
துணங்கையாய்' என வந்த கவ்வையின் கடப்பு
அன்றோ -
ஒளி பூத்த நுதலாரோடு ஓர் அணிப் பொலிந்த நின்
களி தட்ப வந்த இக் கவின் காண இயைந்ததை?
என ஆங்கு,

அளி பெற்றேம்; எம்மை நீ அருளினை; விளியாது
வேட்டோர் திறத்து விரும்பிய நின் பாகனும்,
'நீட்டித்தாய்' என்று, கடாஅம், கடுந் திண் தேர்;
பூட்டு விடாஅ நிறுத்து.

## 83. ஊடலும் கூடலும்

வைகை ஆற்றிலே வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. அதன் இரு மருங்கும் உள்ள மரங்கள் மலர்களைச் சொரிகின்றன. அம் மலர்கள் என்ன செய்கின்றன? ஆற்று நீரிலே பரந்து மிதக்கின்றன; நீர் தெரியாதவாறு மிதக்கின்றன. அப்படி மிதப்பது எப்படியிருக்கிறது? பல நிற மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை போல் இருக்கிறது. இத்தகைய பெருமைகொண்ட வைகை என்ன செய்கிறது? மதுரைமா நகரைச் சுற்றி ஓடுகிறது. இவ்விதம் சூழப்பெற்ற மதுரையை ஒருவன் காண்கிறான். எப்படித் தோன்றுகிறது? அந்த அணி நகர் மாலை சூடியதுபோல் விளங்குகிறது அவனுக்கு.

புலவரால் புகழப்பட்ட இந்த வைகைநதி, மதுரை நகரை முற்றுகையிட்டுச் செல்கிறது. இதைத் தவிர வேறு எவ்விதமான முற்றுகையுமே கண்டறியாத நகரம் அது. அதாவது என்ன? எந்தக் காலத்திலுமே பகைவரால் முற்றுகையிடப் பெறாத பொன்னகரம்.

இத்தகைய பாண்டிய நாட்டு மன்னன் என்ன செய்கிறான்? அரசியை விட்டுச் செல்கிறான். எங்கே? விலைமாதர் இன்பத்தை விரும்பி.

ஓர் அரசன்; பலராலும் மதிக்கப்பட்ட ஒருவன்; வணங்கப்பட்ட ஒருவன். விலை மாதின் வீடு புகலாமோ? அவ்வளவு எளியவனாகலாமோ? அவர்களுடன் சேர்ந்து ஊரார் அறிய உலாவலாமோ? அப்படியே சென்றாலும் விலைமாதர் வீடு செல்பவனுக்கு ஏற்படும் அறிகுறிகளையெல்லாம் மறைக்காமல் வெளியே வரலாமோ? நாணமின்றி நாலுபேர் முன் போகலாமோ? கூடாது அல்லவா?

ஆனால் அவனோ—சிறிதும் நாணமின்றி இருந்தான்; விலை மாதர் வீட்டிலிருந்து நாலுபேர் அறிய வருவான் அரண்மனைக்கு.

அரசிக்கு ரொம்ப கோபம். அவமானமும்கூட. "என்னடா, இது! இப்படி இருக்கிறானே இந்த அரசன்" என்று எண்ணி வருந்துவாள்.

"வரட்டும் அவன்; அந்தப்புரத்துக்குள்ளே அழைக்கிறேனு பார்!" என்று சீறிக் கொண்டிருந்தாள் அவள்.

"சரி; இன்று ஏதோ பெரிய புயல் வீசப்போகிறது." என்று எண்ணியிருந்தாள் தோழி.

"அரசன் வெளியே கிடக்கவேண்டியவன்தான். அரசி உள்ளே அழைக்கமாட்டாள்; அவன் தவிப்பான்" என்று எதிர் பார்த்தாள் அவள்.

மறுநாள் காலையில் வந்தாள். ஏமாந்தாள். அவள் எதிர் பார்த்ததற்கு மாருக இருந்தது. அரசனுடன் இன்பமாகப் பேசிக் கொண்டிருந்தாள் அரசி.

"ஏது! நேற்றுப் பேசிய பேச்சைப் பார்த்தால் பயந்து போனேன். 'பாவம்! அரசர் வெளியே கிடந்து தவிப்பார். நாம் போய் அரசியைச் சமாதானம் செய்யவேண்டி இருக்கும்' என்று நினைத்தேன். என்னடா என்ருல் ஒன்றுமே காணுமே! வெற்று வேட்டுத்தானே!" என்று கேலி செய்தாள் தோழி.

"நான் என்ன செய்வேன்! சொன்னபடி கேட்கமாட்டேன் என்கிறது என் நெஞ்சு. 'நான் ஊடுவேன்' என்ருல், 'கூடுவேன்' என்கிறது அது. 'நான் புலப்பேன்' என்ருல், 'நான் கலப்பேன்' என்கிறது. சொன்னபடி கேட்கமாட்டேன் என்கிறது. அப்படி யிருக்கும்போது நான் என்ன செய்வேன்?" என்ருள்.

கார் முற்றி, இணர் ஊழ்த்த கமழ் தோட்ட மலர்
வேய்ந்து,
சீர் முற்றி, புலவர் வாய்ச் சிறப்பு எய்தி, இரு நிலம்
தார் முற்றியது போல, தகை பூத்த வையை தன்
நீர் முற்றி, மதில் பொரூஉம் பகை அல்லால், நேராதார்
போர் முற்று ஒன்று அறியாத புரிசை சூழ்
புனல் ஊரன்—

நலத்தகை, எழில் உண்கண் நல்லார் தம் கோதையால்
அலைத்த, புண், வடு, காட்டி, அன்பு இன்றிவரின் -
எல்லா! -
புலப்பென் யான் என்பேன்மன்? அந் நிலையே,
அவற் காணின்,

கலப்பென் என்னும், இக் கையறு நெஞ்சே.

கோடு எழில் அகல்அல்குற் கொடி அன்னார் முலை மூழ்கி,
பாடு அழி சாந்தினன், பண்பு இன்றி வரின் - எல்லா! -
ஊடுவென் என்பேன்மன்? அந் நிலையே, அவற் காணின்,
கூடுவென் என்னும், இக் கொள்கை இல் நெஞ்சே.

இனிப் புணர்ந்த எழில் நல்லார் இலங்கு எயிறு
உறுஅலின்,
நனிச் சிவந்த வடுக் காட்டி, நாண் இன்றி வரின் -
எல்லா! -
துனிப்பென் யான் என்பேன்மன்? அந் நிலையே,
அவற் காணின்,
தனித்தே தாழும், இத் தனி இல் நெஞ்சே.
என ஆங்கு,

பிறை புரை ஏர் நுதால்! தாம் எண்ணியவை எல்லாம்
துறைபோதல் ஒல்லுமோ — தூ ஆகாது ஆங்கே
அறை போகும் நெஞ்சு உடையார்க்கு?

## 84. மங்கையும் மருந்தும்

பாணன் இருக்கிறானே! அவன் இசை வேளாளர் பலரை யும் அறிவான். ஆடல் மகளிர்களின் பால் மிகுந்த தொடர்பு கொண்டவன் அவன். அவன் என்ன செய்வான்?

அரசனுக்கு ஆசையூட்டுவான். ஆடல் மகளிர் பலரையும் பற்றிச் சொல்வான். மன்னன் மனம் மகிழ்ந்து இன்பமாகப் பொழுதுபோக்கவேண்டியன எல்லாம் செய்வான்.

வீட்டு விலாசம் அறிந்துகொண்டு போய்ச் சேர்க்க வேண்டியவன் எவன்? தேர்ப்பாகன். மன்னனின் சாரதி. அவன் தனது கடமையைத் தவறாமல் செய்வான்.

இப்படியாக இந்த இருவரும் கூட்டுஅணி அமைத்துக் கொண்டு மன்னனுக்கு மகிழ்ச்சியளித்து வந்தனர்.

எப்பேர்ப்பட்ட மன்னாதி மன்னனாக இருக்கட்டுமே! திரி

புவன சக்கரவர்த்தி என்று புகழப்பெற்றவனாகத்தான் இருக் கட்டுமே! எதிரிகளின் சதியை எல்லாம் முறியடிப்பதில் வல்லவ னாகத்தான் இருக்கட்டுமே! இந்த இருவர் சதியையும் முறியடிக்க முடியாது விழிப்பான்.

விழிப்பது மாத்திரமல்ல; அந்த இருவருடைய கை பொம்மை யாகவும் விளங்குவான்; சொன்னபடி எல்லாம் கேட்பான்; அழைக்கும் இடங்களுக்கெல்லாம் போவான்; மான ஈனம் பார்க்கமாட்டான்; 'இழிவே' என்று எண்ணமாட்டான்; 'ஐயோ! இது கண்ணியமற்றதே' என்று கருதமாட்டான்; 'பிறர் நம்மை எள்ளி நகைப்பார்களே' என்று நினைக்கமாட்டான்.

அப்படி அவன் மதியை மயக்கி விடுவார்கள். அவர்கள் மீதும் தவறில்லை. சமூக அமைப்பு அப்படி.

மருத நிலம் பாருங்கள்! நல்ல வளமான பூமி. நீர்வளமும் நிலவளமும் மலிந்த நாடு. எப்போதும் 'ஜிலு ஜிலு' என்று இருக்கும். எங்கும் தோப்பு! எங்கும் நிழல்! எங்கும் பசுமை! உணவுக்குப் பஞ்சமில்லை. உடலை வருத்தி உழைக்கவும் வேண்டியதில்லை. கவலையற்ற வாழ்க்கை! ஒரே ஒரு கவலை தான்; இன்பக் கவலை!

அந்த வளம் பொருந்திய பூமி போலத்தானே மக்களும் இருப் பார்கள்! அவருள்ளும் செல்வர்களைப்பற்றிச் சொல்லவா வேண் டும்? 'மினு மினு' என்று தோன்றும் மேனி. வேறு பொழுது போக்கு எதுவுமில்லை. ஆடல் மகளிர் வீடு தேடாமல் வேறு என்ன செய்வான்? ஆடலும் பாடலும்தானே சிந்தையைக் கவரும்! இன்பந்தரும்! ஆடல் அழைக்கும்; பாடல் அணைக்கும். ஆனந்தமாக இருப்பார்கள்.

பாண்டிய மன்னன் ஒருவன்; இளைஞன். மதுரை மா நகரில் செங்கோல் செலுத்தி வந்தான். இந்த உலகம் முழுதும் ஒரு குடைக்கீழ் ஆளல் வேண்டும் என்ற ஆசை கொண்டவன்.

மண்ணாசைகொண்ட போதிலும் வெறிகொண்டு அலைய வில்லை. ஏன்? அன்று மதுரை மாநகரில் அமைந்திருந்த சமூகம் அப்படிப்பட்டது.

தலைமுறை தலைமுறையாக மிகப் பண்பாட்டுடன் வளர்ந்தவர் கள் மதுரை மக்கள். ஆண்டுதோறும் அறிஞர்களும் கவிஞர்களும்

கூடி புதுப்புது உரையாடல்களை நிகழ்த்திய இடம். அதைக் கேட்டு மக்கள் பண்பு பெற்றிருந்தார்கள். அறிவுவளரப் பெற்றிருந்தார்கள். பண்புமிக்க உள்ளத்திலே மண் ஆசை எழுமா? எழாது.

எனவே மன்னனின் மண்ணுசை எந்த அளவில் நின்றது? அவனது உள்ளத்தளவில்தான் நின்றது. செயலில் நிகழவில்லை.

உள் நாட்டிலும் வளத்திற்குக் குறைவில்லை; பகைவர் பயமில்லை. மக்கள் அமைதியாக வாழ்ந்தார்கள்.

இந் நிலையில் மன்னன் என்ன செய்வான்? அவனோ இளைஞன். அவனுக்கோ வேறு வேலை ஏதுமில்லை. என் செய்வான்? சிந்தைக்கு வேலை வேண்டுமே!

ஆடலிலும் பாடலிலும்சென்றது அவன் உள்ளம். அவன்தான் இருக்கிறானே பாணன்! அவன் சும்மா இருப்பானு? கொஞ்சம் கொஞ்சமாகக் 'காதைக் கடித்தான்'. மனதைக் கரைத்தான்; மகளிர் பற்றிக் கூறினன்.

தேர்ப்பாகனும் விலாசம் தவருமல் கொண்டு போய்ச் சேர்த்தான். நாளடைவில் இதுவே தொழிலாகிவிட்டது. நித்திய கல்யாணம்! போட்டி! போட்டி! ஒரே போட்டி! 'நான் ! நீ' என்று போட்டியிட்டனர் ஆடல் மகளிர்; எதற்காக? மன்னனை மயக்க.

நாட்டிலே தலைகாட்ட முடியவில்லை. மன்னனைப் பழித்தனர் ! இழித்தனர். இவையெல்லாம் கண்டானு மன்னன் ! பிரெஞ்சு தேசத்தை ஆண்ட லூயி போலிருந்தான் !

கண்டாள் அரசி. அந்த அரசனின் மனைவி. வருந்தினள் ; மிக வருந்தினள்.

ஒரு நாள். அரண்மனையிலே விழா. ஆனல் அரசன் இல்லை. 'ஆடல் மகளிர் வீடே கதி' என்று கிடக்கிறான். விழாவை நிறுத்தவில்லை அரசி. நடத்துகிருள்.

அந்த வழியே சென்றான் பாணன். அரண்மனையிலே விழா நடப்பது கண்டான். உள்ளே நுழைந்தான். அங்கே அரசனைக் காணோம். அரசி இருந்தாள். அருகே சென்றான்.

"அரசர் எங்கே?" என்று கேட்டான்.

அரசிக்கு வருத்தம். பதில் கூறவில்லை.

இந்நிலையில் அரசனும் அங்கு வந்தான். கண்டாள் அரசி. இந்தமாதிரி சந்தர்ப்பங்களில் மனித இயல்பு என்ன ? சிறுவது

தானே! சீறினளா அரசி? இல்லை. கடிந்தாளா? இல்லை. சுடு மொழிகளை அள்ளி வீசினளா? இல்லை.

பின் என்ன செய்தாள்? அன்பாக நோக்கினள். ஆசையாக அழைத்தாள். இன்பமாகப் பேசினள்.

"பரத்தையர் பலர் இங்கே வருகின்றனர்! நீ எங்கே என்று கேட்கின்றனர். அவரை நான் கோபிக்கவில்லை.

"பாணன் இங்கே வந்தான். நீ எங்கே என்று கேட்டான். அவன் தான் உன்னை ஆடல் மகளிரிடம் கொண்டு போகிறன் என்பதும் எனக்குத் தெரியும். எனினும் அவனை நான் கோபிக்கவில்லை.

"அதோ நிற்கிறனே! தேர்ப்பாகன்! அவன் என்ன செய்கிறன் என்பதும் எனக்குத் தெரியும். அவனையும் நான் கண்டிக்கவில்லை.

"ஆனல் ஊரார் உன்னைப் பழிக்கிறர்களே! அதற்கு என்ன செய்வேன்? அதுகண்டுதான் என் மனம் வருந்துகிறது. நீ என்னை விட்டுப் போனதால் வருந்தினேன். ஆனல் உன் மீது கோபம் சிறிதுமில்லை. இப்போதாவது வந்தாயே! அதுவே போதும்" என்றள்.

உளநூல் ஆராய்ச்சி வல்லவர் என்ன சொல்வர்? இதுவே சிறந்த வைத்தியம் என்று சொல்வர். ஏன்? பரத்தையர் பின்னே திரிவதும் ஒரு வித நோய். மன நோய். இது உளநூல் வல்லார் கூறுவது.

அந்த நோய் தீர்க்கும் மருந்து எது? இனிய பேச்சு. இனிய வரவேற்பு. இன் முகம்.

இந்த மருநதை அளித்தாள் அரசி. இன்றல்ல; அன்று. நீண்டகாலம் முன்பே.

பொது மொழி பிறர்க்கு இன்றி முழுது ஆளும்
செல்வர்க்கு
மதி மொழி இடல் மாலை வினைவர் போல், வல்லவர்
செது மொழி சீத்த செவி செறு ஆக,
முது மொழி நீரா, புலன் நா உழவர்
புது மொழி கூட்டுண்ணும், புரிசை சூழ், புனல் ஊர!

'ஊரன் மன் உரன் அல்லன், நமக்கு' என்ன, உடன்
வாளாது,
ஓர் ஊர் தொக்கு இருந்த நின் பெண்டிருள் நேராகி,
களையா நின் குறி வந்து, எம் கதவம் சேர்ந்து
அசைத்த கை
வளையின்வாய் விடல் மாலை மகளிரை நோவேமோ -
'கேள் அலன், நமக்கு அவன், குறுகன்மின்' என,
மற்று எம்
தோளொடு பகைபட்டு நினை வாடு நெஞ்சத்தேம்?

'ஊடியார் நலம் தேம்ப, ஒடியெறிந்து, அவர்வயின்
மால் தீர்க்கும் அவன் மார்பு' என்று எழுந்த சொல்
நோவேமோ -
முகை வாய்த்த முலை பாயக் குழைந்த நின் தார் எள்ள,
வகை வரிச் செப்பினுள் வைகிய கோதையேம்?

சேரியால் சென்று, நீ சேர்ந்த இல் வினாயினன்,
தேரொடு திரிதரும் பாகனைப் பழிப்பேமோ -
ஒலி கொண்ட சும்மையான் மண மனை குறித்து,
எம் இல்,
'பொலிக' எனப் புகுந்த நின் புலையனைக் கண்ட யாம்?
என ஆங்கு,

நனவினுன் வேறுகும் வேளா முயக்கம் -
மனை வரின், பெற்று உவந்து, மற்று எம் தோள் வாட,
'இனையர்' என உணர்ந்தார் என்று ஏக்கற்று, ஆங்கு,
கனவினுள் எய்திய செல்வத்து அனையதே -
ஐய எமக்கு நின் மார்பு.

## 85. இளம் உள்ளமும் இன்ப வெள்ளமும்

ஆடலும் பாடலும் எங்கே காணலாம்? எங்கே செழுமை இருக்கிறதோ - எங்கே வளமிருக்கிறதோ - எங்கே உணவுக் குறைவில்லையோ - எங்கே அமைதி நிலவுகிறதோ - எங்கே

ஆனந்தமிருக்கிறதோ - எங்கே அறிவிருக்கிறதோ - எங்கே பசுமை இருக்கிறதோ - எங்கே சோலை இருக்கிறதோ - அங்கே ஆடல் நிகழும்; பாடலும் நிகழும். ஆடலும் பாடலும், கைகோத்து வளம் பெறும்.

மருத நிலத்திலே ஆடல் பாடலுக்குக் குறைவேது? பொய்கையிலே தாமரை மலர்ந்திருக்கும். அந்தத் தாமரையைச் சுற்றிச் சுற்றி வரும் அன்னம். தன் பெடையுடன் அழகு நடை நடந்து வரும். அக்காட்சி எப்படியிருக்கும்? மணம் செய்து கொள்பவன், தன் மனைவி கைப்பற்றி செந்தழலை வலம் வருதல் போல் இருக்கும்.

இத்தகைய மருத நிலத்திலே ஒரு பேரூர். ஆடல் மகளிர் நிறைந்த ஊர். அந்த ஊரிலே ஒருநாள். காலில் சிலம்பு 'கலீர் கலீ'ரென்று ஒலிக்க, கைவளை மின்ன வருகிறாள் ஒருத்தி; ஆடல் மகள்.

கண்டான் ஓர் இளைஞன்; சிந்தை பறி கொடுத்தான். சிலம்பு ஒலியின் பின்னே சென்றது அவனது உள்ளம்.

"யாரடா?" என்றான்.

"ஏன்?" என்றான் தேர்ப்பாகன்.

"அதோ போகிறாளே..." என்றான்.

"அவளா?" என்றான் பாகன்.

"தெரியுமோ?"

"தெரியவில்லையே..." என்று இழுத்தான் பாகன்.

"நல்லா ஆடுவாள் போலிருக்கே" என்றான் அவன்.

"ஆமாம். ஆடும் மகளிர்தானே!"

"அழகாயிருந்து ஆடினால் நன்றாகத்தானிருக்கிறது; இல்லையா?" என்றான்.

"உம்" என்றான் தேர்ப்பாகன்.

இளைஞனின் உள்ளம் எவ்வளவு வேகமாக வேலை செய்கிறது என்பதை அறிந்து கொண்டான் தேர்ப்பாகன். அவ்வளவு விரைவாகத் தேரை ஓட்ட முடியவில்லை அவனால். ஒரு சோலையுள் புகுந்தான். இளைஞனை அங்கேயே இருக்கச் சொன்னான். கிளம்பினான், அவளைத் தேடி.

இளைஞன் சோலையிலே இருந்தான், அவளது வருகை

நோக்கி. தேர்ப்பாகனுக்கா தெரியாது அவள் விலாசம்! சென்ருன்; பேசினுன்; கொண்டு வந்து விட்டான் அவளை.

அவள் ஆடினுள்; பாடினுள். மகிழ்ந்தான் இளைஞன். இன்பத்தில் திளைத்தான். பின் புதுப்புனலில் இறங்கினுன். அவளுடன் நீந்தினுன்; விளையாடினுன். பிறகு மலர் கொண்டு வந்தான். கூந்தலிலே சூட்டினுன். மகிழ்ந்தான். மாலையில் வீடு வந்து சேர்ந்தான்.

'காலையில் சென்ற காதலனைக் காணேமே' என்று தேடினுள் அவனது காதலி.

'சோலையிலே ஆடல் மகளுடன் இருக்கிருன்' என்று கூறினர். கேட்டாள் அவள். மிக வருந்தியிருந்தாள்.

வருந்தியிருந்தவள் முன்வந்து நின்ருன், அவ் வாலிபன். அவளுக்குக் கோபம். அவனுடன் பேசவேயில்லை.

'சரி; இவள் தெரிந்து கொண்டாள்' என்று முடிவு செய்தான் அவன்; அவளைச் சமாதானம் செய்ய எண்ணினுன்; மெதுவாகப் பேசுகிருன்:

"கோபமா?"

அவள் பேசவில்லை.

"கண்ணே, என்னைப் பார்!"

அவள் பார்க்கவில்லை. கன்னத்தைத் தடவினுன். அவள் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

"நான் சோலையிலே அந்த ஆடல் காரியுடன் இருந்தேன் என்று கோபமா?" என்று கேட்டான். அப்போதும் அவள் பேசவில்லை.

"இதோபார்! நீ நினைக்கிறபடி ஒன்றுமில்லை" என்ருன்.

அப்போதும் அவள் பேசவில்லை. 'உம்' மென்று இருந்தாள்.

"அது சுத்த மோசம்" என்ருன் அவன். அப்போதும் அவள் பேசவில்லை.

"சேச் சே! ரொம்பக் கெட்டழிந்தவள்" என்ருன் பொதுப்படையாக. அப்போதும் அவள் பேசவில்லை.

"அதுகளோடு சகவாசம் செய்வேனே?" என்ருன்.

அதுவரை அடங்கிக் கிடந்த கோபம் பீறிட்டு வந்தது அவளுக்கு.

"ஏய்! ஏன் பொய் சொல்கிறாய்?" என்று சீறினாள்.

"என்ன பொய் சொல்லி விட்டேன்?" என்றான் அவன்.

"உன் தேர்ப்பாகன் அவளைக் கொண்டு வரவில்லையா? நீ அவளுடன் ஆடவில்லையா? பாடவில்லையா? நீரில் இறங்கி நீந்தி விளையாடவில்லையா? மலர் கொய்து சூட்டவில்லையா? எனக்கு ஒன்றும் தெரியாது என்று நினைத்தாயோ? தெள்ளத் தெரியும் ஐயா, உனது கள்ளத்தனம் எல்லாம்" என்றாள். 'பட பட' என்று வெடித்தாள், தீபாவளியன்று பட்டாசு வெடிப்பது போல.

சிறிது நேரம் மௌனம் நிலவியது. கோபம் தணிந்தாள். பிறகு சொல்கிறாள்:

"நீ எங்கே வேண்டுமானாலும் போ. நான் வேண்டாம் என்று சொல்லவில்லை," என்றாள்.

அவன் அவளையே பார்த்தான்

"ஆனால் பொய் மாத்திரம் சொல்லாதே" என்றாள்.

மீண்டும் அவளையே பார்த்த வண்ணம் இருந்தான் அவன்.

"உன் ஆசையெல்லாம் தீரும் வரை ஆடி விளையாடு. என்ன என்ன ஆட்டமெல்லாம் ஆடுகிறாயோ ஆடு."

"அப்புறம்?" என்றான் அவன்.

"அப்புறம் நான் ஒருத்தி இருக்கிறேன் என்று நினை. அதுவே போதும் எனக்கு" என்றாள்.

**போ**து அவிழ் பனிப் பொய்கை, புதுவது தளைவிட்ட
தாது சூழ் தாமரைத் தனி மலர்ப்புறம் சேர்பு-
காதல் கொள் வதுவை நாள், கலிங்கத்துள் ஒடுங்கிய
மாதர் கொள் மான் நோக்கின் மடந்தை தன்
துணையாக,
ஓதுடை அந்தணன் எரி வலம் செய்வான் போல்,
ஆய் தூவி அன்னம் தன் அணி நடைப் பெடையொடு-
மேதகத் திரிதரூஉம் மிகு புனல் நல் ஊர!

**தெ**ள் அரிச் சிலம்பு ஆர்ப்ப, தெருவின்கண் தாக்கி, நின்
உள்ளம் கொண்டு, ஒழித்தாளைக் குறை கூறிக்
கொள நின்றாய்
துணிந்தது பிறிதாக, 'துணிவிலள் இவள்' என, ५

பணிந்தாய் போல் வந்து, ஈண்டுப் பயனில
மொழிவாயோ?

பட்டுழி அறியாது, பாகனைத் தேரொடும்
விட்டு, அவள் வரல் நோக்கி, விருந்து ஏற்றுக்கொள
நின்றாய்
நெஞ்சத்த பிறவாக, 'நிறையிலள் இவள்' என,
வஞ்சத்தான் வந்து, ஈங்கு வலி அலைத்தீவாயோ?

இணர் ததை தண் காவின், இயன்ற நின் குறி வந்தாள்
புணர்வினில் புகன்று, ஆங்கே புனலாடப் பண்ணியாய்
தருக்கிய பிறவாக, 'தன் இலள் இவள்' என,
செருக்கினால் வந்து, ஈங்குச் சொல் உகுத்தீவாயோ?

என ஆங்கு,

தருக்கேம், பெரும! நின் நல்கல்; விருப்புற்றுத்
தாழ்ந்தாய் போல் வந்து, தகவில செய்யாது,
சூழ்ந்தவை செய்து, மற்று எம்மையும் உள்ளுவாய் -
வீழ்ந்தார் விருப்பு அற்றக்கால்.

## 86. பாணன்மீது பாணம்!

"எங்கே இவ்வளவு தூரம்?"
"உன்னிடம்தான்."
"என்னிடமா? என்ன விசேஷம்?"
"அவள் கோபமாயிருக்கிறாள்."
"எவள்?"
"காதலி."
"யார் மீது?"
"என் மீது."
"ஏன்?"
"ஒன்றுமில்லை."
"ஒன்றுமில்லாமலா ஒருத்தி கோபமாயிருப்பாள்?"
"அந்தப் பக்கம் போயிருந்தேன்."

"எந்தப் பக்கம்?"

"ஆடல்காரர் தெருப் பக்கம்."

"அடே! தெருப்பக்கம் போனதற்கா ஒருத்தி கோபிப்பாள்?"

"இல்லை."

"அப்புறம்?"

"ஆடல் மகள் ஒருத்தி வீட்டில்....."

"ஊ ஹூம். அவள் வீடு எப்படித் தெரிந்தது?"

"பாணன்..."

"அவன் தானே! குடி கெடுக்கிறவன்."

"எவ்வளவு நாள் அவள் வீட்டில் தங்கினாய்?"

"சில காலம்."

"அங்கே நீ நடத்திய கூத்தெல்லாம் எங்கள் காதில் வந்து விழுந்தன. அவள் கண்ணீர் விட்டாள். துயர் மிக்காள். தூக்கம் இன்றி வாடினாள். நீ எப்படித்தான் அவளை மறந்தாய்! அதோ பார், அந்தப் பொய்கையிலே உள்ள அன்னப் பறவைகளை! சேவலும் பெடையும் எவ்வளவு இன்பமாயிருக்கின்றன. தாமரை இலை மூடியது சேவலை. பெடை தேடுகிறது. கவலை கொள்கிறது. முழுமதியின் நிழல் பொய்கையில் விழுகிறது. அது கண்டு தாவி ஓடுகிறது பெடை, அதுதான் சேவல் என்று நினைத்து. பிறகு தன் மதியீனம் கண்டு வெட்கித் தாமரை இலையில் தன்னை மறைத்துக் கொள்கிறது. இவ்வளவு இன்பமாக இருக்கிறது அன்னம். அதைப் பார்த்தாவது நீ அறிந்து கொள்ள வேண்டாமா!"

"சரி. இனிமேல் போகமாட்டேன்."

"உன் மீது குறையில்லை. எல்லாம் அந்தப் பாணனால் வந்த வினை. இனி அவன் இந்தப் பக்கம் வரக் கூடாது. வந்தால் என்ன செய்வேன் தெரியுமா?"

மணி நிற மலர்ப் பொய்கை, மகிழ்ந்து ஆடும்
அன்னம் தன்
அணி மிகு சேவலை அகல் அடை மறைத்தென,
கதுமென, காணாது, கலங்கி, அம் மடப் பெடை
மதி நிழல் நீருள் கண்டு, அது என உவந்து ஓடி,

துன்னத் தன் எதிர் வரூஉம் துணை கண்டு, மிக நாணி,
பல் மலரிடைப் புகூஉம் பழனம் சேர் ஊர! கேள்:

நலம் நீப்பத் துறந்து எம்மை, நல்காய் நீ விடுதலின்,
பல நாளும் படாத கண், பாயல் கொண்டு, இயைபவால்;
துணை மலர்க் கோதையார் வைகலும் பாராட்ட,
மண மனைத் ததும்பும் நின் மண முழ வந்து எடுப்புமே.
அகல நீ துறத்தலின், அழுது ஓவா உண்கண், எம்
புதல்வனை மெய் தீண்ட, பொருந்துதல் இயைபவால்;
நினக்கு ஒத்த நல்லாரை நெடு நகர்த் தந்து நின்
தமர் பாடும் துணங்கையுள் அரவம் வந்து எடுப்புமே.

வாராய் நீ துறத்தலின், வருந்திய எமக்கு, ஆங்கே
நீர் இதழ் புலராக் கண் இமை கூம்ப இயைபவால்;
நேர் இழை நல்லாரை நெடு நகர்த் தந்து, நின்
தேர் பூண்ட நெடு நல் மான் தெள் மணி வந்து
எடுப்புமே.

என ஆங்கு -

மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலை போல்,
எல்லாம் துயிலோ எடுப்புக - நின் பெண்டிர்
இல்லின் எழீஇய யாழ் தழீஇ, கல்லா வாய்ப்
பாணன் புகுதராக்கால்!

## 87. ஆடும் மகளும் நாடும் மனமும்

"எங்கே அவர்?"
"எவர் அம்மா?"
"எவரா? அவர்தான்."
"ஐயாவா?"
"ஆமாம்."
"இங்கே இல்லையா?"
"இருந்தால் உன்னைக் கேட்பேனா?"
"எனக்குத் தெரியாதே."

"உனக்குத் தெரியாமல் அவர் எங்கே போய் விடுவார் ?"

"மெய்யாகச் சொல்கிறேன். எனக்குத் தெரியாது."

"ஊரிலே இருக்கிற ஆட்டக்காரிகள் வீட்டு விலாசமெல்லாம் உனக்குத்தானே தெரியும்?"

"அது சரி. ஆனால்...நான் எங்கும் அவரை அழைத்துப் போகவில்லை."

"நிஜமாகவா?"

"இந்த ரதத்திலிருந்து கொண்டு சொல்கிறேன். நான் எங்கும் அவரைக் கொண்டு விடவில்லை."

"சத்தியமாகவா?"

"சத்தியம்; விட்டேன்."

"சரி; போ."

தேர்ப்பாகன் போய்விட்டான். உறுமிக்கொண்டு இருந்தாள் அவள்.

அந்த நேரத்திலே வந்தான் பாணன். அவன் மீதும் அள்ளி வீசினாள் அவள்.

"எந்தக் கோகிலத்தின் வீட்டிற்குக் கூட்டிச் சென்றாயடா அவரை ?"

"ஐயோ! தாயே! நான் ஒரு பாவமும் அறியேனே !"

"ஆமாம்! ஆமாம்! நீ ஒன்றுமே அறியமாட்டாய்!"

"தாயே! உன்னிடம் ஒளிப்பேனா?"

"உனக்குத் தெரியாதா?"

"தெரியவே தெரியாது."

"சத்தியமாகவா ?"

"சத்தியமாகச் சொல்கிறேன். இந்த யாழின் மீது ஆணையாகச் சொல்கிறேன். எனக்கு ஒன்றுமே தெரியாது."

"சரி, போ."

பாணனும் போனான். மேலும் சீறிக்கொண்டிருந்தாள் அவள்.

"எங்கே? அவர் இல்லையா?" என்றது ஒரு குரல்.

தலை நிமிர்ந்தாள். நண்பன் நின்று கொண்டிருந்தான்.

"இல்லை."

"எங்கேயோ?"

"தெரியாது."

"தெரியாதா ?"

"ஆமாம்."

"வீட்டிலே சொல்கிறதில்லையா ?"

"சொல்லக்கூடிய இடத்துக்குப் போனால்தானே?"

"அதென்ன; புதிராக இருக்கிறதே."

"ஆமாம்! சொல்வதற்கு வெட்கப்படும் இடத்துக்குப் போகிறவர் எப்படி என்னிடம் சொல்லிக்கொண்டு போவார்?"

"அப்படியெல்லாம் போகமாட்டாரே."

"ஆமாம் ! உங்கள் சிநேகிதரை நீங்கள்தான் புகழ வேண்டும்."

"நீங்கள் ஏதோ தப்பாக நினைத்து இருக்கிறீர்கள்."

"தப்பே இல்லை சரியாகத்தான்."

"அப்படியா ?"

"ஆமாம்! எந்நேரமும் அங்கேதான் இருப்பு."

"எங்கே ?"

"எந்த நாட்டியக்காரி வீடோ!"

மேலும் பேசினால் ஆபத்து என்று அறிந்து கொண்டான் அவன். போனான்.

அவளுக்கு நிம்மதி இல்லை. ஒரே குழப்பம். படுத்தாள். படுக்கை கொள்ளவில்லை. கண்ணை மூடினாள்; உறக்கம் வரவில்லை. இரவு முழுதும் இப்படி அவதிப்பட்டாள். அமைதி இல்லாமல் கொந்தளித்தது மனம். எங்கேயாவது காற்றாடப் போய் வரலாம் என்று நினைத்தாள். மனதிலே ஏற்பட்டுள்ள வெப்பத்தைத் தணிப்பதற்கு ஏதாவது வேண்டுமே! 'சில்'லென்ற காற்றை விரும்பியது மனம். பொய்கைக் கரைக்குச் சென்றாள். அங்கே என்ன கண்டாள்?

இளம் ஞாயிறு; மெல்ல எட்டிப் பார்த்தது. கண்டன கமலங்கள். கதிரை அணைத்தன; மலர்ந்தன. மலரைச் சுற்றி வந்தது வண்டு. சுற்றிக்கொண்டே இருந்தது. அப்பால் போகவில்லை. ஏன்? தேன் உண்ட ருசி.

உள்ளத்தில் உள்ளதுதானே எண்ணத்தில் வரும்? அவ

ளுக்கும் ஓர் எண்ணம் எழுந்தது. என்ன எண்ணம்?' காதலனைப் பற்றிய எண்ணம்.

அவன் நாட்டிய மகளிர்பால் இன்பம் கண்டான். அது அவன் சிந்தையை விட்டு அகலவில்லை. அங்கேயே சுற்றித் திரிகிறான். எது போல? அந்த வண்டுபோல.

வண்டையும் மலரையும் மாறி மாறிப் பார்த்தாள் அவள்.

தாமரை மலர்கிறது. சூரியனின் வருகைகண்டு. அதன் மீதுள்ள பனித்துளி கரைகிறது; நீங்குகிறது.

கண்டாள் அவள்.

"அவன் வாரானோ? அவன் வருகை கண்டு என் முகம் மலராதோ? என் கண்ணீர் நீங்காதோ?" என்று எண்ணினாள்.

"சரி; வீடு செல்வோம்" என்று புறப்பட்டாள்.

வீட்டுக்கு வந்தாள். அங்கே என்ன கண்டாள்? அவன் வந்திருக்கக் கண்டாள்? எக் காட்சி வழங்கினான் அவன்? பரவை வீட்டிலிருந்து திரும்பிய சுந்தரமூர்த்தியாக விளங்கினான்.

கண் வளையமிட்டிருந்தது. பல் தேய்க்கவில்லை. வெற்றிலை பாக்கு மென்ற காவி படிந்திருந்தது. தலையெல்லாம் அலங் கோலம். மார்பிலே சந்தனம். மல்லிகை மணம் இன்னும் அகல வில்லை. கன்னத்திலே திட்டுத் திட்டாகச் சிவந்திருந்தது. உதடும் சிவந்திருந்தது; வெற்றிலை போட்டதால் அல்ல!

இந்தக் கோலத்துடன் வந்த காதலனைக் கண்டாள்; கோபம் கொண்டாள். கோபம் யார் மீது? அவன் மனதைக் கரைத்து ஆடல் மகளிர்பால் திருப்பினானே! அந்தப் பாணன் மீது! 'எனக்கு ஒன்றுமே தெரியாது' என்று பொய்ச் சத்தியம் செய்தானே! அவன் மீது. பாணன் மீதும், பாகன் மீதும், நண்பன் மீதும் சினம்.

வரட்டும் அவர்கள். நீ ஏதோ ரொம்ப யோக்கியன் என்று சொன்னார்களே! உன்னை இந்தக் கோலத்தில் பார்க்கட்டும்" என்று சீறினாள். சிறிது நேரம் அமைதி நிலவியது. ஒன்றுமே பேச வில்லை. இருவரும் பேசாதிருந்தனர். அப்போதும் அவளுக்குக் கோபம் தணியவில்லை.

"ஏன் உட்கார்ந்திருக்கிறாய்? புறப்படு! போ! யார்மீது ஆசை இருக்கிறதோ அங்கேயே போ! பயிர் வாடுகிறது. எதற்கு?

மழைக்கு. வாடுகிறபோது நல்ல மழை பொழியாமல் சிறு தூறல் போடுவதால் என்ன பயன், வாடும் பயிருக்கு? ஒரு பயனும் இல்லை. அந்த மாதிரிதான் இருக்கிறது உன் வரவு. அதனால் எனக்கு ஒரு பயனுமில்லை. நீ வரவே வேண்டாம். போ! அவள் வீட்டுககே போ'' என்று ஆத்திரமாகக் கூறினாள்.

விரிகதிர் மண்டிலம் வியல் விசும்பு ஊர்தர,
புரி தலை தளை அவிழ்ந்த பூ அங்கண் புணர்ந்து ஆடி,

வரி வண்டு வாய் சூழும் வளம் கெழு பொய்கையுள் -
துனி சிறந்து இழிதரும் கண்ணின் நீர் அறல் வார,
இனிது அமர் காதலன் இறைஞ்சித் தன் அடி சேர்பு,
நனி விரைந்து அளித்தலின், நகுபவள் முகம் போல -
பனி ஒரு திறம் வார, பாசடைத் தாமரைத்
தனி மலர் தளை விடூஉம் தண் துறை நல் ஊர!

'ஒரு நீ பிறர் இல்லை, அவன் பெண்டிர்' என உரைத்து,
தேரொடும் தேற்றிய பாகன் வந்தீயான்கொல் -
ஓர் இல் தான் கொணர்ந்து உய்த்தார் புலவியுள்
பொறித்த புண்
பாரித்துப் புணர்ந்த நின் பரத்தைமை காணிய?

'மடுத்து அவன் புகுவழி மறையேன், என்று,
யாழொடும்
எடுத்துச் சூள் பல உற்ற பாணன் வந்தீயான்கொல் -
அடுத்துத் தன் பொய் உண்டார்ப் புணர்ந்த நின்
எருத்தின்கண்
எடுத்துக்கொள்வது போலும் தொடி வடுக் காணிய?

'துணந்தனை' எனக் கேட்டு, தவறு ஓராது, எமக்கு நின்
குணங்களைப் பாராட்டும் தோழன் வந்தீயான்கொல்
கணங்குழை நல்லவர் கதுப்பு அறல் அணைத் துஞ்சி,
அணங்கு போல் கமழும் நின் அலர் மார்பு காணிய?

என்று, நின்

தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்
யார்? – நீ ஒரு நாள் போல் அமைகுவம் யாம்;
புக்கீமோ! –
மாரிக்கு அவாவுற்றுப் பீள் வாடும் நெல்லிற்கு, ஆங்கு,
ஆராத் துவலை அளித்தது போலும், நீ
ஓர் யாட்டு ஒரு கால் வரவு.

## 88. வடுவும் வாட்டமும்

சமூகத்தின் முன்னோடிகள் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? மிகவும் கவனமாக நடந்துகொள்ள வேண்டும். மறந்தும் தவறு செய்தல் கூடாது. அவ்விதம் செய்தால் என்னாகும்? சமூகத்திலே உள்ள மற்றையோரும் அவரையொட்டியே நடக்கத் தலைப்படுவர்.

சமூகத்தின் முன் அணியில் இருப்பவர் நேர்மையாக இருக்கிறவரையில் எல்லாம் சரியாக நடைபெறும். நீதி இருக்கும்; நேர்மை இருக்கும்; ஒழுங்கு இருக்கும்.

சமூகத்தின் முன் நிற்பவன் அயோக்கியனாக இருந்தால், அத்தகைய கூட்டமே அவனைச் சுற்றி வளரும். சமூகம் நாசமாகும்.

"அகப்பட்டதைச் சுருட்டடா ஆண்டியப்பா" என்ற கொள்கைக்காரன் சமூகத்தில் முதல்வனாயிருந்தால் சமூகம் என்னாகும்? இந்தக் கும்பலுக்கு இரையாகும்.

அதனால்தான் ஆட்சி பீடத்தில் அமர்பவன் ஒழுங்கும், ஒழுக்கமும் உள்ளவனாயிருக்க வேண்டும் என்றனர். ஒழுக்கம் இன்றேல் ஒழுங்கு எங்கிருந்து வரும்? வாழ்க்கையில் ஒழுங்கில்லாதவன் செய்யும் செயல் எப்படியிருக்கும்? ஒழுங்கற்றதாகவேயிருக்கும். ஒழுங்கற்ற செயல் எவரைப் பாதிக்கும்? சமூகத்தை; மக்களை.

சமூகத்தின் முன்னோடிகளான செல்வர்கள் பரத்தை வீடு நாடத் தொடங்கியதும் என்ன ஆயிற்று?

பாகன் என்ன ஆனான்? பாணன் என்ன ஆனான்? அந்தணன் என்ன ஆனான்? எல்லாரும் நெறி கெட்டுப் போயினர்.

ஆடல் மகளிர்களின் வீட்டு விலாசங்களைச் சேகரிப்பதில் முனைந்தான் பாகன். ஏன்? அப்போதுதானே செல்வனின் தயவு கிட்டும்? அதனால்.

நல்ல பாடல்களைப் பாடி, யாழிலே இசைத்து மனதை ஒழுங்கான வழியில் செலுத்தும் தொழிலை மேற்கொண்ட பாணன் என்ன ஆனான்?

காமத்தைத் தூண்டும் பாடல்களை இசைத்தான். கருத்தைச் சிதைக்கும் பாடல்களைப் பாடினான். ஆடல் மகளிரைப் பற்றி வர்ணித்தான். பின் என்ன தொடரும்? கேட்போர் மனம் ஆடல் மகளிரிடம்தானே செல்லும்! அதற்கும் துணை நின்றான்.

ஓர் அரசனுக்கும் மற்றோர் அரசனுக்கும் தூது சென்று நல்லுரை கூறி ஆட்சியை நல்வழியில் செலுத்த வேண்டிய அந்தணன் என்ன செய்தான்? செல்வர் பொருட்டு ஆடல் மகளிர்பால் தூது சென்றான்.

சமூகத்திலே நெறி கெட்டது. மனையரசி மனம் புழுங்கினாள். தாலி கட்டிய பெண்டாட்டி தவித்தாள்.

இந்த மாதிரியான சூழ்நிலையிலே அவள் வாழ்ந்தாள். கணவன் போய்விட்டான், ஆடல் மகளிர் வீடு தேடி. பாகன் கொண்டு போய் விட்டான். பாணன் அறிமுகம் செய்து வைத்தான். அந்தணன் தூது சென்றான். அவன் அங்கே ஆனந்தமாக இருக்கிறான்.

ஆனால், இங்கே—வீட்டிலே—பெண்ணரசி தவிக்கிறாள்; துடிக்கிறாள்; வாடுகிறாள்; வருந்துகிறாள்; ஏங்குகிறாள். அமைதியின்றி அல்லற்படுகிறாள். அந்த வருத்தத்தை மறக்க முயற்சி செய்கிறாள்.

கிளி ஒன்று. அழகான கிளி. அதனுடன் விளையாடுகிறாள். வெள்ளிக் கிண்ணத்திலே பால் வார்த்தாள். அதிலே ஆறுதல் கண்டாள்; முகம் மலர்ந்தாள் சிறிது.

மீண்டும் சென்றாள். படுக்கையிலே படுத்தாள். நீல நிறப் பட்டு மெத்தை! அன்னத்தின் இறகுகளால் செய்த தலையணை! அதிலே படுத்தாள். கண்ணை மூடினாள் தூக்கம் வந்தால்தானே!

பொழுதும் விடிந்தது. மெல்லிய காற்றை விரும்பியது அவள் மனம். பொய்கைக் கரை சென்றாள்.

பொய்கையிலே அல்லியும் தாமரையும் படர்ந்திருக்கின்றன. கரையிலே ஒரு மாமரம். பொய்கையின் பக்கம் தாழ்ந்திருக்கிறது அதன் கிளை ஒன்று.

'பொத்'தென்று விழுந்தது மா வடு ஒன்று. தாமரை மொட்டைத் தாக்கிற்று. மொட்டு அலர்ந்தது. சூரியனைக் கண்டு மலர வேண்டிய தாமரை,மா வடு கண்டு மலர்ந்தது. அந்நிகழ்ச்சி கண்டாள் அவள்.

கணவனின் வருகை கண்டு மலரவேண்டிய அவளது முகம், கிளியின் மொழி கேட்டு மலர்ந்ததே! அது அவளது நினைவுக்கு வந்தது.

வீடு திரும்பினாள். அங்கு யாரைக் கண்டாள்? கணவனைக் கண்டாள்.

அலங்கோலமாக அவன் நிற்கக் கண்டாள். கண்டதும் சினங் கொண்டாள்.

"பரத்தையர் வீட்டுக்குத்தான் போனாய். இந்த அலங் கோலங்களையெல்லாம் திருத்திக்கொண்டாவது வரக கூடாதா? இந்த அலங்கோலக் காட்சியை நான் வேறு காணவேண்டுமா? இந்த மாதிரி உனக்கு யோசனை கூறியவர் யார்? அந்தப்பாணனோ? அல்லது அந்தப் பரத்தையோ? இல்லையேல் அந்த அந்தணன் தான் இவ்வாறு கூறினானோ?

"இவ்வாறு நாணமில்லாமல் வருகிறாயே! எனக்குப் பெருத்த அவமானமாக இருக்கிறதே! இப்படி என் முகத்தில் வந்து விழிக் காதே. அவள் வீட்டிலேயே இருந்து விடு. நீ வராமல் இருந்தால் கூட பாதகமில்லை. சகித்துக் கொள்வேன். இந்த அலங்கோலக் காட்சி என்றால் பொறுக்க முடியவில்லை. போ! போ! போய் விடு" என்றாள்.

இணை பட நிவந்த நீல மென் சேக்கையுள்,
துணை புணர் அன்னத்தின் தூவி மெல் அணை அசைஇ,
சேடு இயல் வள்ளத்துப் பெய்த பால் சில காட்டி,
ஊடும் மென் சிறு கிளி உணர்ப்பவள் முகம் போல,
புது நீர புதல், ஒற்றுப் புணர் திரைப் பிதிர் மல்க,
மதி நோக்கி அலர் வீத்த ஆம்பல் வால் மலர் நண்ணி,

கடி கயத் தாமரைக் கமழ் முகை, கரை யாவின்
வடி தீண்ட, வாய் விடூஉம் வயல் அணி நல் ஊர !

கண்ணி, நீ கடி கொண்டார்க் கனைதொறும், யாம் அழ,
பண்ணினல் களிப்பிக்கும் பாணன் காட்டு என்ருளே -
'பேணுன்' என்று உடன்றவர் உகிர் செய்த வடுவினன்,
மேல் நாள், நின் தோள் சேர்ந்தார் நகை சேர்ந்த
இதழினை ?

நாடி நின் தூது ஆடி, துறை செல்லாள், ஊரவர்
ஆடை கொண்டு, ஒலிக்கும், நின் புலைத்தி காட்டு
என்ருளோ -
கூடியார் புனல் ஆடப் புணை ஆய மார்பினில்,
ஊடியார் எறிதர, ஒளி விட்ட அரக்கினை ?

வெறிது நின் புகழ்களை வேண்டார் இல் எடுத்து
ஏத்தும்
அறிவுடை அந்தணன் அவளைக் காட்டு என்ருளே -
களி பட்டார் கமழ் கோதை கயம்பட்ட உருவின்மேல்
குறிபெற்ருர் குரற் கூந்தற் கோடு உளர்ந்த துகளினை ?

என ஆங்கு -

செறிவுற்றேம், எம்மை நீ செறிய ; அறிவுற்று,
அழிந்து உகு நெஞ்சத்தேம் ; அல்லல் உழப்பு ;
கழிந்தவை உள்ளாது, கண்ட இடத்தே,
அழிந்து நிற் பேணிக் கொளலின் இழிந்ததோ -
இந் நோய் உழத்தல் எமக்கு ?

## 89. பசப்பும் கசப்பும்

"இங்கே என்ன வேலை" என்று சீறினள் அவள். அவன் அவளைப் பார்த்தான். மிகவும் பரிதாபமாகப் பார்த்தான்.

"இவ்வளவுநாள் இருந்த இடத்துக்கே போ" என்ருள் அவள்.

"கோபிக்காதே. நீ நினைக்கிறபடி ஒன்றுமில்லை," என்றான் அவன்.

"ஏய்! யாரிடம் பொய் சொல்கிறாய்?" என்றாள்.

"பொய் சொல்லவில்லை. உண்மை. நான் சொல்வதை நம்பு" என்றான் அவன்.

"எப்படி நம்புவேன் நான்? அதோ பார்! உன் தலையில் உள்ள மலர் மாலையை. அது எப்படிக் கசங்கிப் போயிருக்கிறது. ஏன் கசங்கிற்று?

"மார்பிலே பூசிய சந்தனம் எங்கே? இப்படி ஏன் அழிந்து போயிருக்கிறது?

"அதோ பார்! உன்னுடைய வேஷ்டியை. அதன் கரை ஏன் இப்படிக் கிழிந்து போயிற்று?"

இவ்வாறு சரமாரியாகக் கேட்டாள் அவள். அவன் பதில் கூறாமல் நின்றான்.

"உன் யோக்கியதையை இவை ஒவ்வொன்றும் எடுத்துச் சொல்கின்றன. நீ என்னடா என்றால் 'நான் ஒரு குற்றமும் செய்யவில்லை' என்கிறாய். ஏன் இவ்விதம் பொய் சொல்கிறாய்?"

அவன் ஒன்றுமே பேசவில்லை.

ஆற்று நீர் கடலில் போய் விழுகிறது. எவ்வளவு நீர் வந்து விழுந்தாலும் கடல் நிறைகிறதா? இல்லை. அந்த மாதிரிதான் பரத்தையர் வாழ்வும். எவ்வளவு நாள் இன்பம் அனுபவித்தாலும் சரி. அவர்களுக்குத் திருப்தி ஏற்படாது. ஒருநாள் இல்லாது போனாலும்கூட அவர்கள் ஊடல் கொள்வார்கள். அது எதற்கு? அவர்களைத் தேற்றுவதற்குப் போ. விரைந்து போ. உன் பசப்பு வார்த்தைகளையெல்லாம் அங்கே வைத்துக்கொள் எனக்கு ஆறுதல் கூறுவதற்கு எப்போது வேண்டுமானாலும் வரலாம். போ! போ! விரைந்து போ! காலங் கடத்தாதே" என்றாள்.

அகன் துறை அணி பெற, புதலொடு தாழ்ந்த
பகன்றைப் பூ உற நீண்ட பாசடைத் தாமரை,
கண் பொர ஒளி விட்ட வெள்ளிய வள்ளத்தான் '

*தண் கமழ் நறுந் தேறல் உண்பவள் முகம் போல,*
*வண் பிணி தளை விடூஉம் வயல் அணி நல் ஊர!*

*'நோதக்காய்' என நின்னை நொந்தீவார் இல்வழி,*
*'தீது இலேன் யான்' எனத் தேற்றிய வருதிமன் -*
*நெகிழ் தொடி இளையவர் இடை முலைத் தாது*
*சோர்ந்து,*
*இதழ் வனப்பு இழந்த நின் கண்ணி வந்து*
*உரையாக்கால்?*

*கனற்றி நீ செய்வது கடிந்தீவார் இல்வழி,*
*'மனத்தில் தீது இலன்' என மயக்கிய வருதிமன் -*
*அலமரல் உண்கண்ணார் ஆய் கோதை குழைத்த நின்*
*மலர் மார்பின் மறுப்பட்ட சாந்தம் வந்து*
*உரையாக்கால்?*

*என்னை நீ செய்யினும், உரைத்தீவார் இல்வழி,*
*முன் அடிப் பணிந்து, எம்மை உணர்த்திய வருதிமன் -*
*நிரை தொடி நல்லவர் துணங்கையுள் தலைக் கொள்ள,*
*கரையிடைக் கிழிந்த நின் காழகம் வந்து*
*உரையாக்கால்?*

*என ஆங்கு -*

*மண்டு நீர் ஆரா மலி கடல் போலும் நின்*
*தண்டாப் பரத்தை தலைக்கொள்ள, நாளும்*
*புலத் தகைப் பெண்டிரைத் தேற்றி; மற்று யாம்*
*எனின்,*
*தோலாமோ, நின் பொய் மருண்டு?*

## 90. வெகுளியும் பித்துக்குளியும்

"வண்டு இருக்கிறதே! அது என்ன செய்யும்? காலையிலே பொய்கையில் புகும். மலரிலே தேன் சுவைக்கும். பகல் நேரத்திலே நெய்தலில் படியும். தேனை உண்ணும். மாலையில் மீண்டும்

பொய்கை புகும். இப்படி ஒவ்வோர் இடமாகச் சென்று சென்று தேன் சுவைக்கும். இத்தகைய வளம் நிறைந்த நாடனே! வருக" என்றாள் அவள்.

அதாவது என்ன? அவன் பரத்தை வீடுதோறும் சென்று சென்று சுவைத்து வருகிறான் என்று பொருள். அதையே மிகப் பண்புடன் கூறினாள் அவள். கேட்டான் அவன். தன்னைத்தான் அவள் இடித்துக் கூறுகிறாள் என்பதும் அறிந்தான். குற்றமுள்ள நெஞ்சு 'குறு குறு' என்னுமே! ஆனால் அதை அவன் காட்டிக் கொள்ளவில்லை.

"என்ன உனக்கு! ஏதாவது பித்துப் பிடித்திருக்கிறதா?" என்றான்.

கேட்டாள் அவள். கோபம் கொண்டாள்.

"சரி. இவனுக்கு கண்யமான பேச்சு உதவாது. குற்றம் செய்தவன் இவன். அதை நான் மிகவும் பண்பாக எடுத்துக் காட்டினேன். அன்பு பாராட்ட வேண்டியவன் அவன். அதற்குப் பதிலாக என்ன சொல்கிறான்? 'என்னைப் பித்துக்குளி' என்கிறான். இனி இவனைச் சும்மா விடக்கூடாது," என்று முடிவு செய்தாள்.

"யார் பித்துக்குளி? நெறி கெட்ட உன்னைப் புகழ்ந்து பாடுகிறானே! உன்னுடைய பாணன்! அவன் பித்துக்குளி! ஆசை அறுபது நாள் மோகம் முப்பது நாள், என்று தெரிந்தும் உன்பால் அடையத் துடிக்கிறார்களே! அந்தப் பரத்தையர் பித்துக்குளி! 'வேசியரை வீசிப் பிடிக்கும் வலை' என்று பரிகசிக்கிறார்கள் உன் தேரை! அந்தத் தேர்ப்பாகன் ஒரு பித்துக்குளி! நீயும் ஒரு பித்துக்குளி!" என்று சரமாரி பொழிந்தாள்.

என்ன செய்வான் பாவம்!

**பொய்கைப் பூப் புதிது உண்ட வரி வண்டு கழிப் பூத்த**
**நெய்தல் தாது அமர்ந்து ஆடி, பாசடைச் சேப்பினுள்**
**செய்து இயற்றியது போல வயல் பூத்த தாமரை,**
**மை தபு, கிளர் கொட்டை மாண் பதிப் படர் தரூஉம்,**
**கொய் குழை அகை காஞ்சித் துறை அணி நல் ஊர!**

**'அன்பு இலன், அறன் இலன், எனப்படான்' என ஏத்தி,**
**நின் புகழ் பல பாடும் பாணனும் ஏமுற்றான்.**

நெஞ்சு உயிர் செகுத்தலும் அறிந்து உண்டாங்கு,
அளி இன்மை
கண்டும், நின் மொழி தேறும் பெண்டிரும் ஏமுற்றார்.

முன்பகல் தலைக்கூடி, நன்பகல் அவள் நீத்து,
பின்பகல் பிறர்த் தேரும் நெஞ்சமும் ஏமுற்றாய்.

என ஆங்கு -

'கிண்கிணி மணித் தாரோடு ஒலித்து ஆர்ப்ப, ஒண்
தொடிப்
பேர் அமர்க் கண்ணார்க்கும் படு வலை இது' என,
ஊரவர் உடன் நகத் திரிதரும்
தேர் ஏமுற்றன்று, நின்னினும் பெரிதே.

## 91. மனமும் சினமும்

"நீ செய்வது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை" என்றாள் தோழி.

"ஏன்?" என்றாள் அவள்.

"அவனோ பரத்தையர் வீடே கதி என்று கிடக்கிறான். தினமும் ஒரு பரத்தை வீடாகப் போய்க்கொண்டு இருக்கிறான்..."

"ஆமாம்!"

"நீ என்னடா என்றால், அவன் வருவதற்கு முன்னால் கதவைத் திறக்கிறாய். வருந்தி அழைக்கிறாய். வரவேற்கிறாய். சிரித்துப் பேசுகிறாய். எல்லாம் செய்கிறாய்."

"வேறு என்ன செய்வது?"

"என்ன செய்வதா? அந்த நாரையைப் பார்த்தாவது புத்தி வர வேண்டாமா?"

"எந்த நாரை?"

"நெய்தல் நிலத்திலே மீன் கொத்தித் தின்று கொண்டிருக்கிறதே, அந்த நாரை"

"என்ன செய்கிறது?"

"மரத்தின்மீது ஏறிக் கூச்சலிடுகிறது."
"ஏன் கூச்சலிடுகிறது?"
"பரத்தையர் செய்யும் ஆரவாரம் கண்டு."
"என்ன ஆரவாரம்?"
"ஆம்பல் பூவை பறித்து ஓடும் ஆரவாரம்."
"அதனால் நாரைக்கு என்ன கேடு?"
"ஒன்று மில்லை."
"பின் ஏன் கூச்சல்?"

"கேடு செய்யாதபோதே கூச்சல் இடுகிறது நாரை." "உனக்கோ, பரத்தையரால் கேடு ஏற்பட்டிருக்கிறது. இருந்தும், நீ கூச்சல் போடமாட்டேன் என்கிறாய்" என்றாள் தோழி.

அவள் சிரித்தாள்.

"அடியே! நானும் பெண்தானே! எனக்கு மாத்திரம் மனம் கல்லா? இரும்பா? நான் என்ன? அவனைக் கண்டிக்காமலா இருப்பேன்? கோபிக்காமலா இருப்பேன்? கோபித்தேன்."

"என்ன செய்தாய்?"

"கதவு திறவாமல் சாத்தினேன். வாசலிலேயே நிறுத்தி வைத்தேன்.

"உம்."

"மற்றொரு நாள் பரத்தை வீட்டிலிருந்து வந்தான். அவனுடன் விருந்தினர் சிலரும் வந்தனர். என்ன செய்வது? விருந்தினர் முன்னிலையில் அவனை இகழலாமா? சண்டை யிடலாமா? குடும்பப் பெண்ணுக்கு அழகா அது?"

"இல்லை."

"அதனால் மகிழ்ச்சியுடன் வரவேற்றேன். உபசரித்தேன். வருத்தமில்லையா? கோபம் இல்லையா? இருந்தன. எல்லாவற்றையும் உள்ளே அடக்கிக் கொண்டேன்."

"அப்புறம்?"

"அப்புறம் ஒரு நாள் வந்தான். கோபித்துக்கொண்டேன்."

"என்ன சொன்னான்?"

"ஆடல் மகளிர் வீட்டுக்குப் போகவே இல்லை என்றான்."

"'சத்தியமாகவா?' என்றேன். "சத்தியம் என்றான்."

"ஐயையோ! சத்தியம் செய்தானா?"

"ஆமாம்! அது பொய்ச் சத்தியம் என்பது எனக்குத் தெரியும்."

"பொய்ச் சத்தியம் செய்தால் குடும்பம் பாழாகுமே!"

"ஆமாம்! அதைத்தான் நினைத்தேன். அவனே பொய்ச் சத்தியம் செய்கிறான். அதற்குக் காரணம் யார்? நான்தானே! நான் அவ்வளவு தூரம் மடக்கி மடக்கிக் கேளாவிடில் பொய்ச் சத்தியம் செய்வானா? செய்யமாட்டான். அவனைக் கேட்பானேன்? அவன் பொய்ச் சத்தியம் செய்வானேன்? அந்த பாவம் நம்மைச் சூழ்வானேன்? ஏதும் கேட்காமலே இருந்துவிடலாம் அல்லவா!"

"ஐயோ! பாவம்" என்றாள் தோழி.

"மற்றொரு நாள் இரவு வந்தான். கோபித்துக் கொண்டேன். மகனைத் தூக்கி மார்பில் அணைத்துக்கொண்டு தூங்கினான். நமது சண்டையால் குழந்தையின் மனம் கெட்டுவிடக் கூடாதே என்று நடுங்கினேன். பேசாது இருந்து விட்டேன். இன்னும்தான் என்ன செய்வேன்!" என்றாள் அவள்.

'நீர் ஆர் செறுவில் நெய்தலோடு நீடிய
நேர் இதழ் ஆம்பல் நிரை இதழ் கொண்மார்,
சீர் ஆர் சேயிழை ஒலிப்ப, ஓடும்
ஓரை மகளிர் ஓதை வெரீஇ எழுந்து,
ஆரல் ஆர்கை அம் சிறைத் தொழுதி
உயர்ந்த பொங்கர் உயர் மரம் ஏறி,
அமர்க் கண் மகளிர் அலப்பிய அந் நோய்
தமர்க்கு உரைப்பன போல், பல் குரல் பயிற்றும்
உயர்ந்த போரின் ஒலி நல் ஊரன்
புதுவோர்ப் புணர்தல் வெய்யன் ஆயின்,
வதுவை நாளால் வைகலும், அஃது யான்
நோவேன், தோழி! நோவாய், நீ' என
எற் பார்த்து உறுவோய்! கேள், இனித் தெற்றென:

'எல்லினை வருதி; எவன் குறித்தனை?' எனச்
சொல்லாதிருப்பேனாயின், ஒல்லென,

விரிஉளைக் கலி மான் தேரொடு வந்த
விருந்து எதிர்கோடலின், மறப்பல் என்றும்.

'வாடிய பூவொடு வாரல், எம் மனை?' என
ஊடியிருப்பேனாயின், நீடாது,
அச்சு ஆறாக உணரிய வருபவன்
பொய்ச் சூள் அஞ்சிப் புலவேன் ஆகுவல்.

'பகல் ஆண்டு அல்கினை, பரத்த?' என்று யான்
இகலியிருப்பேனாயின், தான் தன்
முதல்வன் பெரும் பெயர் முறையுளிப் பெற்ற
புதல்வற் புல்லிப் பொய்த் துயில் துஞ்சும்.
ஆங்க –

விருந்து எதிர் கொள்ளவும், பொய் சூள் அஞ்சவும்,
அரும் பெறல் புதல்வனை முயங்கக் காணவும்,
ஆங்கு அவிந்து ஒழியும், என் புலவி தாங்காது,
அவ்அவ் இடத்தான் அவைஅவை காண –
பூங் கண் மகளிர் புனை நலம் சிதைக்கும்
மாய மகிழ்நன் பரத்தைமை
நோவென், தோழி! கடன் நமக்கு எனவே.

## 92. பேச்சும் பிரியமும்

"என்னடீ! என்ன சங்கதி" என்று கேட்டாள் தோழி.

"என்ன கேட்கிறாய்?" என்றாள் அவள்.

"ஊரிலே என்னவோ பேசிக்கொள்கிறார்களே! என்ன?" என்றாள் தோழி.

"என்ன பேசிக்கொள்கிறார்கள்?"

"உனக்கும் அவனுக்கும் ஏதோ என்று சொல்கிறார்களே!"

"என்ன என்று சொல்கிறார்கள்?"

"காதல் என்று சொல்கிறார்கள்."

"நீங்கள்தான் இவ்வளவு பேர் எனக்குக் காவல் இருக்கிறீர்களே! அப்புறம் காதல் எங்கிருந்து வரும்?"

"கிட்ட வருமா?" வராது. எட்டித்தான் இருக்கும்."

"ஏண்டி! ஊரார் சொன்னால் அவர்கள் வாயை அடைத்துப் பேச வேண்டாமா? உனக்குப் புத்தி எங்கே போச்சு!"

"பேசாமலா வருவேன்! நாங்கள்தான் எந்நேரமும் இருக்கிறோமே! எங்களுக்குத் தெரியாமல் என்ன நடக்கும்? என்று சொல்லி வாயடக்கிவிட்டேன். இருந்தாலும், ஏதாவது இரகசியமாக உண்டோ என்று கேட்டேன். அவ்வளவுதான்" என்றாள்.

"வேறு ஒன்றுமில்லை..."

"என்ன?"

"அன்று ஒருநாள்...கோரை பறித்துக்கொண்டிருந்தேன். கை சிவந்து போயிற்று. கோரை வரவில்லை. கண்டான் அவன். வந்தான். கோரை பறித்துக் கொடுத்தான்."

"அவ்வளவுதானே!"

"அவ்வளவுதான்..."

"அப்புறம்...?"

"அப்புறம் ஒருநாள் வந்தான்"

"உம். வந்து..."

"மலர் பறித்துக் கொடுத்தான்."

"கொடுத்தானா?"

"ஆமாம்"

"வேறு ஏதாவது...."

"ஏதுமில்லை."

"உம்"

"மற்றொரு நாள் வந்தான். என் தோளைத் தொட்டான். தொய்யில் எழுதினான்"

"அவ்வளவுதானே!"

"அவ்வளவேதான். இதை வைத்துக்கொண்டுதான் இந்த ஊரார் பெரிதாகக் கதைக்கிறார்கள். அதற்கு நான் என்ன செய்வேன்?"

"என்னதான் செய்யலாம் சொல்"

"என்ன வேண்டுமானாலும் செய்யலாம். இவ்வளவு தூரம் கூறும் ஊரார் என்னதான் செய்யமாட்டார்? எனக்கும் அவனுக்கும் கலியாணம் செய்துகூட வைப்பார்.

செய்தால் செய்து வைக்கட்டும், இப்போதே செய்யட்டும்; நான் என்ன சொல்லப்போகிறேன்; வேண்டாம் என்று சொல்லப்போகிறேன்."

'புனை இழை நோக்கியும், புனல் ஆடப் புறம் சூழ்ந்தும்,
அணி வரி தைஇயும், நம் இல் வந்து வணங்கியும்,
நினையுபு வருந்தும் இந் நெடுந்தகை திறத்து, இவ் ஊர்
இனையள் என்று எடுத்து ஓதற்கு அனையையோ,நீ?' என
வினவுதியாயின், விளங்கிழாய்! கேள், இனி:

'செவ் விரல் சிவப்பு ஊரச் சேண் சென்றாய்' என்று,
 அவன்
பௌவ நீர்ச் சாய்க் கொழுதிப் பாவை
 தந்தனைத்தற்கோ—
'கௌவை நோய் உற்றவர் காணாது கடுத்த சொல்
ஒவ்வா' என்று உணராய், நீ ஒரு நிலையே உரைத்தனை?

ஒடுங்கி, யாம் புகல் ஒல்லேம் பெயர்தர, அவன் கண்டு,
நெடுங் கய மலர் வாங்கி, நெறித்துத் தந்தனைத்தற்கோ-
விடுந்தவர் விரகு இன்றி எடுத்த சொல் பொய்யாகக்
கடிந்ததும் இலையாய், நீ கழறிய வந்ததை?

'வரி தேற்றாய், நீ' என, வணங்கு இறை அவன் பற்றி,
தெரி வேய்த் தோள் கரும்பு எழுதித் தொய்யில்
 செய்தனைத்தற்கோ -
புரிபு நம் ஆயத்தார் பொய்யாக எடுத்த சொல்
உரிது என உணராய், நீ உலமந்தாய் போன்றதை?

என ஆங்கு,

அரிது இனி, ஆயிழாய்! அது தேற்றல்; புரிபு ஒருங்கு,
அன்று நம் வதுவையுள் நமர் செய்வது இன்று, ஈங்கே,

தான் நயந்து இருந்தது இவ்வூர் ஆயின்,
எவன்கொலோ -
நாம் செயற்பாலது, இனி?

## 93. தாபமும் அநுதாபமும்

"கண்ணே! ஏன் இப்படி யிருக்கிறாய்?" என்று கேட்டான அவன்.

"எப்படி யிருக்கிறேன்?" என்றாள் அவள்.

"வாடியிருக்கிறாயே! நான் இல்லையே என்ற வருத்தமா?" அவள் கண்ணீர் வடித்தாள்.

"அசடே! நான் இல்லாவிட்டால் என்ன? வரமாட்டேனா? அதற்காக நீ எண்ணெய் தேய்த்துக்கொள்ளாமல் இருக்கலாமா? தலையைச் சீவி முடிக்காமல் இருக்கலாமா" என்று கொஞ்சினான்.

"வரும் வழியிலே தாமரைப் பொய்கை ஒன்று இருக்கிறதே! தெரியுமா?" என்றாள் அவள்.

"தெரியுமா!"

"அதிலே தாமரை மொட்டு இரண்டு நன்றாகப் பருத்து இருக்கிறதே. அதைப் பார்த்தாயா?"

"பார்த்தேன்"

"அதற்கு நடுவே தாமரை மலர் ஒன்றிருக்கிறதே"

"ஆமாம். இருக்கிறது"

"பறவை ஒன்று அம்மலரை அலைத்தது கண்டாயா?"

"கண்டேன்"

"மலரில் இருந்த நீர் அந்த இரண்டு மொட்டுகளின்மீதும் முத்து முத்தாகத் தெறித்தது கண்டாயா?"

"கண்டேன்"

"கண்ட பிறகுமாக என் நினைவு வரவில்லை..."

அவள் கண்ணீர் சொரிந்தாள். தாமரை மலர்போன்ற அவள் முகத்திலிருந்து கண்ணீர் முத்து முத்தாக உருண்டது. தாமரை மொட்டுகள் போன்ற அவள் மார்பிலே வழிந்தது. •

கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். நா தழு தழுத்தது. சொல்கிறாள்.

"நீ வரவில்லை. அதனால் எனக்குக் கோபமில்லை. ஆனால் நீ கூடிப்பிரிந்த ஆடல் மகளிர் பலர் இங்கே வந்தனர். உன்னை ஏசிச் சென்றனர். அதுதான் என்னால் பொறுக்க முடியவில்லை. நீ என்னுடன் எப்போதும் இருந்தால் நல்லது. இல்லாவிட்டா லும் வருந்தமாட்டேன். அந்தப் பரத்தையர் உன்னை ஏசாது இருந்தால் போதும். ஊரார் உன்னைத் தூற்றாது இருந்தால் போதும். மலர் சூடிக்கொள்ளவோ, கூந்தலை வாரி முடியவோ ஆசையில்லை. ஆனால் அந்தப் பாணன் என் வாசல்படி வரா திருக்க வேண்டுமென்றே ஆசைப்படுகிறேன்" என்றாள்.

அதற்குமேல் அவளால் தாங்க முடியவில்லை. அவனை ஒரே கட்டாகக் கட்டி அணைத்துக்கொண்டாள்.

இணை இரண்டு இயைந்து ஒத்த முகை நாப்பண்,
பிறிது யாதும்
துணை இன்றித் தளை விட்ட, தாமரைத் தனி மலர்;
திருமுகம் இறைஞ்சினள், வீழ்பவற்கு, இனைபவள்
அரி மதர் மழைக் கண் நீர் அலர்முலைமேல்
தெறிப்பபோல்,
தகை மலர்ப் பழனத்த புள் ஒற்ற, ஒசிந்து ஒல்கி,
மிக நனி சேர்ந்த அம் முகைமிசை அம் மலர்
அக இதழ்த் தண் பனி உறைத்தரும் ஊர! கேள் :

தண் தளிர்த் தகை பூத்த தாது எழில் நலம் செலக்
கொண்டு, நீ மாறிய கவின் பெறல் வேண்டேன்மன் -
உண்டாதல் சாலா என் உயிர் சாதல் உணர்ந்து, 'நின்
பெண்டு' எனப் பிறர் கூறும் பழி மாறப் பெறுகற்பின்?

பொன் எனப் பசந்த, கண் போது எழில் நலம் செல;
தொல் நலம் இழந்த கண் துயில் பெறல்
வேண்டேன்மன் -
நின் அணங்கு உற்றவர் நீ செய்யும் கொடுமைகள்
என்னுழை வந்து, நொந்து உரையாமை பெறுகற்பின்?

மாசு அற மண் உற்ற மணி ஏசும் இருங் கூந்தல்
வீ சேர்ந்து வண்டு ஆர்க்கும் கவின் பெறல்
வேண்டேன்மன் -
நோய் சேர்ந்த திறம் பண்ணி, நின் பாணன், எம் மனை
நீ சேர்ந்த இல் வினாய் வாராமை பெறுகற்பின் ?
ஆங்க -

'கடைஇய நின் மார்பு தோயலம்' என்னும்,
இடையும், நிறையும் எளிதோ - நிற் காணின்,
கடவுபு, கைத்தங்கா, நெஞ்சு என்னும் தம்மோடு
உடன் வாழ் பகை உடையார்க்கு?

## 94. வண்டும் மலரும்

பொய்கை ஒன்று. அதிலே தாமரை மலர்கள் நிறைய இருந்தன. மலர் இருந்தால் வண்டுகளை அழைக்கவா வேண்டும்? வண்டுகளும் மலரிலே தேன் உண்டு கிடந்தன.

வெள்ளம் வந்தது. பொய்கை மூழ்கியது. தாமரை மலர்கள் நீரில் அமிழ்ந்தன. எனவே வண்டுகள், என்ன செய்தன? வேறு மலர் தேடிச் சென்றன. வெள்ளம் எத்தனை நாளிருக்கும்? சில நாளில் வெள்ளம் வடிந்தது. மீண்டும் தாமரை தலை தூக்கிற்று. வண்டுகளும் பழையபடி வந்தன.

இக் காட்சியைக் கண்டாள் ஒரு பெண். அவளுக்கு என்ன நினைவு வந்தது? தன் நினைவுதான் வந்தது.

"தாமரை மலர் நான். வண்டு அவன். அவன் எங்கே? அந்த வண்டு எங்கே? பக்கத்திலே உள்ள தாமரையைத் தேடிப் போயிருக்கிறது. தேன் குடிக்க. அதாவது அவன் பரத்தையர் இன்பம் நாடிப் போயிருக்கிறான். நான் வெள்ளத்திலே மூழ்கினேன். என்ன வெள்ளம்? துன்ப வெள்ளம்.

வெள்ளம் வடியும். அதாவது எனது துன்ப வெள்ளம். தாமரை மலரும். அதாவது என் முகம் மகிழ்ச்சியால் மலரும். வண்டும் வரும். அதாவது அவன் மீண்டும் வருவான்."

இவ்வாறு எண்ணினாள்; நம்பிக்கை கொண்டாள். மனம் தேறினாள். வீடு வந்தாள். வீட்டிலே என்ன கண்டாள்? அவன் வந்திருக்கக் கண்டாள். விலைமாதர் வீட்டிலிருந்து வந்திருக்கிறான். அலங்கோலமாக வந்திருக்கிறான். கண்டாள். கடும் சினம் கொண்டாள்.

''கதிரவன் வந்தால் கமலம் மருலம். நீ வந்தால் என் முகம் மலரும். இந்த எண்ணம்தானே உன்னை இவ்வாறு வரச் செய்தது?'' என்று சீறினாள்.

''மழை இன்றேல் பயிர் வாடும். மழை வந்தால் பயிர் தளிர்க்கும். அதுபோல நீ இன்றேல் நான் வாடுவேன். நீ வந்தவுடன் மகிழ்வேன் என்ற இறுமாப்புதானே உன்னை இவ்வாறு வரச் செய்தது?''

''தானாகக் கனியாததைத் தடி கொண்டு அடித்தால் கனியுமா? இயற்கையாக மலராததைக் கையால் நசுக்கி மலர வைத்தால் நறுமணம் வீசுமா? வீசாது. உனக்கு உள்ளூர என் மீது அன்பில்லாவிடில் வற்புறுத்த முடியுமா? அந்த இன்பமும் இன்பமாகுமா? வேண்டாம். போ! அங்கேயே போ! ஆடல் மகளிர் வீட்டுக்கே போ!''

பல் மலர்ப் பழனத்த பாசடைத் தாமரை
இன் மலர் இமிர்பு ஊதும் துணை புணர் இருந் தும்பி,
உண் துறை உடைந்த பூப் புனல் சாய்ப்ப, புலந்து,
ஊடி -
பண்புடை நல் நாட்டுப் பகை தலை வந்தென,
அது கைவிட்டு அகன்று ஓரீஇ, காக்கிற்பான் குடை நீழற்
பதி படர்ந்து, இறைகொள்ளும் குடி போல -
பிறிதும் ஒரு
பொய்கை தேர்ந்து அலமரும் பொழுதினான், மொய் தப
இறை பகை தணிப்ப அக் குடி பதிப் பெயர்ந்தாங்கு,
நிறை புனல் நீங்க வந்து, அத் தும்பி அம் மலர்ப்
பறை தவிர்பு அசைவிடூஉம் பாய் புனல் நல் ஊர!

'நீங்குங்கால் நிறம் சாய்ந்து, புணருங்கால் புகழ் பூத்து,

நாம் கொண்ட குறிப்பு, இவள் நலம்' என்னும்
தகையோ தான் -
எரி இதழ் சோர்ந்து உக ஏதிலார்ப் புணர்ந்தமை
கரி கூறும் கண்ணியை, ஈங்கு எம் இல் வருவதை?

'சுடர் நோக்கி மலர்ந்து, ஆங்கே படின் கூம்பும்
மலர் போல், என்
தொடர் நீப்பின், தொகும், இவள் நலம்' என்னும்
தகையோ தான் -
அலர் நாணிக் கரந்த நோய் கைம்மிக, பிறர் கூந்தல்
மலர் நாறும் மார்பினை, ஈங்கு எம் இல் வருவதை?

'பெயின் நந்தி, வறப்பின் சாம், புலத்திற்குப் பெயல்
போல், யான்
செலின் நந்தி, செறின் சாம்பும், இவள்' என்னும்
தகையோ தான் -
முடி உற்ற கோதை போல் யாம் வாட, ஏதிலார்
தொடி உற்ற வடுக் காட்டி, ஈங்கு எம் இல் வருவதை?
ஆங்க -

ஐய அமைந்தன்று; அனைத்தாகப் புக்கீமோ,
வெய்யாரும் வீழ்வாரும் வேறாக; கையின்
முகை மலர்ந்தன்ன முயக்கில் தகை இன்றே,
தண் பனி வைகல் எமக்கு?

## 95. சிதைவும் செல்வனும்

ஆடும் மகளிர் வீடு தேடிப் புறப்பட்டான் அவன். அவ்வீடு செல்பவன் எவ்வாறு இருப்பான்? எழில் விளங்கச் சிங்காரம் செய்து கொண்டிருப்டான் அல்லவா? அவனும் அவ்வாறே விளங்கினன். மார்பிலே சந்தனம். கழுத்திலே முத்தாரம். கொண்டையில் பூ. இத்தகைய கோலாகல புருஷனாக விளங்கினன் அவன். வீட்டை விட்டுப் புறப்பட்டான்.

வழியிலே அவனது மகன் விளையாடிக் கொண்டிருந்தான். அவனை வாரி அணைத்துக் கொண்டான். எடுத்து வந்தான் வீட்டுக்கு.

கண்டாள் அவள். வந்தாள். 'வெடுக்'கென்று இழுத்தாள் மகனை. அவன் விடவில்லை.

'விடு' என்று சீறினாள்.

"அவன் உன் மார்பில் உள்ள சந்தனத்தை அழிப்பான். முத்தாரத்தை அறுப்பான். மலரைச் சிதைப்பான். அந்த ஆடல் மகள் கண்டால் என்ன நினைப்பாள்? விலைமாதுக்குப் போட்டி எண்ணம்தான் வரும். நீ யாரோ வேறு ஒருத்தி வீடு போய் வந்திருக்கிறாய் என்று கோபிப்பாள். இன்பம் தர மறுப்பாள். நீ வருந்துவாய். அது ஏன்? அவனை விடு. நீ போ! சீக்கிரம்! நாழியாகி விட்டது. அவள் காத்திருப்பாள்" என்றாள்.

புள் இமிழ் அகல் வயல் ஒலி செந்நெல் இடைப் பூத்த
முள் அரைத் தாமரை முழு முதல் சாய்த்து, அதன்
வள் இதழ் உறநீடி, வயங்கிய ஒரு கதிர்,
அவை புகழ் அரங்கின்மேல் ஆடுவாள் அணி நுதல்
வகை பெறச் செரீஇய வயந்தகம் போல், தோன்றும்
தகை பெறு கழனி அம் தண் துறை ஊர! கேள்:

அணியொடு வந்து ஈங்கு எம் புதல்வனைக் கொள்ளாதி;
மணி புரை செவ் வாய் நின் மார்பு அகலம்
நனைப்பதால்;
'தோய்ந்தாரை அறிகுவேன், யான்' என, கமழும் நின்
சாந்தினால் குறி கொண்டாள் சாய்குவள் அல்லளோ?
புல்லல் எம் புதல்வனை; புகல் அகல் நின் மார்பில்
பல் காழ் முத்து அணி ஆரம் பற்றினன் பரிவானால்;
மாண் இழை மட நல்லார் முயக்கத்தை நின் மார்பில்
பூணினால் குறி கொண்டாள் புலக்குவள் அல்லளோ?

கண்டே எம் புதல்வனைக் கொள்ளாதி; நின் சென்னி
வண்டு இமிர் வகை இணர் வாங்கினன் பரிவானால்;
'நண்ணியார்க் காட்டுவது இது' என, கமழும் நின்

கண்ணியால் குறி கொண்டாள் காய்குவள் அல்லளோ?
என ஆங்கு -

பூங் கண் புதல்வனைப் பொய் பல பாராட்டி,
நீங்காய் இகவாய் நெடுங் கடை நில்லாதி;
ஆங்கே அவர் வயின் சென்றீ - அணி சிதைப்பான்-
ஈங்கு எம் புதல்வனைத் தந்து.

## 96. சீற்றமும் மாற்றமும்

குடும்பத்திலே சண்டை. சிறுபூசல், கணவனுக்கும் மனைவிக்கும். மனைவி என்ன செய்கிறாள்? கணவன்மீது உள்ள கோபத்தை யார் மீது காட்டுகிறாள்? குழந்தைகளின்மீது. கணவனைக் கண்டிக்கும் தைரியம் சிலருக்கு வரும்; சிலருக்கு வராது. அவர் என்ன செய்வார்? குழந்தைகளின்மீது சீறுவர். பாவம்! அந்தக் குழந்தைகள் தாயின் சினத்துக்கு இரையாகும்.

மற்றும் சில மனைவிமார் உண்டு. கணவன்மீது கோபம் வரும். கணவனைக் கண்டிக்க விரும்புவாள். நேரடியாகக் கண்டிக்கவும் தைரியமிராது. எனவே மறைமுகமாகக் கண்டிப்பாள். குழந்தைகளை முன்னிட்டு ஏசுவாள்.

இந்த மாதிரி நிகழ்ச்சி ஒன்று.

சின்னஞ்சிறு குழந்தை. யானையை வைத்து விளையாடிக் கொண்டு இருக்கிறான். எத்தகைய யானை? மரத்தினால் செய்யப் பட்ட யானை. முத்தும், பவழமும் பதித்து அணி செய்யப்பட்ட மர யானை! அந்த யானையைக் கயிறு கட்டி இழுக்கிறான் சிறுவன்; இழுத்து ஓடி வருகிறான்; விளையாடுகிறான். அப்படி ஓடி வரும் போது 'கலீர் கலீர்' என்ற சப்தம் கேட்கிறது. என்ன சப்தம் அது? அந்தச் சிறுவன் காலிலே அணிந்த கழல்களின் சப்தம்.

அவனையே பார்த்து மகிழ்கிறாள் அவன் 'தாய். அவளுக்குள்ள ஒரே மகிழ்ச்சி அதுதான். ஏன்? வேறு என்ன இருக்கிறது அவளுக்கு? கணவனோ, பரத்தை வீடே கதி என்று கிடக்கிறான். இந்நிலையில். அவளது வாழ்க்கை என்ன வாழ்க்கை?

வெற்று வாழ்க்கைதானே! வெற்று வாழ்க்கையில் இன்பம் ஏது? மகிழ்ச்சி ஏது?

பாலை போன்ற அவளது வாழ்க்கைக்குபசுஞ் சோலை போன்று இருந்தான் அச் சிறுவன். கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் ஒரே பாலைவனம். எங்கு பார்த்தாலும் ஒரே வறண்ட நிலம். நிழல் கிடையாது. குடிக்கத் தண்ணீர் கிடையாது. இப்படிப்பட்ட நிலத்தின் இடையே சிறு இன்பத் திடல்கள் .இருக்கும். அங்கே நீர் இருக்கும்; நிழல் இருக்கும். பாலை நிலத்திலே வருகிறவர்களுககு ஆறுதல் அளிப்பது இந்தப் பசுஞ்சோலைதான். அவளது வாழ்க்கையிலே நீர் ஊற்று அவன்தான். அவனது முகம் கண்டு ஆறுதல் அடைந்தாள்; விளையாட்டிலே ஆனந்தம் கொண்டாள்.

அன்று அவன் மர யானையை இழுத்து ஓடி வந்தான். அவனையே கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தாள்.

"உம். ஒரே ஒரு குழந்தை. செல்வக் குழந்தை. இந்தக் குழந்தையுடன் கொஞ்சி விளையாடாமல் பரத்தையர் வீட்டில் கிடக்கிறானே! இதைக் கண்டு மகிழாமல் அவளைக் கண்டு மகிழ்கிறானே!" என்று நினைத்தாள். துக்கம் வந்தது. கண்ணீர் விட்டாள். முத்துப்போல் துளிகள் உருண்டு ஓடின. அந்த நேரத்தில் அவள் கணவன் அங்கே வந்தான். கோபம் வந்தது அவளுக்கு.

"இங்கே ஓடி வாடா கண்ணு" என்றாள். சிறுவன் ஓடி வந்தான். அவனை மடிமீது அமர்த்திக் கொண்டாள். அணைத்தாள்.

"அவர்களுக்கெல்லாம் உன்னைப் பார்க்க வேண்டியிராது," என்றாள்.

"அத்தா! என்று சொல்லடா கண்ணே" என்றாள்.

"அத்தா! அத்தா!" என்றான் அவன்.

"என் கண்ணு என் கண்ணு" என்று கூறிக் கட்டியணைத்துக் கொண்டாள்.

"உன்னைப் பார்க்கிறபோது ஆனந்தமாயிருக்கு. உன் அப்பன் பண்ணும் கூத்தைப் பார்க்கிறபோது துன்பமாயிருக்கு. அவனால் கெட்டழிந்த பெண்களைப் பார்க்குமபோது வருத்தமாயிருக்கு" என்றாள்.

இப்படிக் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தபோது வானத்திலே வெண்மதி வந்தது.

"சந்தமாமா" என்றான் அவன்.

"நிலா நிலா வா வா; நில்லாமல் ஓடி வா!" என்று பாடினாள் அவள். வெகு வேகமாகத் தோன்றி வந்தான் சந்திரன். திடீரென்று கண்ணீர் சொரிந்தாள் அவள்.

"ஏன் அம்மா அழுகிறாய்?" என்றான் சிறுவன்.

"அம்புலி காட்டும்போது ஆனந்தமாயிருக்கிறது. ஆனால் அந்தப் பெண்களை நினைக்கும்போது, அவர்களது பசலை மேனியை எண்ணும்போது துக்கமாயிருக்கிறது" என்றாள்.

சிலகாலம் சென்றது. சிறியவன் சிறிது பெரியவன் ஆனான்.

அவனைத் தோளில் தூக்கி வைத்துக்கொண்டு கொஞ்சினாள் அவள். அவள் கழுத்திலே கிடந்த மாலையை அலைத்தான் அவன். அவளது கூந்தலைப் பிடித்து இழுத்தான்.

"அப்படிச் செய்யடா கண்ணே! உன் அப்பன் வந்தால் உன்னைத் தூக்குவான். தூக்கினால் அவன் தலைமயிரைப் பிடித்து இழு. மாலையைப் பிடித்து அறு. மார்பில் உதை. 'பரத்தை வீடு போகாதே போகாதே' என்று சொல். அதற்குத்தான் இப்போதே பழகிக் கொடுக்கிறேன். தெரியுமா?" என்று கொஞ்சினாள்.

நயம் தலை மாறுவார் மாறுக; மாறா,
கயம் தலை மின்னும் கதிர் விடு முக் காழ்,
பயந்த எம் கண் ஆர யாம் காண நல்கி -
திகழ் ஒளி முத்து அங்கு அரும்பாகத் தைஇப்
பவழம் புனைந்த பருதி சுமப்ப,
கவழம் அறியா நின் கை புனை வேழம்
புரி புனை பூங் கயிற்றின் பைபய வாங்கி,
அரி புனை புட்டிலின் ஆங்கண் ஈர்த்து, ஈங்கே
வருக! - எம் பாக மகன்!

கிளர் மணி ஆர்ப்ப ஆர்ப்பச் சாஅய்ச் சாஅய்ச் செல்லும்
தளர் நடை காண்டல் இனிது; மற்று, இன்னாதே,
'உளம்' என்னா நுந்தைமாட்டு எவ்வம் உழப்பார்
வளைநெகிழ்பு யாம் காணுங்கால்.

ஐய! காமரு நோக்கினை, 'அத்தத்தா' என்னும் நின்
தே மொழி கேட்டல் இனிது; மற்று, இன்னாதே,
உய்வு இன்றி நுந்தை நலன் உணச் சாஅய்ச் சாஅய்மார்
எவ்வ நோய் யாம் காணுங்கால்.

ஐய! 'திங்கட் குழவி, வருக!' என, யான் நின்னை
அம்புலி காட்டல் இனிது; மற்று, இன்னாதே,
நல்காது நுந்தை புறம் மாறப்பட்டவர்
அல்குல் வரி யாம் காணுங்கால்.

ஐய! எம் காதில் கனங் குழை வாங்கி, பெயர்தொறும்
போது இல் வறுங் கூந்தல், கொள்வதை, நின்னை யாம்-
ஏதிலார் கண் சாய-நுந்தை வியல் மார்பில்
தாது தேர் வண்டின் கிளைபட, தைஇய
கோதை பரிபு ஆட; காண்கும்.

## 97. குழந்தையும் கொஞ்சுதலும்

"கண்ணு வாடா! மணி வண்ணு வாடா!" என்று கொஞ்சுகிறாள் தாய். யாரை? செல்வக் குழந்தையை.

அவனது மழலைச் சொல்லிலே இன்பம் காண்கிறாள். அவனது 'குறு குறு'ப் பார்வையிலே மகிழ்ச்சி கொள்கிறாள்; அவனது தளர் நடையிலே ஆனந்தம் கொள்கிறாள். அவனைத் தூக்கி முகத்துக்கு எதிரே நிறுத்திப் பிடித்துக்கொள்கிறாள்; கொஞ்சுகிறாள். அவனது மழலைச் சொல் கேட்கிறாள்.

குழந்தையின் கவனம் வேறு பக்கம் செல்கிறது. எதையோ பார்த்துச் சிரிக்கிறது குழந்தை.

அதைக் கண்டாள் அவள். அவளுக்கு என்ன நினைவு வந்தது? அன்று ஒருநாள் பாணன் வந்தான். அவனை ஏதோ கேட்டாள் அவள். அவன் ஏதோ பதில் சொன்னான். 'ஏனாதிப் பாடியம்' என்று சொல்லிப் போனான். 'ஏனாதிப் பாடியம்' என்பது பரத்தையர் சேரி. அவள் கேட்டது அதுவல்ல.

இந்த நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது அவளுக்கு.

இந்த நேரத்திலே அவளது கணவன் வந்தான். சத்தம் போடாமல் மறைந்து வந்தான். அவள் பின்னே நின்று கொண்டான். பின்னே நின்றால் அவளுக்கு எப்படித் தெரியும்? தெரியாது. ஆனால் குழந்தை கண்டு கொண்டது.

"அப்பா! அப்பா!" என்றது.

விஷயம் புரிந்துகொண்டாள் அவள்.

"திருட்டுத்தனமாக ஏன் வரவேண்டும்?" என்று சீறினாள். அது கேட்டான் அவன். அவள் பின்னே நின்றவன் முன் வந்தான்.

"எதற்காக இப்படியெல்லாம் பேசுகிறாய்? நீ கிழித்த கோட்டை நான் எங்கே தாண்டினேன்? தாண்டவில்லையே! அப்படியிருந்தும் என்மீது குற்றம் சுமத்துகிறாயே!" என்றான்.

"ஆடல் மகளிருடன் அவன் விளையாடி வருகிறான் என்பதைக் காட்டிக் கொடுத்தன மலர் இதழ்கள் சில. அவை காற்றிலே பறந்து போகுமாறு நின்றான். அது கண்டாள் அவள்.

"அதோ! பார்! உன் மானம் காற்றிலே பறக்கிறது" என்றாள் அவள்.

"சரி, சரி. சண்டை போடாதே. சிறுவன் இருக்கிறான். அவன் மனம் கெடப்போகிறது" என்றான்.

மகனை நினைத்தாள் அவள். ஊடல் தணிந்தாள். இருவரும் கோபம் போக்கினர். மகனை அணைத்து மகிழ்ந்தனர்.

மை அற விளங்கிய மணி மருள் அவ் வாய் தன்
மெய் பெறா மழலையின் விளங்கு பூண் நனைத்தர,
பொலம் பிறையுள் தாழ்ந்த புனை வினை உருள் கலன்,
நலம் பெறு கமழ் சென்னி, நகையொடு துயல்வர,
உரு எஞ்சாது இடை காட்டும் உடை கழல் அம் துகில்
அரி பொலி கிண்கிணி ஆர்ப்பு ஒவா அடி தட்ப,
பாலோடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்
கால் வல் தேர் கையின் இயக்கி, நடை பயிற்றா,
ஆல் அமர் செல்வன் அணிசால் பெரு விறல்
போல, வரும் என் உயிர்!

பெரும! விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்,
பெருந் தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்ற,

திருந்துபு நீ கற்ற சொற்கள் யாம் கேட்ப,
மருந்து ஓவா நெஞ்சிற்கு அமிழ்தம் அயின்றற்று,
பெருந்தகாய்! கூறு, சில.

எல்லிழாய்! சேய் நின்று நாம் கொணர்ந்த பாணன்
சிதைந்து, ஆங்கே
வாய் ஓடி, 'ஏனாதிப்பாடியம்' என்றற்று,
'நோய் நாம் தணிக்கும் மருந்து' எனப் பாராட்ட,
ஓவாது அடுத்து அடுத்து, 'அத்தத்தா!' என்பான் மாணா
வேய் மென் தோள் வேய்த்திறம் சேர்த்தலும்,
மற்று, இவன்
வாயுள்ளின் போகான் அரோ.

உள்ளி உழையே ஒருங்கு படை விடக்
கள்ளர் படர்தந்தது போல, தாம் எம்மை
எள்ளுமார் வந்தாரே, ஈங்கு.

ஏதப்பாடு எண்ணி, புரிசை வியல் உள்ளோர்
கள்வரைக் காணாது, 'கண்டேம்' என்பார்போல,
சேய் நின்று, செய்யாத சொல்லிச் சினவல்; நின்
ஆணை கடக்கிற்பார் யார்?

அதிர்வு இல் படிறு எருக்கி, வந்து என் மகன்மேல்,
முதிர் பூண் முலை பொருத ஏதிலாள் முச்சி
உதிர் துகள் உக்க நின் ஆடை ஒலிப்ப,
எதிர் வளி நின்றாய்; நீ செல்.

இனி, 'எல்லா! யாம் தீதிலேம்' என்று தெளிப்பவும்,
கைந்நீவி
யாதொன்றும் எம்கண் மறுத்தரவு இல்லாயின்,
மேதக்க எந்தை பெயரனை யாம் கொள்வேம்,
தாவா விருப்பொடு கன்று யாத்துழிச் செல்லும்
ஆ போல் படர் தக, நாம்.

## 98. வேசுமும் விலைமாதரும்

"இவ்வளவு நேரம் என்ன செய்தாய்?" என்று சீறினாள் அவள்.

"கோவிலுக்குப்போய் சாமி கும்பிட்டுவிட்டு நேராகத்தானே வருகிறேன்!" என்றாள் வேலைக்காரி.

"பொய் சொல்லாதே."

"இல்லவேயில்லை"

"அதற்கா இவ்வளவு நேரம்?"

"ஆமாம்!"

"நிஜத்தை சொல்லு. குழந்தையைத் தூக்கிக்கொண்டு யார் யார் வீட்டுக்கெல்லாம் போனாய்?"

பணிப் பெண் பயந்து போனாள்.

"நானாக ஒருவர் வீட்டுக்கும் போகவில்லை" என்றாள்.

"அவர்கள் அழைத்தார்களா?"

"ஆமாம். குழந்தையைத் தூக்கிக்கொண்டு போய் விட்டார்கள்."

"நீ என்ன செய்தாய்?"

"பின்னாடியே போனேன்."

"யார் அவள், தூக்கிப் போனவள்?"

"ஆடல்காரி ஒருத்தி. சின்னஞ்சிறு வயசிலே நம்ம ஐயா கூட இருந்தவளாம்."

"உம்."

"ஐயா அவளை விட்டுட்டாராம்."

"உம்."

"அவரையே நினைச்சு நினைச்சு அழுதுக்கிட்டிருக்குதாம்."

"உம்."

"பையனைப் பார்த்ததும் அவரைப் பார்த்தது மாதிரி

"உம்."

"குழந்தையைக் கட்டி அணைத்துத் தூக்கிக்கொண்டு போய் விட்டாள்."

"நீ என்ன செய்தாய்?"

"நான் என்ன செய்யமுடியும். 'ஐயோ பாவம்' என்று பின்னுடியே போனேன். விட்டுக்குப் போனுள். சிறிது நேரம் சீராட்டினுள். பிறகு கொடுத்துவிட்டாள். அந்தத் தெருவிலே பல வீடுகளில் இப்படி நடந்தது."

"உம். அந்த வீட்டுக்குப் போனுயா?"

"எந்த வீட்டுக்கு"

"சொல்லணுமா?"

"ஐபா இபப இருக்கிறு"

"ஆமாம்; அங்கேதான.'

"அவளும் வந்து தூக்கினுள.

"தூக்கினுளா?" என்று சீறினுள்.

"ஏய்! எங்கே அவன். எடு அந்தப பிரமபை......இனிமே அந்த வீடுகளுக்கெல்லாம் போகாதே! போகாதே!" என்று உறுமினுள்.

தாய் துர்க்கையானது கண்டான் சிறுவன். அழுதான்.

அழுகை கண்டாள் தாய். மனம் இளகினுள். பிரம்பைத் தூர எறிந்தாள். மகனே அணைத்துக்கொண்டாள்.

"அந்த வீட்டுப்படி ஏறப்படாதடா கண்ணு" என்று கூறிக் கட்டிக் கொண்டாள்.

ஞாலம் வறம் தீரப் பெய்ய, குணக்கு ஏர்பு,
காலத்தில் தோன்றிய கொண்மூப் போல், எம் முலை
பாலொடு வீங்கத் தவ நெடிதாயினே;
புத்தேளிர் கோட்டம் வலம் செய்து இவனெடு
புக்க வழி எல்லாம் கூறு.
கூறுவேன் ; மேயாயே போல வினவி, வழிமுறைக்
காயாமை வேண்டுவல், யான்.

காயேம்.

மடக் குறு மாக்களோடு ஓரை அயரும்
அடக்கம் இல் போழ்தின்கண், தந்தை காமுற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்காற்கு, அவளும்
மருப்புப் பூண் கையுறையாக அணிந்து,

'பெருமான், நகைமுகம் காட்டு!' என்பாள் கண்ணீர்
சொரி முத்தம் காழ் சோர்வ போன்றன; மற்றும்,
வழிமுறைத் தாயுழைப் புக்காற்கு, அவளும்
மயங்கு நோய் தாங்கி, மகன் எதிர் வந்து,
முயங்கினள் முத்தினள் நோக்கி, நினைந்தே,
'நினக்கு யாம் யாரேம் ஆகுதும்?' என்று,
வனப்பு உறக் கொள்வன நாடி அணிந்தனள்,
ஆங்கே, 'அரி மதர் உண்கண் பசப்ப நோய் செய்யும்
பெருமான் பரத்தைமை ஒவ்வாதி' என்றாள்;
அவட்கு இனிதாகி விடுத்தனன் போகித்

தலைக் கொண்டு நம்மொடு காயும் மற்று ஈது ஓர்
புலத் தகைப் புத்தேள் இல் புக்கான் - அலைக்கு ஒரு
கோல் தா; நினக்கு அவள் யார் ஆகும்? - எல்லா!
வருந்தி யாம் நோய் கூர, நுந்தையை என்றும்
பருந்து எறிந்தற்றாகக் கொள்ளும்; கொண்டாங்கே,
தொடியும் உகிரும் படையாக நுந்தை
கடியுடை மார்பின் சிறு கண்ணும் உட்காள்,
வடுவும் குறித்தாங்கே செய்யும். விடு, இனி;
அன்ன பிறவும், பெருமான் அவள்வயின்
துன்னுதல் ஓம்பி, திறவது இல் முன்னி, நீ
ஐயம் இல்லாதவர் இல் ஒழிய, எம் போலக்
கையாறு உடையவர் இல் அல்லால் செல்லல்;
அமைந்தது, இனி நின் தொழில்.

## 99. வேலும், வெந்த புண்ணும்

"எவ்வளவு நேரம்? இதோ இருக்கு. 'கொஞ்ச நேரம் அவனை விளையாடவிட்டு அழைத்துவா' என்றால், இன்னும் வரக் காணோம். போனாள், போனாள்; போயே விட்டாள்."

இவ்வாறு சீறிக்கொண்டிருந்தாள் அவள். வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் இருக்கின்றன. பெரிய வீடு. வற்றாத செல்வம். ஏவிய வேலை செய்ய எவ்வளவோ பேர்.

இருந்தும் என்ன? அமைதியில்லை; ஆனந்தமில்லை. காரணம் என்ன ? அவளது கணவன் பரத்தை வீடே கதி என்று கிடக்கிறான். இந் நிலையில் அவளுக்கு ஆறுதல் அளிப்பவன் அச் சிறுவனே. அவன் முகம் நோக்கி வருத்தம் ஒழிந்தாள்.

ஒருநாள். அச் சிறுவனைச் சிங்காரித்தாள். 'வெளியே சென்று விளையாடி வா,' என்று அனுப்பினாள். துணைக்கு ஒரு பணிப் பெண்ணையும் அனுப்பினாள்.

சிறுவனை அழைத்துப்போன பணிப் பெண் வெகு நேரமாகியும் வரவில்லை. அப்போதுதான் மேற் சொன்னவாறு சீறிக்கொண்டிருந்தாள்.

இந் நிலையில் பணிப்பெண் வந்தாள், சிறுவனை அழைத்துக் கொண்டு.

"எங்கே போனாயடி இவ்வளவு நேரம் ?" என்று சீறினாள்.

"இந்தப் பையன்தான் எல்லாவற்றிற்கும் காரணம்" என்றாள் அவள்.

"என்ன?"

"வழியிலே ஒருத்தி கண்டாள் இவனை. ஆடல் மகள். நீண்டநாள் முன்பு இவன் தந்தையுடன் சிநேகமாக இருந்தவளாம். அவர் கைவிட்டதால் இப்போது வாடி வருந்துகிறாளாம்.

"'வாடா கண்ணே! வா!' என்று சொன்னாள். 'என் வீட்டில் சிறிது நேரம் இருந்துவிட்டுப் போ' என்றாள் என்ன செய்வது ? இவனும் சரி என்றான்" என்றாள்.

இந்த சமயத்தில் அவளது கணவனும் வந்து சேர்ந்தான். கணவனையும் மகனையும் மாறி மாறிப் பார்த்தாள் அவள்.

கணவன் ஓர் ஆடல் மகள் வீட்டிலிருந்து வருகிறான். மகன் மற்று ஓர் ஆடல் மகள் வீட்டிலிருந்து வருகிறான்.

என்ன செய்வாள் பாவம்! வெந்த புண்ணில் வேல் கொண்டு குத்தியது போலாயிற்று அவளுக்கு. பெருமூச்செறிந்தாள்.

பெருந் திரு நிலைஇய வீங்கு சோற்று அகல் மனை,
பொருந்து நோன் கதவு ஒற்றிப் புலம்பியாம் உலமர,

இளையவர் தழூஉ ஆடும் எக்கர் வாய் வியன் தெருவின்
விளையாட்டிக்கொண்டு வரற்கு எனச் சென்றாய்,
உளை; இலை; ஊட்டலென் தீம் பால் பெருகும்
அளவெல்லாம்
நீட்டித்த காரணம் என்?

கேட்டை -

பெரு மடற் பெண்ணைப் பிணர்த் தோட்டுப் பைங்
குரும்பைக்
குட வாய்க் கொடிப் பின்னல் வாங்கி, தளரும்
பெரு மணித் திண் தேர்க் குறுமக்கள் நாப்பண்,
அகல் நகர் மீள்தருவாளைக, புரி ஞெகிழ்பு
நீல நிரைப் போது உறு காற்கு உலைவன போல்,
சாலகத்து ஒல்கிய கண்ணர், 'உயர் சீர்த்தி
ஆல் அமர் செல்வன் அணி சால் மகன் விழாக்
கால்கோள்' என்று ஊக்கி, கதுமென நோக்கி,
திருந்து அடி நூபுரம் ஆர்ப்ப இயலி, விருப்பினால்,
'கண்ணும், நுதலும், கவுளும், கவவியார்க்கு
ஒண்மை எதிரிய அம் கையும், தண் எனச்
செய்வன சிறப்பின் சிறப்புச் செய்து, இவ் இரா
எம்மொடு சேர்ந்து சென்றீவாயால்; செம்மால்!

நலம் புதிது உண்டு உள்ளா நாணிலி செய்த
புலம்பு எலாம் தீர்க்குவேம் மன்' என்று இரங்குபு,
வேற்று ஆனுத் தாயார் எதிர்கொள்ள, மாற்றாத
கள்வனால் தங்கியது அல்லால், கதியாதி,
ஒள்ளிழாய்! யான் தீது இலேன்.

எள்ளலான், அம் மென் பணைத் தோள் நுமர் வேய்ந்த
கண்ணியோடு
எம் இல் வருதியோ? எல்லா! நீ தன் மெய்க்கண்
அம் தீம் சொல் நல்லார் அணிந்த கலம் காட்டி,
முந்தை இருந்து மகன் செய்த நோய்த்தலை
வெந்த புண் வேல் எறிந்தற்றால், வடுவொடு
தந்தையும் வந்து நிலை.

## 100. புயலும் மழையும்

சிறுவனை வெளியே அனுப்பியிருந்தாள் அவள், கோவிலுக்குப் போய் சுவாமி கும்பிட்டு வர. சிறுவனுக்குத் துணையாக வேலைக்காரியும் போனாள்.

நீண்ட நேரமாயிற்று. வரவில்லை. வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள் அவள். சிறுவனும் வந்தான்; கோலாகலமாகச் சிங்காரித்து வந்தான்.

"என்னடி? யார் இவனுக்கு இப்படிச் சிங்காரித்தவர்? எங்கே அழைத்துப் போனாய்?" என்று கேட்டாள் அவள்.

"ஆடல் மகளிர் சிலர் இவனைப் பார்த்தார்கள்."

"பார்த்தார்களா? அவர்கள்தான் இப்படிச் சிங்காரித்து அனுப்பினார்களோ? இந்த மோதிரம் ஏது?"

"ஆடல் மகள் ஒருத்தி அணிந்தது."

"எங்கே, காட்டு?

"இதிலே மன்மதனுடைய மீன் கொடியல்லவா இருக்கிறது! அவள் என்னை ஏசிக் காட்டுவதுபோல் இருக்கிறதே! இந்தத் தொடி ஏது?"

"எல்லாம் அவர்கள் அளித்ததுதான்."

"சீச் சீ! மானங் கெட்ட பயலே! ஒருத்தி வீடு விடாமல் போனாயோ? அவர்கள் அணிந்ததை எல்லாம் வாங்கிக்கொண்டு வந்தாயா?" என்று சீறினாள்.

சிறுவன் நடு நடுங்கிப் போனான். சிறுவனின் நடுக்கம் கண்டாள் அவள். சினம் ஆறினாள். "தவறு யாருடையது? இவனுடையதல்ல; அந்தப் பரத்தை மகளிருடையதுமல்ல. இவன் தந்தையுடையதும் அல்ல. என்னுடையதுதான். நான் இவனைக் கேட்டேன். கேட்டதால்தானே, இவ்வளவு வருத்தமும்? வருத்தத்தை விலைகொடுத்து வாங்கியவள் நானே." என்று தேறினாள்.

"வாடா கண்ணா! போனால் போகிறது. அழாதே!" என்று சொன்னாள்; அணைத்தாள் மகனை.

உறு வளி தூக்கும் உயர் சினை மாவின்
நறு வடி ஆர் இற்றவை போல் அழிய,
கரந்து யான் அரக்கவும், கை நில்லா வீங்கிச்
சுரந்த என் மென் முலைப் பால் பழுதாக - நீ
நல் வாயில் போத்தந்த பொழுதினான், 'எல்லா!
கடவுட் கடி நகர்தோறும் இவனை
வலம் கொளீஇ வா' என, சென்றாய் விலங்கினை -
ஈரம் இலாத இவன் தந்தை பெண்டிருள்
யார் இல் தவிர்ந்தனை? கூறு.

நீருள் அடை மறை ஆய் இதழ்ப் போதுபோல்
கொண்ட
குடைநிழல் தோன்றும் நின் செம்மலைக் காணூஉ,
'இவன் அன்ற யான் நோவ உள்ளம் கொண்டு, உள்ளா
மகன் அல்லான் பெற்ற மகன்' என்று அகல்நகர்
வாயில் வரை இறந்து போத்தந்து, தாயர்
தெருவில் தவிர்ப்பத் தவிர்ந்தனன்; மற்று, அவர்
தம்தம் கலங்களுள், 'கையுறை' என்று இவற்கு,
ஒத்தவை ஆராய்ந்து, அணிந்தார். 'பிறன் பெண்டிர்
ஈத்தவை கொள்வானும், இஃது ஒத்தன்; சீத்தை,
செறு தக்கான் மன்ற பெரிது.'

சிறு பட்டி; ஏதிலார் கை, எம்மை எள்ளுபு நீ தொட்ட,
மோதிரம் யாவோ? யாம் காண்கு.

அவற்றுள் நறா இதழ் கண்டன்ன செவ் விரற்கு ஏற்பச்
சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்
குறி அறிந்தேன்; 'காமன் கொடி எழுதி, என்றும்
செறியாப் பரத்தை இவன் தந்தை மார்பில்
பொறி ஒற்றிக்கொண்டு ஆள்வல்' என்பது தன்னை
அறீஇய செய்த வினை.

அன்னையோ—இஃது ஒன்று.

முந்தைய கண்டும், எழுகல்லாத என் முன்னர்,
வெந்த புண் வேல் எறிந்தற்று, இஃது ஒன்று
தந்தை இறைத் தொடி மற்று இவன் தன் கைக்கண்
தந்தார் யார், எல்லாஅ! இது?

'இஃது ஒன்று என் ஒத்துக் காண்க, பிறரும் இவற்கு'
என்னும்
தன் நலம் பாடுவி, தந்தாளா. நின்னை,
'இது தொடுக' என்றவர் யார்?

அஞ்சாதி; நீயும் தவறிலை; நின் கை இது தந்த
பூ எழில் உண்கணவளும் தவறிலள்;
வேனிற் புனல் அன்ன நுந்தையை நோவார் யார்?
மேல் நின்றும் எள்ளி, இது இவன் கைத் தந்தாள்
தான் யாரோ? என்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடையேன்!

## 101. பாலும் பங்கும்

"ஓடி வா! கண்ணு!" என்று அழைத்தாள் சிறுவனை. அவன் ஓடி வந்தான், விளையாட்டுத் தேர் இழுத்துக்கொண்டு.

"இந்தா! வாயைத் திற" என்றாள். வாய் திறந்தான். ஒரு பிடி பாலும் சோறும் ஊட்டினாள் சிறுவனுக்கு. ஒரு பிடி உண்டவன் ஓடிவிட்டான். விளையாட்டிலே கவனம் அவனுக்கு.

"இன்னொரு பிடி! ஓடி வா" என்றாள். வந்தான்; ஒரு பிடி உண்டான். அது போதுமா! போதாதே!

"அப்பா பங்கு இது! இந்தா" என்றாள். அதையும் வாங்கி உண்டான் சிறுவன்.

"அப்பாவை நம்பிய ஆடல்காரிகள் பங்கு இது, ஓடி வா" என்றாள். சிறுவன் ஓடிவந்தான். அந்த நேரத்தில் அவனுடைய தந்தையும் அங்கே வந்துவிட்டான். தந்தையைக் கண்ட சிறுவன் அங்கே ஓடினான். அது கண்டாள்.

"இப்ப யார் வரச்சொன்னார்?" என்று சீறினாள் அவள்.

"வாடா கண்ணு. அங்கெல்லாம் பிறகு போகலாம். அந்த வீணரிடத்தில் என்ன வேலை? முதலில் சாப்பிடு" என்றாள்.

அவற்றையெல்லாம் காதில் போட்டுக் கொண்டால்தானே! ஓடினான் சிறுவன்.

காலவை, சுடு பொன் வளை இய ஈர் அமை சுற்றொடு
பொடி அழற் புறம் தந்த செய்வுறு கிண்கிணி.

உடுத்தவை, கைவினைப் பொலிந்த காசு அமை
பொலங் காழ்; மேல்
மை இல் செந் துகிர்க் கோவை; அவற்றின் மேல்
தைஇய, பூந் துகில், ஐது கழல் ஒரு திரை.

கையவை,'அலவன் கண் பெற அடங்கச் சுற்றிய
பல உறு கண்ணுள் சில கோல் அவிர் தொடி.

பூண்டவை, எறியா வாளும் எற்று மழுவும்
செறியக் கட்டி, ஈர் இடைத் தாழ்ந்த,
பெய் புல மூதாய்ப் புகர் நிறத் துகிரின்
மை அற விளங்கிய ஆன் ஏற்று அவிர் பூண்.

சூடின, இருங் கடல் முத்தமும், பல் மணி, பிறவும்,
ஆங்கு
ஒருங்கு உடன் கோத்த உருள் அமை முக் காழ்; மேல்
சுரும்பு ஆர் கண்ணிக்குச் சூழ் நூலாக,
அரும்பு அவிழ் நீலத்து ஆய் இதழ் நாண,
சுரும்பு ஆற்றுப்படுத்த மணி மருள் மாலை.

ஆங்க - அவ்வும் பிறவும் அணிக்கு அணியாக, நின்
செல்வு உறு திண் தேர்க் கொடுஞ் சினைக் கைப்பற்றிப்
பையயத் தூங்கும் நின் மெல் விரற் சீறடி
நோதலும் உண்டு; ஈங்கு என் கை வந்தீ,
செம்மால்! நின் பால் உண்ணிய.

பொய் போர்த்துப் பாண் தலை இட்ட பல வல்
புலையனைத்
தூண்டிலா விட்டுத் துடக்கி, தான் வேண்டியார்
நெஞ்சம் பிணித்தல் தொழிலாத் திரிதரும்
நுந்தைபால் உண்டி, சில.

நுந்தை வாய் மாயச் சூள் தேறி, மயங்கு நோய் கைமிக,
பூ எழில் உண்கண் பனி பரப்ப, கண் படா
ஞாயர்பால் உண்டி, சில.

அன்னையோ! யாம் எம் மகனைப் பாராட்ட, கதுமெனத்
தாம் வந்தார், தம் பாலவரோடு; தம்மை
வருக என்றார், யார்கொலோ, ஈங்கு?
என் பால் அல் பாராட்டு உவந்தோய்! குடி;
உண்மடத்தை; என்
பாராட்டைப்பாலோ சில.

செருக் குறித்தாரை உவகைக் கூத்தாட்டும்
வரிசைப் பெரும் பாட்டொடு எல்லாம் பருகித்தை—
தண்டுவென்-ஞாயர் மாட்டைப் பால்.

## 102. கொள்ளலும் தள்ளலும்

"அப்பா மாதிரியே இருக்கிறாயடா கண்ணே!" என்று அவனைக் கட்டிக் கொண்டாள் அவள்.

"ஆனால் எல்லா குணங்களையும் உன் அப்பாமாதிரியே கொள்ளாதே. கொள்ளவேண்டியது எது? தள்ளவேண்டியது எது? என்று என்னைக் கேள்; சொல்லித் தருகிறேன்.

"பகைவர்கள்மீது தாக்கி அவர்களை ஓடச் செய்வதில் கெட்டிக்காரர் உன் அப்பா! அந்த குணத்தைக் கொள்.

"வேண்டியவர், வேண்டாதவர் என்று பாராமல் நீதி வழங்கு பவர் உன் அப்பா. அந்தக் குணத்தை அவரிடமிருந்து பெற்றுக் கொள்.

"இரந்தார்க்கு இல்லையென்னாது கொடுக்கும் வள்ளல் உன் அப்பா. அந்தக் குணத்தை அவரிடமிருந்து பெற்றுக்கொள்.

"ஆனால் தன்னை நம்பிய பெண்களை எல்லாம் நட்டாற்றில் விடும் கொடியவன் உன் அப்பன். அந்தக் குணத்தை மாத்திரம் கொள்ளாதே."

இவ்வாறு இவள் சொல்லிக் கொண்டிருந்தபோது அவளது கணவன் வந்தான். தந்தையைக் கண்ட சிறுவன் சிரித்தான். அவள் திரும்பினாள்; கணவனைக் கண்டாள்.

"இத்தனை நாள் எங்கேயோ ஒளிந்திருந்தவர்க்கு இப்போது இங்கு என்ன வேலை?" என்றாள்.

"கோபிக்காதே. இப்படிக் கொடு அவனை" என்றான் அவன். சிறுவன் தாவினான்.

"பார்! இவ்வளவு நேரம் உபதேசம் செய்தேன். போகாதே என்று தடுக்கிறேன். கேட்கவில்லை. அப்பனிடம் தாவிப் போகிறான் பார். இவன் மாத்திரம் யார்? அன்பில்லாதவன் பெற்ற பிள்ளை தானே!" என்று ஓர் இடி இடித்தாள் அவள்.

மை படு சென்னி மழ களிற்று ஓடை போல்,
கை புனை முக்காழ் கயந் தலைத் தாழ,
பொலம் செய் மழுவொடு வாள் அணி கொண்ட
நலம் கிளர் ஒண் பூண் நனைத்தரும் அவ் வாய்
கலந்து கண் நோக்கு ஆர, காண்பு இன் துகிர்மேல்
பொலம் புனை செம்பாகம் போர் கொண்டு இமைப்ப,
கடி அரணம் பாயா நின் கை புனை வேழம்,
தொடியோர் மணலின் உழக்கி, அடி ஆர்ந்த
தேரை வாய்க் கிண்கிணி ஆர்ப்ப, இயலும் என்
போர் யானை, வந்தீக, ஈங்கு!

செம்மால்! வனப்பு எலாம் நுந்தையை ஒப்பினும்,
நுந்தை
நிலைப் பாலுள் ஒத்த குறி என் வாய்க் கேட்டு ஒத்தி;
கன்றிய தெவ்வர்க் கடந்து களம் கொள்ளும்
வென்றிமாட்டு ஒத்தி, பெரும!-மற்று ஒவ்வாதி,

'ஒன்றினேம் யாம்' என்று உணர்ந்தாரை,
நுந்தை போல்,
மென் தோள் நெகிழ விடல்.

பால் கொளல் இன்றி, பகல் போல், முறைக்கு ஒல்காக்
கோல் செம்மை ஒத்தி, பெரும! - மற்று ஒவ்வாதி,
கால் பொரு பூவின் கவின் வாட, நுந்தை போல்,
சால்பு ஆய்ந்தார் சாய விடல்.

வீதல் அறியா விழுப்பொருள் நச்சியார்க்கு
ஈதல்மாட்டு ஒத்தி, பெரும !-மற்று ஒவ்வாதி,
மாதர் மென் நோக்கின் மகளிரை, நுந்தைபோல்,
நோய் கூர நோக்காய் விடல்.
ஆங்க -

திறன் அல்ல யாம் கழற, யாரை நகும், இம்
மகன் அல்லான் பெற்ற மகன்?
மறைநின்று; தாம் மன்ற வந்தீத்தனர்.

'ஆயிழாய்! தாவாத எற்குத் தவறு உண்டோ?
காவாது ஈங்கு
ஈத்தை, இவனை யாம் கோடற்கு.' சீத்தை; யாம்
கன்றி அதனைக் கடியவும், கை நீவி,
குன்ற இறு வரைக் கோண்மா இவர்ந்தாங்கு,
தந்தை வியல் மார்பில் பாய்ந்தான் - அறன் இல்லா
அன்பிலி பெற்ற மகன்.

## 103. உப்பும் ஊடலும்

அவள் சோர்ந்திருந்தாள். மெதுவாக அவளுடைய கூந்தலைத் தடவினான் அவன்.

"வெடுக்"கென்று கூந்தலை இழுத்துக் கொண்டாள்; விலகி நின்றாள்.

"கண்ணே! ஏன் கோபிக்கிறாய்? நான் என்ன தவறு செய்தேன்?" என்று கூறி மண்டியிட்டான் அவன்.

"தவறு செய்யவேயில்லை" என்றான்.

"இல்லவேயில்லையா?" என்று சீறினாள் அவள்.

"ஆமாம்! தவறு செய்தவன் நீ அல்ல. சொன்ன சொற்படி நடவாதவன் நீ என்பது தெரிந்தும் உன்மீது அன்பு கொள்கிறார்களே! அந்தப் பெண்களே தவறு செய்பவர்கள். நீ அல்ல" என்றாள்.

"கண்ணே! எனக்கு இன்பம் அளிக்கவேண்டிய நீ, என்னை இப்படித் துன்புறுத்தலாமா? இப்படித் தண்டிக்கலாமா?" என்று கெஞ்சினான்.

இவ்வளவு நேரம் பேசாதிருந்தாள் தோழி. எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டே இருந்தாள். காதல் இன்பத்துக்கு ஊடல் அவசியம். ஆனால் அது நீண்டு விடலாகாது. உணவுக்கு உப்பு எப்படி? அப்படித்தான் ஊடல். ஊடல் அதிகமாதல் கூடாது. ஊடல் இல்லாவிட்டாலும் ருசிக்காது.

எனவே, அவள் சமரசம் செய்து வைத்தாள்.

"என்னவோ! தவறு செய்வது சகஜம். தவறு செய்தவர் அதை மறைப்பது எதனால்? நாணத்தினால்தானே. மேலும் அவரைக் காய்வது தகாது. பேசாது விடு" என்றாள்.

"உன் பேச்சுக்கு மிஞ்சி இனி என்ன இருக்கிறது! இனி மேலாவது என் கண் உறக்கம் கொள்ளட்டும்" என்றாள் அவள்.

ஒரூஉ நீ; எம் கூந்தல் கொள்ளல் - யாம் நின்னை
வெரூஉதும், காணுங்கடை.

தெரியிழாய்! செய் தவறு இல்வழி, யாங்குச் சினவுவாய்
மெய் பிரிந்து, அன்னவர் மாட்டு?

ஏடா! நினக்குத் தவறு உண்டோ? நீ வீடு பெற்றாய்;
இமைப்பின் இதழ் மறைபு ஆங்கே கெடுதி;
நிலைப் பால் அறியினும், நின் நொந்து நின்னைப்
புலப்பார் உடையர், தவறு.

அணைத் தோளாய்! தீயாரைப் போல, திறன் இன்று
உடற்றுதி;

காயும் தவறு இலேன் யான்.

மான் நோக்கி! நீ அழ நீத்தவன் ஆனது
நாணிலன் ஆயின், நலிதந்து அவன்வயின்
ஊடுதல் என்னோ, இனி?

'இனி யாதும் மீக்கூற்றம் யாம் இலம்' என்னும்
தகையது காண்டைப்பாய், நெஞ்சே! பனி ஆனுப்
பாடு இல் கண் பாயல் கொள.

## 104. அன்பும் ஆத்திரமும்

மெதுவாக அவளைத் தடவிக் கொடுத்தான் அவன். துள்ளி எழுந்தாள் அவள்; விலகி நின்றாள்.

"ஏய் யார் நீ? ஏன் எனைத் தொடுகிறாய்? என்னைத் தொட உனக்கு என்ன உரிமை இருக்கிறது?"—நாக சர்ப்பம் போல் சீறினாள்.

"மனிதர்களுக்கு ஆத்திரம் கூடாது. ஆத்திரம் வந்தால் அறிவு மழுங்கும். அறிவு மழுங்கியவரிடம் பேச முடியாது" என்றான் அவன். அவளுக்கு மேலும் ஆததிரம் வந்தது. "தவறு செய்தவன் இவன். குதிரை கீழே தள்ளியதும் இல்லாமல் குழியையும் பறித்த கதையாக நம்மையல்லவா ஆததிரக்காரி என்கிறான்" என்று வெகுண்டாள்.

"ஏய், பொய்யும் புனைசுருட்டும் ஏன்? நீ எங்கேயோ போக விரும்புகிறாய். அவ்வளவுதானே! போ" என்றாள்.

"இதோ பார்! வீணாக என் மீது கோபியாதே! என்ன தவறு கண்டு விட்டாய் என் மீது? இப்படிக் கோபிக்கிறாயே!" என்று அதட்டிப் பேசினான்.

"வயலில் நண்டு ஊர்ந்தால் எப்படிச் சுவடும், கீறலும் இருக்குமோ! அந்த மாதிரி இருக்கிறது உன் முகமும் மார்பும். நீ என்னடா என்றால், 'என் மீது என்ன தவறு?' என்று கேட்கிறாய். ஆடல் மகளிருடன் விளையாடினாய் என்பதற்கு வேறு என்ன சான்று வேண்டும்?" என்றாள்.

"உன் கண்ணுக்கு என்னவோ அப்படித் தெரிகிறது. என் மேல் தவறில்லை. சத்தியம் வேண்டுமானாலும் செய்யத் தயார்" என்றான்.

'சத்தியம் செய்வேன்,' என்றதும் அவள் சிறிது நிதானித்தாள். "இவன் செய்யப் போவது பொய்ச் சத்தியம். அதனால் கேடு வரும். அக் கேடு யாரைப் பாதிக்கும்? நமது குடும்பத்தை யல்லவா!"

இவ்வாறு யோசித்தாள். வாயை மூடிக்கொண்டு பேசாது இருந்து விட்டாள்.

ஒரூஉ; கொடி இயல் நல்லார் குரல் நாற்றத்து உற்ற
முடி உதிர் பூந் தாது மொய்ம்பின ஆக,
தொடிய, எமக்கு நீ யாரை? பெரியார்க்கு
அடியரோ ஆற்றுதவர்?

கடியர் தமக்கு யார் சொல்லத் தக்கார் மாற்று?

வினைக்கெட்டு, வாய் அல்லா வெண்மை உரையாது,
கூறு நின்
மாயம் மருள்வாரகத்து.

ஆயிழாய்! நின்கண் பெறின் அல்லால், இன் உயிர்
வாழ்கல்லா
என்கண் எவனோ,' தவறு?

இஃது ஒத்தன்! புள்ளிக் களவன் புனல் சேர்
பொதுக்கம் போல்,
வள் உகிர் போழ்ந்தனவும், வாள் எயிறு உற்றனவும்,
ஒள் இதழ் சோர்ந்த நின் கண்ணியும், நல்லார்
சிறாறுபு சீறச் சிவந்த நின் மார்பும்,
தவறுதல் சாலாவோ? கூறு.

அது தக்கது; வேற்றுமை என்கண்ணோ ஓராதி;
தீது இன்மை
தேற்றக் கண்டியாய்: தெளிக்கு.

இனித் தேற்றேம் யாம்.

தேர் மயங்கி வந்த தெரி கோதை அம் நல்லார்
தார் மயங்கி வந்த தவறு அஞ்சி, போர் மயங்கி,
நீ உறும் பொய்ச் சூள் அணங்கு ஆகின், மற்று
யார் மேல்? விளியுமோ? கூறு.

## 105. மிஞ்சுவதும் கெஞ்சுவதும்

"யாரடா இவன்? என் கூந்தலைப் பற்றித் தொடுகிறவன்? யார் நீ? உனக்கு இங்கே இந்த வீட்டில் என்ன வேலை? நுழையாதே! போ! விட மாட்டேன்" என்று இரைந்தாள் அவள்.

"கண்ணே! கோபியாதே! நீயும் நானும் ஒரு மாட்டின் இரு கொம்புகள் போல, ஒத்து வாழக் கடமைப்பட்டிருக்கிறோம். நான் சொல்வதைக் கேள். சிம்புள் என்றொரு பறவை உண்டு. அதற்கு இரண்டு தலை; எட்டுக் கால். இந்த இரண்டு தலைகளும் ஒன்றுடன் மற்றொன்று போரிடுவதுண்டோ? சொல்" என்றான்.

"ஏய், உனது மாய மாலம் எல்லாம் எனக்குத் தெரியும். காளிக்கு ஒன்றும் தெரியாது என்று எண்ணிக் கூளி கூறியது மாதிரி நீ ஏதோ சொல்கிறாயே! அவற்றிற்கெல்லாம் நான் மசிய மாட்டேன்" என்றாள்.

"கண்ணே! அரசன் ஒருவனைத் தண்டிக்கிறான். அதனால் தண்டிக்கப் பட்டவன் குற்றவாளியாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. குடிகள் மீது குற்றம் இல்லாத போதும் கோமான் கோபிக்கலாம் அல்லவா!" என்றான் அவன்.

இவ்வளவு தூரம் அவன் கெஞ்சுதல் கண்டாள் அவள். மேலும் ஊடியிருந்தால் காரியம் கெட்டுப்போகும். எனவே, இதுவே போதும் என்று எண்ணினாள். ஊடல் தணிந்தாள்.

யார் இவன்? எம் கூந்தல் கொள்வான்? இதுவும் ஓர்
ஊராண்மைக்கு ஒத்த படிறு உடைத்து; எம் மனை
வாரல்; நீ வந்தாங்கே மாறு.

என் இவை, ஓர் உயிர்ப் புள்ளின் இரு தலையுள் ஒன்று
போர் எதிர்ந்தற்றாப் புலவல்? நீ கூறின், என்
ஆர் உயிர் நிற்கும் ஆறு யாது ?

ஏஎ! தெளிந்தேம் யாம்; காயாதி-எல்லாம் வல்-எல்லா !
பெருங் காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு,
வருந்தல் நின் வஞ்சம் உரைத்து.

மருந்து இன்று-மன்னவன் சீறின், தவறு உண்டோ?
நீ நயந்த,
இன்னகை! தீதோ இலேன்.

மாண மறந்து உள்ளா நாணிலிக்கு இப் போர்
புறம் சாய்ந்து காண்டைப்பாய் - நெஞ்சே! உறழ்ந்து
இவனைப்
பொய்ப்ப விடேஎம் என நெருங்கின், தப்பினேன்
என்று அடி சேர்தலும் உண்டு!

## 106. இரவும் வரவும்

“கண்ணே! ஏன் உன் முகம் வாடியிருக்கிறது!” என்று கூறிக் கொண்ட அவளது முகத்தைத் திருப்பினான். அவள் சீறினாள்.

“ஏய், என்னைத் தொடாதே! என்னிடம் கொஞ்சவும் வேண்டாம். கொஞ்சும் மகளிர் எத்தனையோ பேர் இருக்கிறார்கள் உனக்கு” என்றாள்.

“ஏன் இப்படிக் கோபிக்கிறாய் ? என்னிடம் என்ன தவறு கண்டாய் ?” என்றான்.

“நீ ரொம்ப யோக்கியன் என்று எண்ணியிருந்தேன். உன் ‘குட்டு’ வெளிப்பட்டு விட்டது. இனி உன்னை நம்பமாட்டேன்” என்றாள்.

“என்ன கண்டாய், என் குட்டு வெளிப்பட ?” என்று சிறிது மிடுக்காகக் கேட்டான்.

“நேற்று இரவு நடந்ததைச் சொல்லட்டுமா ?” என்றாள்.

"சொல் பார்க்கலாம்" என்முன்.

"பாதி ராத்திரியிலே அந்தப் பெண் வந்து கதவை இடித்தாள். நீ எழுந்து ஓடினுய். கதவைத் திறந்தாய். எல்லாம் எனக்குத் தெரியும்" என்முள்.

"இன்னும் என்ன தெரியும்?"

"உன்னைக் கண்டாள் அவள். கோபித்தாள். உன் கழுத்தில் கிடந்த மாலையை அறுத்தாள். நீ அவள் காலில் விழுந்தாய். கெஞ்சினுய். 'மழையினுல் வர முடியவில்லை' என்முய். இவை எல்லாம் நான் அறிவேனடா!" என்முள்.

"அடி பைத்தியமே! ஏதோ கனவு கண்டிருக்கிருய். அதை நிசம் என்று நினைத்து என்னை ஏசுகிருய்"என்முன் சாமர்த்தியமாக.

"இதோ பார்! இந்தப் புளுகு இனி என்னிடம் பலிக்காது" என்முள் அவள்.

"கண்ணே! கோபியாதே! உன்மீது ஆசை கொண்டவன் தான் நான். சீருதே. என்னை ஏற்று இன்பம் தா" என்முன். மண்டியிட்டான்.

அவளுக்கு மகிழ்ச்சியுண்டாயிற்று.

கண்டேன், நின் மாயம் களவு ஆதல்; பொய்ந் நகா,
மண்டாத சொல்லித் தொடாஅல்; தொடீஇய நின்
பெண்டிர் உளர்மன்னே, ஈங்கு ?

ஒண்தொடி! நீ கண்டது எவனே தவறு?

கண்டது நோயும் வடுவும் கரந்து, மகிழ் செருக்கி,

பாடு பெயல் நின்ற பானுள் இரவில் -
தொடி பொலி தோளும், முலையும், கதுப்பும்,
வடிவு ஆர் குழையும், இழையும், பொறையா
ஒடிவது போலும் நுசுப்போடு, அடி தளரா,
ஆராக் கவவின் ஒருத்தி வந்து - அல்கல் தன்
சீர் ஆர் ஞெகிழம் சிலம்ப, சிவந்து, நின்
போர் ஆர் கதவம் மிதித்தது அமையுமோ ?
ஆய்இழை ஆர்க்கும் ஒலி கேளா, அவ் எதிர்
தாழாது எழுந்து நீ சென்றது அமையுமோ ?

மாறுள் சினை இ, அவள் ஆங்கே, நின் மார்பில்
நாறு இணர்ப் பைந் தார் பரிந்தது அமையுமோ?
'தேறு நீ; தீயேன்அலேன்' என்று மற்று அவள்
சீறடி தோயா இறுத்தது அமையுமோ?
கூறு இனி; காயேமோ, யாம்?

தேறின், பிறவும் தவறு இலேன் யான்;
அல்கல் கனவுக்கொல் நீ கண்டது?

'கனை பெயல் தண் துளி வீசும்பொழுதில் குறி வந்தாட்
கண்ட கனவு' என, 'காணாது, மாறு உற்று—
பண்டைய அல்ல, நின் பொய்ச் சூள், நினக்கு; எல்லா! -
நின்றாய்; நின் புக்கில் பல.'

மென் தோளாய்! நல்கு, நின் நல் எழில்; உண்கு.

ஏடா! குறை உற்று நீ எம் உரையல்!—நின் தீமை
பொறை ஆற்றேம் என்றல் பெறுதுமோ, யாழ
நிறை ஆற்றா நெஞ்சு உடையேம்?

## 107. இடியும் மின்னலும்

"மூஞ்சியையும் முகரக்கட்டையையும் பாரு."
"ஏன்? என் மூஞ்சிக்கு என்ன?"
"ஒன்றுமில்லே. நல்லா இருக்கு."
"நல்லா இல்லேயோ!"
"இருக்கு; இருக்கு. நாளுக்கு நாள் நல்லாத்தானே இருக்கு. நேற்று இருந்ததைவிட இன்று எவ்வளவு அழகாயிருக்கு பார்!"

முகத்தைத் திருபபித் தோளில் இடித்துக் கொண்டாள் அவள். அருவருப்பும் குத்தலும் அடங்கிய அம் மொழிகளைக் கேட்டான் அவன்.

"சும்மா! ஏன் நீயாக ஏதோ கற்பனை செய்துகொள்கிறாய்," என்றான் அவன்.

"கற்பனையா?" என்று கேட்டவண்ணம் ஏற இறங்கப் பார்த்தாள் அவள். கண்களில் தீப்பொறி பறந்தது.

"கற்பனையல்லாது வேறு என்னவாம்?" என்றான் அவன் சிறிது அழுத்தம் திருத்தமாக.

அவள் அவனை நெருங்கினாள்.

அவனது உதடு சிவந்திருந்தது. பல்லால் அழுத்திய புண்ணும் தெரிந்தது. மார்பிலும், நெற்றியிலும், கன்னத்திலும் பல காயங்கள்; வடுக்கள். நகத்தால் கீறியன.

அவற்றைத் தொட்டுத் தொட்டுக் காட்டினாள் அவள்.

"இதெல்லாம் என்னவாம்?" என்றாள்.

'ஐயோ! நமது ஒழுக்கக் கேட்டை இவள் கண்டு கொண்டாளே' என்று திடுக்கிட்டான் அவன். இருந்தாலும் நெஞ்சழுத்தக்காரன். முதலில் சொன்னதையே கடைசிவரையில் சாதிப்பது என்று முடிவு செய்தான்.

ஆனால் போர்முறை மாறிற்று. அவளிடம் நயமாகப் பேசத் தொடங்கினான்:

"இதோ பார் கண்ணே! வீணாக ஏன் கோபிக்கிறாய்? மனதை அலட்டிக் கொள்கிறாய். நான் வெளியே எங்கேயாவது போனால் பரத்தையர் வீட்டுக்குத்தான் போயிருக்கிறேன் என்று ஏன் முடிவு செய்கிறாய்?" என்றான். அவளது மனம் இளகி விட்டது.

"நீ ஒன்றுமே சொல்ல வேண்டியதில்லையே! இனிமேல் நான் உன்னை ஏதும் கண்டிப்பதில்லை என்ற முடிவுக்கு வந்து விட்டேன். சுடு சொற்களை அள்ளி வீசமாட்டேன். ஏசமாட்டேன். நீ எப்போது வந்தாலும் சரி. ஏற்றுக் கொள்ள முடிவு செய்து விட்டேன். எனவே, எனக்கு எதுவுமே சொல்ல வேண்டாம். 'அங்கே போனேன்; இங்கே போனேன்' என்ற பொய் எதற்கு? நீ எங்கு வேண்டுமானாலும் போ. ஆனால் இங்கும் வா. மறந்து விடாதே!" என்றாள்.

அரி நீர் அவிழ் நீலம், அல்லி, அனிச்சம்,
புரி நெகிழ் முல்லை, நறவோடு, அமைந்த
தெரி மலர்க் கண்ணியும் தாரும் நயந்தார்
பொரு முரண் சீறச் சிதைந்து, நெருநையின்

இன்று நன்று, என்னை அணி.

அணை மென் தோளாய்! செய்யாத சொல்லிச் சினவுவது
ஈங்கு எவன்,
ஐயத்தால்? என்னைக் கதியாதி; தீது இன்மை
தெய்வத்தான்—கண்டீ—தெளிக்கு.

மற்றது, அறிவல், யான் நின் சூள் ; அனைத்தாக
நல்லார்
செறி தொடி உற்ற வடுவும், குறி பொய்த்தார்
கூர் உகிர் சாடிய மார்பும், குழைந்த நின்
தாரும், ததர் பட்ட சாந்தமும், சேரி
அரி மதர் உண் கண்ணார் ஆராக் கவவின்,
பரிசு அழிந்து, யாழ நின் மேனி கண்டு, யானும்
செரு ஒழிந்தேன்; சென்றீ, இனி.

தெரியிழாய்! தேற்றாய் சிவந்தனை - காண்பாய், நீ -
தீது இன்மை
ஆற்றின் நிறுப்பல் பணிந்து.

அன்னதேல், ஆற்றல் காண் :

வேறுபட்டாங்கே கலுழ்தி; அகப்படின்,
மாறுபட்டாங்கே மயங்குதி; யாது ஒன்றும்
கூறி உணர்த்தலும் வேண்டாது; மற்று நீ
மாறு செயினும், மறுத்து, ஆங்கே நின்வயின்
காணின் நெகிழும் என் நெஞ்சு ஆயின், என் உற்றாய்,
பேணாய் நீ பெட்பச் செயல்?

## 108. கனவும் காரிகையும்

"ராத்திரி, தூக்கத்திலே கனவு கண்டேன்."
"என்ன கனவு?"
"நல்ல கனவுதான்!"
"என்ன சொல்லேன்."

"பகல் நேரம். வைகை ஆற்றின் கரையிலே ஒரு பூஞ் சோலை. அந்தப் பூஞ்சோலைக்குப் போனேன்..."

"உம், அங்கே என்ன கண்டாய் ?"

"ஆகா ! அங்கே கண்ட காட்சியை என்ன என்று சொல்வேன் ? எப்படிக் கூறுவேன் ?"

"சும்மா சொல்லு."

"சொல்லவா !"

"சொல்லு."

"அன்னப் பறவை இருக்கிறதே ! அது என்ன செய்யும் ? பகல் நேரத்திலே பொய்கைகளில் திரியும். அந்தி வந்ததும் இமய மலைச் சாரலில் ஒதுங்கும். ஒரே கூட்டமாக ஒதுங்கும்."

"அந்த மாதிரி..."

"ஒரே கூட்டம்."

"என்ன கூட்டம்? அன்னப் பறவைகளின் கூட்டமா ?"

"சேச்சே ! பெண்களின் கூட்டம்."

"ஊஹூம். பெண்களின் கூட்டமா ? அப்புறம்...?"

"குன்று போன்றதொரு மணல் மேட்டின் அருகே இருந்தார்கள்."

"ஏய் ! இது என்ன கனவா? யாரை ஏய்க்கப் பார்க்கிறாய்?"

"கனவுதான் ; கனவுதான்."

"அப்பனே ! பறை இருக்கிறதே ! அது தானாக எங்கேயாவது ஒலிக்குமா ? ஒலிக்காது. அதை அடிப்பவன் எந்த மாதிரி அடிக்கிறானோ அந்தமாதிரிதான் ஒலிக்கும். தெரிந்ததா ?"

"அது போல..."

"அது போல நீயும் உன் மனதில் உள்ளதைக் கனவில் ஏற்றிச் சொல்கிறாய்."

"இந்தா பார் ! நடுவில் ஏதாவது பேசாதே ! கனவின் சுவாரஸ்யம் கெட்டுப் போகும்" என்று சீறினான் அவன்.

"சரி ; சரி. கோபிக்காதே ! சொல்" என்றாள்.

"அந்தப் பெண்கள் என்ன செய்தார்கள் ? மலர் பறித்தார்கள். மலர் பறிக்கவே, என்னாயிற்று ? மலரில் தங்கிய வண்டுகள் பறந்து ஓடின ; கூட்டம் கூட்டமாக ஓடின ; அஞ்சி ஓடின. அக் காட்சி எப்படி இருந்தது தெரியுமா ?"

"எப்படி இருந்தது?"

"வேப்பம் பூ மாலை அணிந்த நமது பாண்டியனின் பகைவர் அஞ்சி ஓடுவதுபோல் இருந்தது."

"உம். மேலே சொல்லு."

"அப்படி அஞ்சி ஓடிய வண்டுகள் என்ன செய்தன? மீண்டும் வந்தன; ஒன்று கூடி வந்தன. அம் மகளிரைத் தாக்கின."

"அப்படிச் சொல்லு. வண்டுகள் தாக்கினவா?" என்றாள்.

"ஆமாம்; தாக்கின."

"மகளிர் என்ன செய்தார்கள்?"

"அலறிப் புடைத்துக் கொண்டு மூலைக்கு ஒருத்தியாக ஓடினாள்."

"ஐயோ பாவமே!"

"அப்படி ஓடவே என்னாயிற்று? ஒருத்தியின் நகை இன்னொருத்தியின் மீது மாட்டியது. இருவரையும் சேர்த்து ஓடவிடாது தடுத்தது. வேறொருத்தி பயந்து ஓடினாள். எதிரே வந்த காதலனை அப்படியே கட்டிக் கொண்டாள்.

"ஒருத்திக்குக் கூந்தல் அவிழ்ந்தது. ஆடையும் அவிழ்ந்தது. கூந்தலை ஒரு கையால் பிடித்துக்கொண்டாள். துணியை மற்றொரு கையில் பிடித்துக் கொண்டாள். வெகு வேகமாக ஓடினாள். ஓடியவள் 'பொத்' தென்று விழுந்தாள் குட்டையிலே."

"ஏய்! யாருக்குக் 'காது' குத்துகிறாய்?"

"காது குத்தவுமில்லை, ஒன்றுமில்லை. வீணாகக் கோபிக்காதே. அதோ பார்!"

"என்ன?"

"தெரியவில்லையா? காது செவிடா?"

"குயில் கூவுகிறது."

"என்ன சொல்லிக் கூவுகிறது தெரியுமா? 'இன்பம்! இன்பம்!' என்று கூறுகிறது. இன்பமாக இருப்போம் வா! எனது கனவும் இதுதான்" என்றான்.

அவள் சிரித்தாள்.

புன வளர் பூங் கொடி அன்னாய்! கழியக்
கனவு'எனப்பட்டது ஓர் காரிகை நீர்த்தே:

முயங்கிய நல்லார் முலை இடை மூழ்கி,
மயங்கி, மற்று - ஆண்டு ஆண்டுச் சேறலும் செல்லாது,
உயங்கி இருந்தார்க்கு உயர்ந்த பொருளும் ;
அரிதின் அறம் செய்யா, ஆன்றோர், உலகும்,
உரிதின் ஒருதலை எய்தலும் - வீழ்வார்ப்
பிரிதலும் ஆங்கே புணர்தலும் தம்மில்
தருதல் தகையாதால் மற்று.

நனவினுல் போலும், நறுநுதால்! அல்கல்
கனவினுல் சென்றேன் - கலி கெழு கூடல்
வரை உறழ் நீள் மதில் வாய் சூழ்ந்த வையைக்
கரை அணி காவினகத்து.
உரை, இனி - தண்டாத் தீம் சாயல் நெடுந்தகாய்! அவ்
வழிக்
கண்டது எவன் மற்று நீ ?

கண்டது - உடன் அமர் ஆயமொடு அவ் விசும்பு ஆயும்
மட நடை மா இனம், அந்தி அமையத்து,
இடன் விட்டு இயங்கா இமையத்து ஒருபால்,
இறை கொண்டு இருந்தன்ன - நல்லாரைக் கண்டேன்,
துறை கொண்டு உயர் மணல்மேல் ஒன்றி நிறைவதை.

ஓர்த்தது இசைக்கும் பறை போல், நின் நெஞ்சத்து
வேட்டதே கண்டாய், கனா.

'கேட்டை விரையல் நீ ; மற்று வெகுள்வாய்!' - 'உரை'
'ஆண்டு
இதுவாகும், இன் நகை நல்லாய்! பொதுவாக,
தாம் கொடி அன்ன தகையார் எழுந்தது ஓர்
பூங் கொடி வாங்கி, இணர் கொய்ய, ஆங்கே
சினை அலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனை அரண் போல உடைந்தன்று, அக் காவில்
துனை வரி வண்டின் இனம்.

மற்று ஆங்கே நேர் இணர் மூசிய வண்டு எல்லாம்
அவ் வழிக்

காரிகை நல்லார் நலம் கவர்ந்து உண்ப போல்
ஓராங்கு மூச,
அவருள்,

ஒருத்தி, செயல் அமை கோதை நகை;
ஒருத்தி, இயல் ஆர் செருவில் தொடியொடு தட்ப;
ஒருத்தி, தெரி முத்தம், சேர்ந்த, திலகம்;
ஒருத்தி, அரி மாண் அவிர் குழை ஆய் காது வாங்க,
ஒருத்தி, வரி ஆர் அகல் அல்குல் காழகம்;
ஒருத்தி, அரி ஆர் நெகிழத்து அணி சுறுத் தட்ப;

ஒருத்தி, புலவியால் புல்லாதிருந்தாள், அலவுற்று
வண்டினம் ஆர்ப்ப, இடை விட்டுக் காதலன்
தண் தார் அகலம் புகும்.

ஒருத்தி, அடி தாழ் கலிங்கம் தழீஇ, ஒரு கை
முடி தாழ் இருங் கூந்தல் பற்றி, பூ வேய்ந்த
கடி கயம் பாயும், அலந்து.

ஒருத்தி, கணம் கொண்டு அவை மூச, கை ஆற்றாள்,
பூண்ட
மணம் கமழ் கோதை பரிபு கொண்டு, ஓச்சி,
வணங்கு காழ் வங்கம் புகும்.

ஒருத்தி, இறந்த களியான் இதழ் மறைந்த கண்ணள்,
பறந்தவை மூசக் கடிவாள், கடியும்
இடம் தேற்றாள் சோர்ந்தனள், கை.

ஆங்க, கடி காவில் கால் ஒற்ற, ஒல்கி ஒசியாக்
கொடி கொடி தம்மில் பிணங்கியவை போல்,
தெரிஇழை ஆர்ப்ப மயங்கி இரிவுற்றார், வண்டிற்கு
வண்டலவர்; கண்டேன், யான்.'

நின்னை நின் பெண்டிர் புலந்தனவும், நீ அவர்
முன் அடி ஒல்கி உணர்த்தினவும், பல் மாண்

கனவின் தலையிட்டு உரையல்; சினை இ யான்
செய்வது இல் என்பதோ? கூறு.

பொய் கூறேன் - அன்ன வகையால் யான் கண்ட
      கனவு தான்
நன் வாயாக் காண்டை - நறுநுதால்! 'பல் மாணும்
கூடிப் புணர்ந்தீர்! பிரியன்மின்; நீடிப்
பிரிந்தீர்! புணர் தம்மின்' என்பன போல,
அரும்பு அவிழ் பூஞ் சினைதோறும் இருங் குயில்
ஆனுது அகவும் பொழுதினான், மேவர,
நான்மாடக்கூடல் மகளிரும் மைந்தரும்
தேன் இமிர் காவில் புணர்ந்திருந்து ஆடுமார்,
ஆனு விருப்போடு அணி அயர்ப, காமற்கு
வேனில் விருந்து எதிர்கொண்டு.

## 109. அடியாரும் இடியாரும்

"ஒரு நாள் போல் பார்க்கிறேன். தினமும் இவ்வளவு நேரங் கழித்து வருகிறாய். எங்கே போய் வருகிறாய்?"

"எங்கேயும் போகவில்லையே!"

"எங்கும் போகாவிட்டால் ஏன் இவ்வளவு நேரம்? என்ன செய்தாய்?"

"அடியார்களை தரிசித்து வந்தேன்."

"அடியாரைத் தரிசித்தாயா? என்ன அடியார் அப்பா?"

"சொல்லவா?"

"சொல்லேன்."

"முதன் முதலில் நாம் காதலிக்கத் தொடங்கியபோது பார்த்தோமே! அந்த அடியார். நமது கலியாணத்துக்கு நாள் பார்த்துக் கொடுத்த அடியார்."

"ஓகோ! அந்த அடியாரா! நீ பார்த்த அந்த அடியாரை நான் சொல்லவா?"

"சொல்லேன்."

"எழில் மிக்க அடியார்; கண்டவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அடியார். முத்துப் போன்ற முறுவல் உள்ள அடியார். உன் மீது ஆசை கொண்ட அடியார். உன்னை ஆட்கொண்ட அடியார்; சாந்தும் புனுகும், ஜவ்வாதும் அணிந்து, வாசனை வீசும் மலர் சூடிய அடியார்; பிறவிப் பயன் அளிக்கும் அடியார்; தின மும் உன்னுடன் புதுப்புனல் ஆடிய அடியார்; திருப்பரங் குன்றத்து முருகனை வழிபட்ட அடியார்; தேவர் அடியார்.

"அப்பேர்ப்பட்ட அடியாரைக் கண்ட பின் இங்கு ஏன் வந் தாய்? போ! போ! அங்கேயே போ! பிறவியெடுத்த பயனைப் பெற வேண்டாமா? போ! நீ இல்லாவிட்டால் அவர்களுக்கு மிகுந்த கஷ்டமாக இருக்கும். அரிதிற் பெற்ற ஒருவனை இழக்க நேரிடும். வருந்துவார்கள். சீக்கிரமாகப் போ."

ஆடல் மகளிர் வீட்டில் சில காலம் தங்கி இருந்து பின் வந்தான் கணவன். அவனைத்தான் இவ்வாறு கூறி விரட்டினாள் அவனது மனைவி.

வண்டு ஊது சாந்தம் வடுக் கொள நீவிய,
தண்டாத் தீம் சாயற் பரத்தை, வியல் மார்ப!
பண்டு, இன்னை அல்லைமன்; ஈங்கு எல்லி வந்தீய,
கண்டது எவன்? மற்று உரை.

நன்றும் தடைஇய மென் தோளாய்!
கேட்டைவாயாயின் –
உடன் உறை வாழ்க்கைக்கு உதவி உறையும்
கடவுளர்கண் தங்கினேன்.

சோலை மலர் வேய்ந்த மான் பிணை அன்னார் பலர், நீ
கடவுண்மை கொண்டு ஒழுகுவார்.

அவருள், எக் கடவுள்? மற்று அக் கடவுளைச் செப்பீமன்.

'முத்து ஏர் முறுவலாய்! நாம் மணம் புக்கக்கால்,
"இப்போழ்து போழ்து" என்று அது வாய்ப்பக் கூறிய
அக் கடவுள், மற்று அக் கடவுள்.' – 'அது ஒக்கும்.

நாஉள் அழுந்து தலை சாய்த்து நீ கூறும்
மாயமோ; கைப்படுக்கப்பட்டாய் நீ; கண்டாரை
வாயாக யாம் கூற வேட்டீவாய்! கேள், இனி:

பெறல் நசை வேட்கையின் நின் குறி வாய்ப்ப,
பறி முறை நேர்ந்த நகாராக, கண்டார்க்கு
இறு முறை செய்யும் உருவொடு, நும் இல்,
செறி முறை வந்த கடவுளைக் கண்டாயோ?

நறுந் தண் தகரமும் நானமும் நாறும்
நெறிந்த குரற் கூந்தல் நாள் அணிக்கு ஒப்ப,
நோக்கின் பிணி கொள்ளும் கண்ணொடு, மேல் நாள், நீ
பூப் பலி விட்ட கடவுளைக் கண்டாயோ?

ஈர் அணிக்கு ஏற்ற ஒடியாப் படிவத்துச்
சூர் கொன்ற செவ் வேலாற் பாடி, பல நாளும்,
ஆராக் கனை காமம் குன்றத்து நின்னொடு
மாரி இறுத்த கடவுளைக் கண்டாயோ?

கண்ட கடவுளர் தம்முளும், நின்னை
வெறி கொள் வியல் மார்பு வேருகச் செய்து,
குறி கொளச் செய்தார் யார்? செப்பு: மற்று யாரும்
சிறு வரைத் தங்கன் வெகுள்வர்; செறு தக்காய்!
தேறினேன்; சென்றீ நீ - செல்லா விடுவாயேல்,
நல் தார் அகலத்துக்கு ஓர் சார மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுளர் எல்லார்க்கும்
முட்டுப்பாடு ஆகலும் உண்டு.'

## 110. குள்ளனும் கூனியும்

குள்ளன் ஒருவன். கூனி ஒருத்தி. இந்த இரண்டு பேருக்கும் காதல். அவளுக்கு அவன் மீது ஆசை; அவனுக்கு அவள் மீது ஆசை. ஆனால் இந்த இருவரும் தனிமையில் சந்தித்துப் பேசவே சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

ஒரு நாள்—

ஆடி ஆடி நடந்து வந்து கொண்டிருந்தாள் கூனி. கண்டான் குள்ளன்; பின்னே சென்றான்:

"ஆடி வரும் தேனே"' என்றான்.

"யார் அது?" என்று திரும்பிப் பார்த்தாள் கூனி. குள்ளனைக் கண்டாள். "ஆகா! என்ன அழகு! என்ன அழகு! நீரிலே தோன்றும் நிழல் போல் இருக்கிறாயடி, அடி கூனி!" என்றான்.

"ஐயே" என்று கேலி செய்தாள் அவள்.

"உன் மீது காதல் கொண்டு தவிக்கிறேனடி" என்றான்.

"கண்ணால் காணச் சகியாத கட்டழகனே!" என்றாள் அவள்.

அவன் சிரித்தான்.

"சிறிது பேசலாம் நில்" என்றான்.

"ஏனடா! எந்த நேரத்திலடா பிறந்தாய்! வெளவாலுக்குப் பிறந்தவனே!" என்று சீறினாள்.

"ஏர் கலப்பை மாதிரியிருக்கிறாயடி! உன் அழகைக் கண்டு காதல் கொண்டேன். என் காதல் தணிப்பாயடி" என்றான்.

"பல்லாங்குழிப் பலகையை நிறுத்தி வைத்தது போலிருக்கிறாய். பகல் நேரத்திலே வந்து என்னைக் கூப்பிடுகிறாய்! ஏனடா நீ அக்காள் தங்கையுடன் பிறக்கவில்லையோ?"

"அடி கூனி! கொக்குப்போல் இருக்கும் உன் பேரழகு கண்டேன். உள்ளம் பறி கொடுத்தேன் உன்னைக் கட்டித் தழுவ ஆசையாயிருக்கிறது எப்படிக் கட்டித் தழுவுவேன்? முன் புறம் அணைப்பதா? பின் புறம் அணைப்பதா? எப்படி அணைத்தாலும் உன் கூன் என்னை முட்டுமே!"

கேட்டாள் கூனி. கோபம் கொண்டாள்.

"சீ; போ" என்று கூறிவிட்டு நடந்தாள். மீண்டும் அவளை வழி மறித்தான் குள்ளன்.

"ஏனடா! உளுந்திலே செய்த பணியாரப் பொம்மை மாதிரி இருக்கிறாய். உனக்கு நான் என்னடா கெட்டு விட்டேன்?" என்றாள். மேலும் நடந்தாள்.

"நடையலங்காரம் கண்டேன்" என்று பாடினான் அவன். கூனிக்கு மகிழ்ச்சி.

"ஏய்! அமையைத் தூக்கி நிறுத்தியது போலிருக்கிறது உன் கையும் காலும். நடையோ காமன் மாதிரி" என்று கூறினள்.

"பார்! பார்! அந்தக் காமன் நடை இது காண்" என்று சொன்னான் குள்ளன். கையையும் காலையும வீசி வீசி நடந்தான்.

அவள் மகிழ்ந்தாள்.

"சரி. இனி நாம் பகையை விடுவோம். இன்பமாக இருப் போம். எப்போ? எங்கே? இடம் சொல" என்முன் குள்ளன்.

"இப்போ வேண்டாம்."

"பின் எப்போ? எங்கே?"

"அதோ! அந்தப் பூஞ்சோலைக்கு."

அப்புறம் அவ்வளவுதான்.

என் நோற்றனைகொல்லோ?-
நீருள் நிழல் போல் நுடங்கிய மென் சாயல்
ஈங்கு உருச் சுருங்கி
இயலுவாய்! - நின்னோடு உசாவுவேன்; நின்றீத்தை.

அன்னையோ! காண் தகை இல்லாக் குறள் நாழிப்
போழ்தினன்,
ஆண்டலைக்கு ஈன்ற பறழ் மகனே! நீ எம்மை,
'வேண்டுவல்' என்று விலக்கினை; நின் போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று?

மாண்ட எறித்த படைபோல் முடங்கி மடங்கி,
நெறித்துவிட்டன்ன நிறைஏரால் என்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய்; பொறீஇ

நீ நல்கின் உண்டு, என் உயிர்.

குறிப்புக் காண் - வல்லுப் பலகை எடுத்து நிறுத்தன்ன
கல்லாக் குறள! கடும் பகல் வந்து எம்மை,
'இல்லத்து வா' என, மெய் கொளீஇ, எல்லா! நின்
பெண்டிர் உளர்மன்னோ? கூறு.

நல்லாய்! கேள்: உக்கத்து மேலும் நடு உயர்ந்து
 வாள் வாய
கொக்கு உரித்தன்ன கொடு மடாய்! நின்னை யான்
புக்கு அகலம் புல்லின், நெஞ்சு ஊன்றும்; புறம் புல்லின்,
அக்குளுத்து; புல்லலும் ஆற்றேன்; அருளீமோ,
பக்கத்துப் புல்லச் சிறிது.

'போ, சீத்தை! மக்கள் முரியே! நீ மாறு, இனி; தொக்க,
மரக் கோட்டம் சேர்ந்து எழுந்த பூங் கொடி போல,
நிரப்பம் இல் யாக்கை தழீஇயினர், எம்மைப்
புரப்பேம் என்பாரும் பலரால்; பரத்தை என்
பக்கத்துப் புல்லீயாய் என்னுமால்; தொக்க
உழுந்தினும் துவ்வா, குறு வட்டா! நின்னின்
இழிந்ததோ, கூனின் பிறப்பு?'—'கழிந்து ஆங்கே,
''யாம் வீழ்தும்'' என்று தன் பின் செலவும், உற்றீயாக்
கூனி குழையும் குழைவு காண்.'

'யாமை எடுத்து நிறுத்தற்றால், தோள் இரண்டும் வீசி,
யாம் வேண்டேம் என்று விலக்கவும், எம் வீழும்
காமர் நடக்கும் நடை காண்' - 'கவர் கணைச்
சாமனார் தம்முன் செலவு காண்.'

ஓஒ! காண். நம்முள் நகுதல் தொடீஇயர், நம்முள் நாம்
உசாவுவம்; கோன் அடி தொட்டேன்.

ஆங்கு ஆக! சாயல் இன் மார்ப! அடங்கினேன்; 'ஏஎ!
பேயும் பேயும் துள்ளல் உறும்' எனக்
கோயிலுள் கண்டார் நகாமை வேண்டுவல்;
தண்டாத் தகடு உருவ! வேறாகக் காவின் கீழ்ப்
போதர்; அகடு ஆரப் புல்லி முயங்குவேம் -
துகள் தபு காட்சி அவையத்தார் ஓலை
முகடு காப்பு யாத்துவிட்டாங்கு.

## 111. காடையும் ஊடையும்

"நில்! எங்கே வந்தாய்?" என்று சீறினாள் அவள். அவன் பேசாது நின்றான்.

"பாவம்! எவளுடைய வீட்டுக்கோ போகிற வழி. இங்கேயும் புகுந்து போகலாமென்று வந்தாயோ?"

"கண்ணே கோபியாதே! காடைகள் இரண்டு போர் செய்யக் கண்டேன். வேடிக்கை பார்த்து வந்தேன். நேரம் ஆகி விட்டது."

"ஆமாம்! ஆமாம்! நானும்கூடத்தான் கேள்விப்பட்டேன், காடைப் போர் கண்டு களித்திருக்கிறாய் நீ என்பதை."

"எப்படித் தெரியும்?"

"தெரியும். நீ கண்ட காடை எத்தகையது என்பதும் தெரியும்."

"தெரியுமா?"

"ஓ! தெரியும். அந்தக் காடையை யார் கொண்டு வந்தது என்பதும் தெரியும்."

"அடேயப்பா!"

"காடையைக் கொண்டு வந்தவன் அவற்றின் குறைநிசயங்களை எப்படிப் புகழ்ந்தான் என்பதும் தெரியும்."

"ஐயோ! அவ்வளவுதூரம் தெரியுமா?"

"தெரியும்; தெரியும். எவன் உனக்குக் காடைகளைக் கொண்டு வந்து காட்டினான்? அந்தக் காடைகளின் பக்கத்தில் நின்று பாட்டுப் பாடிப் போர் செய்யத் தூண்டினான் என்பதும் தெரியும்."

"யார் சொன்னார் உனக்கு?"

"எனக்குத் தெரியாதா என்ன? அந்தக் காடையுடன் நீ ஊர் முழுதும் திரிகிறாய். அது கண்டு உன்னை ஊரார் தூற்றுகின்றனர். அதை நீ லட்சியம் செய்யாமல் அந்தக் காடையை உன் மார்போடு அணைத்துக் கொண்டு படுத்துக்கிடக்கிறாய். அதனால் அந்தக் காடைக்கு கர்வம். மற்றொரு காடையுடன் போரிட்டது. அந்தப் போர் கண்டு நீ மகிழ்ந்தாய். அந்தக் காடையை விட்டு மற்றொரு

காடை கொண்டு வரச் சொன்னாய். அதனால் பழைய காடை சினம் கொண்டது. அதன் சினம் போக்கி மகிழ்ந்தாய்."

"எப்படித் தெரிந்தது உனக்கு?"

"உன் முகம் காட்டுகிறதே."

"காட்டுகிறதா? என்ன காட்டுகிறது?"

"உன் காடை விளையாட்டை!"

"காடை எது சொல்?"

"இன்னும் விளக்கமாகச் சொல்ல வேண்டுமா? அந்த ஆடல் மகளிர் தான் காடைகள். அந்தப் பாணன் தான் காடை கொண்டு வந்தவன்."

"அதெல்லாம் ஒன்றுமில்லை."

"ஏன் பொய் சொல்கிறாய்? நேரமாகிறது; போ! அந்தக் காடைகளை நீ இல்லாது தவிக்கும். போ."

"கண்ணே! தவறு செய்தேன். மன்னித்து விடு."

"மன்னிப்பதற்கு நான் யார்? போ! போ! அங்கேயே போ" என்று கூறிக் கதவைச் சாத்தினாள்.

நில், ஆங்கு; நில், ஆங்கு; இவர்தரல் - எல்லா! நீ
நாறு இருங் கூந்தலார் இல் செல்வாய், இவ் வழி,
ஆறு மயங்கினை போறி! நீ வந்தாங்கே
மாறு, இனி, நின் ஆங்கே, நின் சேவடி சிவப்ப.

செறிந்து ஒளிர் வெண் பல்லாய்! யாம் வேறு இயைந்த
குறும்பூழ்ப் போர் கண்டேம்; அனைத்தல்லது, யாதும்
அறிந்ததோ இல்லை, நீ வேறு ஓர்ப்பது.

குறும்பூழ்ப் போர் கண்டமை கேட்டேன், நீ என்றும்;
புதுவன ஈகை வளம் பாடி, காலின்
பிரியாக் கவி கைப் புலையன் தன் யாழின்
இகுத்த செவி சாய்த்து, இனி இனிப் பட்டன
ஈகைப் போர் கண்டாயும் போறி; மெய் எண்ணின்,
தபுத்த புலர்வில புண்.

ஊரவர் கவ்வை உளைந்தீயாய், அல்கல் நின்
தாரின்வாய்க் கொண்டு முயங்கி, பிடி மாண்டு,

போர் வாய்ப்பக் காணினும் போகாது கொண்டு, ஆடும்
பார்வைப் போர் கண்டாயும் போறி; நின் தோள்
மேலாம்
ஈரமாய்விட்டன புண்.

கொடிற்றுப் புண் செய்யாது, மெய்ம் முழுதும் கையின்
துடைத்து, நீ வேண்டினும் வெல்லாது கொண்டு,
ஆடும்
ஓட்டிய போர் கண்டாயும் போறி; முகம்தானே
கொட்டிக் கொடுக்கும் குறிப்பு.

ஆயின், ஆயிழாய்! அன்னவை யான் ஆங்கு அறியாமை
போற்றிய, நின் மெய் தொடுகு.

'அன்னையோ!' - 'மெய்யைப் பொய் என்று மயங்கிய,
கை ஒன்று
அறிகல்லாய் போறிகாண், நீ.

நல்லாய்! பொய் எல்லாம் ஏற்றி, தவறு தலைப்பெய்து,
கையொடு கண்டாய்; பிழைத்தேன்; அருள், இனி.'

அருளுகம் யாம்; யாரேம், எல்லா! தெருள ?
அளித்து, நீ பண்ணிய பூழ் எல்லாம் - இன்னும்
விளித்து, நின் பாணனொடு ஆடி அளித்தி -
விடலை நீ நீத்தலின், நோய் பெரிது ஏய்க்கும்;
நடலைப்பட்டு, எல்லாம் நின் பூழ்.

## 112. குலைவும் குதிரையும்

"ஏன் இப்படி வாடி வதங்கி வருகிறாய்?" என்று கேட்டாள் மனைவி.

"ஒன்றுமில்லை; அந்தக் குதிரை பண்ணிய இடக்கு" என்றான் கணவன்.

"எந்தக் குதிரை?"

"புதிதாகக் குதிரை சவாரி கற்றுக் கொள்கிறேன். அது என்னை வாட்டி வதைத்து அலங்கோலம் செய்கிறது."

"அப்படியா?

"ரொம்ப நல்ல குதிரையோ?"

"ஆமாம்."

"அழகான குதிரையோ?"

"ஆம்."

"அந்தக் குதிரையை எனக்குத் தெரியுமே!"

"தெரியுமா?"

"ஓ! நன்றாகத் தெரியும்."

"சொல் பார்க்கலாம்."

"சொல்கிறேன். ரொம்பப் பொல்லாத குதிரை அது. ஐயோ, பாவம். உன்னை ரொம்பப் பாடு படுத்தியிருக்குமே! இதென்ன, உடம்பு முழுதும் வரி வரியாகக் கீறல், மதுரை நகரிலே விடியற் காலத்திலே தெருச் சுத்தம் செய்வோர் வைத்திருக்கும் வரித் துடப்பத்தால் இழுத்த கோடு மாதிரி. இதுவும் அந்தக் குதிரை கீறியதுதானே!

"ரொம்பப் பொல்லாத குதிரை அப்பா! அதை அடக்கி ஆளும் உன் திறமையே திறமை! நீ வாழ்க !

"அந்தக் குதிரைக்கு வாரி முடித்த கூந்தல் உண்டோ? அழகான நகை உண்டோ? காதிலே அணி உண்டோ? கடி வாளம் போல மேல் ஆடை உண்டோ? காலிலே சிலம்பு 'கலீர் கலீர்' என்று ஒலிக்குமோ?

"ஆனால் ஒன்று கேள். நீ சொன்ன குதிரை இருக்கிறதே! அது அழகான குதிரையாக இருக்கலாம். ஆனால் உனது உற்று ரும் பெற்றாரும் தேடித் தந்த குதிரை அது அல்ல: உன் பின்னால் திரியும் அந்தப் பாணன் கொண்டு வந்த குதிரை, உன்னை அழிக்க வந்த குதிரை. அது வேண்டாம் உனக்கு. அதுதான் வேண்டும் என்றால் இங்கே நில்லாதே. ஓடு. அங்கேயே போ" என்றாள் அவள்.

'ஏந்து எழில் மார்ப! எதிர் அல்ல, நின் வாய்ச் சொல்;
பாய்ந்து ஆய்ந்த தானைப் பரிந்து ஆனா மைந்தினை; .

சாந்து அழி வேரை; சுவல் தாழ்ந்த கண்ணியை;
யாங்குச் சென்று, ஈங்கு வந்தீத்தந்தாய்? 'கேள், இனி

ஏந்தி எதிர் இதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்!
குதிரை வழங்கி வருவல்.'

அறிந்தேன், குதிரை தான்;
பால் பிரியா ஐங் கூந்தற் பல் மயிர்க் கொய் சுவல்,
மேல் விரித்து யாத்த சிகழிகைச் செவ் உளை,
நீல மணிக் கடிகை வல்லிகை, யாப்பின் கீழ்
ஞால் இயல் மென் காதின் புல்லிகைச் சாமரை,
மத்திகைக் கண்ணுறையாகக் கவின் பெற்ற
உத்தி ஒரு காழ், நூல் உத்தரியத் திண் பிடி,
நேர் மணி நேர் முக்காழ்ப் பல்பல கண்டிகை,
தார் மணி பூண்ட தமனிய மேகலை,
நூபுரப் புட்டில்; அடியொடு அமைத்து யாத்த
வார் பொலம் கிண்கிணி, ஆர்ப்ப இயற்றி, நீ
காதலித்து ஊர்ந்த நின் காமக் குதிரையை,
ஆய் சுதை மாடத்து அணி நிலா முற்றத்துள்,
ஆதிக் கொளீஇ, அசையினை ஆகுவை,
வாதுவன்; வாழிய, நீ!

சேகா! கதிர் விரி வைகலில், கை வாரூஉக் கொண்ட
மதுரைப் பெரு முற்றம் போல, நின் மெய்க்கண்
குதிரையோ, வீறியது?

கூர் உகிர் மாண்ட குளம்பினது; நன்றே
கோரமே - வாழி - குதிரை.

வெதிர் உழக்கு நாழியால் சேதிகைக் குத்திக்
குதிரை உடல் அணி போல, நின் மெய்க்கண்
குதிரையோ, கவ்வியது?

சீத்தை! பயம் இன்றி ஈங்குக் கடித்தது; நன்றே
வியமமே - வாழி! - குதிரை.

மிக நன்று, இனி அறிந்தேன், இன்று நீ ஊர்ந்த குதிரை;
பெரு மணம் பண்ணி, அறத்தினில் கொண்ட
பருமக் குதிரையோ அன்று; பெரும! நின்
ஏதில் பெரும் பாணன் தூது ஆட, ஆங்கே ஓர்
வாதத்தான் வந்த வளிக் குதிரை; ஆதி
உரு அழிக்கும், அக் குதிரை; ஊரல், நீ; ஊரின், பரத்தை
பரியாக, வாதுவனுய், என்றும் மற்று அச் சார்த்
திரி; குதிரை ஏறிய செல்.

## 113. வேழமும் வேஷமும்

"இரவு, வரக் காணுேமே, எங்கே போனுய்?" என்று கேட்டாள் மனைவி.

"யானை ஒன்று புதிதாகப் பிடிபட்டது. அதனுல் நேர மாயிற்று" என்முன் கணவன.

"ஓகோ...புதிய யானையோ?"

"ஆமாம்."

"அந்த யானைக்கு நெற்றியில் திலகம் உண்டோ? காதிலே கம்மல் உண்டோ? முத்துச் சிமிக்கி உண்டோ?"

"ஏதேதோ பேசுகிருய்?"

"எல்லாம் எனக்குத் தெரியும்."

"என்ன தெரியும்?"

"சொல்லவா?

"சொல்லு."

"அந்த யானை வாசலிலேயே நிற்கும். வாசனைப் பொடி பூசியிருக்கும். மது உண்டிருக்கும். வாசலிலே போவோரையெல்லாம் தடுத்து வீழ்த்தும். தன் தும்பிக்கையால் தழுவித் தழுவி அவர் தம் அழகை உண்டு பாழாக்கும். இத்தகைய யானையை இன்றுதான் கண்டதாக ஏன் பொய் சொல்கிருய்? நீண்ட காலமாகத்தான் இந்த யானை மீது பவனி வருகிருய். அந்த யானையை நீர் அருந்த விட்டு இங்கே வந்திருக்கிருய். சீக்கிரம் போ! அந்த

யானை மதம் பிடித்துத் திரியும். அதை அடக்க ஓடு" என்று கூறி விரட்டினாள் அவனை.

அன்னை: கடுஞ் சொல் அறியாதாய் போல, நீ
என்னைப் புலப்பது ஒறுக்குவென்மன் யான் -
சிறுகாலை இற் கடை வந்து, குறி செய்த
அவ் வழி என்றும் யான் காணேன் திரிதர,
'எவ் வழிப் பட்டாய்?' - சமனாக இவ் எள்ளல்.

முத்து ஏர் முறுவலாய்! நம் வலைப் பட்டது ஓர்
புத்தியானை வந்தது; காண்பான் யான் தங்கினேன்.

ஒக்கும் -

அவ் யானை வனப்பு உடைத்தாகலும் கேட்டேன்:
அவ் யானை தான் சுண்ண நீறு ஆடி, நறு நறா நீர் உண்டு
ஒள் நுதல் யாத்த திலக அவிர் ஓடை,
தொய்யில் பொறித்த வன முலை வான் கோட்டு,
தொய்யகத் தோட்டி, குழை தாழ் வடி மணி,
உத்தி பொறித்த புனை பூண் பருமத்து -
முத்து ஏய்க்கும் வெண் பல் நகை திறந்து,
நல் நகர் வாயில் கதவ வெளில் சார்ந்து,
தன் நலம் காட்டி, தகையினால், கால் தட்டி வீழ்க்கும்,
தொடர் தொடராக வலந்து; படர் செய்யும்
மென் தோள் தடக் கையின் வாங்கி, தற் கண்டார்
நலம் கவளம் கொள்ளும்; நகை முக வேழத்தை
இன்று கண்டாய் போல் எவன் எம்மைப்
பொய்ப்பது, நீ?

எல்லா! கெழீஇ, தொடி செறித்த தோள் இணை, தத்தித்
தழீஇக் கொண்டு, ஊர்ந்தாயும் நீ.

குழீஇ அவாவினால், தேம்புவார் இற் கடை ஆறு,

மிகாஅது சீர்ப்பட உண்ட சிறு களி ஏர் உண்கண்
நீர்க்கு விட்டு, ஊர்ந்தாயும் நீ.

சார்ச்சார் நெறி தாழ் இருங் கூந்தல் நின்
பெண்டிர் எல்லாம்
சிறு பாகராகச் சிரற்றுது, மெல்ல,
விடாஅது நீ எம் இல் வந்தாய்; அவ் யானை
கடாஅம் படும்; இடத்து ஓம்பு.

## 114. புனலும் புரட்டும்

"யார் நீ? எங்கே என் வீட்டிற்குள் நுழைகிறுய்?"

திகைத்து நின்றுன் அவன். சீறிப் படம் எடுத்த பாம்புபோல் நின்றுள் அவள்.

"ஆற்றிலே புதுப் புனல் வந்தது. நீராடி வந்தேன்" என்றுன் அவன்.

"அப்படியா! புதுப் புனலா ஆடினுய்! நானும் கேள்விப் பட்டேன்."

"என்ன?"

"புதுப்புனல் ஆடினுய் என்று."

"தெரியுமா?"

"தெரியும்; தெரியும். அலைபோல் இருந்த கூந்தல். நீரில் நீந்தித் திரியும் மீன் போன்ற கண்கள். நீ விளையாடிய புனல் இதுதானே!"

அவன் பேசாதிருந்தான்.

"புதுப்புனலில் வந்த வெள்ளம் ஒன்று உன்னை அடித்துச் சென்றதாமே? அந்த வெள்ளத்திலிருந்து கரை மீள முடியாமல் நீ தவிக்கிறுயாமே?"

"கண்ணே! சத்தியமாகச் சொல்கிறேன். நீ ஏதேதோ எண்ணுகிறுய். வைகை ஆற்றில் புதுப்புனல் வந்தது. ஆடி மகிழவே தங்கினேன்."

"சரி, சரி. அங்கேயே போ! ஆசை தீருமட்டும் புதுப்புன

லாடு. ஜாக்கிரதை! வைகை ஆற்றிலே சுழல் உண்டு. அதிலே சிக்கிவிடப் போகிறாய். உன்னைக் கரை சேர்க்க எவரும் வர மாட்டார். சிரழியும் உன்னைக் கண்டு நகைப்பார். எச்சரிக்கையா யிரு!''

இளம் பரத்தையர் பித்துக்கொண்டான் கணவன். அந்தக் குடும்பத்திலே நடந்த சண்டை இது.

யாரை நீ எம் இல் புகுதர்வாய்? ஓரும்
புதுவ மலர் தேரும் வண்டே போல் - யாழ
வதுவை விழவு அணி வைகலும் காட்டினையாய்
மாட்டு மாட்டு ஓடி, மகளிர்த் தரத்தர,
பூட்டு மான் திண் தேர் புடைத்த மறுகு எல்லாம்
பாட்டு ஆதல் சான்ற நின் மாயப் பரத்தைமை -
காட்டிய வந்தமை கைப்படுத்தேன் - பண்டு எலாம்
கேட்டும் அறிவேன்மன், யான்.

தெரி கோதை அம் நல்லாய்! தேறியல் வேண்டும் -
பொரு கரை வாய் சூழ்ந்த பூ மலி வையை
வரு புனல் ஆடத் தவிர்ந்தேன்; பெரிது என்னைச்
செய்யா மொழிவது எவன்?

ஓஒ! புனல் ஆடினாய் எனவும் கேட்டேன்;
புனல் ஆங்கே
நீள் நீர் நெறி கதுப்பு வாரும் அறல் ஆக,
மாண் எழில் உண் கண் பிறழும் கயல் ஆக,
கார் மலர் வேய்ந்த கமழ் பூம் பரப்பு ஆகம்,
நாணுச் சிறை அழித்து நன் பகல் வந்த அவ்
யாணர்ப் புதுப் புனல் ஆடினாய், முன் மாலே,
பாணன் புணையாகப் புக்கு.

ஆனாது அளித்து அமர் காதலோடு அப் புனல் ஆடி,
வெளிப்படு கவ்வையை யான் அறிதல் அஞ்சி,
குளித்து ஒழுகினாய் எனவும் கேட்டேன்; குளித்தாங்கே
போர்த்த சினத்தான் புருவத் திரை இடா,
ஆர்க்கும் ஞெகிழத்தான் நல் நீர் நடை தட்பச்

*சீர்த் தக வந்த புதுப் புனல் நின்னைக் கொண்டு,*
*ஈர்த்து உய்ப்பக் கண்டார் உளர்.*

*ஈர்த்தது உரை சால் சிறப்பின் நின் நீர் உள்ளம் வாங்க,*
*புரை தீர் புதுப் புனல் வெள்ளத்தின் இன்னும்*
*கரை கண்டதூஉம் இலை.*

*நிரைதொடீஇ! பொய்யா வாட் தானை, புனை கழற்*
*கால், தென்னவன்*
*வையைப் புதுப் புனல் ஆடத் தவிர்ந்ததைத்*
*தெய்வத்தின் தேற்றித் தெளிப்பேன்; பெரிது என்னைச்*
*செய்யா மொழிவது எவன்?*

*மெய்யதை மல்கு மலர் வேய்ந்த மாயப் புதுப் புனல்*
*பல் காலும் ஆடிய செல்வுழி, ஒல்கிக்*
*களைஞரும் இல் வழி, கால் ஆழ்ந்து தேரோடு*
*இள மணலுள் படல் ஓம்பு - முளை நேர்*
*முறுவலார்க்கு ஓர் நகை செய்து.*

## 115. அரசும் முரசும்

"அரசே! நீ வெண் கொற்றக் குடையின் கீழ் இருந்து ஆட்சி செய்கிறாய். எல்லாரும் என் குடைக் கீழ் வாருங்கள் என்கிறாய். 'அறமே செய்வேன். என் குடையடுத்தார் எல்லார்க்கும்' என்கிறாய். அரசி இதிலே அடங்கியவள்தானே! உன் குடைக்கீழ் வாழும் அரசி பாலை பாய்ந்து வருந்தவிடல் நீதியா?

"உன்னுடைய ஆட்சியிலே நீதி வழுவாது செங்கோல் சரியாது, என்று உலகம் பாராட்டுகிறது. ஆனால் அந்த நல்ல ஆட்சியின் பயன் அரசிக்குக் கிடைக்கவில்லையே! காதல் நோயால் கலங்கி வாடுகிறாளே!

"எமது அரசன் காப்பான் என்று முழங்குகிறது உன் முரசு. அம் முரசொலி கேட்டு எல்லோரும் உன் ஆட்சிக் கீழ் வருகின்றனர். ஆனால் அரசிக்கு மாத்திரம் அது விலக்கா? அவள் வாடலாமா?

"உன் கண் நெடுந் தூரத்தில் உள்ள பொருள்களையே கண்டு பழகியது. அணித்தே உள்ள அரசியின் கண்ணீர் உனக்குத் தெரியவில்லை. அக் கொடுமை காணுதிருக்கலாமா?"

அரசன் பரத்தை வீட்டில் கிடக்கிறுன். அரசி வருந்துகிருள். அப்போது அரசியின் தோழி அரசனிடம் சென்று இவ்வாறு சொல்கிருள்.

நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும்,
அவை எடுத்து,
அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்
திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது,
குழவியைப் பார்த்து உறூஉம் தாய் போல், உலகத்து
மழை சுரந்து அளித்து ஓம்பும் நல் ஊழி யாவர்க்கும்
பிழையாது வருதல் நின் செம்மையின் தர, வாய்ந்த
இழை அணி கொடித் திண் தேர், இன
மணி யானையாய்!
அறன் நிழல் எனக் கொண்டாய், ஆய் குடை;
அக் குடைப்
புற நிழற்கீழ்ப் பட்டாளோ, இவள்? இவண் காண்டிகா-
பிறை நுதல் பசப்பு ஊரப் பெரு விதுப்பு உற்றுளை!

பொய்யாமை நுவலும், நின் செங்கோல்;
அச் செங்கோலின்
செய் தொழில் கீழ்ப் பட்டாளோ, இவள்? இவண்
காண்டிகா -
காம நோய் கடைக்கூட்ட வாழும் நாள் முனிந்தாளை!

ஏமம் என்று இரங்கும், நின் எறிமுரசம்; அம் முரசின்
ஏமத்து இகந்தாளோ, இவள்? இவண் காண்டிகா—
வேய் நலம் இழந்த தோள் கவின் வாட இழப்பாளை!
ஆங்கு -

நெடிது சேண் இகந்தவை காணினும், தான் உற்ற
வடுக் காட்ட, கண் காணுதற்றுக, என் தோழி

தொடி கொட்ப நீத்த கொடுமையைக்
கடிது என உணராமை கடிந்ததோ,
நினக்கே?

## 116. கொற்றவனும் கற்றவரும்

"அரசே! அன்று என்ன சொன்னாய்?"

"என்று?"

"அரசியைக் கைப்பிடித்த அன்று."

"என்ன சொன்னேன்?"

"நினைவில்லையா?"

"இருக்கிறது; 'பிரியேன்' என்றேன்.

"ஆம். உனது சொல்லை நம்பினாள். இன்று? பிரிந்து இருக்கிறாய்!

"இதை ஊரார் அறிந்தால் என்ன ஆகும்? உன் சொல்லுக்கு மதிப்பு இருக்குமா? அரசன் பொய் சொல்லமாட்டான் என்ற நம்பிக்கையை அடியோடு தகர்க்கப் பார்க்கிறாயே! இது தகுமா?

"வந்தவரை வருந்தவிடான் நமது அரசன் என்று புகழ்கிறார் கள் உன்னை. அந்தப் புகழ் என்னாகும், அரசி வருந்துகிறாள் என்பது தெரிந்தால்?

"முறை பிறழாத மன்னவன் என்று புகழ்கிறார்கள் உன்னை. அரசி விஷயத்தில் நீ முறை தவறி நடப்பது மக்களுக்குத் தெரியாது. தெரிந்தால் என்ன ஆகும்? உனது புகழ் எல்லாம் தரையோடு தரையாகிவிடுமே!

"இவ்வாறு நாங்களா உனக்கு எடுத்துச் சொல்வது? மன்னா! திருந்துக; திருந்துக."

அரசியைவிட்டு ஆடல் மகளிர்பால் அன்புகொண்டு நின்றான் அரசன். கண்டனர் ஆன்றோர் சிலர். சென்றனர் அரசன்பால். இடித்துக் கூறுகின்றனர்.

ஈண்டு, நீர்மிசைத் தோன்றி இருள் சீக்கும் சுடரேபோல்,
வேண்டாதார் நெஞ்சு உட்க, வெரு வந்த
கொடுமையும்,

நீண்டு தோன்று உயர் குடை நிழல் எனச்
சேர்ந்தார்க்குக்
காண் தகு மதி என்னக் கதிர் விடு தண்மையும்,
மாண்ட நின் ஒழுக்கத்தான், மறு இன்றி, வியன்
ஞாலத்து
யாண்டோரும் தொழுது ஏத்தும் இரங்கு இசை
முரசினாய்!

''ஐயம் தீர்ந்து யார் கண்ணும் அருந் தவ முதல்வன்
போல்
பொய் கூறாய்' என நின்னைப் புகழ்வது கெடாதோ
தான் -
நல்கி நீ தெளித்த சொல் நசை எனத் தேறியாள்
பல் இதழ் மலர் உண்கண் பனி மல்கக் காணிங்கால்?

'சுரந்த வான் பொழிந்தற்றா, சூழ நின்று யாவர்க்கும்
இரந்தது நசை வாட்டாய்' என்பது கெடாதோ தான் -
கலங்கு அஞர் உற்று, நின் கமழ் மார்பு நசைஇயாள்
இலங்கு கோல் அவிர் தொடி இறை ஊரக்
காணுங்கால்?

'உறை வரை நிறுத்த கோல், உயிர் திறம்
பெயர்ப்பான் போல்,
முறை செய்தி' என நின்னை மொழிவது
கெடாதோதான் -
அழி படர் வருத்த, நின் அளி வேண்டிக் கலங்கியாள்
பழி தபு வாள் முகம் பசப்பு ஊரக் காணுங்கால்?
ஆங்கு -

தொல் நலம் இழந்தோள், நீ துணை எனப்
புணர்ந்தவள்;
இன் உறல் வியன் மார்ப! 'இனையையால்;
கொடிது!' என,
நின்னை யான் கழறுதல் வேண்டுமோ,
என்னோர்கள் இடும்பையும் களைந்தீவாய் நினக்கே.

மருதக் கலி முற்றும்.

# நெய்தற் கண்ணாடி

| | | |
|---|---|---|
| 1. | தெய்வம் : | வருணன். |
| 2. | செல்வர் : | சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி. |
| 3. | மற்றையோர் : | நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர், அளவர், அளத்தியர். |
| 4. | பறவை : | கடல் காகம். |
| 5. | விலங்கு : | சுறு மீன். |
| 6. | ஊர் : | பாக்கம், பட்டினம். |
| 7. | நீர் : | உவர் நீர்க் கேணி, கவர் நீர். |
| 8. | பூ : | நெய்தற் பூ, தாழம் பூ, முண்டகப் பூ, அடம்பம் பூ. |
| 9. | மரம் : | கண்டல், புன்னை, ஞாழல். |
| 10. | உணவு : | உப்பும், மீனும் விற்றுப் பெற்ற பொருள். |
| 11. | பறை : | மீன் கோட் பறை, நாவாய்ப் பம்பை. |
| 12. | யாழ் : | விளரி யாழ். |
| 13. | பண் : | செவ்வழி. |
| 14. | தொழில் : | மீன் பிடித்தல், உப்புக் காய்ச்சல், உப்பு விற்றல், மீன விற்றல், மீனுணக்கல். |
| 15. | விளையாட்டும் பொழுது போக்கும் : | கடல் ஆடல். |



## அந்துவனார் யார்?

நெய்தற் கலி 33 பாடல்கள் கொண்டது. இவற்றைப் பாடியவர் அந்துவனார் என்பர். நல்லந்துவனார் என்றும் இவரைக் கூறுவார் உளர்.

இவர் பிறந்த ஊர் மதுரை. எனவே, மதுரை ஆசிரியர் நல்லந்துவனார் என்றும் இவருக்குப் பெயருண்டு.

நெய்தல் நில மக்களின் பழக்க வழக்கங்களை எல்லாம் இவர் மிக நுட்பமாக விளக்கியிருக்கிறார் நெய்தல் கலியிலே.

கலித்தொகை 150 பாடல்களையும் ஒருங்கு சேர்த்துத் தொகுத்தவர் இவர். இதற்கு ஆதாரம் பின்வரும் பாட்டே:

நாடும் பொருள் சான்ற நல்லந்துவனான்
கூடுபிறைச் சொக்கன் துணைப் புலவோர்—தேடுவார்
கூட்டுணவே, வாழ்த்தோடு, கொங்காங் கலியினையே
கூட்டினான் ஞாலத்தோர்க்கு.

## நெய்தல் என்பது என்ன?

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப்படும். நெய்தல் நிலத்தின் தேவன் வருணன்.

இந் நிலத்தில் வாழ்ந்த மக்களின் தொழில் மீன் பிடித்தல். உப்புக் காய்ச்சுதல், மீனைப் பாடம் செய்தல்—இவை உப தொழில்கள்.

இந்த மக்களிலே செல்வர்க்கு என்ன பெயர்? சேர்ப்பன் என்றும் புலம்பன் என்றும் பெயர். இது ஆண்களை அழைக்கும் பெயர். பரத்தி, நுளைச்சி என்பன பெண்களுக்குரிய பெயர்.

மற்றையோருக்குப் பரதர் என்று பெயர்; அளவர் என்றும் அழைப்பதுண்டு. பெண்களுக்குப் பரத்தியர் என்றும் அளத்தியர் என்றும் பெயர்.

இங்கே காணப்பட்ட பறவை கடல் காகம் ஒன்றே. விலங்கு: சுறா மீன்.

ஊர்களுக்கு என்ன பெயர்? பாக்கம், பட்டினம். நெய்தல் பா

தாழம் பூ, முண்டகப் பூ, அடம்பம் பூ—இவை மலர்கள். கண்டல், புன்னை, ஞாழல்—இவை மரங்கள்.

உப்பு விற்றுவந்த பொருளைக் கொண்டும் மீன் விற்றுவந்த பொருளைக் கொண்டும் மக்கள் தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள்.

நெய்தல் நில மக்களின் இசைக் கருவிகள் இரண்டு. ஒன்று பறை. மற்றொன்று: யாழ். பறைக்கு என்ன பெயர்? மீன்கோட் பறை என்றும், நாவாய்ப் பம்பை என்றும் பெயர்.

அவர்கள் இசைத்த யாழுக்கு விளரி யாழ் என்று பெயர். பண் : செவ்வழி.

கடல் நீரில் நீந்தி விளையாடுவதே அவர்தம் பொழுது போக்கு; விளையாட்டு.

## நெய்தற் கலி கூறுவது என்ன ?

மாலை நேரம் வந்து விடுகிறது. ஆனால் காதலன் வரவில்லை. அது கண்டு இரங்குகிறாள் காதலி. ஏங்குகிறாள்.

நேரம் ஆக ஆக என்னாகிறது? காமநோய் அதிகமாகிறது.

தண் மதியும், கடலும், தென்றலும், அன்றிலும் அவளது துயரைப் பெருக்குகின்றன.

இவ்விதம் காதலி ஏங்குகின்ற இந்த இரங்கல் உள்ளத்தை நெய்தல் கலியிலே காணலாம்.

நெய்தல் நிலத்திலே உள்ள சேர்ப்பர் எவர்? பெரும் செல்வர். மரக்கலங்கள் மிக உடையவர்.

இவர்பால் காதல் கொள்ளும் காதலிமாரும் எத்தகையர்? பெரும் செல்வரே!

இவர்தம் வாழ்வை—நெய்தல் நில மக்களின் வாழ்வை—படம் பிடித்துக் காட்டுகிறது நெய்தல் கலி.

## 117. மாலையும் மயக்கமும்

ஓர் அரசன்; போர் செய்கிறான்; பகைவர்களை எல்லாம் வெல்கிறான்; நல்ல நெறியிலே நாடு காக்கிறான். பின்னே சுவர்க்கம் செல்கிறான்.

அம்மாதிரியே ஞாயிறு என்ன செய்கிறது? இருளாகிய பகையை வெல்கிறது. கதிர்களைப் பரப்புகிறது. மகிழ விளங்குகிறது. பின்னே மறைகிறது.

ஓர் அரசன் இறந்ததும் வேற்று அரசன் வருகிறான். அந்த நாட்டைப் பாதுகாக்கிறான். மக்களுக்கு நன்மை செய்கிறான். அம்மாதிரியே சந்திரனும் வருகிறான். எப்போது? சூரியன் மறைந்த பிறகு.

ஓர் ஆட்சி மறைந்து மற்றோர் ஆட்சி ஏற்படும் இடைக் காலத்திலே நாடு எக்காட்சி வழங்கும்? குழப்பக் காட்சியே வழங்கும்? மக்கள் எவ்வாறு இருப்பார்கள்? மனம் குழம்பி வருந்துவார்கள்.

அந்த இடைக்காலம் போலே வருகிறது. எது? மாலை நேரம்.

"மாலையே! காதலருடன் கூடியிருக்கும் மங்கைக்கு நீ மகிழ்ச்சி தருவாய். மன வருத்தம் தரமாட்டாய். ஆனால் என் போல் பிரிந்திருப்பார்க்கு என் செய்வாய்! மேலும் மேலும் துன்பமே தருவாய். நான் என்ன செய்வேன்" என்று வருந்துகிறாள் அவள், அம் மாலை நேரம் வந்ததால். காரணம்? காதலன் இல்லையல்லவா?

வெல் புகழ் மன்னவன், விளங்கிய ஒழுக்கத்தால்,
நல் ஆற்றின் உயிர் காத்து, நடுக்கு அற, தான் செய்த
தொல் வினைப் பயன் துய்ப்ப, துறக்கம் வேட்டு
எழுந்தாற்போல்—
பல் கதிர் ஞாயிறு பகல் ஆற்றி மலை சேர,

ஆனாது கலுழ் கொண்ட உலகத்து, மற்று அவன்
ஏனையான் அளிப்பான் போல், இகல் இருள் மதி சீப்ப,
குடை நிழல் ஆண்டாற்கும் ஆளிய வருவாற்கும்
இடை நின்ற காலம் போல், இறுத்தந்த மருள் மாலை!

மாலை நீ - தூ அறத் துறந்தாரை நினைத்தலின்,
கயம் பூத்த
போது போல் குவிந்த என் எழில் நலம் எள்ளுவாய்;

ஆய் சிறை வண்டு ஆர்ப்ப, சினைப் பூப் போல்
தளை விட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்,

மாலை நீ - தையெனக் கோவலர் தனிக் குழல்
இசை கேட்டு,
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம் பாராட்டுவாய்;
செவ்வழி யாழ் நரம்பு அன்ன கிளவியார் பாராட்டும்,
பொய் தீர்ந்த புணர்ச்சியுள் புது நலம் கடிகல்லாய்.

மாலை நீ – தகை மிக்க தாழ் சினைப் பதி சேர்ந்து
புள் ஆர்ப்ப,
பகை மிக்க நெஞ்சத்தேம் புன்மை பாராட்டுவாய்;
தகை மிக்க புணர்ச்சியார், தாழ் கொடி நறு முல்லை
முகை முகம் திறந்தன்ன, முறுவலும் கடிகல்லாய்.
என ஆங்கு,

மாலையும் அலரும் நோனாது, எம்வயின்
நெஞ்சமும் எஞ்சுமன் தில்ல - எஞ்சி,
உள்ளாது அமைந்தோர், உள்ளும்,
உள் இல் உள்ளம், உள்உள் உவந்தே.

## 118. அந்தியும் அணங்கும்

"பார்! பார்! மாலை வந்துவிட்டது பார்! ஆயிரங் கிரணங்களைப் பரப்பினுன் கதிரவன். மீண்டும் ஆயிரம் வாய் கொண்டு விழுங்கியதுபோல் பகலை விழுங்கி விட்டான். இருள் படர்கிறது. பகைவனை ஓட்டிப் புறங் காண்பவன்போல் வருகிருன் சந்திரன். யாரை ஓட்ட? இருளை ஓட்ட.

அதோ பார்! தாமரை மலர்கள் குவிகின்றன, கணவனைத் தழுவிய மகளிர் கண் துயில்வதுபோல! மரங்கள் எல்லாம் தலை சாய்த்து நின்றுவிட்டன பார், தம் புகழ் கேட்ட சான்ரோர்போல்! முல்லை மலர்கிறது பார், பிரிந்த மகளிரைக் கண்டு நகைப்பது

போல! வண்டுகள் பாடுகின்றன பார், வேய்ங்குழல் ஊதுவது போல! பறவைகள் எல்லாம் தம் கூடு நோக்கிச் செல்கின்றன பார்!. பசுக்கள் எல்லாம் ஓடுகின்றன பார், தம் கன்றுகளை நினைத்து! மகளிர் விளக்கேற்றுகின்றனர் பார்!

"என் உயிர் கொள்ள வருகிறது பார்! இதற்குப் பெயர் மாலையாம்!"

அகன் ஞாலம் விளக்கும் தன் பல் கதிர் வாயாகப்
பகல் நுங்கியது போலப் படு சுடர் கல் சேர,
இகல் மிகு நேமியான் நிறம் போல இருள் இவர,
நிலவுக் காண்பது போல அணி மதி ஏர்தர,
கண் பாயல் பெற்ற போல் கணைக் கால மலர் கூம்ப,
தம் புகழ் கேட்டார் போல் தலை சாய்த்து மரம் துஞ்ச,
முறுவல் கொள்பவை போல முகை அவிழ்பு புதல் நந்த,
சிறு வெதிர்ங் குழல் போலச் சுரும்பு இமிர்ந்து
இம்மென,
பறவை தம் பார்ப்பு உள்ள, கறவை தம் பதிவயின்
கன்று அமர் விருப்பொடு மன்று நிறை புகுதர,
மா வதி சேர, மாலை வாள் கொள,
அந்தி அந்தணர் எதிர்கொள, அயர்ந்து
செந் தீச் செவ்அழல் தொடங்க - வந்ததை
வால் இழை மகளிர் உயிர் பொதி அவிழ்க்கும்
காலை ஆவது அறியார்,
மாலை என்மனார், மயங்கியோரே.

## 119. பேதையும் புலம்பலும்

"மாலைக் காலமே! வந்துவிட்டாயா!

"'இம்மைக்கும் மறுமைக்கும் பயன் தரத்தக்கது அறம் ஒன்றே' என்று அறியாதவன்—அறம் செய்யாதவன்—எப்படி நாளுக்கு நாள் சிறிது சிறிதாகப் பயந்து மருண்டு நெஞ்சிலே இருளடைவானே அப்படி இருளை உமிழ்ந்து வந்தாயா? கதிரவன் கடைவாயில் விழவந்தாயா? யாசகம் என்று வருகிறவனைக் கண்டு

கண்ணை மூடிக்கொள்கிறவனைப் போல மரத்தின் இலைகள் எல்லாம் குவிகின்றன! அடிவானம் சிவந்திருக்கிறது. பிறையும் சிறிது சிறிதாகக் காட்சி தருகிறது, ஊழிக் காலத்திலே ருத்திர மூர்த்தியானவன் உயிர்களைக் குடித்து ரத்தம் சிந்தி இடி இடி யென்று சிரித்தபோது தோன்றும் கோரைப் பல் போல!

"மாலையே! எனக்குத் துணை யாருமில்லை. என் துணைவர் பிரிந்திருக்கிறார்! இந்த நேரத்திலே என்மீது பாணம் தொடுக்கலாமா? துயரத்தில் ஆழ்த்தலாமா? வெள்ளத்திலே அகப்பட்டுக் கரையேற முடியாமல் தத்தளிக்கும் மான்போல் இருக்கிறேனே! அந்த மான்மீது அம்பு விடும் வேடன்போல் வருகிறாயே! இரக்கமின்றி என்மீது போர் தொடுக்கிறாயே! போரிலே தோற்றவரைப் பார்த்துச் சிரித்தால் அவர் மனம் எப்படியிருக்கும்? அப்படியிருக்கிறதே, என் மனம்! மாலையே! நீதான் இதற்குக் காரணம். வெந்த புண்ணிலே வேலைச் செருகலாமா! செருகுகிறாயே! மாலையே!"

இவ்வாறு மனம் புழுங்கிக் கூறிக்கொண்டிருந்தாள் அவள். அப்போது அவளது காதலன வந்தான். வந்ததும் என்ன ஆயிற்று?

வேதனை எல்லாம் வேகமாய் மறைந்தன.

'அருள் தீர்ந்த காட்சியான், அறன் நோக்கான்,
நயம் செய்யான்,
வெருவுற உய்த்தவன் நெஞ்சம் போல், பையய
இருள் தூர்பு, புலம்பு ஊர, கனை சுடர் கல் சேர -
உரவுத் தகை மழுங்கித் தன் இடும்பையால் ஒருவனை
இரப்பவன் நெஞ்சம் போல் புல்லென்று, புறம் மாறிக்
கரப்பவன் நெஞ்சம் போல், மரம் எல்லாம், இலை கூம்ப-
தோற்றம் சால் செக்கருள் பிறை நுதி எயிறாக,
நால் திசையும் நடுக்குறூஉம் மடங்கல் காலை,
கூற்று நக்கது போலும், உட்குவரு கடு மாலை!

மாலை நீ - உள்ளம் கொண்டு அகன்றவர் துணை தாராப்
பொழுதின்கண்,
வெள்ள மான்நிறம் நோக்கிக் கணை தொடுக்கும்
கொடியான் போல்,

அல்லற்பட்டு இருந்தாரை அயர்ப்பிய வந்தாயோ?

மாலை நீ - ஈரம் இல் காதலர் இகந்து, அருளா இடன்
நோக்கி,
போர் தொலைந்து இருந்தாரைப் பாடு எள்ளி
நகுவார் போல்,
ஆர் அஞர் உற்றாரை அணங்கிய வந்தாயோ?

மாலை நீ - கந்து ஆதல் சான்றவர் களைதாராப்
பொழுதின் கண்,
வெந்தது ஓர் புண்ணின் கண் வேல் கொண்டு
நுழைப்பான் போல்,
காய்ந்த நோய் உழப்பாரைக் கலக்கிய வந்தாயோ?'
என ஆங்கு,

இடன் இன்று அலைத்தரும் இன்னா செய் மாலை,
துனி கொள் துயர் தீரக் காதலர் துனைதர -
மெல்லியான் பருவத்து மேல் நின்ற கடும் பகை
ஒல்லெனா நீக்கி, ஒருவாது காத்து ஆற்றும்
நல் இறை தோன்ற, கெட்டாங்கு -
இல்லாகின்றால், இருளகத்து ஒளித்தே.

## 120. வரவும் வரைவும்

ஒரு தலைவன். தலைவியைக் கண்டு காதலிக்கிறான். களவு ஒழுக்கத்திலே இன்பம் துய்க்கிறான். பிறகு வெளியூர் செல்கிறான். சில காலம் சென்று திரும்பி வருகிறான். அவன் வந்து விட்டான் என்று அறிந்தாள் தோழி. அவனிடம் செல்கிறாள். சென்று சொல்கிறாள். என்ன சொல்கிறாள்? அவன் இல்லாத போது மாலைக் காலத்திலே அவனது காதலி எப்படி வருந்தினாள் என்பதைச் சொல்கிறாள். என்ன சொல்கிறாள் என்றுதான் கேட்போமே!

"கதிரவன் மலைவாயில் விழுந்தான். நீலப் பட்டுத் திரையை

நீக்கி எட்டிப் பார்ப்பவன் போல வந்தான் சந்திரன். பறவைகள் எல்லாம் கூட்டில் அடங்கின. ஆரவாரம் ஒடுங்கிற்று,'' என்றாள் அவள்.

''ஓகோ! அப்படியா! ஆரவாரம் ஒடுங்கிற்றோ?'' என்று கேட்டான் அவன் ஆச்சரியமாக.

''ஒடுங்கிற்று; ஒடுங்கிற்று. இப்போது ஊரார் ஒன்றுமே கூறுவதில்லை,'' என்றாள்.

''சரிதான். என் காதலிக்குக் கட்டும் காவலும் அதிகமா யிருக்கிறதாக்கும்'' என்றான் அவன்.

''அதனால் தான் அப்படிக் கூறினேன்.''

''எப்படி?''

''பட்டுத்திரையை விலக்கி எட்டிப் பார்க்கிறான் சந்திரன், ான்று.''

''சரி, சரி. அப்புறம் அவளுக்குத் துணை யார்?''

''ஆரவாரம் செய்யும் அலைதான். வீசும் காற்றுத்தான். சேவலைப் பிரிந்து வாடும் குருகுதான்.''

''அப்படியா?''

''ஆம். வேறு துணையில்லை. எனவே. விரைவில் வா. வரைந்து செல்.''

ஒண் சுடர் கல் சேர, உலகு ஊரும் தகையது,
தெண் கடல் அழுவத்துத் திரை நீக்கா எழுதரூஉம்,
தண் கதிர் மதியத்து அணி நிலா நிறைத்தர,
புள்ளினம் இரை மாந்திப் புகல் சேர, ஒலி ஆன்று,
வள் இதழ் கூம்பிய மணி மருள் இருங் கழி
பள்ளி புக்கது போலும் பரப்பு நீர்த் தண் சேர்ப்ப!

தாங்கரும் காமத்தைத் தணந்து நீ புறம் மாற,
தூங்கு நீர் இமிழ் திரை துணையாகி ஒலிக்குமே -
உறையொடு வைகிய போது போல், ஒய்யென
நிறை ஆனாது இழிதரூஉம், நீர் நீந்து கண்ணாட்கு.

வாராய் நீ புறம் மாற, வருந்திய மேனியாட்கு -
ஆர் இருள் துணையாகி அசைவளி அலைக்குமே -

கமழ் தண் தாது உதிர்ந்து உக, ஊழ் உற்ற கோடல் வீ
இதழ் சோரும் குலை போல, இறை நீவு வளையாட்கு.

இன் துணை நீ நீப்ப, இரவினுள் துணையாகி,
தன் துணைப் பிரிந்து அயாஅம் தனிக் குருகு உசாவுமே-
ஒண் சுடர் ஞாயிற்று விளக்கத்தான், ஒளி சாம்பும்
நண்பகல் மதியம் போல், நலம் சாய்ந்த அணியாட்கு.

என ஆங்கு—

எறி திரை தந்திட, இழிந்த மீன் இன் துறை
மறி திரை வருந்தாமல் கொண்டாங்கு, நெறி தாழ்ந்து,
சாயினள் வருந்தியாள் இடும்பை
பாய் பரிக் கடுந் திண் தேர் களையினோ இடனே.

## 121. நெஞ்சும் நினைப்பும்

ஒருவன்; ஒருத்தி மீது காதல் கொண்டான். களவு ஒழுக்கம் நடந்தது. சில நாள் இப்படி. அதன் பிறகு அவன் என்ன செய்தான்?

பெற்றோருக்கு அடங்கிய 'நல்ல பிள்ளை'யானான்; பெற்றோர் அவனுக்குக் கலியாணம் செய்து வைத்தார்கள். மனைவியுடன் குடும்பம் நடத்தி வந்தான். ஆனால் காதலித்துக் களவு ஒழுக்கத்தில் இருந்தானே! அந்த இடம் என்ன ஆயிற்று? அவ்வளவு தான். மெதுவாக விட்டுவிட்டான். அவன் அவளை மறந்தான். ஆனால் அவளோ? மறந்தாள் இல்லை. அவனையே நினைத்து நினைத்து வருந்துகிறாள்.

அது கண்டாள் தோழி:

"என்னவோ அன்று ஒருநாள் உன் அழகிலே மயங்கினான் அவன்; உன்னைப் புகழ்ந்தான். நீயும் மதிமயங்கிவிட்டாய். பிறகு அவன் உன்னை மறந்தான். நீயோ, நினைத்து நினைத்து வருந்துகிறாய்," என்றாள்.

"நான் படும் துயர் அறியவில்லையே அவன்" என்றாள் அவள் பெருமூச்சு விட்டுக்கொண்டு.

"எப்படி அறிவான்? அவன் உன்னைப் போல தனிக்கட்டையாக இருக்கிறானா? மனைவியுடன் சுகித்திருக்கிறானே."

"ஆமாம். அதனால்தான் என்னைப் பற்றிய எண்ணமே அவனுக்கில்லை. அது எனக்கும் தெரிகிறது. இருந்தாலும், என்ன செய்வது? எனது தூக்கத்தைக் கெடுத்துவிட்டானே! துன்பத்தைக் கொடுத்துவிட்டானே. எப்படியாவது மீண்டும் ஒருமுறை அவன் என்னைத் தழுவினால் போதுமே! இல்லையானால் எப்படியடி நான் உயிர் வாழ்வேன்? பலரும் கண்டு சிரிப்பார்களே!"

'**கோ**தை ஆயமும் அன்னையும் அறிவுற,
போது எழில் உண்கண் புகழ் நலன் இழப்ப,

**கா**தல் செய்து அருளாது துறந்தார் மாட்டு,ஏது இன்றி,
சிறிய துனித்தனை; துன்னி செய்து அமர்ந்தனை;
பலவும் நூறு அடுக்கினை; இனைபு ஏங்கி அழுதனை;
அலவலை உடையை' என்றி - தோழீ!
கேள், இனி:

**மா**ண் எழில் மாதர் மகளிரோடு அமைந்து, அவன்
காணும் பண்பு இலன் ஆதல் அறிவேன்மன்;
அறியினும்,
பேணி அவன் சிறிது அளித்தக்கால், என்
நாண் இல் நெஞ்சம் நெகிழ்தலும் காண்பல்.

**இ**ருள் உறழ் இருங் கூந்தல் மகளிரோடு அமைந்து,
அவன்
தெருளும் பண்பு இலன் ஆதல் அறிவேன்மன்;
அறியினும்,
அருளி அவன் சிறிது அளித்தக்கால், என்
மருளி நெஞ்சம் மகிழ்தலும் காண்பல்.

**ஒ**ள் இழை மாதர் மகளிரோடு அமைந்து, அவன்
உள்ளும் பண்பு இலன் ஆதல் அறிவேன்மன்;
அறியினும்,

புல்லி அவன் சிறிது அளித்தக்கால், என்
அல்லல் நெஞ்சம் மடங்கலும் காண்பல்.
அதனால்,

யாம நடு நாள் துயில் கொண்டு ஒளித்த
காம நோயின் கழீஇய நெஞ்சம் -
தான் அவர்பால் பட்டதாயின்,
நாம் உயிர் வாழ்தலோ நகை நனி உடைத்தே.

## 122. நெஞ்சும் நினைவும்

அவள் அவன் பால் காதல் கொண்டாள். அவனை எண்ணி எண்ணி ஏங்குகிறாள். அவனிடம் அவள் செல்வது இயலாது. அவளிடம் அவன் வருவதும் இயலாது. ஏன் ? கட்டும் காவலும் அப்படி ?

உடம்பைத்தான் கட்டுப்பாடு செய்யலாம். உள்ளத்தைக் கட்டுப்படுத்த முடியுமா ? முடியாது.

உள்ளம் என்ன செய்கிறது? அவனையே நினைக்கிறது. எனவே அந்த நெஞ்சுடன் கூறுகிறாள் அவள்.

"நெஞ்சே ! கேள் ! புன்னை மலர்கிறது. அந்த நேரம் பார்த்து வருகின்றன வண்டுகள். தேனைப் பருகுகின்றன. அந்த மாதிரி, காலத்தே வந்து கைப்பற்றி இன்பம் துய்த்திலனே என் காதலன் !

"கடல் அமைதியாயிருக்கிறது. வண்டுகள் ஒலிக்கின்றன; தும்பிகள் ஊதுகின்றன. வண்டின் ஒலியும் தும்பியின் ஊதலும் எப்படியிருக்கின்றன? யாழிசையும் பாட்டிசையும் போல் உள்ளன. இது கேட்டுத் திருமால் பள்ளி கொண்டதுபோல் இருக்கிறது கடல்.

"நானோ - தூக்கமில்லாதிருக்கிறேன். வண்டின் ஊதலும், தும்பியின் பாட்டும் கேட்டவாறே அவன் மீது உறங்கவில்லையே ! என் செய்வேன் !

"மட நெஞ்சே ! இந்த இருள் நேரத்திலே அவனைத் தேடிச் சென்றாயே ! எந்த மருந்துக்கும் தீராத நோய் கொடுத்தவனிடம்

சென்றுயே! அவனைக் கண்டாயோ! காணவுமில்லையே! ஆறத் தழுவினுயோ! அதுவுமில்லையே! பின் நீ பெற்றதுதான் என்ன? போகிருய், வருகிருய்; உப்பங்கழியிலே உள்ள நீர் மாதிரி உப்பங்கழி நீர் என்ன செய்யும்? கடலை நோக்கிக் காற்று வீசும் போது கடலை நோக்கி ஓடும். கரையை நோக்கிக் காற்று வீசும் போது எதிர்புறமாக ஓடும். அந்த மாதிரியல்லவா போய்ப் போய் வருகிருய்! வேறு நீ கண்டதுதான் என்ன!''

கருங் கோட்டு நறும் புன்னை மலர் சினை மிசைதொறும்
சுரும்பு ஆர்க்கும் குரலினேடு, இருந் தும்பி இயைபு ஊத,
ஒருங்குடன் இம்மென இமிர்தலின், பாடலோடு
அரும் பொருள் மரபின் மால் யாழ் கேளாக்
கிடந்தான் போல்,
பெருங் கடல் துயில் கொள்ளும் வண்டு இமிர்
நறுங் கானல்-
காணுமை இருள் பரப்பி, கையற்ற கங்குலான்,
மாணு நோய் செய்தான்கண் சென்றுய்; மற்று அவனை நீ
காணவும் பெற்றுயோ? காணுயோ? - மட நெஞ்சே!

கொல் ஏற்றுச் சுறவினம் கடி கொண்ட மருள் மாலை,
அல்லல்நோய் செய்தான்கண் சென்றுய்;மற்று அவனை நீ
புல்லவும் பெற்றுயோ? புல்லாயோ? - மட நெஞ்சே!

வெறி கொண்ட புள்ளினம் வதி சேரும் பொழுதினுன்,
செறி வளை நெகிழ்த்தான்கண் சென்றுய்;மற்று அவனை நீ
அறியவும் பெற்றுயோ? அறியாயோ? - மட நெஞ்சே!
என ஆங்கு—

எல்லையும் இரவும் துயில் துறந்து, பல் ஊழ்
அரும் படர் அவல நோய் செய்தான்கண்
பெறல் நசைஇ,
இருங் கழி ஓதம் போல் தடுமாறி,
வருந்தினை - அளிய என் மடம் கெழு நெஞ்சே!

## 123. அலரும் அறிவிப்பும்

"வருவாயா?" என்றாள்.
"வருவேன்" என்றான்.
"விரைவில்...?" என்றாள்.
"ஆம் வரைவேன்" என்றான்.
"சரி" என்றாள்.

கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் அவனையே பார்த்து நின்றாள். கண் கொட்டாமல் பார்த்து இருந்தாள். வைத்த கண் வைத்தபடி நின்றாள். அவனோ—திரும்பித் திரும்பி அவளைப் பார்த்துக்கொண்டே சென்றான். சென்று பல மாதங்கள் ஆகிவிட்டன.

'வருவான் வருவான்' என்று வழிமேல் விழிவைத்து நின்றாள் அவள். ஆனால் அவன் வந்தால்தானே! வரவில்லை. ஒரு வாரம் சென்றது; ஒரு மாதம் சென்றது; ஒரு வருஷமும் சென்றது ஆசாமி வந்தபாடில்லை. என்ன செய்வாள் பாவம்!

களவும் காதலும் எத்தனை நாளைக்கு இரகசியமாக இருக்கும்? நீண்ட நாள் இருக்கமாட்டா. சில நாள்வரைதான் இரகசியமாயிருக்கும். பிறகு அரும்பும்; அலரும். அரும்புவதாவது என்ன?

ஊரார் அறிதல். எப்படி? ஜாடையாக அறிதல்; ஜாடையாகப் பேசுதல். கண்ணாலேயே ஒருவருக்கொருவர் அறிவித்துக் கொள்ளல்.

எத்தனை நாள் ஜாடையாகப் பேசுவார்கள்? கொஞ்ச நாள் தான். அதன் பிறகு அலராகும். அதாவது வம்பு பேசுவார்கள்.

வம்புப் பேச்சுக்கு இடம் கொடுத்தலாகாது. இதற்கு முன்பே கலியாணம் நடந்துவிட வேண்டும்.

ஆனால் அவனோ வரவில்லை. களவு ஒழுக்கம் இருக்கிறதே, இது கொஞ்சநாள் வரைதான் சும்மா இருக்கும். அதன் பிறகு காட்டிக் கொடுக்கத் தொடங்கிவிடும்.

அப்புறம் வம்பு பேசுவோருக்குக் கேட்கவா வேண்டும். இதற்கு முற்றுப்புள்ளி வைக்க எண்ணினாள்.

அவனைத் தேடிச் சென்றாள் தோழி:

"எத்தனை நாளைக்கு மறைக்க முடியும்?" என்றாள்.

"என்ன?" என்று கேட்டான் அவன்.

"உன் காதலியைத்தான் சொல்கிறேன்" என்றாள்.

"அவளுக்கு என்ன?"

"ஒன்றுமில்லை; மறைத்து மறைத்துப் பார்க்கிறாள்."

"எதை?"

"நீங்கள் செய்த களவுக் காதலை."

"முடிந்ததா?"

"எப்படி முடியும்? அவள் மறைக்கிறாள். ஆனால் அந்த நுதல் இருக்கிறதே. அதுதான் காட்டிக் கொடுக்கிறதே!"

"எப்படி?"

"பசலை பாய்ந்துவிட்டது."

"உம்."

"ஊரார் எல்லாரும் வம்பு பேசத் தொடங்கிவிட்டார்கள்."

"அவர்களுக்கு எப்படித் தெரியும்?"

"தெரியாமல் இருக்கவேண்டும் என்றுதான் அவளும் மறைக்கிறாள். ஆனால் அந்தத் தோள் இருக்கிறதே. அது காட்டிக் கொடுக்கிறதே"

"என்ன செய்கிறது?"

"மெலிந்து விட்டது. வளைகள் கழன்று ஓடுகின்றன."

"அப்படியா!"

"ஆமாம். அது மாத்திரமா? அவளது கண்தான் சும்மா இருக்கிறதா? இல்லையே! அதுவும் ஒளியிழந்துவிட்டது, தூக்கம் இன்மையால். கண்ணீர் சொரிகிறது உன்னைக் காணாமையால். ஊரார் சும்மா இருப்பாரா? வம்பு பேசத் தொடங்குகின்றனர்."

"சரி. அதற்கு நான் என்ன செய்யவேண்டும்?"

"உடனே வா. அவளை வரைந்து செல்."

ஞாலம் மூன்று அடித் தாய முதல்வற்கு முது முறைப்
பால் அன்ன மேனியான் அணி பெறத் தைஇய
நீல நீர் உடை போல, தகை பெற்ற வெண் திரை
வால் எக்கர்வாய் சூழும் வயங்கு நீர்த் தண் சேர்ப்ப!

ஊர் அலர் எடுத்து அரற்ற, உள்ளாய், நீ துறத்தலின்,
கூரும் தன் எவ்வ நோய் என்னையும் மறைத்தாள்மன் -
காரிகை பெற்ற தன் கவின் வாடக் கலுழ்பு, ஆங்கே,
பீர் அலர் அணி கொண்ட பிறை நுதல் அல்லாக்கால்.

இணைபு இவ் ஊர் அலர் தூற்ற, எய்யாய், நீ
துறத்தலின்,
புணை இல்லா எவ்வ நோய் என்னையும்
மறைத்தாள்மன் -
துணையாருள் தகை பெற்ற தொல் நலம் இழந்து, இனி,
அணி வனப்பு இழந்த தன் அணை மென் தோள்
அல்லாக்கால்.

இன்று இவ் ஊர் அலர் தூற்ற. எய்யாய்,நீ துறத்தலின்,
நின்ற தன் எவ்வ நோய் என்னையும் மறைத்தாள்மன் -
வென்ற வேல் நுதி ஏய்க்கும் விறல் நலன் இழந்து,இனி,
நின்று நீர் உகக் கலுழும் நெடும் பெருங் கண்
அல்லாக்கால்.
அதனால்,

பிரிவு இல்லாய் போல, நீ தெய்வத்தின் தெளித்தக்கால்,
அரிது என்னாள், துணிந்தவள் ஆய் நலம் பெயர்தர,
புரி உளைக் கலிமான் தேர் கடவுபு -
விரி தண் தார் வியல் மார்ப!- விரைக நின் செலவே.

## 124. பொல்லாதவனும் பொல்லாதவளும்

"ரொம்பப் பொல்லாதவன்" என்று சொல்லிக்கொண்டே வந்தாள் தோழி.

"யார்?" என்று கேட்டான் அவன்.

"நீயேதான்" என்றாள் அவள்.

"ஏன்?" என்றான் அவன்.

"அது உன் நெஞ்சு அறியுமே!" என்றாள் அவள்.

"எது?"

"நீ செய்த காரியம்."

"என்ன ?"

"அவளது இளமை சண்டாய்; இன்பம் கொண்டாய். இப்போது என்னடா என்றால் மறைந்து திரிகிறாய். அவளோ இரவும் பகலும் கண்ணீர் விட்டுக் கதறுகிறாள். அவளைத் துடி துடிக்கச் செய்து தலை மறைந்து திரிகிற நீ, மிக நல்லவனோ?

"அவளிடம் இன்பம் துய்த்தாய். பின் கைவிட்டாய். அவள் வாடுகிறாள். இது நீதியா? நீதான் நல்லவனோ ?"

"நான் என்ன செய்யவேண்டும்?"

"அவளது பசலையைப் போக்கு. கண்ணீரை நிறுத்து. விரைவில் வந்து வரைந்து செல்."

'கண்டவர் இல்' என, உலகத்துள் உணராதார்,
தங்காது தகைவு இன்றித் தாம் செய்யும் வினைகளுள்,
நெஞ்சு அறிந்த கொடியவை மறைப்பினும், 'அறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரி இல்லை ஆகலின்,'
வண் பரி நவின்ற வய மான் செல்வ!
நன்கு அதை அறியினும், நயன் இல்லா நாட்டத்தால்,
'அன்பு இலை' என வந்து கழறுவல்; ஐய! கேள்:

மகிழ் செய் தேமொழித் தொய்யில் சூழ் இள முலை
முகிழ் செய முள்கிய தொடர்பு, அவள் உண்கண்
அவிழ் பனி உறைப்பவும், நல்காது விடுவாய்!
இமிழ் திரைக் கொண்க! கொடியைகாண் நீ.

இலங்கு ஏர் எல் வளை ஏர் தழை தைஇ,
நலம் செல நல்கிய தொடர்பு, அவள் சாஅய்ப்
புலந்து அழ, புல்லாது விடுவாய்!
இலங்கு நீர்ச் சேர்ப்ப! கொடியைகாண் நீ.

இன் மணிச் சிலம்பின் சில் மொழி ஐம்பால்
பின்னொடு கெழீஇய தட அரவு அல்குல்
நுண் வரி வாட, வாராது விடுவாய்!
தண்ணந் துறைவ! தகாஅய்காண் நீ.
என ஆங்கு -

அனையள் என்று, அளிமதி, பெரும! நின் இன்று
இறை வரை நில்லா வளையள் இவட்கு, இனிப்
பிறைஏர் சுடர் நுதற் பசலை
மறையச் செல்லும், நீ மணந்தனை விடினே.

## 125. இரவும் இன்னலும்

மாலை நேரம். மேற்கே செவ்வானம். கிழக்கே தண்மதி எழும் நேரம். நெய்தல் நிலம் எத்தகைய காட்சி வழங்குகிறது?

நீலக் கடலை ஒட்டிய மணல் மேட்டிலே காவியுடுத்த துறவிகள் ஒருபால்; பெரு நாரைகள் ஒருபால்.

பெரு நாரையின் சிறகு சிறிது சிவந்திருக்கும். மூக்கும் நீளமாயிருக்கும். அந்த நாரை பகல் நேரம் முழுதும் மீன்களைக் கொத்தித் திரியும். மாலை வந்ததும் என்ன செய்யும்? மணல் மேட்டின் மீது வந்து இருக்கும். அக் காட்சி எப்படியிருக்கும்?

காவியுடை அணிந்த துறவிகள் கையிலே தடியூன்றி அமர்ந்து தியானம் செய்வதுபோல் இருக்குமாம்.

இத்தகைய நெய்தல் நிலத்தின் பெரும் செல்வன் ஒருவன், ஒருத்தியைக் காதலிக்கிறான். அவளும் அவனைக் காதலிக்கிறாள் இருவரும் அடிக்கடி சந்தித்து இன்பம் துய்க்க முடியவில்லை. அவள் வருந்துகிறாள். அதனைத் தோழி எடுத்துச் சொல்கிறாள் :

"பறவைகளின் ஒலி கேட்டு எழுவாள். எட்டி எட்டிப் பார்ப்பாள். உன்னுடைய வரவு காண்பாள். உன்னைக் காணாது வருந்துவாள். திடீரென்று மலர் மணம் வீசும். நீதான் வந்திருக்கிறாய் என்று எண்ணுவாள்; எழுந்திருந்து பார்ப்பாள். நீ இருக்கமாட்டாய். வருந்துவாள். தென்றலில் கலந்து வந்த மணம் அது என்று அறிவாள்.

"இப்படியாகத் தூக்கமின்றி எழுவதும், படுப்பதும், எழுவதும் படுப்பதுமாயிருப்பாள். அசதியால் சிறிது கண் அயர்வாள். உன்னை அணைத்துப் படுத்திருப்பது போன்ற எண்ணம். அப்படித் தடவிப் பார்ப்பாள். ஒன்றுமிராது. விழித்துக் கொள்வாள். வெறும் பிரமை என்று கண்டு வருந்துவாள்" என்றாள் தோழி.

பொன் மலை சுடர் சேர, புலம்பிய இடன் நோக்கி,
தன் மலைந்து உலகு ஏத்த, தகை மதி ஏர்தர,
செக்கர் கொள் பொழுதினான் ஒலி நீவி, இன நாரை
முக்கோல் கொள் அந்தணர் முது மொழி நினைவார்
போல்,
எக்கர் மேல் இறை கொள்ளும், இலங்கு நீர்த் தண்
சேர்ப்ப!

அணிச் சிறை இனக் குருகு ஒலிக்குங்கால், நின் திண்
தேர்
மணிக் குரல் என இவள் மதிக்கும்மன்; மதித்தாங்கே,
உள் ஆன்ற ஒலியவாய் இருப்பக் கண்டு, அவை
கானற்
புள் என உணர்ந்து, பின் புலம்பு கொண்டு, இனையுமே.

நீர் நீவிக் கஞன்ற பூக் கமழுங்கால், நின் மார்பில்
தார் நாற்றம் என இவள் மதிக்கும்மன்; மதித்தாங்கே,
அலர் பதத்து அசைவளி வந்து ஒல்க, கழிப் பூத்த
மலர் என உணர்ந்து, பின் மம்மர் கொண்டு, இனையுமே.

நீள் நகர் நிறை ஆற்றாள், நினையுநள் வதிந்தக்கால்,
தோள் மேலாய் என நின்னை மதிக்கும்மன்;
மதித்தாங்கே,
நனவு எனப் புல்லுங்கால், காணாளாய், கண்டது
கனவு என உணர்ந்து, பின் கையற்று, கலங்குமே.
என ஆங்கு,

பல நினைந்து, இனையும் பைதல் நெஞ்சின்,
அலமரல் நோயுள் உழக்கும் என் தோழி
மதி மருள் வாள் முகம் விளங்க,
புது நலம் ஏர்தர, பூண்க, நின் தேரே!

## 126. 'சேர்ப்பா! வந்து சேரப்பா!'

அகன்று விரிந்த கடல். நீலக் கடல். அந்தக் கடலைப் பார்க்கிறார் கவி. அவரது மனத்திலே எக்காட்சி தோன்று

கிறது. நீல வண்ணனுகிய திருமால் பள்ளி கொண்டிருப்பது போல் தோன்றுகிறது.

புன்னை, ஞாழல், தாழை, செருந்தி முதலிய மலர்கள் கடல் ஓரத்துக் கரையிலே மலர்ந்திருக்கின்றன; நறுமணம் வீசுகின்றன. அது எப்படியிருக்கிறது? அந்தத் திருமாலின் திருமேனியிலே புரளும் மாலைபோல் காட்சி தருகிறது.

இத்தகைய நெய்தல் நிலத்தின் பெருஞ் செல்வன் ஒருவன். ஒருத்தியைக் காதலிக்கிறான். களவிலே இன்பம் அனுபவிக்கிறான். பிறகு அவளை மறந்தே போகிறான். வருவான் வருவான் என்று எண்ணி ஏங்குகிருள். ஆனல் அவனே வரவில்லை. பலநாள் பார்த்துப் பார்த்து மனம் புண்ணுயிற்று.

முடிவிலே ஒருநாள் புறப்பட்டாள் தோழி, தலைவன் இடத்துக்கு. வெகு கோபம் அவளுக்கு. அவனை எப்படிக் கோபிக்கிருள்? கேளுங்கள் :

"மறந்து விட்டாய் அல்லவா?" என்றாள். அவள் கோபமாக வந்திருக்கிருள் என்பதை அவன் அறிந்தான்; பேசாதிருந்தான்.

"ஏன் மறக்க மாட்டாய்? உனது ஆசையை நிறைவேற்றிக் கொள்ள அவள் இடம் கொடுத்தாள் அல்லவா? நீ சொன்ன இடங்களுக்கெல்லாம் வந்து உனக்காகக் காத்திருந்து இன்பம் அளித்தாள் அல்லவா?

"உனக்கு இன்பம் தந்தாள் அவள். துன்பம் தருகிருய் அவளுக்கு. கண்ணீர்விட்டுக் கதறும்படி செய்கிருய்.

"வருவாய் வருவாய் என்று உன் வழி மேல் விழி வைத்துக் காத்திருக்கிருள் அவள். தினமும் உன்னையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருள். ஆனல் நீயோ, வரவில்லை. அதனல் வருந்தி இளைத்தாள். தோள்கள் மெலிந்தன. வளைகள் சுழன்றன.

"நடு இரவிலே நீ வந்த போதெல்லாம் சிறிதும் தவருமல் சந்தித்தாளே அதற்காகவோ இப்படிச் செய்கிருய்? இன்பம் அளித்தாளே! அதற்கா இப்படிச் செய்கிருய்?

"நன்றிகெட்டவன் என்ற கெட்ட பெயரை வாங்கிக்

கொள்ளாதே. அவளது வருத்தத்தைப் போக்கு. வரைந்துகொள். விரைவில் வா'' என்றாள்.

தெரி இணர் ஞாழலும், தேம் கமழ் புன்னையும்,
புரி அவிழ் பூவின கைதையும்; செருந்தியும்,
வரி ஞிமிறு இமிர்ந்து ஆர்ப்ப, இருந் தும்பி இயைபு
ஊத—
செரு மிகு நேமியான் தார் போல, பெருங் கடல்
வரி மணல்வாய்-சூழும் வயங்கு நீர்த் தண் சேர்ப்ப!

கொடுங் கழி வளைஇய குன்று போல், வால் எக்கர்,
நடுங்கு நோய் தீர, நின் குறி வாய்த்தாள் என்பதோ—
கடும் பனி அறல் இகு கயல் ஏர் கண் பனி மல்க,
இடும்பையோடு இனைபு ஏங்க, இவளை நீ துறந்ததை?

குறி இன்றிப் பல் நாள், நின் கடுந் திண் தேர் வரு
பதம் கண்டு,
எறி திரை இமிழ் கானல், எதிர்கொண்டாள்
என்பதோ—
அறிவு அஞர் உழந்து ஏங்கி, ஆய் நலம் வறிதாக,
செறி வளை தோள் ஊர, இவளை நீ துறந்ததை?

காண் வர இயன்ற இக் கவின் பெறு பனித் துறை,
யாமத்து வந்து, நின் குறி வாய்த்தாள் என்பதோ—
வேய் நலம் இழந்த தோள் விளங்குஇழை பொறை
ஆற்றாள்,
வாள் நுதல் பசப்பு ஊர, இவளை நீ துறந்ததை?
அதனால்,

இறை வளை நெகிழ்ந்த எவ்வ நோய் இவள் தீர,
'உரவுக் கதிர் தெறும்' என ஓங்கு திரை விரைபு, தன்
கரை அமல் அடும்பு அளித்தாஅங்கு -
உரவு நீர்ச் சேர்ப்ப! - அருளினை அளிமே.

## 127. கனவிலே வந்த காதலன்

அவனையே, நினைத்து நினைத்து உருகினாள் அவள். அந்த உருக்கம் என்ன செய்தது? உருக் குலைத்தது. யாரை? அவளை. உருக்குலைந்து காணப்பட்ட அவள், ஒருநாள் கவின் பெற்று விளங்கினாள்; பூரித்து நின்றாள். மிக அழகாயிருந்தாள். பார்த்தாள் தோழி.

"என்னடி இன்று, ஒரே பூரிப்பாக இருக்கிறாய்?"

"இரவு ஒரு விசேஷம்."

"ஊஹூம். ஏனடி எனக்குச் சொல்லவேயில்லையே!"

"அதுதான் இப்போது சொல்கிறேனே!"

"சொல்லு சொல்லு."

"இரவு வந்தான்."

"உன் காதலன் வந்தானா?"

"சொல்வதைக் கேளடி."

"சொல்லு; சொல்லு."

"இரவு, வந்தான்."

"என்ன செய்தாய்?"

"சண்டை போட்டேன்."

"என்ன சண்டை?"

"'என் அழகு பாழானதுக்குக் காரணன் நீதான். கொடு திரும்ப. பாழாக்கிய என் அழகைப் பழையபடி கொடு' என்று வளைத்துக் கொண்டேன்."

"உம். அப்புறம்."

"'சரி; ஆகட்டும்' என்றான். அணைத்துக்கொண்டான். 'வருந்தாதே' என்றான். அவனது கழுத்திலே கிடந்த மாலையைக் கொண்டே அவனை அடித்தேன். அவன் பயந்து போனான். 'நான் ஒரு தவறும் செய்யவில்லையே!' என்றான். சிரித்தேன் நான். விழித்துப் பார்த்தேன். கனவு!" என்றாள்.

"ஏனடி! கனவிலே கண்டு இன்பமாக இருந்ததற்கோ இப்படி மகிழ்ந்து விட்டாய்" என்றாள் தோழி.

"கனவு நனவாகும் அல்லவா!" என்றாள் அவள்.

'தோள் துறந்து, அருளாதவர் போல் நின்று,
வாடை தூக்க, வணங்கிய தாழை
ஆடு கோட்டு இருந்த அசை நடை நாரை,
நளி இருங் கங்குல், நம் துயர் அறியாது,
அளி இன்று, பிணி இன்று, விளியாது, நரலும்
கானல் அம் சேர்ப்பனைக் கண்டாய் போல,
புதுவது கவினினை' என்றியாயின்,
நனவின் வாரா நயனிலாளனைக்
கனவில் கண்டு யான் செய்தது கேள், இனி:
'அலந்தாங்கு அமையலென்' என்றானைப் பற்றி, 'என்
நலம் தாராயோ?' என, தொடுப்பேன் போலவும்,
கலந்து ஆங்கே என் கவின் பெற முயங்கி,
'புலம்பல் ஓம்பு' என, அளிப்பான் போலவும் -

'முலையிடைத் துயிலும் மறந்தீத்தோய்' என,
நிலை அழி நெஞ்சத்தேன் அழுவேன் போலவும்,
'வலை உறு மயிலின் வருந்தினை, பெரிது' என,
தலையுற முன் அடிப் பணிவான் போலவும் -

கோதை கோலா, இறைஞ்சி நின்ற
ஊதைஅம் சேர்ப்பனை, அலைப்பேன் போலவும்,
'யாது என் பிழைப்பு?' என நடுங்கி, ஆங்கே,
'பேதையை பெரிது' எனத் தெளிப்பான் போலவும் -
ஆங்கு -
கனவினல் கண்டேன் - தோழி! - 'காண் தகக்
கனவின் வந்த கானல் அம் சேர்ப்பன்
நனவின் வருதலும் உண்டு' என
அனை வரை நின்றது, என் அரும் பெறல் உயிரே.

## 128. 'வருந்துகிருள் ; மருந்து தா!'

மாலை நேரம். அவளுக்கு வருத்தங் கொடுக்கும் நேரம். காதலன் வருவான் என்று காத்திருக்கும் காலம். அவன் வரவில்லையே என்று ஏங்கும் காலம்.

ஆண்டவன், படைப்புக் காலத்திலே என்ன செய்கிறான்? பல்வேறு உயிர் இனங்களையும் படைக்கிறான். பின்னே ஊழிக் காலத்திலே தன்னுள் அடக்கிக் கொள்கிறான். அதேபோல் கதிரவன் காலையிலே தன் கதிர்களை உமிழ்கிறான்; மாலைவரை உமிழ்கிறான்; பின், மாலையிலே விழுங்குகிறான்.

ஒரு அரசன். மிக நல்லவன். திறமை மிக்கவன். நன்றாக ஆட்சி செய்கிறான். இறந்துபோகிறான்.

பின்னே ஒரு குறுநில மன்னன். திறமையற்றவன். அந்த நாட்டை ஆள்கிறான், யானையிருந்த இடத்திலே பூனை இருப்பது போல. நாடு எப்படி இருக்கும்? ஆட்சி எப்படியிருக்கும்? எல்லாம் குழப்பமாக இருக்கும். அம்மாதிரி குழப்பத்தையுண்டு பண்ணிக்கொண்டு வந்தது, மாலை நேரம்.

அம்மாலை கண்டு வருந்துகிறாள் அவள்.

கடல் ஒலிக்கின்றது. ஓயாது ஒலிக்கின்றது; ஓலமிடுகிறது. ஏன்? 'ஏன்' என்று கேட்கிறாள் அவள் கடலை நோக்கி. தன்னுடைய சொந்த அனுபவம் தான் முன்னே நிற்கிறது அவளுக்கு.

"காதலன் உன்னைக் கைவிட்டுப் போனானோ? அதனால்தான் நீயும் ஓலமிடுகிறாயோ! என்னைப்போல்" என்று கேட்கிறாள். 'ஒருகால் நமது துன்பம் கண்டு தாளாமல் அதுவும் ஓலமிடுகிறதோ' என்ற எண்ணமும் கூடவே வருகிறது அவளுக்கு.

"என் வருத்தம் கண்டு நீயும் வருந்துகிறாயோ?" என்று கேட்கிறாள்.

அன்றில் பறவை. ஓயாமல் கூவிக்கொண்டேயிருக்கிறது. கண்டாள் அவள்.

"அன்றிலே ஏன் கூவுகிறாய்?" என்று கேட்கிறாள். அன்றில் என்ன, பதிலா சொல்லும்? சொல்லாது அல்லவா? அதனால் அவளே பதில் சொல்லிக்கொள்கிறாள்:

"நீயும் உனது காதலனைப் பிரிந்து கலங்குகிறாயோ, அன்றிலே!" என்று கேட்கிறாள். அதே சமயத்தில் மற்றொன்றும் தோன்றுகிறது அவளுக்கு. தனது துயர்கண்டு வருந்துவாரைக் கண்டால் ஒருவித ஆறுதல் ஏற்படும் அல்லவா! அதனாலே கேட்கிறாள்.

"எனது வருத்தம் கண்டுதான் நீயும் கூவுகிறாயோ!" என்று கேட்கிறாள்.

குழல் ஓசை கேட்கிறாள். அது எப்படித் தோன்றுகிறது? அவளது வருத்தம் கண்டு குழலும் ஒலிப்பதுபோல் தோன்று

இவ்விதம் அவள் வருந்துவதை அவனுக்கு எடுத்துச் சொல்கிறாள் தோழி. எவனுக்கு? காதலனுக்கு.

"சீக்கிரமாக அவளை மணந்துகொள்" என்கிறாள்.

"மருந்து அதுவே. அது உன்னிடம் இருக்கிறது. காலந் தாழ்த்தாதே. வராமலும் இருந்துவிடாதே இருந்தால் என்ன? கைவசம் நல்ல மருந்தை வைத்துக் கொண்டிருக்கிறான் ஒரு வைத்தியன் அந்த மருந்து கொடுத்தால நோயாளி பிழைத்துக் கொள்வான். அதை அறிந்தும் மருந்து கொடுக்க மன மில்லாத வைத்தியன் போலாவாய்" என்றாள் தோழி.

தொல் ஊழி தடுமாறி, தொகல் வேண்டும் பருவத்தால்,
பல் வயின் உயிர் எல்லாம் படைத்தான்கண்
  பெயர்ப்பான் போல்,
எல் உறு தெறு கதிர் மடங்கி, தன் கதிர் மாய;
நல் அற நெறி நிறீஇ உலகு ஆண்ட அரசன் பின்,
அல்லது மலைந்திருந்து அற நெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம் போல், மயங்கு இருள் தலை வர;
எல்லைக்கு வரம்பு ஆய, இடும்பை கூர், மருள் மாலை -

பாய் திரைப் பாடு ஓவாப் பரப்பு நீர்ப் பனிக் கடல்! -
'தூ அறத் துறந்தனன் துறைவன்' என்று, அவன்
  திறம்
நோய் தெற உழப்பார்கண் இமிழ்தியோ? எம் போலக்
காதல் செய்து அகன்றாரை உடையையோ? - நீ.

மன்று இரும் பெண்ணை மடல் சேர் அன்றில்! -
'நன்று அறை கொன்றனர், அவர்' எனக் கலங்கிய
என் துயர் அறிந்தனை நரறியோ? எம் போல
இன் துணைப் பிரிந்தாரை உடையையோ? - நீ.

பனி இருள் சூழ்தர - பைதல் அம் சிறு குழல்! -
'இனி வரின், உயரும்மன் பழி' எனக் கலங்கிய
தனியவர் இடும்பை கண்டு இனைதியோ? எம் போல
இனிய செய்து அகன்றுறை உடையையோ?- நீ.

என ஆங்கு,

அழிந்து, அயல் அறிந்த எவ்வம் மேற்பட,
பெரும் பேதுறுதல் களைமதி, பெரும!
வருந்திய செல்லல் தீர்த்த திறன் அறி ஒருவன்
மருந்து அறைகோடலின் கொடிதே, யாழ நின்
அருந்தியோர் நெஞ்சம் அழிந்து உக விடினே.

## 129. வாட்டமும் ஓட்டமும்

"அந்தக் காலம் மலையேறிப் போச்சு" என்கிறுன்.

எந்தக் காலம்? நீதியுடன் ஆண்ட காலம். நடுவு நிலைமையுடன் ஆண்ட காலம்.

காரணம் என்ன? நீதியும் நேர்மையுமே லட்சியமாகக்கொண்டு நல்லரசு செய்தான் ஒருவன்.

அவன் இறந்தான். அவனுக்குப் பிறகு ஆட்சியைக் கைப் பற்றினுன் ஒருவன். அவனது ஆட்சியிலே எப்படி? நீதியும் நேர்மையும் ஓடி ஒளிந்தன.

அது கண்டு மக்கள் கொதித்தார்கள். கொதித்துக் கொதித்து உள்ளம் புழுங்கினுர்கள். அப்படிப் புழுங்கிய உள்ளத்தில் இருந்துதான் முன் சொன்ன கருத்துப் பிறந்தது.

இப்படியாகத் தனக்குப் பிற்காலத்திலே மக்கள் சொல்லும் படியாக நல்லரசு செய்தான். அவனிடம் செல்வமும் குவிந்தது. அவன் போனதும் செல்வமும் போயிற்று.

அம் மாதிரி சூரியன் மலை வாயில் விழுந்தான். அவனுடன் ஒளியும் போயிற்று. இருளை அழைத்துக்கொண்டு வந்தது மாலை.

அவளது நெஞ்சிலே காமத் தீ எழுகிறது. மலர்கள் குவி கின்றன; அவளது உள்ளமும் அவனை எண்ணி எண்ணிக் குவி யும். குழலோசை கேட்கிறாள்; வருந்துகிறாள், கண்கள் நீர் சொரிகின்றன.

அந்த நேரத்திலே காதலன் வந்துவிட்டான். வந்ததும் என்ன? சிறிது சிறிதாக அவளது மேனி அழகு பெற்றது. கண் கள் ஒளி விட்டுப் பிரகாசித்தன. மெலிந்த தோல் பருத்தது.

பார்த்தார்கள். அவர்கள் என்ன சொல்லிக்கொண்டார்கள்.

"பாண்டியனின் படை வர வர எதிரிகள் ஓடி மறைவது போல அல்லவா இருக்கிறது; இவளது வாட்டம் எல்லாம் ஓடி மறைந்தனவே!" என்று கூறிக்கொண்டார்கள், அவளைப் பார்த்த வர்கள்.

'நயனும், வாய்மையும், நன்னர் நடுவும்,
இவனின் தோன்றிய, இவை' என இரங்க,
புரை தவ நாடி, பொய் தபுத்து, இனிது ஆண்ட
அரைசனொடு உடன் மாய்ந்த நல் ஊழிச்
செல்வம் போல்,
நிரை கதிர்க் கனலி பாடொடு பகல் செல,
கல்லாது முதிர்ந்தவன் கண் இல்லா நெஞ்சம் போல்,
புல் இருள் பரத்தரூஉம் - புலம்பு கொள் மருள் மாலை.

இம் மாலை,

ஐயர் அவிர் அழல் எடுப்ப, அரோ, என்
கையறு நெஞ்சம் கனன்று தீ மடுக்கும்!

இம் மாலை,

இருங் கழி மா மலர் கூம்ப, அரோ, என்
அரும் படர் நெஞ்சம் அழிவொடு கூம்பும்!

இம் மாலை,

கோவலர் தீம் குழல் இனைய, அரோ, என்
பூ எழில் உண் கண் புலம்பு கொண்டு இனையும்!

என ஆங்கு,

படு சுடர் மாலையொடு பைதல் நோய் உழப்பாளை,
குடி புறங்காத்து ஓம்பும் செங்கோலான் வியன் தானை
விடுவழி விடுவழிச் சென்றாங்கு, அவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றால் பசப்பே.

## 130. துன்ப நினைவும் இன்பக் கனவும்

ஊஞ்சல் ஒன்று. சுறுமீன் எலும்பினாலே செய்த பலகை. கற்றாழை நார்க் கயிறு. இப்படிப் போடப்பட்ட ஊஞ்சலிலே அவளை உட்காரவைத்து ஆட்டுகிறாள் தோழி.

"பாடு" என்றாள் தோழி. ஆனால் அவள் பாடவில்லை. மீண்டும் சொன்னாள் தோழி.

"ஊஞ்சலை நான் ஆட்டுகிறேன். நீ பாடு."

அவள் பாடவில்லை. தோழியே பாடினாள்.

"இந்தக் கடல் நண்டுகள் ஏன் வளையில் புகுந்தன தெரியுமா? உனது காதலன் செயல் கண்டு நாணின. வெட்கம்! அதனால் வளையில் புகுந்து கொண்டன."

"இப்போ நீ ஒரு பாட்டுப்பாடு" என்றாள் தோழி. அப்போதும் அவள் பாடவில்லை.

"சரி, நானே பாடுகிறேன்" என்று பாடுகிறாள் தோழி:

"அந்த அன்றில் ஏன் கூவவில்லை. நமது வருத்தங்கண்டு தாமும் வருந்துகின்றனவோ!"

"ஏனடி, அவரைப் பழித்துப் பாடுகிறாய்? அவரது கடல் கரையிலே உள்ள பறவைகள் என்ன செய்யும்? இறந்த மீன்களைத்தான் தின்னும். உயிருள்ள மீன்களைக் கொல்லாது; வருத்தாது. தெரியுமா? எனவே அவரைப் புகழ்ந்து பாடு" என்றாள் அவள். தோழி பாடவில்லை.

"பெண்களிடம் ஊடல் கண்டானாயின் உடனே தீர்ப்பவன் அவன். எப்படி? அவனுடைய கடல் நாட்டிலே அலைகள் மோதும். கரையிலே மோதும். இரவு முழுதும் மோதும். மோதி

மோதி என்ன செய்யும்? மணலைக் கரைக்கும். அதனால் காவிகள் துயர் தீரும்.” என்று பாடினாள் அவள்.

இவற்றையெல்லாம் மறைவில் நின்று கேட்டுக்கொண்டிருந் தான் அவன். வந்தான்; ஊஞ்சலை ஆட்டினான். அவளது வருத் தம் போக்கினான்.

இது பழைய கதை. இதை நினைவூட்டுகிறாள் தோழி தலைவிக்கு.

“இப்படி உன் மீது அன்புகாட்டியவன் ஒருநாளும் உன்னைக் கைவிட மாட்டான். வருவான்; வரைவான்” என்றாள்.

பெருங் கடற் தெய்வம் நீர் நோக்கித் தெளித்து, என்
திருந்திழை மென் தோள் மணந்தவன் செய்த
அருந் துயர் நீக்குவேன் போல்மன் - பொருந்துபு
பூக் கவின் கொண்ட புகழ் சால் எழில் உண் கண்,
நோக்குங்கால் நோக்கின் அணங்கு ஆக்கும்,
சாயலாய்! தாக்கி
இன மீன் இகல் மாற வென்ற சின மீன்
எறி சுறா வான் மருப்புக் கோத்து, நெறி செய்த
நெய்தல் நெடு நார்ப் பிணித்து யாத்து, கை உளர்வின்
யாழ் இசை கொண்ட இன வண்டு இமிர்ந்து ஆர்ப்ப,
தாழாது உறைக்கும் தட மலர்த் தண் தாழை
வீழ் ஊசல் தூங்கப் பெறின்.

மாழை மட மான் பிணை இயல் வென்றாய்! 'நின் ஊசல்
கடைஇ யான் இருப்ப, நீடு ஊங்காய், தட மென் தோள்
நீத்தான் திறங்கள் பகர்ந்து.

நாணினகொல், தோழி? நாணினகொல், தோழி?
இரவு எலாம் நல் தோழி நாணின - என்பவை
வாள் நிலா ஏய்க்கும் வயங்கு ஒளி எக்கர் மேல்,
ஆறுப் பரிய அலவன் அளை புகூஉம் -
கானல் கமழ் ஞாழல் வீ ஏய்ப்ப, தோழி! என்
மேனி சிதைத்தான் துறை.

மாரி வீழ் இருங் கூந்தல், மதைஇய நோக்கு
 எழில் உண்கண்,
தாழ் நீர முத்தின் தகை ஏய்க்கும் முறுவலாய்!
தேயா நோய் செய்தான் திறம் கிளந்து நாம் பாடும்
சேய் உயர் ஊசல் சீர் நீ ஒன்று பாடித்தை.

பார்த்து உற்றன, தோழி! பார்த்து உற்றன, தோழி!
இரவு எலாம், நல் தோழி! பார்த்து உற்றன - என்பவை
'தன் துணை இல்லாள் வருந்தினாள்கொல்?' என,
இன் துணை அன்றில் இரவின் அகவாவே -
அன்று, தான் ஈர்த்த கரும்பு அணி வாட, என்
மென் தோள் ஞெகிழ்த்தான் துறை.

கரை கவர் கொடுங் கழி, கண் கவர் புள்ளினம்,
திரை உறப் பொன்றிய புலவு மீன் அல்லதை,
இரை உயிர் செகுத்து உண்ணாத் துறைவனை யாம் பாடும்
அசை வரல் ஊசல் சீர் அழித்து, ஒன்று பாடித்தை.

அருளினகொல், தோழி? அருளினகொல், தோழி?
இரவு எலாம், தோழி! அருளின - என்பவை,
கணம் கொள் இடு மணல் காவி வருந்த,
பிணங்கு இரு மோட்ட திரை வந்து அளிக்கும் -
மணம் கமழ் ஐம்பாலார் ஊடலை ஆங்கே
வணங்கி உணர்ப்பான் துறை.
என, நாம்

பாட, மறை நின்று கேட்டனன், நீடிய
வால் நீர்க் கிடக்கை வயங்கு நீர்ச் சேர்ப்பனை
யான் என உணர்ந்து, நீ நனி மருள,
தேன் இமிர் புன்னை பொருந்தி,
தான் ஊக்கினன், அவ் ஊசலை வந்தே.

## 131. 'மறக்கலாமா? மரக்காயரே!'

கடற்கரையிலே மரக்கலங்கள் நிற்கின்றன; ஒன்று, இரண்டா? பல; பலப்பல. எங்கு நோக்கினும் மரக்கலங்கள்!

இவை எங்கிருந்து வந்தன? தொலைவிலே உள்ள நாடுகளுக்குச் சென்று வந்த மரக்கலங்கள். விற்பனைக்காக, உப்பு, மீன் முதலிய வற்றை ஏற்றிச் சென்றவை. அங்குள்ள துறைமுகங்களிலே இறக்கிவிட்டுத் திரும்பி வந்தவை.

கடல் அலைகள் அவற்றை அடித்துச் சென்றுவிடும் அல்லவா? எனவே, மரக்கல ஆயர்கள் என்ன செய்தார்கள்? கரையிலே முளையடித்துக் கயிறு கொண்டு கட்டிப் போட்டார்கள்.

கடற் காகங்களும் இதர பறவைகளும் என்ன செய்கின்றன? பறந்து திரிகின்றன. கூட்டம் கூட்டமாக. மீன்களைத் தின்று மணலிலே இளைப்பாறுகின்றன.

இதனைப் பார்க்கிறார் கவி. உடனே அவரது கண்முன்னே எத்தகைய காட்சி தோன்றுகிறது? பாண்டிய மன்னனின் படைகள் பாசறையிலே நிற்பது போன்ற காட்சி. அப்படி நிறுத்தப் பட்டுள்ள படை நடுவே யானைகள் கட்டியிருப்பார்கள். முளை யடித்துக் கட்டியிருப்பார்கள். அந்த மரக்கலங்கள் அக் காட்சி வழங்குகின்றனவாம். படை என்று சொன்னால்—பாசறையிலே—காகங்களுக்குக் குறைவு ஏது?

பாண்டியரைப் பற்றிய நினைவு வந்ததும் என்ன தோன்று கிறது? அவர்தம் ஆட்சியின் பெருமைதான் முன்னே நிற்கிறது. 'முரைசு மூன்று ஆள்பவர்' என்கிறார். முரசு மூன்று எவை? வீர முரசு, தியாக முரசு, நியாய முரசு என்பன. இம் மூன்று முரசும் கட்டி ஆண்டனராம் பாண்டியர். வீரம், தியாகம், நியாயம்!

அது மாத்திரமல்ல. சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவர் தம் முரசுகளையும் ஒரு கொடிக் கீழ் ஆண்டனர் பாண்டியர்.

மடகாஸ்கர், மொரிசஸ் போன்ற தீவுகளுக்கெல்லாம் பாண்டிய நாட்டு மரக்கலங்கள் சென்றன. அதனால் 'முரைசு மூன்றாள்பவர்' என்றார். மொரிசஸ் முதலிய முத் தீவுகளையும் ஆண்டனர் பாண்டியர்! இதையும் குறிப்பிடுகின்றார் கவி.

இத்தகைய பாண்டிய நாட்டிலே நெய்தல் நிலத்தைச் சார்ந்த குறுநிலக் கிழவன் ஒருவன்! கிழவன் என்றால் சொந்தக்காரன் என்று பொருள். வயதானவன் என்று பொருள் கொள்ளலாகாது.

இந்த நிலக் கிழவனுக்கு என்ன பட்டப் பெயர்? சேர்ப்பன் என்று பெயர். சேர்ப்பன் என்ன செய்தான்?

ஒரு பெண்ணைக் காதலித்தான். களவும் ஆயிற்று. பிறகு நீண்ட நாள் வரவில்லை. மரக்கலத்தில் ஏறி, தொலைக்குப் போயிருந்தானோ என்னவோ தெரியவில்லை.

அவன் பிரிவு கண்டு மிக வருந்தினாள் காதலி. உடலிலே பசலை படர்ந்தது. வளைகள் கழன்றன.

சில மாதங்களுக்குப் பிறகு சேர்ப்பன் சென்ற மரக்கலங்கள் கரை வந்தன. அது கேட்டாள் தோழி. சென்றாள். அவனைக் கண்டாள்.

"வருவாய்; விரைவாய்; வரைவாய்" என்றாள். அவன் இல்லாத காலத்திலே அவனது காதலி வருந்தியதை எல்லாம் எடுத்துச் சொல்கிறாள்:

உரவு நீர்த் திரை பொர ஓங்கிய எக்கர்மேல்,
விரவுப் பல் உருவின வீழ் பெடை துணையாக,
இரை தேர்ந்து உண்டு, அசாவிடூஉம் புள்ளினம்
இறை கொள -
முரைசு மூன்று ஆள்பவர் முரணியோர் முரண் தப,
நிரை களிறு இடை பட, நெறி யாத்த இருக்கை போல்-
சிதைவு இன்றிச் சென்றுழிச் சிறப்பு எய்தி,
வினை வாய்த்து,
துறைய கலம் வாய் சூழும் துணி கடல் தண் சேர்ப்ப!

புன்னைய நறும் பொழில் புணர்ந்தனை இருந்தக்கால்,
'நன்னுதால்! அஞ்சல் ஓம்பு' என்றதன் பயன் அன்றோ-
பாயின பசலையால், பகல் கொண்ட சுடர் போன்றாள்
மாவின தளிர் போலும் மாண் நலம் இழந்ததை?

பல் மலர் நறும் பொழில் பழி இன்றிப் புணர்ந்தக்கால்,
'சின்மொழி! தெளி' எனத் தேற்றிய சிறப்பு அன்றோ -
வாடுபு வனப்பு ஓடி வயக்கு உறா மணி போன்றாள்
நீடு இறை நெடு மென் தோள் நிரை வளை நெகிழ்ந்ததை?

அடும்பு இவர் அணி எக்கர் ஆடி நீ, 'மணந்தக்கால்,
கொடுங் குழாய்! தெளி' எனக் கொண்டதன்
கொளை அன்றோ -
பொறை ஆற்றா நுசுப்பினால், பூ வீந்த கொடி போன்றாள்
மறை பிறர் அறியாமை மாணா நோய் உழந்ததை?
என ஆங்கு—

வழிபட்ட தெய்வம்தான் வலி எனச் சார்ந்தார்கண்
கழியும் நோய் கைம்மிக அணங்கு ஆகியது போல,
பழி பரந்து அலர் தூற்ற, என் தோழி
அழி படர் அலைப்ப, அகறலோ கொடிதே.

## 132. பண்பும் பால் கலயமும்

மனிதன் எவன்?—இவ்வாறு கேட்டாள் ஒருத்தி, ஒருவனைப் பார்த்து. அவன் விழித்தான். திடீரென்று ஒரு கேள்வியைத் தூக்கி எறிந்தால் எவனும் விழிப்பது இயற்கைதானே! அவன் விழிப்பது கண்டாள் அவள்; சிரித்தாள்.

"ஏன் விழிக்கிறாய்? நான் சொல்கிறேன், கேள்" என்றாள்.

அவனுக்கு மூச்சு வந்தது. 'அப்பாடா' என்று கூறி சமாளித்துக் கொண்டான்.

"சொல்லு சொல்லு" என்றான்.

"மனிதன் என்றால் குறைந்தபட்சம் ஒன்பதுவிதமான குணங்களாவது அவனிடம் இருக்கவேண்டும்" என்றாள்.

"என்ன அது, ஒன்பது?" என்று கேட்டான் அவன்.

"ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறை, முறை, பொறை" என்றாள்.

"ஓகோ! இந்த ஒன்பதும் மனிதனுக்கு அவசியமோ?"

"ஆம்."

"ஆற்றுதல் என்றால் என்ன?"

"மனம் உடைந்து வருகிறான் ஒருவன்; மிகுந்த வருத்தத்துடன் வருகிறான்; கஷ்டப்பட்டுக் கொண்டு வருகிறான்; அவ

னிடத்திலே இன்பமாகப் பேசு. அவனது மனப் புண் போக்கு. ஆறுதலான மொழிகளைக் கூறு; விரும்பியதைக் கொடு.''

''போற்றுதல் என்றால் என்ன?''

''உன்னிடத்திலே ஒரு பொருளைக் கொடுக்கிறான் ஒருவன். அதைப் பாதுகாத்துப் பத்திரமாக வைத்திரு. உன்னிடம் வந்து அடைக்கலமான எப் பொருளையும் விட்டு விடாதே. உன்னிடம் சேர்ந்தவரைப் பிரியாதிரு. கவனமாகப் பாதுகாக்க வேண்டும்.''

''பண்பு என்பது எது?''

''உலகத்தின் கோட்பாடுகளை அறிந்து ஒழுகு. ஒருவன் வருகிறான் உன்னிடம். அவனது உள்ளக் கோட்பாடு அறிந்து அதற்கேற்ப நடந்துகொள். அதுவே பண்பு.''

''அன்பு எது?''

''தன்னைச் சேர்ந்தவர்களைக் கெடுக்காதே. அதுதான் அன்பு.''

''அறிவு எது?''

''முட்டாள்தனமாகப் பேசுகிறான் ஒருவன். அவன் மீது கோபங் கொள்ளாதே. பொறுத்துக் கொள். அறியாமையால் எவராவது ஏதாவது கூறினால் அதைப் பொறுமையுடன் கேட்டுக் கொள்ள வேண்டும்; அதன்படி நடக்க வேண்டியதில்லை. இதுவே அறிவு.''

''செறிவு?''

''ஒருவனுக்கு நீ கொடுத்த வாக்குறுதியை மறவாதே. சொன்ன சொல்லைக் காப்பாற்று. இதுவே செறிவு.''

''நிறை?''

''உனது இரகசியங்களைப் பிறர் அறியா விதமாக நடந்து கொள். இரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டியவற்றை அம்பலமாக்காதே.''

''முறை என்பது என்ன?''

''இவர் நமக்கு வேண்டியவர். இவர் செய்த தவறை அமுக்கி விடுவோம். இவர் நமக்கு வேண்டாதவர். ஆகவே இவரை நன்றாகப் புடை, என்று எண்ணக்கூடாது. தவறு செய்பவர் எவரேயானாலும் சரி. கண்டிக்க வேண்டும். அதுவே முறை.''

''பொறை என்றால்...?''

"காலம் வரும் வரையில் பொறுமையுடன் காத்திருப்பதே பொறை."

"உம். இந்த ஒன்பதும் ஒரு மனிதனுக்கு இருக்க வேண்டுமோ?"

"ஆம்."

"இல்லாவிட்டால்......?"

"இல்லாவிட்டால் என்ன? அவனை மனிதனாக மதிக்க முடியாது."

"நான் எப்படி?"

"உன்னிடம் இந்த குணங்கள் உள்ளன என்று நினைக்கிறேன். அதனால்தான் ஒன்று கூற வந்தேன்."

"என்ன?"

"பாலைக் குடித்துவிட்டுப் பானையைத் தூக்கி எறிந்து விட்டாயே!"

"பால் எப்போது குடித்தேன்? பானையை எங்கே எறிந்தேன்?"

"புட்டுப் புட்டுச் சொல்லவா?"

"சொல்லேன், கேட்போம்."

"உன் காதலியின் அழகைப் பருகினாய். இன்பம் அநுபவித்தாய். இப்போது அவளை மறந்துவிட்டாய். இது என்னவாம்? அவள் வாடி வருந்துகிறாள். அவள் வருத்தம் போக்கச் செல். விரைந்து செல்."

மா மலர் முண்டகம் தில்லையோடு ஒருங்கு உடன்
கானல் அணிந்த உயர் மணல் எக்கர்மேல்,
சீர் மிகு சிறப்பினோன் மரமுதல் கை சேர்த்த
நீர் மலி கரகம் போல் பழம் தூங்கு முடத் தாழைப்
பூ மலர்ந்தவை போல, புள் அல்கும் துறைவ! கேள்:

'ஆற்றுதல்' என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்;
'போற்றுதல்' என்பது புணர்ந்தாரைப் பிரியாமை;
'பண்பு' எனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல்;
'அன்பு' எனப்படுவது தன் கிளை செறாஅமை;
'அறிவு' எனப்படுவது பேதையார் சொல் நோன்றல்;

'செறிவு' எனப்படுவது கூறியது மறாஅமை;
'நிறை' எனப்படுவது மறை பிறர் அறியாமை;
'முறை' எனப்படுவது கண்ணோடாது உயிர் வௌவல்;
'பொறை' எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்:
ஆங்கு அதை அறிந்தனிர் ஆயின், என் தோழி
நல் நுதல் நலன் உண்டு துறத்தல் - கொண்க! -

தீம் பால் உண்பவர் கொள் கலம் வரைதல்;
நின் தலை வருந்தியாள் துயரம்
சென்றனை களைமோ; பூண்க, நின் தேரே!

## 133. நெகிழ்வும் மகிழ்வும்

"பார்த்தாயா?" என்றாள் ஒருத்தி.

"யாரை?" என்றாள் மற்றும் ஒருத்தி.

"அதோ நிற்கிறாளே! அந்தப் பெண்ணை" என்றாள்.

"பார்த்தேன். அவளுக்கு என்ன?"

"சிறிது நேரம் முன்பு கலங்கி நின்றாள். கடல் ஓசை கண்டு வருந்தினாள். 'ஏ! கடலே! ஏன் ஓயாமல் ஓசையிடுகிறாய். அவரைப் பிரிந்து நான் வாடுவதாலா?' என்று கூறினாள். அந்தக் கடல் அலை மோதி மோதிக் கரைத்த மணலைப் பார்த்தாள். 'மணலே! எனது வருத்தம் கண்டு நீயும் கரைகிறாயோ' என்றாள்.

'ஏ! மரங்களே! இலைகளை ஏன் குவித்துக் கொண்டீர்கள்? கண்ணை மூடிக் கொண்டீர்களோ, எனது துன்பம் பொறுக்க முடியாமல்' என்றாள். இப்படியெல்லாம் வருந்திக் கொண்டிருந்தவள் திடீரென்று மகிழ்கிறாள்! என்ன ஆச்சரியம்!"

"காதலன் வந்துவிட்டான்."

"வந்துவிட்டானா! நடுக் கடலில் மரக்கலம் உடைந்து தவிப்பவனுக்குத் தெப்பம் கிடைத்ததுபோல வந்துவிட்டானா! அதனால்தான் அவள் மகிழ்ச்சிக் கடலில் நீந்துகிறாள்."

மல்லரை மறம் சாய்த்த மலர்த் தண் தார்
அகலத்தோன்,

ஒல்லாதார் உடன்று ஓட, உருத்து, உடன் எறிதலின்,
கொல் யானை அணி நுதல் அழுத்திய ஆழி போல்,
கல் சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்,
இருங் கடல் ஒலித்து ஆங்கே இரவுக் காண்பது போல,
பெருங் கடல் ஓத நீர் வீங்குபு கரை சேர,
போழ்து வண்டினால் புல்லென்ற துறையவாய்,
பாயல் கொள்பவை போல, கய மலர் வாய் கூம்ப,
ஒருநிலையே நடுக்குற்று, இவ் உலகெலாம் அச்சுற,
இரு நிலம் பெயர்ப்பு அன்ன, எவ்வம் கூர் மருள் மாலை -

தவல் இல் நோய் செய்தவர்க் காணாமை நினைத்தலின்,
இகல் இடும் பனி தின, எவ்வத்துள் ஆழ்ந்து, ஆங்கே,
கவலை கொள் நெஞ்சினேன் கலுழ் தர, கடல் நோக்கி,
அவலம் மெய்க் கொண்டது போலும் - அஃது
எவன்கொலோ?

நடுங்கு நோய் செய்தவர் நல்காமை நினைத்தலின்,
கடும் பனி கைம்மிக, கையாற்றுள் ஆழ்ந்து, ஆங்கே,
நடுங்கு நோய் உழந்த என் நலன் அழிய, மணல் நோக்கி
இடும்பை நோய்க்கு இகுவன போலும் - அஃது
எவன்கொலோ?

வையினர் நலன் உண்டார் வாராமை நினைத்தலின்,
கையறு நெஞ்சினேன் கலக்கத்துள் ஆழ்ந்து, ஆங்கே,
மையல் கொள் நெஞ்சொடு மயக்கத்தால், மரன் நோக்கி
எவ்வத்தால் இயன்ற போல், இலை கூம்பல்
எவன்கொலோ?

என ஆங்கு,

கரை காணாப் பௌவத்து, கலம் சிதைந்து ஆழ்பவன்
திரை தரப் புணை பெற்று, தீது இன்றி உய்ந்தாங்கு,
விரைவனர் காதலர் புகுதர,
நிரை தொடி துயரம் நீங்கின்றால், விரைந்தே.

## 134. 'அழித்தாய்! அளிப்பாய்!'

"உன் குடும்பத்துக்கே கெட்ட பெயர் வரும்" என்றாள் தோழி.

"ஏன்?" என்று கேட்டான் அவன்.

"அன்று புன்னை மரத்தின் கீழே அவளுடன் கூடி இன்பந் துய்த்தாய். பிறகு கலியாணம் செய்துகொண்டால்தானே! அதுவுமில்லை. உன்னை நினைத்து நினைத்து அவள் ஏங்குகிறாள். அவளது அழகு பாழாகிறது.

"சொன்ன சொல் தவறாதவன் என்ற பெயருக்கு இழுக்கு உண்டாகும். பொய்யன் என்ற பெயர் வரும்.

"அவளது கண் அழகினைக் கண்டாய்; காதல் கொண்டாய். புன்னை மர நிழலில் இன்பம் துய்த்தாய். பின்னே மறந்து விட்டாய். அதை நினைத்து நினைத்துக் கண்ணீர் விடுகிறாள் அவள். கண்கள் ஒளியிழந்தன.

"ஒரு காலத்திலே அவளது கண் கண்டு மலர்கள் நாணின. இப்போது மலர் கண்டு கண்கள் நாணுகின்றன. இந்த அழிவைச் செய்தவன் நீ. உன்னைப் புகழ்வது எப்படி?"

"சரி. நான் என்ன செய்யவேண்டும்?"

"விரைவாகப் போ. வரைந்துகொள். வருத்தம் போக்கு" என்றாள் தோழி.

துணை புணர்ந்து எழுதரும் தூ நிற வலம்புரி
இணை திரள் மருப்பாக, எறி வளி பாகனா -
அயில் திணி நெடுங் கதவு அமைத்து, அடைத்து,
அணி கொண்ட
எயில் இடு களிறே போல் - இடு மணல் நெடுங்
கோட்டைப்
பயில் திரை, நடு நன்னாள், பாய்ந்து உறூஉம்
துறைவ! கேள் :

கடி மலர்ப் புன்னைக் கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடி நெகிழ்ந்த தோளளாத் துறப்பாயால்;மற்று நின்

குடிமைக்கண் பெரியது ஓர் குற்றமாய்க் கிடவாதோ?

ஆய் மலர்ப் புன்னைக் கீழ் அணி நலம் தோற்றாளை
நோய் மலி நிலையளாத் துறப்பாயால்; மற்று நின்
வாய்மைக் கண் பெரியது ஓர் வஞ்சமாய்க் கிடவாதோ?

திகழ் மலர்ப் புன்னைக் கீழ்த் திரு நலம் தோற்றாளை
இகழ் மலர்க் கண்ணளாத் துறப்பாயால்; மற்று நின்
புகழ்மைக்கண் பெரியது ஓர் புகராகிக் கிடவாதோ?
என ஆங்கு,

சொல்லக் கேட்டனை ஆயின், வல்லே,
அணி கிளர் நெடு வரை அலைக்கும் நின் அகலத்து,
மணி கிளர் ஆரம் தாரொடு துயல்வர
உயங்கினள் உயிர்க்கும் என் தோழிக்கு
இயங்கு ஒலி நெடுந் திண் தேர் கடவுமதி, விரைந்தே.

## 135. தாயமும் தவிப்பும்

"கடற் கரையிலே தாயம் உருட்டி விளையாடுகிறார்கள். யார்? இரண்டு பேர். அப்படி விளையாடும்போது என்ன நடக்கிறது?

"எட்டு, பதினாறு என்று தாயம் விழுகிறது ஒருவனுக்கு. கேட்டபடி கொடுக்கின்றன தாயக் காய்கள். அவன் துள்ளி

"மற்றவனுக்கோ அப்படியில்லை. கேட்டபடி தாயம் விழுவதில்லை. "ஓரிரண்டு இரு நான்கு" என்று தாயம் விழுகிறது. அவன் துடிக்கிறான். தோல்வியினால் வருந்துகிறான். இந்த மாதிரிதான் ஆயிற்று அவள் நிலைமை" என்றாள் தோழி.

"என்ன?" என்றான் அவன்.

"அன்று, கடற்கரையிலே அவளைக் கூடினாய்; இன்புற்றாய். தாயக் காய்கள் விரும்பியபடி வீழ்ந்தன என்று மகிழ்ந்தாள். இன்று 'பொருள் தேடிப் பிரிகிறேன்' என்கிறாய். கேட்டபடி

தாயம் விழாதவனைப் போல துடிக்கிருள் அவள். தாயக் காயை உன் விருப்பம்போல உருட்டாதே!

"இந்தச் சூதாட்டத்தை விடு. எழு. அவளை வரைந்து கொள்" என்றுள தோழி.

இவர், திமில், எறிதிரை ஈண்டி வந்து அலைத்தக்கால்,
உவறு நீர் உயர் எக்கர், அலவன் ஆடு அளை வரி,
தவல் இல் தண் கழகத்துத் தவிராது வட்டிப்ப,
கவறு உற்ற வடு ஏய்க்கும், காமரு பூங் கடற் சேர்ப்ப!

முத்து உறழ் மணல் எக்கர் அளித்தக்கால், முன் ஆயம்
பத்து உருவம் பெற்றவன் மனம் போல, நந்தியாள் -
அத் திறத்து நீ நீங்க, அணி வாடி, அவ் ஆயம்
வித்தத்தால் தோற்றான் போல், வெய் துயர்
உழப்பவோ?

முடத் தாழை முடுக்கருள் அளித்தக்கால், வித்தாயம்
இடைத் தங்கக் கண்டவன் மனம் போல, நந்தியாள் -
கொடைத் தக்காய்! நீ ஆயின், நெறி அல்லாக் கதி ஓடி
உடைப் பொதி இழந்தான் போல், உறு துயர்
உழப்பவோ?

நறு வீ தாழ் புன்னைக் கீழ் நயந்து நீ அளித்தக்கால்,
மறுவித்தம் இட்டவன் மனம் போல, நந்தியாள் -
அறிவித்து நீ நீங்கக் கருதியாய்க்கு, அப் பொருள்
சிறுவித்தம் இட்டான் போல், செறி துயர் உழப்பவோ?
ஆங்கு -

கொண்டு பலர் தூற்றும் கௌவை அஞ்சாய்,
தீண்டற்கு அருளி, திறன் அறிந்து, எழீஇப்
பாண்டியம் செய்வான் பொருளினும்
ஈண்டுக, இவள் நலம்! ஏறுக, தேரே!

## 136. வருந்தும் மருந்தும்

"என்னவோ! வெட்கக் கேடு!" என்றாள் அவள்.

"ஏன்?" என்று கேட்டாள் தோழி.

"தோகை உதிர்ந்த மயில் மாதிரி என் அழகெல்லாம்போக உயிர் வாழ்கிறேன். தூக்கமுமில்லை. எனக்குத் துணையாகச் சில அன்றில்களும் கூட இருக்கின்றன. அவராலே எனக்குக் கிடைத்த நன்மை என்ன? இந்தக் காமத் தீதான்.

"அவர் நெஞ்சு வலியது; என் நெஞ்சு எளியது. எனது நெஞ்சிலே அம்பு தொடுத்து விட்டார்; சொல்லம்பு. 'பிரியேன்' என்ற சொல்லம்பு. அதனால் ஏற்பட்ட வலியும், துன்பமும் என்னால் தாங்க முடியவில்லையே!

"நெருப்பினாலே சுடுபவர் அவர் அல்லர். அத் தொழில் அவருக்கில்லை. ஆனால் அவர் தந்த காமநோய் நெருப்பினுங் கொடுமையாக என்னைச் சுடுகிறதே!

"அவர் தந்த நோய் என் உயிரைக் குடித்துவிட்டுத்தான் போகும்போல் இருக்கிறதே!"

"வருந்தாதே! நோய்க்குரிய மருந்து விரைவில் வரும்" என்றாள் தோழி.

"ஆமாம்! அது எந்தக் காலத்தில் வரப்போகிறதோ?" என்றாள் அவள்.

அரிதே, தோழி! நாண் நிறுப்பாம் என்று உணர்தல்;
பெரிதே காமம்; என் உயிர் தவச் சிறிதே;
பலவே யாமம், பையுளும் உடைய;
சிலவே, நம்மோடு உசாவும் அன்றில்;
அழல் அவிர் வயங்கு இழை ஒலிப்ப, உலமந்து,
எழில் எஞ்சு மயிலின் நடுங்கி, சேக்கையின்
அழல் ஆகின்று, அவர் நக்கதன் பயனே.

மெல்லிய நெஞ்சு பையுள் கூர, தம்
சொல்லினான் எய்தமை அல்லது, அவர் நம்மை

வல்லவன் தைஇய வாக்கு அமை கடு விசை
வில்லினான் எய்தலோ இலர்மன்; ஆயிழை!
வில்லினும் கடிது, அவர் சொல்லினுள் பிறந்த நோய்.

நகை முதலாக, நட்பினுள் எழுந்த
தகைமையின் நலிதல் அல்லது, அவர் நம்மை
வகைமையின் எழுந்த தொல் முரண் முதலாக,
பகைமையின் நலிதலோ இலர்மன்; ஆயிழை!
பகைமையின் கடிது, அவர் தகைமையின் நலியும்
நோய்.

'நீயலென்' என்று என்னை அன்பினால் பிணித்து, தம்
சாயலின் சுடுதல் அல்லது, அவர் நம்மைப்
பாய் இருள் அற நீக்கும் நோய் தபு நெடுஞ் சுடர்த்
தீயினால் சுடுதலோ இலர்மன்; ஆயிழை!
தீயினும் கடிது, அவர் சாயலின் கனலும் நோய்.
ஆங்கு -

அன்னர் காதலராக, அவர் நமக்கு
இன் உயிர் போர்த்தரும் மருத்துவர் ஆயின்,
யாங்கு ஆவதுகொல்? - தோழி! - எனையதூஉம்
தாங்குதல் வலித்தன்று ஆயின்,
நீங்கரிது உற்ற அன்று, அவர் உறீஇய நோயே.

## 137. ஆடலும் மடலும்

மடல் ஊர்தல் என்று ஒன்று. அது என்ன தெரியுமா? ஒருவன், ஒருத்திமீது காதல் கொள்கிறான். சமயம் பார்த்து அவளிடம் செல்கிறான். 'கண்ணே! மணியே! கற்கண்டே! கனியே! கனிரசமே!' என்று சொல்லிக் காதல் மொழிகளை அள்ளி வீசுகிறான். 'விழுவாளோ! விழுவாளோ!' என்று பார்க்கிறான். வலையில் விழுந்தால்தானே! அவள் அவனது வலையில் சிக்கவில்லை. என்ன செய்வான்! பாவம்! ஏங்குகிறான்.

ஏக்கம் என்ன? ஒருநாளா? இரண்டு நாளா? பலநாள். உயிரே போய்விடும் போல் இருக்கிறது. எப்படியாவது அவளை அடைய வேண்டும் என்று முடிவுசெய்கிறான்.

பனை ஓலையினாலே ஒரு குதிரை செய்கிறான். அதன்மீது அவன் ஏறி உட்கார்ந்து கொள்கிறான். சிறு பிள்ளைகளைவிட்டு அக் குதிரையை இழுக்கச் சொல்கிறான்.

காதலி எங்கே இருக்கிறாளோ அந்த ஊருக்குப் போகிறான். அங்கே முச்சந்தியிலே இருந்து கொள்கிறான். கையிலே ஒரு படம். அது யாருடையது? அவனது காதலியின் படம். அதைப் பார்த்துப் பார்த்து ஏங்குவான். வருவார் போவாரிடம் எல்லாம் சொல்வான். உண்ணான்; உறங்கான். இப்படியே பலநாள் இருப்பான்.

ஊரார் சும்மா இருப்பார்களா? 'ஐயோ பாவம்' என்று இரங்குவார்கள். அவன் எந்தப் பெண்ணைக் காதலிக்கிறானோ அந்தப் பெண்ணை அவனுக்கே கொடுத்து விடுவார்கள்.

இதற்குப் பெயர்தான் மடல் ஏறல் என்பது. மடல் ஊர்தல் என்றும் சொல்வது உண்டு.

இப்படியாக மடல் ஊர்ந்து ஒருத்தியைப் பெற்றான் ஒருவன். தனது வீரப்பிரதாபத்தைத் தன் தோழன் ஒருவனுக்குக் கூறுகிறான் இந்தப் பாட்டிலே.

எழில் மருப்பு எழில் வேழம் இகுதரு கடாத்தால்
தொழில் மாறித் தலை வைத்த தோட்டி கை நிமிர்ந்தாங்கு
அறிவும், நம் அறிவு ஆய்ந்த அடக்கமும், நாணொடு,
வறிதாக - பிறர் என்னை நகுபவும், நகுபு உடன்,
மின் அவிர் நுடக்கமும் கனவும் போல், மெய் காட்டி -
என் நெஞ்சம் என்னோடு நில்லாமை நனி வௌவி,
தன் நலம் கரந்தாளைத் தலைப்படும் ஆறு
எவன்கொலோ?
மணிப் பீலி சூட்டிய நூலொடு, மற்றை
அணிப் பூளை, ஆவிரை, எருக்கொடு, பிணித்து, யாத்து,
மல்லல் ஊர் மறுகின்கண் இவட் பாடும், இஃது
ஒத்தன் -

எல்லீரும் கேட்டீமின் என்று.

படரும், பனை ஈன்ற மாவும் - சுடர் இழை,
நல்கியாள், நல்கியவை.

பொறை என் வரைத்து அன்றி, பூநுதல் ஈத்த
நிறை அழி காம நோய் நீந்தி, அறை உற்ற
உப்பு இயல் பாவை உறை உற்றது போல,
உக்குவிடும் - என் உயிர்.

பூளை, பொல மலர் ஆவிரை - வேய் வென்ற
தோளாள் எமக்கு ஈத்த பூ.

உரிது என் வரைத்து அன்றி, ஒள்ளிழை தந்த
பரிசு அழி பைதல் நோய் மூழ்கி, எரி பரந்த
நெய்யுள் மெழுகின் நிலையாது, பை பயத்
தேயும் - அளித்து - என் உயிர்.

இளையாரும், ஏதிலவரும் - உளைய, யான்
உற்றது உசாவும் துணை.

என்று யான் பாடக் கேட்டு,

அன்புறு கிளவியாள் அருளி வந்து அளித்தலின் -
துன்பத்தில் துணையாய மடல் இனி இவள் பெற
இன்பத்துள் இடம்படல் என்று இரங்கினள் -
அன்புற்று,
அடங்கு அருந் தோற்றத்து அருந் தவம் முயன்றோர் தம்
உடம்பு ஒழித்து உயர் உலகு இனிது பெற்றாங்கே.

## 138. மடலும் மனமும்

"பெரியோரே! அறிவிற் சிறந்தோரே! நற்குணங்கள் மிக்கோரே! வாழ்க! வருக!

"பிறருடைய நோயையும் தம்முடைய நோய்போல் கருதும் உள்ளத்தீர்! உம்மிடம் என் குறையைக் கூறிக்கொள்கிறேன்.

"மழைக் காலத்து மின்னல்போலே தோன்றினாள் ஒருத்தி. உருவைக் காட்டினாள் எனக்கு. உள்ளத்தைக் கொள்ளைகொண் டாள். ஓடிச் சென்றுவிட்டாள்.

"அப்போது முதல் துயில் கொள்ளாமல் துடிக்கிறேன்.

"தேன்மொழியாள் அவள் தான் காதல் கொள்ளவில்லை. என்னைக் காதல் கொள்ளச் செய்தாள். அன்று முதல் காமக் கடலில் கிடந்து தத்தளிக்கிறேன். அலைகள் வந்து மோது கின்றன. மன வருத்தம் என்ற அலைகள். இந்த மடல் ஏறி அக் கடலில் நீந்திக் கொண்டிருக்கிறேன்.

"முல்லை முறுவல் அழகி அளித்த காமத்தீ என்னை வாட்டுதே! வருத்துதே! சுட்டுக் கொல்லுதே! எப்படிப் பிழைப்பேன்! என் துயர் தீர்ப்பீர்."

இவ்வாறு கூறினான். யார்? மடல் ஏறியவன் ஒருவன். யாரை நோக்கி? ஊரிலே உள்ள சான்றோரை நோக்கி.

சான்றவிர், வாழியோ! சான்றவிர்! என்றும்
பிறர் நோயும் தம் நோய் போல் போற்றி, அறன் அறிதல்
சான்றவர்க்கு எல்லாம் கடன்ஆனால், இவ் இருந்த
சான்றீர்! உமக்கு ஒன்று அறிவுறுப்பேன்: மான்ற
துளி இடை மின்னுப் போல் தோன்றி, ஒருத்தி,
ஒளியோடு உரு என்னைக் காட்டி, அளியள், என்
நெஞ்சு ஆறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்,
அணி அலங்கு ஆவிரைப் பூவோடு எருக்கின்
பிணையல் அம் கண்ணி மிலைந்து, மணி ஆர்ப்ப,
ஓங்கு இரும் பெண்ணை மடல் ஊர்ந்து, என் எவ்வ
நோய்
தாங்குதல் தேற்றா இடும்பைக்கு உயிர்ப்பாக
வீங்கு இழை மாதர் திறத்து ஒன்று, நீங்காது,
பாடுவேன், பாய் மா நிறுத்து.

யாமத்தும் எல்லையும் எவ்வத் திரை அலைப்ப,
'மா மேலேன்' என்று, மடல் புணையா நீந்துவேன் -
தே மொழி மாதர் உறுஅது உறீஇய
காமக் கடல் அகப்பட்டு.

*உய்யா அரு நோய்க்கு உயவாகும் - மையல்*
*உறீஇயாள் ஈத்த இம் மா.*

**கா***ணுநர் எள்ளக் கலங்கி, தலை வந்து, என்*
*ஆண் எழில் முற்றி உடைத்து உள் அழித்தரும் -*
*'மாண் இழை மாதராள் ஏஎர்' என, காமனது*
*ஆணையால் வந்த படை.*

**கா***மக் கடும் பகையின் தோன்றினேற்கு ஏமம் -*
*எழினுதல் ஈத்த இம் மா.*

**அ***கை எரி ஆனாது, என் ஆர் உயிர் எஞ்சும்*
*வகையினால், உள்ளம் சுடுதரும் மன்னோ -*
*முகை ஏர் இலங்கு எயிற்று இன் நகை மாதர்*
*தகையால் தலைக்கொண்ட நெஞ்சு!*

**அ***ழல் மன்ற, காம அரு நோய்; நிழல் மன்ற,*
*நேரிழை ஈத்த இம் மா.*
*ஆங்கு அதை,*

**அ***றிந்தனிர் ஆயின், சான்றவிர்! தான் தவம்*
*ஒரீஇ, துறக்கத்தின் வழீஇ, ஆன்றோர்*
*உள் இடப்பட்ட அரசனைப் பெயர்த்து, அவர்*
*உயர் நிலை உலகம் உறீஇ யாங்கு, என்*
*துயர் நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே.*

## 139. உடைந்த உள்ளத்தின் ஓலம்

"என்னை என்னவோ முன்பின் பார்த்திராதவர்போல் அல்லவா கூடிநின்று பார்க்கிறீர்கள்! இது மடல் அன்று; குதிரை. திருமாலின் மகனாகிய காமன் என் நெஞ்சக் கோட்டையை இடிப் பதற்கென்று ஒருத்தியை அனுப்பியிருக்கிறான். அவள் தனது கண்களால், என் நெஞ்சைத் துளைத்துக்கொண்டிருக்கிறாள். அவள்மீது நான் அன்புகொண்டுள்ளேன். அதை உலகத் தார்க்கு அறிவிக்கவே இந்தக் குதிரை மீது ஏறி வந்திருக்கிறேன்.

"நீ ஒரு பாட்டுப்பாடு' என்றால் பாடுவேன்; 'ஆடு' என்றால் ஆடுவேன். திங்களைப் பாம்பு கவ்வுகிறது. அதைத் தடுக்க முடியாது. ஆனால் அது கண்டு வருந்துவாரும் உளர். என்னுடைய துயர் தீர்க்க முடியாவிட்டாலும் என்மீது பரிதாபம் கொள்ளலாம் அல்லவா! அது கூடக் காணோமே இங்கே! பலர் கண்ணில் பட்ட பாம்பு, சாகாது என்று சொல்வார்கள். அதாவது, ஆன்றோர் அதற்கு உயிர்ப் பிச்சை அளிப்பர். அதுபோல எனக்கு உயிர்ப் பிச்சை தருவதற்கு உபாயம் ஏதும் செய்யாமல் இருக்கிறார்களே!

"சுழலில் அகப்பட்டு ஆற்றோடு போகிறான். கரையில் நிற்பவர் அவனை இழுத்துப் போடலாம். போடாவிட்டால் போகிறது. 'பயப்படாதே' என்றாவது சொல்லலாம். அதுவும் சொல்ல மாட்டேன என்கின்றனர் இவ்வூரில் உள்ளார்.

"என்னவோ எனது வருத்தத்தைச் சொல்லிவிட்டேன். அவள் மனம் இரங்கச் செய்தால் போதும். உங்களுக்குப் புண்ணியமுண்டு; புகழும் உண்டு."

இவ்வாறு மடல் ஏறி நின்றவன் தன் உள்ளத்தின் துயரைப் பலருக்கும் எடுத்துக் கூறுகிறான்.

கண்டவிர் எல்லாம் கதுமென வந்து, ஆங்கே,
பண்டு அறியாதீர் போல நோக்குவீர்; கொண்டது
மா என்று உணர்மின்; மடல் அன்று: மற்று இவை
பூ அல்ல; பூளை, உழிஞையோடு, யாத்த
புனவரை இட்ட வயங்கு தார்ப் பீலி,
பிடி அமை நூலொடு பெய்ம் மணி கட்டி,
அடர் பொன் அவிர் ஏய்க்கும் ஆவிரங் கண்ணி:
நெடியோன் மகன் நயந்து தந்து, ஆங்கு அனைய
வடிய வடிந்த வனப்பின், என் நெஞ்சம்
இடிய இடைக் கொள்ளும் சாயல், ஒருத்திக்கு
அடியுறை காட்டிய செல்வேன்; மடியன்மின்;
அன்னேன் ஒருவனேன், யான்.

என்றும், 'பாடு' எனில், பாடவும் வல்லேன், சிறிது; ஆங்கே,
'ஆடு' எனில், ஆடலும் ஆற்றுகேன்; பாடுகோ -

என் உள் இடும்பை தணிக்கும் மருந்தாக,
நன்னுதல் ஈத்த இம் மா?

திங்கள் அரவு உறின், தீர்க்கலார் ஆயினும்,
தம் காதல் காட்டுவர், சான்றவர் - இன் சாயல்
ஒண்டொடி நோய் நோக்கில் பட்ட என் நெஞ்ச நோய்
கண்டும், கண்ணோடாது, இவ் ஊர்.

தூங்காச் சினத்தொடு காட்டி உயிர் செகுக்கும்
பாம்பும் அவைப் படில், உய்யுமாம் - பூங் கண்
வணர்ந்து ஒலி ஐம்பாலாள் செய்த இக் காமம்
உணர்ந்தும், உணராது, இவ் ஊர்.

வெஞ் சுழிப் பட்ட மகற்குக் கரை நின்றார்
அஞ்சல் என்றாலும் உயிர்ப்பு உண்டாம் - அம் சீர்ச்
செறிந்த ஏர் முறுவலாள் செய்த இக் காமம்
அறிந்தும், அறியாது, இவ் ஊர்.
ஆங்க -

என் கண் இடும்பை அறீஇயினென்; நும்கண்
தெருளுற நோக்கித் தெரியுங்கால், இன்ன
மருளுறு நோயொடு மம்மர் அகல,
இருளுறு கூந்தலாள் என்னை
அருளுறச் செயின், நுமக்கு அறனுமார் அதுவே.

## 140. காதலும் கரைதலும்

"வாழிய சான்றீர்! குதிரைமேல் ஏறி நின்று போர் செய்பவன் நான. இபபோது போர்க்களத்தே நிற்கவில்லை. ஊரின் கண் நிற்கிறேன. குதிரை ஏறி வரவில்லை. மடல் ஏறி வந்திருக்கிறேன். காரணம் என்ன? அவள்தான். அவளோ பெற முடியாதவளாக இருக்கிறாள். நீரிலே தோன்றுகிறது நிழல். தண் மதியின் நிழல். அதை எடுத்துக் கொண்டுவர முடியுமோ? முடியாது அல்லவா! அந்தமாதிரி இருககிறாள் அவள்.

"உலகத்தையெல்லாம் பாதுகாக்க வேண்டும் என்ற உள்ள முடையவன் நான். இப்போது இரந்து நிற்கின்றேன். இதற்குக் காரணம் அவளே! ஞாயிறு மண்டலத்தை நான் பெற விரும்பினால் அது முடிகிற காரியமா? முடியாது அல்லவா! அந்தமாதிரி அவளைப் பெற்றுக்கொள்வது மிக அருமையாயிருக்கிறது.

"வாழ்க சான்றீர்! வழுவிய சொல் ஏதும் நான் கூறவில்லை. நாவலர் முன்னே நானும் பேசவல்லேன். ஆனால் ஒன்றுங் கல்லாதவன் போல என்னைச் செய்தவள் எவள்? அவளோ— மழைகாலத்திலே தோன்றும் மின்னல்போல் இருக்கிறாள். மின்னலைப் பெறுவது எளிதா? அருமையன்றோ? அப்படித்தான் இருக்கிறது எனக்கும் அவளை அடைதல்."

இவ்வாறு கூறி மடல் ஏறி நின்றான் அவன்.

ஊரார் கண்டனர். அவளை அவனிடம் சேர்த்தனர். எப்படி? பாண்டியனுக்குக் கப்பம் செலுத்துவதுபோல.

அரிதினின் தோன்றிய யாக்கை புரிபு தாம்
வேட்டவை செய்து, ஆங்கு, காட்டி மற்று ஆங்கே,
அறம் பொருள் இன்பம் என்று அம் மூன்றின் ஒன்றன்
திறம் சேரார் செய்யும் தொழில்கள் அறைந்தன்று—
அணி நிலைப் பெண்ணை மடல் ஊர்ந்து, ஒருத்தி
அணி நலம் பாடி வரற்கு.

ஒரொருகால் உள்வழியள் ஆகி, நிறை மதி
நீருள் நிழல் போல், கொளற்கு அரியள் - போருள்
அடல் மாமேல் ஆற்றுவேன் என்னை மடல்மாமேல்
மன்றம் படர்வித்தவள் - வாழி, சான்றீர்!

பொய் தீர் உலகம் எடுத்த கொடிமிசை,
மை அறு மண்டிலம் வேட்டனள் - வையம்
புரவு ஊக்கும் உள்ளத்தேன் என்னை இரவு ஊக்கும்
இன்னா இடும்பை செய்தாள் – அம்ம, சான்றீர்!
கரந்தாங்கே இன்னா நோய் செய்யும்; மற்று இஃதோ
பரந்த சுணங்கின் பணைத் தோளாள் பண்பு?

இடி உமிழ் வானத்து, இரவு இருள் போழும்
கொடி மின்னுக் கொள்வேன் என்றன்னள் -
வடி நாவின்
வல்லார் முன் சொல் வல்லேன் என்னைப் பிறர்
முன்னர்க்
கல்லாமை காட்டியவள் - வாழி, சான்றீர்!
என்று, ஆங்கே,

வருந்த மா ஊர்ந்து, மறுகின்கண் பாட,
திருந்திழைக்கு ஒத்த கிளவி கேட்டு, ஆங்கே,
பொருந்தாதார் போர் வல் வழுதிக்கு அருந் திறை
போல, கொடுத்தார், தமர்.

## 141. பெண் உள்ளம் பேசுகிறது!

"கல கல என்று சிரித்து விளையாடிக் கொண்டிருந்தவள் ஏன் இப்பொழுது இப்படி இருக்கிறாள்?" என்றாள் ஒருத்தி.

"ஆமாம்! நானும் தான் பார்த்துக்கொண்டேயிருக்கிறேன். முல்லை தொடுத்ததுபோல் பல் வரிசை காட்டிச் சிரித்தவள் இப் பொழுது கண்ணீர் சிந்துகிறாளே! ஏன்?" என்றாள் இன்னொருத்தி.

கேட்டாள் அவள்.

"இங்கே வாருங்கள்; நான் சொல்கிறேன்" என்றாள்.

"என்ன? சொல்!" என்று கேட்டனர்.

"அவன் வருவானோ என்று எதிர்பார்த்திருந்தேன். அவ னுடன் கூடி இன்பமாக இருப்பதற்கு இடமும் அமைத்திருந் தேன். அவ்வளவில் பிறை தோன்றிற்று. பிறை கண்டேன். பிறை தோன்றிய பின் வர முடியுமா? ஊர் காவலர் கண்ணிலே தப்பி வருவது எப்படி? இப்படி எண்ணிக்கொண்டே கண் அயர்ந் தேன். அவன் வந்து தழுவினான். கட்டிப்பிடித்தேன். விழித்துப் பார்த்தேன். அவனைக் காணோம். கனவு! வெறுங் கனவு. இனி எங்கு போய் அவனைத் தேடுவேன்? 'சரி. ஞாயிறு வரட்டும்' என்றிருந்தேன். ஞாயிறு வந்தது. 'ஞாயிறே' உனது பொற்

கைகளாலே அவனைத் தேடிப் பிடித்து என் கையில் கொண்டு தா' என்று சொன்னேன். 'அப்போதுதான் என் நெஞ்சாகிய அகலிலே உயிராகிய திரியில் கொளுத்திய காமத் தீ அவியும்' என்று சொன்னேன்.

"ஆனால் ஞாயிறு பதில் சொல்லவில்லை. அஸ்தமன கிரியை அடைந்தது.

"'ஞாயிறே! போகிறாயே! நீ இல்லாதபோது அவனை நான் இரவு முழுதும் தேடுவேன். அதற்குக் கைவிளக்கு வேண்டுமே! அதற்காகச் சில கிரகங்களை விட்டுச் செல்" என்றேன்.

"அவன் அப்படி ஏதும் செய்யவில்லை.

"என் செய்வேன்! காமநோய் என் நெஞ்சைச் சுட்டது. அதை மறைத்தேன். கண், நீர் சொரிந்தது. அதையும் மறைத்தேன். காமநோய் என்னை வாட்டுகிறது. உடம்பு மெலிந்து போயிற்று. இதுவரை மறைத்தேன். இனி மறைகக முடியாது. என் உயிர் போகுமுன் ஏதாவது செய்வீர்!" என்றாள்.

கேட்டனர். "ஐயோ பாவம்!" என்றனர். வீடு சென்றனர்.

அன்றிரவு அவன் வந்தான். அவளுடன் கூடினான். சுகித்தான். மறுநாள் அவளைக் கண்டனர்.

"என்னடி! நேற்று இவள் மிக வருந்தினாள். கலங்கினாள். இன்று தேறிவிட்டாள். கலங்கிய நீர் தெளிந்தது போல் ஆகிவிட்டாளே!" என்றாள் ஒருத்தி.

"சங்கதி தெரியுமா? இரவு அவன் வந்திருந்தான்."

"எவன்?"

"அவள் காதலன்."

"ஓகோ!" என்றாள்.

கல கல வென்று சிரித்தனர்.

புரிவுண்ட புணர்ச்சியுள் புல் ஆரா மாத்திரை,
அருகுவித்து ஒருவரை அகற்றலின், தெரிவார்கண்,
செயநின்ற பண்ணினுள் செவிசுவை கொள்ளாது,
நயம் நின்ற பொருள் கெடப் புரி அறு நரம்பினும்
பயன் இன்று மன்றம்ம, காமம் - இவள் மன்னும்

ஒள் நுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்,
முள் நுனை தோன்றாமை முறுவல் கொண்டு அடக்கி,
 தன்
கண்ணினும் முகத்தினும் நகுபவள்; பெண் இன்றி
யாவரும் தண் குரல் கேட்ப, நிரை வெண் பல்
மீ உயர் தோன்ற, நகாஅ, நக்காங்கே,
பூ உயிர்த்தன்ன புகழ் சால் எழில் உண்கண்
ஆய் இதழ் மல்க அழும்.

ஓஒ! அழிதகப் பாராதே, அல்லல் குறுகினம்;
காண்பாம் - கனங்குழை பண்பு.

என்று, எல்லீரும் என் செய்தீர்? என்னை நகுதிரோ?
நல்ல நகாஅலிர் மற்கொலோ - யான் உற்ற
அல்லல் உறீஇயான் மாய மலர் மார்பு
புல்லிப் புணரப் பெறின்.

'எல்லா! நீ உற்றது எவனோ மற்று?' என்றீரேல்,
 'எற் சிதை
செய்தான் இவன்' என, 'உற்றது இது' என,
எய்த உரைக்கும் உரன் அகத்து உண்டாயின்,
பைதல ஆகிப் பசக்குவமன்னோ - என்
நெய்தல் மலர் அன்ன கண்?

கோடு வாய் கூடாப் பிறையை, பிறிது ஒன்று
நாடுவேன், கண்டனென்; சிற்றிலுள் கண்டு, ஆங்கே,
ஆடையான் மூஉய் அகப்படுப்பேன்; சூடிய,
காணான், திரிதரும் கொல்லோ - மணி மிடற்று
மாண் மலர்க் கொன்றையவன்?

'தெள்ளியேம்' என்று உரைத்து, தேராது, ஒரு நிலையே,
'வள்ளியை ஆக!' என நெஞ்சை வலியுறீஇ,
உள்ளி வருகுவர் கொல்லோ? வளைந்து யான்
எள்ளி இருக்குவேன் மற்கொலோ? நள்ளிருள்
மாந்தர் கடி கொண்ட கங்குல், கனவினுள்,
தோன்றினனாக, தொடுத்தேன் மன், யான்; தன்னைப்

பையெனக் காண்கு விழிப்ப, யான் பற்றிய
கையுளே மாய்ந்தான், கரந்து.

கதிர் பகா ஞாயிறே! கல் சேர்திஆயின்,
அவரை நினைத்து, நிறுத்து என் கை நீட்டித்
தருகுவை ஆயின், தவிரும் - என் நெஞ்சத்து
உயிர் திரியா மாட்டிய தீ.

மை இல் சுடரே! மலை சேர்தி நீ ஆயின்,
பௌவ நீர்த் தோன்றிப் பகல் செய்யும் மாத்திரை,
கைவிளக்காகக் கதிர் சில தாராய்! என்
தொய்யில் சிதைத்தானைத் தேர்கு.

சிதைத்தானைச் செய்வது எவன்கொலோ? எம்மை
நயந்து, நலம் சிதைத்தான்.

மன்றப் பனைமேல் மலை மாந் தளிரே! நீ
தொன்று இவ் உலகத்துக் கேட்டும் அறிதியோ?
மென் தோள் நெகிழ்த்தான் தகை அல்லால்,
யான் காணேன் -
நன்று தீது என்று பிற.

நோய் எரியாகச் சுடினும், சுழற்றி, என்
ஆய் இதழ் உள்ளே கரப்பன் - கரந்தாங்கே
நோய் உறு வெந் நீர்: தெளிப்பின், தலைக் கொண்டு
வேவது, அளித்து இவ் உலகு.

மெலியப் பொறுத்தேன்; களைந்தீமின் - சான்றீர்! -
நலிதரும் காமமும் கௌவையும் என்று, இவ்
வலிதின் உயிர் காவாத் தூங்கி, ஆங்கு, என்னை
நலியும் விழுமம் இரண்டு.
எனப் பாடி,

இனைந்து நொந்து அழுதனள்; நினைந்து நீடு
உயிர்த்தனள்;
எல்லையும் இரவும் கழிந்தன என்று எண்ணி, எல்லிரா

நல்கிய கேள்வன் இவன் - மன்ற, மெல்ல
மணியுள் பரந்த நீர் போலத் துணிவாம் -
கலம் சிதை இல்லத்துக் காழ் கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து, நலம் பெற்றாள்,
நல் எழில் மார்பனைச் சார்ந்து.

## 142. உடைந்த நெஞ்சும், உருகிய பேச்சும்

"கைவிடேன் என்று சொன்னான். மெய்யென்று நம்பினேன். கை விட்டான். இன்பம் கொடுப்பதுபோல் கொடுத்தான். பின் துன்பமே நின்றது. என் செய்வேன்! அவனைத் தேடித் தேடி அலைகிறது என் நெஞ்சம்! அவனை எங்கு காண்பேன்? யாராவது தேடித் தரமாட்டீர்களா?" என்று புலம்பினாள் அவள். யாரும் பதில் சொல்லவில்லை.

"'அவனுக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லையே! பாவம்! இவள் வருந்துகிறாளே!' என்று நினைக்கிறீர்கள். அவனுடைய உயிருக்கு ஆபத்து ஏதுமே நேர்ந்திராது. அப்படி நேர்ந்திருக்குமானால் என் உயிர் போயிருக்கும். போகவில்லையே! அவன் உயிரின் ஒரு பகுதி நானல்லவா!" என்றாள்.

"ஐயோ பாவம்! பெண்ணே! வருந்தாதே! உன்னைக் கை விட்டவனை சூரிய பகவான் பார்த்துக் கொள்வான்" என்றனர்.

"சூரியனே! அவருக்கு ஒரு கெடுதலும் செய்யாதே! செய்தால் எனக்கு வருத்தமுண்டாகும். நான் வருந்துவேன்; இறப்பேன்" என்றாள்.

சூரியன் மலைவாயில் வீழ்ந்தான். மாலைக் காலமும் வந்தது.

"என்னைக் கொல்லும் காலன் போல் வந்து விட்டதே மாலை" என்றாள்.

"சூரியனே! சென்று வா! என்னை விட்டுச் செல்கிறாய்! இராக் காலத்திலே வருந்த விட்டுப் போகிறாய்! போ! இரவிலே இறந்து விட்டாலும் பாதகமில்லை. சுவர்க்கத்திலேயாவது நான் விரும்பியது பெறுவேன் அல்லவா!" என்றாள்.

இப்படியாக அவள் வருந்திய பொழுது அவளது காதலன் வந்து சேர்ந்தான். சேரவே, என்னாயிற்று? அவளது மேனி அழகிட்டது. இழந்த வனப்பு மீண்டது.

'அகல் ஆங்கண், இருள் நீங்கி, அணி நிலாத்
திகழ்ந்த பின்,
பகல் ஆங்கண் பையென்ற மதியம்போல், நகல் இன்று
நல் நுதல் நீத்த திலகத்தள், "மின்னி
மணி பொரு பசும் பொன்கொல்?" மா ஈன்ற
தளிரின்மேல்
கணிகாரம் கொட்கும்கொல்?" என்றாங்கு அணி செல,
மேனி மறைத்த பசலையள், ஆனாது
நெஞ்சம் வெறியா நினையா, நிலன் நோக்கா,
அஞ்சா, அழாஅ, அரற்றா, இஃது ஒத்தி
என் செய்தாள்கொல்?' என்பீர் - கேட்டீமின் -
பொன் செய்தேன்.

மறையின் தன் யாழ் கேட்ட மானை அருளாது,
அறை கொன்று, மற்று அதன் ஆர் உயிர் எஞ்ச,
பறை அறைந்தாங்கு, ஒருவன் நீத்தான் - அவனை
அறை நவ நாட்டில் நீர் கொண்டு தரின், யானும்
நிறை உடையேன் ஆகுவென்மன்ற - மறையின் என்
மென் தோள் நெகிழ்த்தானை மேஎய், அவன் ஆங்கண்
சென்று, சேட்பட்டது, என் நெஞ்சு.

'ஒன்றி முயங்கும்' என்று, என் பின் வருதிர்; மற்று
ஆங்கே,
'உயங்கினாள்' என்று, ஆங்கு உசாதிர்; 'மற்று அந்தோ
மயங்கினாள்!' என்று மருடிர்; கலங்கன்மின் -
இன் உயிர் அன்னார்க்கு எனைத்து ஒன்றும் தீது
இன்மை
என் உயிர் காட்டாதோ மற்று?

'பழி தபு ஞாயிறே! பாடு அறியாதார்கண்
கழியக் கதழ்வை' எனக் கேட்டு, நின்னை

வழிபட்டு இரக்குவேன் வந்தேன் - என் நெஞ்சம்
அழியத் துறந்தானைச் சீறுங்கால், என்னை
ஒழிய விடாதீமோ என்று.

அழிதக மாஅந் தளிர் கொண்ட போழ்தினான்,
இவ் ஊரார்
தாஅம் தளிர் சூடித் தம் நலம் பாடுப;
ஆஅம் தளிர்க்கும் இடைச் சென்றார் மீள்தரின்,
யாஅம் தளிர்க்குவேம்மன்.

நெய்தல் நெறிக்கவும் வல்லன்; நெடு மென் தோள்
பெய் கரும்பு ஈர்க்கவும் வல்லன்; இள முலைமேல்
தொய்யில் எழுதவும் வல்லன்; தன் கையில்
சிலை வல்லான் போலும் செறிவினான்; நல்ல
பல வல்லன் - தோள் ஆள்பவன்.

நினையும் என் உள்ளம்போல், நெடுங் கழி மலர் கூம்ப;
இனையும் என் நெஞ்சம்போல், இனம் காப்பார் குழல்
தோன்ற;
சாய என் கிளவிபோல், செவ்வழி யாழ் இசை நிற்ப;
போய என் ஒளியேபோல், ஒரு நிலையே பகல் மாய;
காலன்போல் வந்த கலக்கத்தோடு என் தலை
மாலையும் வந்தன்று, இனி.

இருளொடு யான் ஈங்கு உழப்ப,என் இன்றிப் பட்டாய்;
அருள் இலை; வாழி! - சுடர்!

ஈண்டு நீர் ஞாலத்துள் எம் கேள்வர் இல்லாயின்,
மாண்ட மனம் பெற்றார் மாசு இல் துறக்கத்து
வேண்டிய வேண்டியாங்கு எய்துதல் வாய்எனின்,
யாண்டும், உடையேன் இசை.

ஊர் அலர் தூற்றும்; இவ் உய்யா விழுமத்துப்
பீர் அலர் போலப் பெரிய பசந்தன -
நீர் அலர் நீலம் என, அவர்க்கு, அஞ்ஞான்று,
பேர் அஞர் செய்த என் கண்.

தன் உயிர் போலத் தழீஇ, உலகத்து
மன் உயிர் காக்கும் இம் மன்னனும் என்கொலோ.
இன் உயிர் அன்னானைக் காட்டி, எனைத்து ஒன்றும்
என் உயிர் காவாதது?
என ஆங்கு,

மன்னிய நோயொடு மருள் கொண்ட மனத்தவள்,
பல் மலை இறந்தவன் பணிந்து வந்து அடி சேர,
தென்னவற் தெளித்த தேஎம் போல,
இன் நகை எய்தினள், இழந்த தன் நலனே.

## 143. அலையும் நிலையும்

"என்னவோ மனதுக்குள்ளேயே வைத்துக்கொண்டு சொல்லமாட்டேன் என்கிறாளடி இவள்" என்றாள் ஒருத்தி.

"ஆமாம். எதையோ நினைத்து நினைத்துப் பெருமூச்சு விடுகிறாள். கண்ணீர் சொரிகிறாள். பிறகு அதைத் துடைக்கிறாள். யாரையும் பார்ப்பதில்லை. நிலத்தையே குனிந்து பார்த்த வண்ணம் இருக்கிறாள்" என்றாள் இன்னொருத்தி.

"என்னவாயிருக்கும்?"

"அவளையேதான் கேட்டுப் பார்ப்போமே!"

"ஏனடி பெண்ணே! ஏன் இப்படியிருக்கிறாய்? என்ன வருத்தம் உனக்கு?"

"அதை ஏன் கேட்கிறீர்கள்? 'பெண்ணே! உன்னைக் கண்டது முதல் எனக்குத் தாங்க முடியாத வருத்தம் வந்துவிட்டது. என்னைக் கட்டிக் கொள்' என்றான் ஒருவன். 'ஐயோ பாவம்' என்று தழுவிக் கொண்டேன். அன்று முதல் எனக்கும் அந்த வருத்தம் வந்துவிட்டது. என் நெஞ்சு அவனிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டது. நான் என்ன செய்வேன்! என் நெஞ்சைத் தேடித் தேடி அலைகிறேன்" என்றாள் அவள்.

அதைக் கேட்டார்கள். "சரிதான். காதல் நோயால் வாடுகிறாள்" என்று சொல்லிக் கொண்டே போய்விட்டார்கள்.

திங்களும் வந்தது. திங்களைப் பார்த்துச் சொல்கிறாள் அவள் :

"திங்களிடத்திலே இருக்கும் முயலே! என் காதலனைத் தேடித் தா. அல்லது அவன் இருக்கும் இடத்தைக்காட்டு. இல்லா விட்டால் என்ன செய்வேன் தெரியுமா? உனக்குப் பகையாகிய நாயை உன் மீது ஏவுவேன். வேடர்களிடம் செல்வேன்; 'இதோ ஒரு முயல் இருக்கிறது' என்பேன். பாம்பிடம் செல்வேன்; 'மதியை விழுங்கு' என்பேன்," என்றாள்.

இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போது என்ன ஆயிற்று? மேகத்துக்குள்ளே ஓடி மறைந்தது சந்திரன்.

"ஆ! அப்படித்தான். நான்கூட அப்படித்தான், தாழங் காட்டிலே ஒளிந்திருந்து அவனைத் தேடுவேன். அந்த மாதிரி நீயும் ஒளிந்திருந்து அவனைக் கண்டு பிடி" என்றாள்.

காற்று வீசியது.

"காற்றே! அவனைக் காட்டுவாய். காட்டாவிடில் என்ன செய்வேன் தெரியுமா? என் கண்ணீரைத் தெளித்து அதன் கண் எழும் அனலால் உன்னைப் பொசுக்குவேன்" என்றாள்.

"கடலே! தெய்வமே! இரவும் பகலும் நான் படும் வேதனையை எவரிடம் போய் முறையிடுவேன்! உன்னையன்றி வேறு யார் அறிவார்? ஐயோ! அப்போதே எனக்குத் தெரிந்தால் நான் அவனைக் கூடியிருக்க மாட்டேனே! கடலே! அவனை எப் படியாவது என்னிடம் கொண்டு வந்து சேர்க்கமாட்டாயா?" என்றாள்.

இப்படியிருந்தபோது அவளது காதலனும் வந்தான்.

செப்பிடு வித்தைக்காரன் செய்து காட்டிய பொருள்போல அவளது துயரமெல்லாம் மறைந்தன.

**நன்னுதாஅல்! காண்டை: நினையா, நெடிது உயிரா,**
**என் உற்றாள்கொல்லோ? இஃது ஒத்தி - பல் மாண்**
**நகுதரும் - தன் நாணுக் கைவிட்டு, இருதரும்**
**கண்ணீர் துடையா, கவிழ்ந்து, நிலன் நோக்கி,**
**அன்ன இடும்பை பல செய்து, தன்னை**
**வினவுவார்க்கு ஏதில சொல்லி, கனவுபோல்:**

தெருளும் மருளும் மயங்கி வருபவள்
கூறுப கேளாமோ, சென்று?

'எல்லா! நீ என் அணங்கு உற்றனை? யார் நின் இது
செய்தார்?
நின் உற்ற அல்லல் உரை' என, என்னை
வினவுவீர்! தெற்றெனக் கேண்மின்: ஒருவன்,
'குற்கூந்தால்! என் உற்ற எவ்வம் நினக்கு யான்
உரைப்பனைத் தங்கிற்று, என் இன் உயிர்' என்று,
மருவு ஊட்டி, மாறியதற்கொண்டு, எனக்கு
மருவு உழிப் பட்டது, என் நெஞ்சு.

எங்கும் தெரிந்து, அதுகொள்வேன், அவன் உள்வழி.

பொங்கு இரு முந்நீர் அகம் எல்லாம் நோக்கினை
திங்களுள் தோன்றி இருந்த குறுமுயால்! -
எம் கேள் இதன் அகத்து உள்வழிக் காட்டீமோ?
காட்டீயாய் ஆயின், கத நாய் கொளுவுவேன்;
வேட்டுவர் உள்வழிச் செப்புவேன்; ஆட்டி
மதியொடு பாம்பு மடுப்பேன் - மதி திரிந்த
என் அல்லல் தீராய் எனின்.

என்று, ஆங்கே, உள் நின்ற எவ்வம் உரைப்ப, மதியொடு
வெண் மழை ஓடிப் புகுதி; சிறிது என்னைக்
கண்டேனடினாய் போறி, நீ.
நீடு இலைத் தாழைத் துவர் மணற் கானலுள்
ஓடுவேன்; ஓடி ஒளிப்பேன்; பொழில்தொறும்
நாடுவேன்; கள்வன் கரந்திருக்கற்பாலன்கொல்?

ஆய் பூ அடும்பின் அலர்கொண்டு, உதுக் காண், எம்
கோதை புனைந்த வழி.

உதுக் காண் - சாஅய் மலர் காட்டி, சால்பிலான், யாம்
ஆடும்
பாவை கொண்டு ஓடியுழி.
உதுக் காண் - தொய்யில் பொறித்த வழி.

உதுக் காண் - 'தையால்! தேறு' எனத் தேற்றி,
அறனில்லான்
பைய முயங்கியுழி.

அளிய என் உள்ளத்து, உயவுத் தேர் ஊர்ந்து,
விளியா நோய் செய்து, இறந்த அன்பிலவனைத்
தெளிய - விசும்பினும் ஞாலத்தகத்தும்
வளியே! எதிர்போம் - பல கதிர் ஞாயிறு
ஒளி உள்வழி எல்லாம் சென்று; முனி! எம்மை
உண்மை நலன் உண்டு ஒளித்தானைக் காட்டமோ;
காட்டாயேல், மண்ணகம் எல்லாம் ஒருங்கு சுடுவேன்,
என்
கண்ணீர் அழலால் தெளித்து.

பேணான் துறந்தானை நாடும் இடம் விடாயாயின் -
பிறங்கு இரு முந்நீர்! - வெறு மணலாகப்
புறங்காலின் போக இறைப்பேன்; முயலின்,
அறம் புணையாகலும் உண்டு.

துறந்தானை நாடித் தருகிற்பாய்ஆயின், நினைக்கு ஒன்று
பாடுவேன், என் நோய் உரைத்து.

புல்லிய கேளிர் புணரும் பொழுது உணரேன் -
எல்லி ஆக, 'எல்லை' என்று, ஆங்கே, பகல் முனிவேன்;
எல்லிய காலை, இரா முனிவேன்; யான் உற்ற
அல்லல் களைவார் இலேன்.

ஓஒ! கடலே! தெற்றெனக் கண்ணுள்ளே தோன்ற
இமை எடுத்து,
'பற்றுவேன்' என்று, யான் விழிக்குங்கால் மற்றும்என்
நெஞ்சத்துள் ஓடி ஒளித்து, ஆங்கே, துஞ்சாநோய்
செய்யும், அறனில்லவன்.

ஓஒ! கடலே! ஊர் தலைக்கொண்டு கனலும் கடுந் தீயுள்
நீர் பெய்தக்காலே சினம் தணியும்; மற்று இஃதோ
ஈரம் இல் கேள்வன் உறீஇய காமத் தீ
நீருள் புகினும், சுடும்.

ஓஓ! கடலே! 'எற்றமிலாட்டி என் ஏமுற்றுள்?' என்று
இந் நோய்
உற்று அறியாதாரோ நகுக! நயந்தாங்கே
இற்று அறியின், முயங்கலேன், மற்று என்னை
அற்றத்து இட்டு ஆற்று அறுத்தான் மார்பு.
ஆங்கு -
கடலொடு புலம்புவோள் கலங்கு அஞர் தீர,
கெடல் அருங் காதலர் துனை தர, பிணி நீங்கி,
அறன் அறிந்து ஒழுகும் அங்கணாளனைத்
திறன் இலார் எடுத்த தீ மொழி எல்லாம்
நல் அவையுள் படக் கெட்டாங்கு,
இல்லாகின்று, அவள் ஆய் நுதல் பசப்பே.

## 144. மதி கண்டாள் மதி மயங்கினாள்

"ஞாயிறே! போகாதே! நீ போனால் மாலை வந்துவிடும். என்னைக் கொல்லும். என் உயிர் போய்விடும்.

"அந்தத் துன்பத்தை வேண்டுமானாலும் சகித்துக் கொள் வேன். உயிரை இறுகப் பிடித்துக் கொள்வேன். ஆனால் நீ ஒன்று செய்தல் வேண்டும். நாளைக் காலையில் நீ வரும்போது என் காதலனைக் கொண்டு வர முடியுமா? வருவாயானால் சரி. நல்லது."

காதலனைப் பிரிந்து வருந்திய அவள் இவ்வாறு கூறினாள். கூறிக்கொண்டிருந்தபோதே சூரியன் மலைவாயில் விழுந்தான். மாலையும் திங்களும் வந்தன.

"வெண்ணிலாவே! என் துன்பம் காண் வெண்ணிலாவே! நின்னைத் தவிர வேறு எவருமே எனக்கு உற்ற துணை இல்லை வெண்ணிலாவே! என் துயர் போக்குவாரில்லையே! நீயாவது எனது காதலனைத் தேடிக் கொண்டு வந்து தரமாட்டாயா!' என்றாள்.

வானத்திலே மேகக் கூட்டங்கள் விரைந்து சென்று கொண் டிருந்தன. அவற்றைக் கண்டாள்.

"விரைந்து செல்லும் மேகங்களே! நான் படும் வேதனையை என்ன சொல்வேன். காமத் தீ என்னை வாட்டுதே. அத் தீ அணையும் விதமாக மழை பொழியலாகாதா!" என்றாள்.

இவ்வாறு ஏங்கி ஏங்கிப் புலம்பிக்கொண்டே இருந்தாள்.

ஒருநாள் அவனும் வந்தான். அவளும் மகிழ்ந்தாள்.

'துனையுநர் விழை தக்க சிறப்புப்போல், கண்டார்க்கு
நனவினுள் உதவாது நள்ளிருள் வெறுக்கும்
கனவின் நிலையின்றால், காமம்; ஒருத்தி
உயிர்க்கும்; உசாஅம்; உலம்வரும்; ஓவாள்,
கயல் புரை உண்கண் அரிப்ப அரி வார,
பெயல் சேர் மதி போல, வாள் முகம் தோன்ற,
பல ஒலி கூந்தலாள், பண்பு எல்லாம் துய்த்துத்
துறந்தானை உள்ளி, அழூஉம்; அவனை
மறந்தாள்போல் ஆலி நகூஉம்; மருளும்;
சிறந்த தன் நாணும் நலனும் நினையாது,
காமம் முனை இயாள், அலந்தாள்' என்று, எனைக் காண,
நகான்மின்; கூறுவேன், மாக்காள்! மிகாஅது,
மகளிர் தோள் சேர்ந்த மாந்தர் துயர் கூர நீத்தலும்,
நீள் சுரம் போகியார் வல்லை வந்து அளித்தலும்,
ஊழ் செய்து, இரவும் பகலும்போல், வேறுஆகி,
வீழ்வார்கண் தோன்றும்; தடுமாற்றம் ஞாலத்துள்
வாழ்வார்கட்கு எல்லாம் வரும்.

தாழ்பு, துறந்து, தொடி நெகிழ்த்தான் போகிய கானம்
இறந்து எரி நையாமல், பாஅய் முழங்கி -
வறந்து என்னை செய்தியோ, வானம்? - சிறந்த என்
கண்ணீர்க் கடலால், கனை துளி வீசாயோ,
கொண்மூக் குழீஇ முகந்து?

நுமக்கு எவன் போலுமோ? ஊரீர்! - எமக்கும் எம்
கண்பாயல் கொண்டு, உள்ளாக் காதலவன் செய்த
பண்பு தர வந்த என் தொடர் நோய் வேது

கொள்வது போலும், கடும் பகல்? ஞாயிறே!
எல்லாக் கதிரும் பரப்பி, பகலொடு

செல்லாது நின்றீயல் வேண்டுவல்; நீ செல்லின்,
புல்லென் மருள் மாலைப் போழ்து இன்று வந்து
என்னைக்
கொல்லாது போதல் அரிதால்; அதனோடு யான்
செல்லாது நிற்றல் இலேன்.

ஒல்லை எம் காதலர்க் கொண்டு, கடல் ஊர்ந்து,
காலைநாள்,
போதரின் - காண்குவேன்மன்னோ - பனியொடு
மாலைப் பகை தாங்கி, யான்?

இனியன் என்று ஓம்படுப்பல், ஞாயிறு! இனி.

ஒள் வளை ஓடத் துறந்து, துயர் செய்த
கள்வன்பால் பட்டன்று, ஒளித்து என்னை, உள்ளி -
பெருங் கடல் புல்லென, கானல் புலம்ப,
இருங் கழி நெய்தல் இதழ் பொதிந்து தோன்ற,
விரிந்து இலங்கு வெண் நிலா வீசும் பொழுதினான்,
யான் வேண்டு ஒருவன், என் அல்லல் உறீஇயான்;
தான் வேண்டுபவரோடு துஞ்சும்கொல், துஞ்சாது?
வானும், நிலனும், திசையும், துழாவும் - என்
ஆனுப் படர் மிக்க நெஞ்சு.
ஊரவர்க்கு எல்லாம் பெரு நகை ஆகி, என்
ஆர் உயிர் எஞ்சும்மன்; அங்கு நீ சென்றீ -
நிலவு உமிழ் வான் திங்காள்! - ஆய் தொடி கொட்ப,
அளி புறம் மாறி, அருளான் துறந்த அக்
காதலன் செய்த கலக்குறு நோய்க்கு ஏதிலார்
எல்லாரும் தேற்றார், மருந்து.

வினைக் கொண்டு என் காம நோய் நீக்கிய ஊரீர்!
எனைத்தானும் எள்ளினும், எள்ளலன், கேள்வன்;
நினைப்பினும், கண்ணுள்ளே தோன்றும்;
அனைத்தற்கே

ஏமராது ஏமரா ஆறு.
கனை இருள் வானம்! - கடல் முகந்து, என்மேல்
உறையொடு நின்றீயல் வேண்டும், ஒருங்கே -
நிறை வளை கொட்பித்தான் செய்த துயரால்
இறை இறை பொத்திற்றுத் தீ,
எனப் பாடி,

நோயுடை நெஞ்சத்து எறியா, இனைபு ஏங்கி,
'யாவிரும் எம் கேள்வற் காணீரோ?' என்பவட்கு,
ஆர்வுற்ற பூசற்கு அறம்போல, ஏய்தந்தார்;
பாயல் கொண்டு உள்ளாதவரை வரக் கண்டு,
மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர,
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்தது— என்
ஆயிழை உற்ற துயர்.

## 145. புலம்புகிறாள் பெண்ணரசி

ஒரு பெண். ஒருவனைக் காதலிக்கிறாள். அவனும் அவள்பால் காதல் கொண்டான். இருவரும் இன்பமாகச் சில நாள் இருந்தனர். அவன் அவளைப் பிரிந்து சென்றான். சென்றவன வரவில்லை. நாட்கள் பல சென்றன.

'இன்று வருவான்! நாளை வருவான்' என்று எதிர்பார்த்தாள். ஏமாந்து போனாள். ஏக்கம்தான்! அவனையே எண்ணி எண்ணி உருகினாள்.

உருக்கம் என்ன செய்யும்? காமத் தீ கொளுத்தும். அதன் வெம்மை தாங்க முடியாது தவித்தாள். ஒரு பெண் எவ்வளவு தான் பொறுக்க முடியும் ?

நாணத்தை விட்டாள்; வாய் திறந்து புலம்புகிறாள். அரற்றுகிறாள்; புலம்புகிறாள். என்ன? கேட்போம்:

"ஐயோ! என்னால் தாங்க முடியவில்லையே! காமத் தீயின் கொடுமை வாட்டுகிறது. ஊரில் உள்ளவர்களே! பெரியோர்களே! என் நோய் அறியாது தூங்குகிறீர்களே! பெரு மழை பெய்தால்கூட எனது உள்ளத்தைப் பற்றிய தீ அவியாதுபோல்

இருக்கிறதே! என்ன செய்வேன்! நான் நடைப்பிணமாகி விட்டேனே! இத் துன்பத்துக்கு மருந்தில்லையோ! மாற்றில்லையோ! வழியுமில்லையோ!"

இவ்வாறு புலம்பித் தவித்தாள் அவள். முடிவில் ஒருநாள் அவன் வந்தான்.

இன்பம்! இன்பம்! இன்பம்!

உரை செல உயர்ந்து ஓங்கி சேர்ந்தாரை ஒரு நிலையே
வரை நில்லா விழுமம் உறீஇ, நடுக்கு உறுத்து,
தெறல் மாலை
அரைசினும் அன்பு இன்றும், காமம்; புரை தீர,
அன்ன மென் சேக்கையுள் ஆராது, அளித்தவன்
துன்னி அகல, துறந்த அணியளாய்,
நாணும் நிறையும் உணர்கல்லாள், தோள் நெகிழ்பு,
பேர் அமர் உண்கண் நிறை மல்க, அந் நீர் தன்,
கூர் எயிறு ஆடி, குவிமுலைமேல் வார்தர,
தேர் வழி நின்று தெருமரும்; ஆயிழை
கூறுப கேளாமோ, சென்று?

'எல்லிழாய்! எற்றி வரைந்தானை, நாணும் மறந்தாள்'
என்று,
உற்றனிர் போல, வினவுதிர்! மற்று இது
கேட்டமின், எல்லீரும் வந்து.

வறம் தெற மாற்றிய வானமும் போலும்;
நிறைந்து என்னை மாய்ப்பது ஓர் வெள்ளமும்
போலும்—
சிறந்தவன் தூ அற நீப்ப, பிறங்கி வந்து,
என்மேல் நிலைஇய நோய்.

'நக்கு நலனும் இழந்தாள், இவள்' என்னும்
தக்கவிர் போலும்! இழந்திலேன்மன்னோ -
மிக்க என் நாணும், நலனும், என் உள்ளமும்,
அக்கால் அவனுழை ஆங்கே ஒழிந்தன!
உக் காண் – இஃதோ உடம்பு உயிருக்கு ஊற்றாக,
செக்கர் அம் புள்ளித் திகிரி அலவனொடு, யான்

நக்கது, பல் மாண் நினைந்து.
கரை காணு நோயுள் அழுந்தா தவனைப்
புரை தவக் கூறி, கொடுமை நுவல்வீர்!
வரைபவன் என்னின் அகலான் - அவனை,

திரை தரும் முந்நீர் வளாஅகம் எல்லாம்,
நிரை கதிர் ஞாயிற்றை, நாடு என்றேன்; யானும்
உரை கேட்புழி எல்லாம் செல்வேன்; புரை தீர்ந்தான்
யாண்டு ஒளிப்பான் கொல்லோ மற்று?
மருள் கூர் பிணை போல் மயங்க, வெந் நோய் செய்யும்
மாலையும் வந்து, மயங்கி, எரி நுதி
யாமம் தலை வந்தன்று ஆயின், அதற்கு என் நோய்
பாடுவேன், பல்லாருள் சென்று.

யான் உற்ற எவ்வம் உரைப்பின், பலர்த் துயிற்றும்
யாமம் நீ துஞ்சலைமன்.
எதிர்கொள்ளும் ஞாலம், துயில் ஆராது ஆங்கண்
முதிர்பு என்மேல் முற்றிய வெந் நோய் உரைப்பின்,
கதிர்கள் மழுங்கி, மதியும், அதிர்வது போல்
ஓடிச் சுழல்வதுமன்.

பேர் ஊர் மறுகில் பெருந் துயிற் சான்றீரே!
நீரைச் செறுத்து, நிறைவுற ஓம்புமின் -
கார் தலைக்கொண்டு பொழியினும், தீர்வது
போலாது, என் மெய்க் கனலும் நோய்.

இருப்பினும் நெஞ்சம் கனலும்; செலினே,
வருத்துறும் யாக்கை; வருந்துதல் ஆற்றேன்;
அருப்பம் உடைத்து, என்னுள் எவ்வம் பொருத்தி,
பொறி செய் புனை பாவை போல, வறிது உயங்கிச்
செல்வேன், விழுமம் உழந்து.

என ஆங்குப் பாட, அருள் உற்று,
வறம் கூர் வானத்து வள் உறைக்கு அலமரும்
புள்ளிற்கு அது பொழிந்தா அங்கு, மற்றுத் தன்
நல் எழில் மார்பன் முயங்கலின்,
அல்லல் தீர்ந்தன்று, ஆயிழை பண்பே.

## 146. வேதனைக் குரல்

"ஞாயிறே! பரிதியின் செல்வா! உன்னை வேண்டுகிறேன். என் காதலன் எங்கே? அவன் எங்கே? அவனைத் தேடிக் கொண்டு வந்து கொடுக்கமாட்டாயா? இல்லையானால் உன்னுடைய கதிர்களைப் பற்றி, நூலேணிபோல் ஏறி நின்று என் காதலனைத் தேடுவேன். அதற்காகச் சில கதிர்களை விட்டுச் செல்.

"அவன் இங்கேயிருக்கிறான் என்றால், எங்கேயிருக்கிறான் காட்டு. நான் அவன்மீது கோபங் கொள்ளமாட்டேன். அவனைத் தண்டிக்கமாட்டேன். அவனை எனக்குக் காட்டு.

"கூற்றமே! உன் ஓலையிலே எழுதி வைத்துக்கொள். மறந்து விடாதே. இந்தக் காமனைத்தான் சொல்கிறேன். சுருக்கொடியுடையவனாகிய இவன், செய்யும் கொடுமைகளை என்னவென்பேன். மறவாதே! எழுது! தண்டிக்கவேண்டும் அவனை ஆனால் ஒன்று. அவன் நமக்கு வழிபடும் தெய்வம். எனவே, கடுமையாகத் தண்டித்து விடாதே!

"காமனே! என்னை ஏன் வாட்டுகிறாய்? இரவு நேரத்திலே உன் கணைக்குத் தப்பி உயிருடன் இருந்தால் கனவிலே என் காதலனைக் காண்பேன். மெதுவாகப் பார்ப்பேன். பார்த்த உடனே துணியைப் பிடித்துக் கொள்வேன், தப்பி ஓடாதபடி. 'இவள் யாரோ' என்று எண்ணி ஓடிப்போக நினைத்தால் சத்தம் போடுவேன். 'என் அழகைக் கொள்ளை கொண்ட கள்வன்' என்று கூச்சலிடுவேன்.

"ஞாயிறே! மீண்டும் உன்னை வேண்டுகிறேன். இரவிலே கனவிலேயாவது அவன் இருக்குமிடத்தைக் காட்டு.

"காமனே! உன் அம்புகளை எனக்குத் தா! என் காதலன் மடல் ஏறி என்னை வந்து அடையுமாறு அவன் மீது விடு! விடு!"

இவ்வாறு வருந்தினாள். சில நாளில் காதலனும் வந்தான். வருத்தம் நீங்கினாள்; மகிழ்ந்தாள்.

ஆறு அல்ல மொழி தோற்றி, அறவினை கலக்கிய,
தேறுகள் நறவு உண்டார் மயக்கம்போல், காமம்
வேறு ஒரு பாற்று ஆனதுகொல்லோ? சீறடிச்

சிலம்பு ஆர்ப்ப, இயலியாள் - இவள் மன்னோ, இனி
மன் னும்
புலம்பு ஊரப் புல்லென்ற வனப்பினள் - விலங்கு ஆக,
வேல் நுதி உற நோக்கி, வெயில் உற, உருகும் தன்
தோள் நலம் உண்டானைக் கெடுத்தாள் போல்,
தெருவில் பட்டு,
ஊண் யாதும் இலள் ஆகி, உயிரினும் சிறந்த தன்
நாண் யாதும் இலள் ஆகி,நகுதலும் நகூஉம்; ஆங்கே
பெண்மையும் இலள் ஆகி அழுதலும் அழூஉம்:
தோழி! ஓர்
ஒண்ணுதல் உற்றது உழைச் சென்று கேளாமோ?

இவர் யாவர் ஏமுற்றீர் கண்டீரே? ஓஓ!
அமையும் தவறிலீர் மற்கொலோ? - நகையின்
மிக்கதன் காமமும் ஒன்று என்ப; அம் மா
புது நலம் பூ வாடியற்று, தாம் வீழ்வார்
மதி மருள நீத்தக்கடை.

என்னையே மூசி, கதுமென நோக்கன்மின் வந்து.

கலைஇய கண், புருவம், தோள், நுசுப்பு,ஏஎர்
சில மழைபோல் தாழ்ந்து இருண்ட கூந்தல், அவற்றை
விலை வளம் மாற அறியாது, ஒருவன்
வலை அகப்பட்டது - என் நெஞ்சு.

வாழிய கேளிர்!

பலவும் சூள் தேற்றித் தெளித்தவன் என்னை
முலையிடை வாங்கி முயங்கினன், நீத்த
கொலைவனைக் காணேன்கொல், யான்?

காணினும், என்னை அறிதிர்; கதிர் பற்றி,
ஆங்கு எதிர் நோக்குவன் - ஞாயிறே! - எம் கேள்வன்
யாங்கு உளன் ஆயினும் காட்டீமோ? காட்டாயேல்,
வானத்து எவன் செய்தி, நீ?

ஆர் இருள் நீக்கும் விசும்பின் மதி போல,
நீருள்ளும் தோன்றுதி, ஞாயிறே! அவ் வழித்
தேறை தினப்படல் ஓம்பு.

நல்கா ஒருவனை நாடி யான் கொள்வனை,
பல் கதிர் சாம்பிப் பகல் ஒழிய, பட்டமோ -
செல் கதிர் ஞாயிறே! நீ.

அறாஅல் இன்று அரி முன்கைக் கொட்கும்
பறாஅப் பருந்தின்கண் பற்றிப் புணர்ந்தான்
கறாஅ எருமைய காடு இறந்தான்கொல்லோ?
உறாஅத் தகை செய்து, இவ் ஊர் உள்ளான்கொல்லோ?
செறாஅது உளனாயின், கொள்வேன்; அவனைப்
பெறாஅது யான் நோவேன்; அவனை எற் காட்டிச்
சுறாஅக் கொடியான் கொடுமையை, நீயும்,
உறாஅ அரைச! நின் ஓலைக்கண் கொண்டீ.
மறாஅ அரைச! நின் மாலையும் வந்தன்று;
அறாஅ தணிக, இந் நோய்.

தன் நெஞ்சு ஒருவற்கு இனைவித்தல், யாவர்க்கும்
அன்னவோ - காம! - நின் அம்பு?

கையாறு செய்தானைக் காணின், கலுழ் கண்ணால்
பையென நோக்குவேன்; தாழ் தானை பற்றுவேன்;
ஐயம் கொண்டு, என்னை அறியான் விடுவானேல்,
ஒய்யெனப் பூசல் இடுவேன்மன், யான் - அவனை
மெய்யாகக் கள்வனோ என்று.

வினவன்மின் ஊரவிர்! என்னை, எஞ்ஞான்றும் -
மடாஅ நறவு உண்டார் போல, மருள
விடாஅது உயிரொடு கூடிற்று - என் உண்கண்
படாஅமை செய்தான் தொடர்பு.

கனவினான் காணிய, கண் படாஆயின்,
நனவினான், ஞாயிறே! காட்டாய் நீஆயின்,
பனை ஈன்ற மா ஊர்ந்து, அவன் வர, காமன்

கலை இரப்பேன், கால் புல்லிக்கொண்டு.

என ஆங்கு,

கண் இனைபு, கலுழ்பு ஏங்கினள்;
தோள் ஞெகிழ்பு, வளை நெகிழ்ந்தனள்;
அன்னையோ! எல்லீரும் காண்மின்; மடவரல்
மெல் நடைப் பேடை துணைதர, தற் சேர்ந்த
அன்ன வான் சேவல் புணர்ச்சிபோல், ஒண்ணுதல்
காதலன் மன்ற அவனை வரக் கண்டு, ஆங்கு
ஆழ் துயரம் எல்லாம் மறந்தனள், பேதை.
நகை ஒழிந்து, நாணு மெய் நிற்ப, இறைஞ்சி,
தகை ஆகத் தையலாள் சேர்ந்தாள் - நகைஆக,
நல் எழில் மார்பனகத்து.

## 147. மாலையும் மங்கையும்

அவன் வெளியூர் சென்றிருந்தான். எதற்கு? அரச காரிய மாக. மன்னன் இட்ட கட்டளையைச் செய்து முடிப்பதற்கு. திரும்பி வருவதற்குச் சில நாட்கள் ஆயின. அதற்குள் அவளால் பொறுக்க முடியவில்லை.

"மாலையே! நீ செய்வது நியாயமா! காதல் கொண்டோர் கூடுவதற்கு ஏதுவாயிருக்கிறாய்! இன்பமளிக்கிறாய். உதவி செய்கிறாய்.

"ஆனால் பிரிந்த மகளிர்க்கோ துணை நிற்கிறாயில்லை. பின் என்ன செய்கிறாய்? துன்பந் தருகிறாய். இது உனக்கு முறையோ! தகுமோ!

"முன்பெல்லாம் என்ன செய்தாய்? என் காதலனின் மனதை என் பால் திருப்பினாய். கொண்டு வந்து தந்தாய். இப்போதோ! ஏதும் செய்யவில்லை. துன்பமே தருகிறாய்."

இவ்வாறு வருந்திக் கொண்டிருந்தாள் அவள். அப்போது அவனும் வந்தான்.

கண்டாள் காரிகை; கொண்டாள் மகிழ்ச்சி.

தொல் இயல் ஞாலத்துத் தொழில் ஆற்றி, ஞாயிறு,
வல்லவன் கூறிய வினை தலை வைத்தான்போல்,
கல் அடைபு, கதிர் ஊன்றி, கண் பயம் கெடப் பெயர;
அல்லது கெடுப்பவன் அருள் கொண்ட முகம் போல,
மல்லல் நீர்த் திரை ஊர்பு, மால் இருள் மதி சீப்ப;
இல்லவர் ஒழுக்கம் போல், இருங் கழி மலர் கூம்ப;
செல்லும் என் உயிர்ப் புறத்து இறுத்தந்த மருள் மாலை!

மாலை நீ -

இன்புற்றார்க்கு இறைச்சியாய் இயைவதோ
செய்தாய்மன்;
அன்புற்றார் அழ, நீத்த அல்லலுள், கலங்கிய
துன்புற்றார்த் துயர் செய்தல் தக்கதோ, நினக்கு?

மாலை நீ -

கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய்மன்;
நலம் கொண்டு நல்காதார் நனி நீத்த புலம்பின்கண்
அலந்தவர்க்கு அணங்கு ஆதல் தக்கதோ, நினக்கு?

மாலை நீ -

எம் கேள்வற் தருதலும் தருகல்லாய்; துணை அல்லை;
பிரிந்தவர்க்கு நோய் ஆகி, புணர்ந்தவர்க்குப்
புணை ஆகி,
திருந்தாத செயின் அல்லால் இல்லையோ, நினக்கு?

என ஆங்கு,

ஆய்இழை மடவரல் அவலம் அகல,
பாய் இருட் பரப்பினைப் பகல் களைந்தது போல,
போய் அவர் மண் வெளவி வந்தனர் -
சேய் உறை காதலர் செய் வினை முடித்தே.

## 148. உறுதியும் இறுதியும்

ஓர் இளைஞன். ஒருத்தியைக் காதலித்தான். உறுதிமொழிகள் கூறினான். இன்பங் கொள்ளை கொண்டான். பிறகு? பேசாதிருந்துவிட்டான்.

பார்த்தாள் தோழி. சென்றாள் அவனிடம். சொல்கிறாள்:

"ஓர் ஆசிரியரிடத்தில் சென்று கல்வி கற்கிறான் ஒருவன். அவன் என்ன செய்யவேண்டும்? ஆசிரியருக்குப் போதிய அளவு பொருள் கொடுக்க வேண்டும். ஆசிரியருக்குப் பொருள் கொடாமல் அவரிடம் உள்ள வித்தையைக் கற்றுத்தான் வளரலாம் என்பது இயலாது. அவன் ஒருநாளும் பிரகாசிக்கமாட்டான். ஆசிரியன் மனம் வருந்த விட்டால் அவன் பால் கற்றவன் எப்படி நன்கு வாழ்வான்? தேய்ந்தே போவான்.

"சூளுறவு செய்கிறான் ஒருவன். அதாவது ஒரு வாக்குறுதி கொடுக்கிறான். அந்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும். இல்லையேல் அவன் தேய்ந்தே போவான்.

"இனி நீயே யோசித்துப்பார். உன் காதலிக்கு என்ன உறுதி மொழி அளித்தாய்? அதனைக் காக்க வேண்டாமா? விரைவாக வா. உறுதி மொழியை மெய்யாக்கு" என்றாள்.

நிரை திமில் களிறாக, திரை ஒலி பறையாக,
கரை சேர் புள்ளினத்து அம் சிறை படையாக,
அரைசு கால்கிளர்ந்தன்ன உரவு நீர்ச் சேர்ப்ப! கேள்:
கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான்,
விச்சைக்கண்
தப்பித்தான், பொருளேபோல், தமியவே தேயுமால்,
ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான்; மற்று
அவன்
எச்சத்துள் ஆயினும், அஃது எறியாது விடாதே காண்.
கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாள் இலான் குடியேபோல், தமியவே தேயுமால்,

சூள் வாய்த்த மனத்தவன்வினை பொய்ப்பின்; மற்று அவன்
வாள் வாய் நன்று ஆயினும், அஃது எறியாது விடாதே காண்.
ஆங்கு -
அனைத்து, இனி - பெரும! - அதன் நிலை; நினைத்துக் காண்:
சினை இய வேந்தன் எயிற்புறத்து இறுத்த
வினை வரு பருவரல் போல,
துனை வரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

## 149. வருவார்! மனம் மகிழ்வாய்!

காதலன் ஒருவன் காதலியைப் பிரிந்து சென்றான். எதற்கு? பொருள் தேடுவதற்கு?

"எப்போது வருவாய்?" என்று கேட்டாள்.

"இளவேனில் வருமுன் வருவேன்" என்றான்.

ஆனால் அவளோ - எண்ணி எண்ணி ஏங்கினாள். வருவார் வருவார் என்று வழிமேல் விழி வைத்து நோக்கினாள்.

நாட்கள் பல ஆயின. துன்பமும் பெருகிற்று. மிக வருந்தினாள்; வாடினாள்; கண்ணீர் வடித்தாள். அப்போது அவளுக்கு ஆறுதல் சொல்கிறாள் தோழி. என்ன சொல்கிறாள்?

"வருவான்" என்கிறாள். "குறித்த காலத்துக்கு முன்பே வருவான். தவற மாட்டான். வீணில் வருந்தாதே. ஆற்றியிரு" என்று தேற்றுகிறாள்.

அயம் திகழ் நறுங் கொன்றை அலங்கல் அம் தெரியலான்
இயங்கு எயில் எயப் பிறந்த எரி போல, எவ்வாயும்,
கனை கதிர் தெறுதலின், கடுத்து எழுந்த காம்புத் தீ
மலை பரந்து தலைக் கொண்டு முழங்கிய முழங்கு அழல்
மயங்கு ஊதர் மறுகலின், மலை தலைக் கொண்டென,

விசும்பு உற நிவந்து அழலும், விலங்கு அரு
வெஞ் சுரம் -

இறந்து தாம் எண்ணிய எய்துதல் வேட்கையால்,
அறம் துறந்து - ஆயிழாய்! - ஆக்கத்தில் பிரிந்தவர்
பிறங்கு நீர் சடைக் கரந்தான் அணி அன்ன நின் நிறம்
பசந்து, நீ இனையையாய், நீத்தலும் நீப்பவோ?
கரி காய்ந்த கவலைத்தாய், கல் காய்ந்த காட்டகம்,
'வெரு வந்த ஆறு' என்னார், விழுப் பொருட்கு
அகன்றவர்,
உருவ ஏற்று ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன, நின்
உரு இழந்து இனையையாய், உள்ளலும் உள்ளுபவோ?

கொதித்து உராய்க் குன்று இவர்ந்து, கொடிக்
கொண்ட கோடையால்,
'ஒதுக்கு அரிய நெறி' என்னார், ஒண் பொருட்கு
அகன்றவர்,
புதுத் திங்கட் கண்ணியான் பொன் பூண் ஞான்று
அன்ன, நின்
கதுப்பு உலறும் கவினையாய், காண்டலும் காண்பவோ?
ஆங்கு

அரும் பெறல் ஆதிரையான் அணி பெற மலர்ந்த
பெருந் தண் சண்பகம் போல, ஒருங்கு அவர்
பொய்யார் ஆகுதல் தெளிந்தனம் -
மை ஈர் ஓதி மட மொழியோயே!

**நெய்தற் கலி முற்றும்**

**கலித் தொகை முற்றும்**

வெற்றிவேல்



## பாட்டு முதல் குறிப்பு அகராதி

